த.பா.நி. (சு.வெ.) வரிசை எண் — 377

# பாரதத்தின் பொருளாதார வரலாறு

## (கி.பி. 1857 - 1970)

(முதல் பகுதி)

ஆசிரியர்
ம. திருநாவுக்கரசு, எம். ஏ., பி. இடி.,
துணைப் பேராசிரியர், பொருளாதாரத் துறை,
பூ. சா. கோ. கலைக்கல்லூரி,
கோயம்புத்தூர்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—November, 1972

T.N.T.B.S. (C.P.) No. 377



ECONOMIC HISTORY OF INDIA
(1857 TO 1970) — PART I

M. THIRUNAVUKKARASU

Price Rs. 6-45

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of Books and literature in regional languages at the University Level, of the Government of India in the Ministry of Education and Social Welfare. (Department of Culture), New Delhi'

*Printed by*
*DEEPA PRINTERS,*
50, Suriyanarayana Chetty Street,
Madras-13.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி—உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன் வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன் வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன 'பாரதத்தின் பொருளாதார வரலாறு (முதல் பாகம்)' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **377** ஆவது வெளியீடாகும். இதுவரை **412** நூல்கள் வெளி வந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# 1. பொருளாதார வரலாறு - ஏன் ?

பொருளாதார வளர்ச்சியில் பாரதம் தற்காலத்தில் பின்தங்கியுள்ளது. ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டுவரை இந்தியா உன்னதமான நிலையில் இருந்தது. அதன் பின்னர் ஏற்பட்ட சில நிகழ்ச்சிகளின் விளைவாகப் பின்தங்கியநிலையை அடைந்தது. இந்தியாவின் முற்காலப் பொருளாதார மேம்பாட்டைப் பலவகையிலும் அறியலாம். பொருளாதார வாழ்க்கை வளமாக இருந்தாலன்றி ஒப்புயர்வற்ற மரபும், கலாசாரமும், நாகரிகமும் ஓங்கி வளர்ந்திருக்க முடியாது. இலக்கியம், சமயம், தத்துவம், கணிதம், நுண்கலை போன்ற பல துறைகளில் இந்தியர்கள் தலை சிறந்து விளங்கினார்கள்.

பண்டைக் காலத்தில் இந்தியா தொழில் துறையில் அடைந்திருந்த உன்னத நிலைமையை இந்தியத் தொழில் ஆணைக்குழுவின் தலைவரான ஸர் ஹாலண்ட் பின்வருமாறு கூறுகிறார்: [1]

> தற்காலத் தொழில் வளர்ச்சிக்குத் தாயகமாக விளங்கும் மேற்கு ஐரோப்பாவில் வாழ்ந்தவர்கள் ஒருகாலத்தில் நாகரிகமற்ற பழங்குடி மக்களாக இருந்தார்கள். அக் காலத்தில் இந்தியர்கள் கைவினைத் திறனும், நுட்பத்தேர்ச்சியும் உடையவர்களாக இருந்தார்கள். தொழில் வளர்ச்சி சிறந்து இருந்தது. செல்வச் செழிப்புடன் விளங்கிய இந்தியாவை மன்னர்கள் ஆண்டு வந்தார்கள். மேலைநாடுகளுடன் வாணிபத் தொடர்பு ஏற்பட்ட 18ஆவது நூற்றாண்டுவரை இந்தியாவின் தொழில் வளர்ச்சி மேலை நாடுகளில் உள்ளதைவிட எவ்விதத்திலும் குறைவாக இல்லை.

[1] Sir T. H. Holland, Report of the Indian Industrial Commission, Government of India, Calcutta, 1918, p. 6.

இந்தியர்கள் ஒவ்வொரு துறையிலும் சிறந்து விளங்கினர்கள். உலோகத்தை உருக்குதல், ஆயுதங்கள், ஆபரணங்கள் தயாரித்தல் முதலிய தொழில்களில் சிறப்புற்று இருந்தபோதிலும் ஆடைகளைத் தயாரிப்பதில் ஈடு இணையற்றவர்களாக இருந்தனர். சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கல்லறைகளில் புதைக்கப்பட்ட எகிப்திய மன்னர்களின் சடலங்கள் இந்தியாவில் தயாரிக்கப்பட்ட மிக மெல்லிய 'மஸ்லின்' துணிகளைக் கொண்டு போர்த்தப்பட்டு இருந்தன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வரலாற்றுப் புகழ் பெற்ற 'டாக்கா—மஸ்லின்' கிரேக்க நாட்டினரின் ஆடம்பரப்பொருளாகக் கருதப்பட்டது. இதை 'கேன்ஞ்செ(ட்)டிகா' (Gangetika) என்று அழைத்தார்கள். கிரேக்க நாட்டினர் ஆண்டுதோறும் அதிக அளவுக்கு மிக மெல்லிய இந்தியத்துணிரகங்களை இறக்குமதி செய்ததால் பெருமளவுக்குப் பொன் ஏற்றுமதி செய்தார்கள் என பிளினி (Pliny) கூறுகிருர்.

பதினெட்டாவது நூற்றுண்டில் இங்கிலாந்தின் வரலாற்றை எழுதிய லெக்கி (Lecky) என்பவர்[2] பின்வருமாறு கூறுகிருர்:

> இந்தியாவிலிருந்து ஆண்டுதோறும் மலிவான—நேர்த்தியான 'காலிகோ'[3] என்ற சீட்டித்துணிகள், அச்சடித்த சீட்டித்துணிகள், மஸ்லின் முதலியன இறக்குமதி செய்யப்பட்டன. இவற்றை ஆங்கிலேயர்கள் பெரிதும் விரும்பினர்கள். பஞ்சாலைகளின் தேவை அதிகரித்ததால் கம்பள ஆடைகள், பட்டு ஆடைகள் ஆகியவற்றின் தேவை பெரிதும் வீழ்ச்சி அடைந்தன. உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு 18-வது நூற்றுண்டின் தொடக்கத்தில் (1700-லும், 1721-லும்) இந்தியத்துணிகளின் இறக்குமதி தடைசெய்யப்பட்டன. ஆங்கிலேயர்கள் இந்தியத்துணிகளை உபயோகிக்கக் கூடாது என்று அறிவித்தார்கள்.

பிரிட்டனின் தொழில் வளர்ச்சிக்காக இந்தியாவின் பொருளாதார நலன்கள் புறக்கணிக்கப்பட்டன என்பதைப் பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாற்றை எழுதிய வில்ஸன் தெளிவுபடுத்துகிருர்:[4]

[2] Quoted by V. V. Bhatt—Aspects of Economic Change and Policy in India, Allied Publishers, 1963, p. 14.

[3] கள்ளிக்கோட்டையில் தயாரிக்கப்பட்டதால் 'காலிகோ' என்று அழைக்கிருர்கள்.

[4] H. H. Willson—History of British India, Quoted by V. V. Bhatt, *ibid*—p. 45.

(1813ஆம் ஆண்டுவரை இந்தியாவில் உற்பத்தியான பஞ்சாடைகள், பட்டு ஆடைகள் பிரிட்டிஷ் அங்காடியில் நல்ல இலாபத்திற்கு விற்கப்பட்டன. இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட துணிகளைவிட 50% முதல் 60% வரை மலிவாக இருந்தன. இந்தியத்துணிகளின் போட்டியைத் தவிர்ப்பதற்கு மிக அதிக விகிதத்தில் தீர்வைகள் விதிக்கப் பட்டன. (சிலவகைத் துணிகளின் இறக்குமதி முற்றிலும் தடை செய்யப்பட்டது. அப்படிச் செய்யவில்லை என்றால் பைஸ்லே, மான்செஸ்டர் ஆகிய நகரங்களில் ஆலைகள் தோன்றி இருக்க முடியாது; நீராவி இயந்திரங்கள் தோன்றிய பின்னரும் இந்தியத்துணிகளுடன் போட்டியிட முடியவில்லை. இந்தியத் தொழில்கள் நசுக்கப்பட்ட பின்னர் தான் இங்கிலாந்தின் தொழில்கள் வளர்ச்சி அடைந்தன. இந்தியர்கள் தங்கள் நலன்களைப் பாது காத்துக் கொள்ளக்கூடிய அளவிற்கு அரசியல் தன்னுரிமை உடையவர்களாக இல்லை.)

இந்தியாவின் தொழில்கள் எவ்வாறு நசுக்கப்பட்டன என்பதைப் பின்னர் விரிவாகக் காண்போம். இன்றையதினம் பாரதத்துடன் ஒப்பிடுகையில் இங்கிலாந்து எந்த அளவுக்குத் தொழில்துறையில் வளர்ச்சி யடைந்து இருக்கிறதோ அதைப் போலப் பதினெட்டாவது நூற்றாண்டில் துணிகளை நெசவு செய்வதில் இந்தியா (பிரிட்டனுடன் ஒப்பிடுகையில்) முன்னணியில் இருந்தது. சிறப்புத் தேர்ச்சியுடைய இந்திய நெசவாளர்கள் தயாரித்த துணிகள் தரமிக்கதாகவும், மலிவாகவும் இருந்தன. இவற்றுடன் போட்டியிட முடியாது என்று எண்ணி இந்தியத் துணிகளின் இறக்குமதியைத் தடைசெய்தார்கள். இதனால் இங்கிலாந்தின் அங்காடியில் ஒரு வெற்றிடம் ஏற்பட்டது. இது இங்கிலாந்தின் ஆலைத்தொழில் வளர்ச்சிக்கு ஒரு தூண்டு கோலாக இருந்தது.

(ஆங்கிலேயர்கள் தங்கள் தொழில்கள் அழிந்துவிடக்கூடும் என்று அஞ்சி அதைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்காக எடுத்துக் கொண்ட முயற்சிகள் நூறாண்டு காலத்தில் ஆலைத்தொழில் களைத் தோற்றுவிக்கக் காரணமாக இருந்தன. குறிப்பிட்ட இலட்சியத்திற்காகத் தளராது பாடுபடும் மக்கள், பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவேண்டும் என்ற மனவுறுதி, இதற்கு இடம் அளிக்கும் அரசியல்தன்னுரிமை இவை அனைத்தும் இங்கிலாந்தின் தொழிற் புரட்சிக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் அடிப்படையாக இருந்தன.)

இந்தியர்கள் ஏழ்மையைப் பாரம்பரியமான சொத்தாக அடையவில்லை என்ற உண்மையை மேலே கூறிய எடுத்துக் காட்டுகள் தெளிவுபடுத்தும். ஒருகாலத்தில் பொருளாதார வாழ்க்கையில் மேம்பட்டிருந்த மக்கள் தற்காலத்தில் ஏழ்மையில் உழலக் காரணம் என்ன? இந்தியர்கள் நாகரிகமாக வாழ்ந்த காலத்தில் ஐரோப்பியர்கள் காட்டுமிராண்டிகளாக (வீரா அன்ஸ்டே)[5] வாழ்ந்தார்கள். ஆனால், அங்ஙனம் நாகரிக மற்றவர்கள் 18, 19ஆவது நூற்றாண்டுகளில் தோற்றுவித்த பொருளாதாரப் புரட்சியில் இந்தியர்கள் பங்கு கொள்ளவில்லை. **இந்தியர்கள் பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கக் காரணம் என்ன?** இந்தியாவின் ஏழ்மைக்கான காரணங்களை ஆராய விரும்புவோர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட நிகழ்ச்சி களையும், அவற்றின் சிறப்பு இயல்புகளையும் முழுமையாக உணர வேண்டும். சென்ற நூற்றாண்டில் இந்தியாவின் நாட்டு வருமானம் வளரவில்லை. தொழில்கள் நலிவுற்றன. நாடெங்கிலும் பலமுறை பஞ்சங்கள் ஏற்பட்டன. கொள்ளை நோய்கள் தோன்றின. இவை யாவும் தனித்தனியாகத் தோன்றிய நிகழ்ச்சிகளாகக் கருதக்கூடாது. இவை யாவும் ஒன்றோடு ஒன்று தொடர்புடைய பெரிய பிரச்சினையின் பல்வேறு கூறுக ளாகும். இவற்றைத் தொடர்புபடுத்தித் தொகுத்துக் கூறுவதன் மூலம் கிட்டத்தட்ட நூற்றைம்பது ஆண்டுகளாக நிலவிய பொரு ளாதாரத் தேக்கத்திற்கும், விடுதலைக்குப் பின்னர் சுமார் 25 ஆண்டுகளில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க பொருளாதார வளர்ச் சிக்கும் அடிப்படையான காரணங்களை அறியலாம்.

இந்தியாவின் ஏழ்மைக்கான காரணங்களை ஆராய்ந்தவர்கள் பலர். இவர்களது கருத்துகளை நான்கு பிரிவுகளாகப் பிரிக் கலாம். முதலில் இந்தியர்களின் ஏழ்மைக்குச் சமயக் கருத்து களும், சமூக அமைப்பும் முக்கியமானவை என்று கூறுகிறார்கள். இரண்டாவதாக மக்கள்தொகை பெருக்கத்தால் இந்தியா ஏழ்மையில் ஆழ்த்தப்பட்டது என்று கூறினார்கள். இவ் விரு வாதங்களையும் ஏற்பதற்கில்லை. மூன்றாவதாகத் தேசியவாதிகளின் கருத்து. பிரிட்டிஷாரின் ஏகாதிபத்திய ஆட்சியையும், அவர்கள் பின்பற்றிய சுரண்டல் தன்மை உடைய வாணிபக் கொள்கையையும் முக்கியமாகக் குறை கூறுகிறார்கள். இது

[5] இந்தியர்கள் நாகரிகத்தில் சிறந்து விளங்கியபோது ஐரோப்பியர்கள் காட்டு மிராண்டிகளாக இருந்தனர் என்று வீரா அன்ஸ்டே கூறுகிறார். Vera Anstey: The Economic Development Of Inida, Longmans, 1957, p. 5.

ஓரளவிற்கு உண்மை. ஆனால், பிரிட்டிஷ் ஆட்சி முடிவுற்றதும், சுரண்டல் வாணிபக் கொள்கை அகற்றப்பட்டதும் இயல்பாகப் பொருளாதார வளர்ச்சி ஏற்படவில்லை. அதற்காக முனைந்து பாடுபட வேண்டும். நான்காவதாகப் பேராசிரியர் ரஸ்டவ் அவர்களின் வளர்ச்சிநிலைக் கோட்பாட்டைக் கருதலாம். இக் கோட்பாட்டின் அடிப்படையில் நூற்றாண்டுகளுக்கும் மேலாக நிலவிய பொருளாதாரத் தேக்கத்தையும், கடந்த இருபது ஆண்டு களாக ஏற்பட்டுள்ள பொருளாதார வளர்ச்சியையும் விளக்கிக் கூறமுடியும்.

## சமூக அமைப்பும் தேக்க நிலையும்

இந்தியர்கள் பொருளாதார முன்னேற்றப் போட்டியில் ஈடுபடாமல் பின்தங்கி இருப்பதற்கு அவர்களின் சமய நம்பிக்கையும், சமூக அமைப்பும் முக்கியமானவை என்று திருமதி வீரா அன்ஸ்டே கூறுகிறார். அவரது கருத்துகளைப் பின்வருமாறு கூறலாம் :

பொருளாதார முன்னேற்றத்திற்கான தடைகள் அன்றாட வாழ்க்கையிலும், பழக்க வழக்கங்களிலும், சமூக அமைப்பிலும் வேரூன்றி இருக்கின்றன. சாதி அடிப்படையில் உள்ள ஏற்றத் தாழ்வுகள், இந்துக்களின் மதச்சார்புடைய பிற்போக்கான மனப்பான்மை, சோரமுற்ற ஆண்களின் ஒழுக்கக் குறைவான நடத்தை ஆகியவற்றைக்[6] கண்டனம் செய்துள்ளார்.

வீரா அன்ஸ்டேயின் வாதங்களைத் தெளிவாக ஆராய்ந்து பார்க்க வேண்டும். பொருளாதார வளர்ச்சியைச் சமூக அமைப்புகள் தடை செய்கின்றன என்று கூறுகிறார். தனி ஒருவரின் ஆக்கமுயற்சியை ஏகக்குடும்பம் அழித்துவிடுகிறது. குடும்பத்தலைவர், குடும்ப உறுப்பினர்கள் ஆகியோரின் விருப் பத்தைப் புறக்கணிக்க முடியாது. ஒருவர் தம் விருப்பப்படி (முக்கியமாகத் தொழில் முயற்சிகள்) எதையும் மேற்கொள்வது இயலாத காரியம். குடும்ப கௌரவம் (பொருளாதார மேம்பாட்டைவிட) முக்கியமாகக் கருதப்படுகிறது. ஏகக் குடும்பத்தினர் தனிப்பட்ட முறையில் பொருள் ஈட்டினாலும் அதை முழுவதும் தாமே அனுபவிக்க முடிவதில்லை. பொருள் ஈட்டுவதற்காக யாரும் ஒருவரைப் பாராட்டுவது இல்லை. அதைப் போலவே பொருள் ஈட்ட இயலாமைக்காக யாரையும் குறை

[6] வி. பி. சிங்—இந்தியப் பொருளாதார வரலாறு, 1857-1956. தமிழ் வெளி யீட்டுக் கழகம். பக். 118-121.

கூறுவதில்லை. எனவே, ஏகக்குடும்ப அமைப்பு பொருள் ஈட்டுவதற்குப் போதிய ஊக்கம் அளிக்கவில்லை. பெண்கள் ஆக்க வேலையில்—வருமானம் ஈட்டும் முயற்சிகளில்—ஈடுபடுவதை இந்த அமைப்பு தடைசெய்கிறது.

குடும்ப அமைப்பைப் போலவே சாதியும் தனி மனிதனின் ஆக்க முயற்சியைக் கட்டுப்படுத்துகிறது. ஒருவர் தாம் விரும்பிய தொழிலைச் செய்யலாம் என்பது சாதி அமைப்பில் இயலாத காரியம். திறமையை விட மரபுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. இந்தச் சூழ்நிலையில் போட்டி மனப்பான்மை வளருவது இல்லை. புதிய முயற்சிகள், புதிய நுட்பங்கள், புதுமை புகுத்தல் முதலியன ஊக்குவிக்கப்படவில்லை.

சமயக் கருத்துகளில் முக்கியமாகக் 'கர்மா' அல்லது 'விதி'யைக் குறை கூறியுள்ளார். விதியின் மேலுள்ள நம்பிக்கை சுயமுயற்சிகளைக் கட்டுப்படுத்துகின்றன. சமய அடிப்படையில் திருமணம் செய்துகொள்ள வேண்டியது கட்டாயமாக உள்ளது. ஒவ்வொருவரும் சந்ததிகளை ஈன்று அளிப்பதைத் தங்கள் கடமையாகக் கருதுகிறார்கள். அதிக அளவு பிறப்பு விகிதத்திற்கும், மக்கள்தொகைப் பெருக்கத்திற்கும் இது காரணமாக இருக்கிறது.

மக்களிடையே பிற்போக்கான மனப்பான்மையை ஏற்படுத்துவதற்குச் சமூக அமைப்புகளும், சமய நம்பிக்கைகளும் காரணமாக உள்ளன என்று கூறுகிறார். இவை தொழில் துணிவு ஏற்படுவதைத் தடை செய்கின்றன.

இந்தியச் சமூக அமைப்பில் சில குறைபாடுகள் இருக்கின்றன என்பது உண்மைதான். விரும்பத்தகாத சமூகப் பழக்க வழக்கங்களைத் தேசியத்தலைவர்கள் அனைவரும் கண்டனம் செய்துள்ளார்கள். இருந்தபோதிலும் வீரா அன்ஸ்டேயின் வாதத்தை முழுமையாக ஏற்பதற்கில்லை. இவர் அனுமானிக்கின்ற படி ஏகக்குடும்பமும், சாதியும் நெகிழ்வற்ற சமூக அமைப்புகளாக விளங்குமேயானால், இவை பொருளாதார வளர்ச்சிக்கு ஊறு விளைவித்திருக்குமோ என்று ஐயப்பட இடம் உண்டு. உண்மையில் சமூக அமைப்புகள் நெகிழ்வுடையவை. இவை காலத்திற்கு ஏற்ப மாறிக்கொண்டே வந்துள்ளன. இவை நெகிழ்வற்றவையாக இருந்திருக்குமேயானால் 2000 ஆண்டுகளுக்கும் மேலாக நீடித்திருக்க முடியாது. இந்தியச் சமூக அமைப்புகள் காலத்திற்கு ஏற்ப மாறுந்தன்மை உடையவை

என்று வீரா அன்ஸ்டே கூறுவதைத்தான் ஏற்க முடியவில்லை என்று கூறுகிறோம்.

பொருளாதாரத் தேக்கநிலைக்குப் புராதனச் சமூக அமைப்புகளை மட்டும் குறைகூறுவது வரலாற்று உண்மைகளைத் திரித்துக் கூறுவதாகும். பலவகையான சக்திகள் பொருளாதார வளர்ச்சியைக் கட்டுப்படுத்துகின்றன. இவற்றுள் சமூக அமைப்பும் ஒன்று. பொருளாதாரத் தேக்கநிலைக்கு இதர சக்திகளும் சமூக அமைப்பைப் போலவே பொறுப்பு ஏற்கவேண்டும். ஆனால், வீரா அன்ஸ்டே இந்தியாவின் பிற்போக்கான நிலைமைக்குச் சமூக அமைப்பே காரணம் என்று கூறுகிறார். இது ஏற்க இயலாத கூற்றாகும்.

வீரா அன்ஸ்டேயின் வாதத்தை நாம் ஏற்றுக்கொண்டால் பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்தும் சக்திகளைவிடச் சமூக அமைப்புச் சக்திகள் வலிமை உடையன என்று ஏற்றுக் கொண்டவர்கள் ஆவோம். இது உண்மைக்கு மாறானது. இக் கருத்து சமூக அமைப்பிற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதுடன், இவை காரணமாகவும், பொருளாதார வளர்ச்சி அல்லது தேக்க நிலை விளைவாகவும் ஏற்பட்டதெனக் கருதப் படுகிறது. இவற்றிடையே ஒருவழித் தொடர்பு நிலவுவதாக அனுமானிக்கிறார். நடைமுறையில் பொருளாதார வளர்ச்சியாலும் சமூக அமைப்புகள் மாற்றம் அடைகின்றன.

தொழிற்புரட்சிக்குப் பின்னர் ஐரோப்பாவில் தோன்றிய கட்டமைப்புகள் தொழிற்புரட்சிக்கு முன்னர் இந்தியாவில் நிலவ வேண்டும் என்று சிலர் எதிர்பார்க்கிறார்கள். பொருளாதார முன்னேற்றமும், சமூக அமைப்புகளும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ளன என்பதை இவர்கள் உணரவில்லை.

சமயக் கருத்துகளில் விதி அல்லது ஊழ்வினை வலியுறுத்தப் படுகிறது. விதியை மக்கள் நம்புகிறார்கள். அதனால் அவர்கள் சோம்பேறிகளாக, முயற்சி இல்லாதவர்களாக இருக்கின்றனர் என்று வீரா அன்ஸ்டே கூறுவதை ஏற்கமுடியாது. ஊழ்வினையை மக்கள் நம்பினாலும், அதைவிட அதிகமாகத் தங்கள் முயற்சியை நம்பியிருந்தார்கள்.

‘ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்’

என்பது தமிழ்மறை. தெய்வச் செயலாகக் கருதப்படும் ஊழ் வினையைக்கூட முயற்சியால் வென்றுவிடலாம்.[7] 'கர்மா' என்ற சொல்லிற்கு விதி என்று பொருள் கூறுவதைப் போலவே 'கருமம்' (செயல்) என்றும் பொருள் கூறலாம். ஒருவன் தன்னுடைய செயல்களைக்கொண்டு, அவற்றின் அடிப்படையில் வெற்றி அடைகிறான். வெற்றிக்கும் தோல்விக்கும், பெருமைக்கும் சிறுமைக்கும் அவனவன் செயல்களே காரணமாக இருக்கின்றன.[8]

உலகில் உள்ள ஒவ்வொரு சமயமும் மக்களை நெறிவழிப் படுத்தி அமைதி, மனநிம்மதி, ஒழுங்கு, கட்டுப்பாடு ஆகிய வற்றை ஏற்படுத்துகின்றன. ஆகையால் ஒரு சமயத்தைக் குறைத்தும், மற்றதை உயர்த்தியும் பேசுபவர்கள் தங்கள் அறியாமையைத்தான் வெளிப்படுத்திக்கொள்ளுகிறார்கள். இந்து சமயமும், புத்த சமயமும் பொருள் ஈட்டும் நடவடிக்கை களை ஆதரிக்கவில்லை, அதற்குத் தடையாக இருக்கின்றன என்பது பொருந்தாக் கூற்றாகும். ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும் நுழையலாம், செல்வந்தன் மட்டும் தேவலோகம் செல்ல முடியாது என்று விவிலியம் கூறுகிறது. கிறித்துவ சமயம் செல்வத்தையும், செல்வந்தர்களையும் இழித்துரைப்பதால் மேலை நாட்டவர்கள் பொருள் தேடாமல் இருக்கவில்லை.

திருமணம், மக்கட்பேறு ஆகியவை இந்து சமயத்திற்கு மட்டும் அமைந்த சிறப்பான கூறுகளாக இல்லை. தொன்மை யான சமுதாயங்கள் ஒவ்வொன்றும் இவற்றை வற்புறுத்தி யுள்ளன.

### மக்கள்தொகையும் தேக்கநிலைமையும்

இந்தியாவின் ஏழ்மை நிலைமைக்கு மக்கள்தொகைப் பெருக்கம்தான் காரணம் என்று சிலர் கூறியுள்ளார்கள். ஓரளவிற்கு வாழ்க்கை வசதிகள் அதிகரித்தவுடன் அதை ஈடு செய்யும் அளவிற்கு மக்கள்தொகை பெருகிவிடுகிறது. பொருளாதார வளர்ச்சியை இது தடுத்து விடுகிறது. பஞ்சாப் பகுதிகளில் பாசன வசதிகள் பெருகியதும் மக்கள்தொகை

[7] 'தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.'

[8] 'பெருமைக்கும், ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்'

அதிகரித்துவிட்டது என்று திரு. டார்லிங் கூறுகிறார்.[9] இக் கருத்தைத் திரு. பேடன் பௌவல் என்பவரும் ஆதரித்துள்ளார்.[10] நிலத் தீர்வை குறைக்கப்பட்ட பகுதிகளில் மக்களின் வாழ்க்கை வசதிகள் அதிகரித்து விடுகின்றன. ஆனால், அதைவிட அதிகமாக மக்கள்தொகை பெருகிவிடுவதால் (மக்கள்) தொடர்ந்து ஏழ்மை நிலையிலேயே உழலுகிறார்கள். இக் கருத்தைத் திருமதி வீரா அன்ஸ்டேயும் ஆதரித்துள்ளார்.

மக்கள்தொகைப் பெருக்கம் பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இல்லை என்பதைத் **தாதாபாய் நௌரோஜி**[11] நிரூபித்துள்ளார். மக்கள் தொகை பெருகும் நாடுகளில் (காலங்களில்) எல்லாம் பொருளாதார வளர்ச்சி குறைவாக இருப்பதில்லை. காட்டாக, பத்தொன்பதாவது நூற்றாண்டில் இங்கிலாந்து, வேல்ஸ் ஆகிய பகுதிகளில் மக்கள்தொகை $3\frac{1}{2}$ மடங்கு அதிகரித்தது; அதேகாலத்தில் தலா வருமானம் $4\frac{1}{2}$ மடங்கு அதிகரித்தது. இங்கிலாந்தின் மக்கள்தொகையைப் போல இந்தியாவின் மக்கள்தொகை வளரவில்லை என்றாலும், இங்குத் தலா வருமானம் உயர்வதற்குப் பதிலாகக் குறைந்துள்ளது.

இந்தியாவின் மக்கள்தொகை, நாட்டு வருமானம் ஆகிய இரண்டையும் ஜப்பானுடன் ஒப்பிட்டாலும் இதே முடிவை உறுதிப்படுத்தலாம். 1881–லிருந்து 1941வரை இந்திய மக்கள்தொகை 55%—ம், ஜப்பானில் 100%—ம் அதிகரித்துள்ளன. இவ் விரு நாடுகளின் நாட்டு வருமானம் இதே காலத்தில் ஆண்டுதோறும் (சராசரியாக) முறையே **0.5%** **4%** அதிகரித்துள்ளன. ஜப்பானின் மக்கள்தொகை இந்தியாவைவிட, சுமார் இரண்டு மடங்கும், ஜப்பானின் வருமானம் ஆண்டுதோறும் இந்தியாவைவிடச் சுமார் எட்டு மடங்கும் அதிகரித்து உள்ளன. இந்தியா இவ் விரு துறைகளிலும் பின்தங்கி விட்டது. மக்கள்தொகைப் பெருக்கம் பொருளாதார வளர்ச்சியைத் தடைப்படுத்தவில்லை என்ற வரலாற்று உண்மையை இது விளக்குகிறது.

[9] Quoted by Vera Anstey, *ibid*, p. 41

[10] *Ibid*, p. 41

[11] Quoted by V. V. Bhatt, *ibid*-pp. 34, from, Poverty and Un-British Rule in India (London. 1901) By Dadabai Naoroji.

இதைக் கருத்தியல் அடிப்படையிலும் திறனாய்வு செய்ய வேண்டும். மக்கள்தொகைப் பெருக்கம் பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு தடை என்று கூறுகிறார்கள். அதாவது, மக்கள் தொகை பெருகவில்லை என்றால் பொருளாதார வளர்ச்சி அதிகமாக ஏற்பட்டிருக்கும் என்பது இவர்களது கருத்து. பொருளாதாரச் சக்திகளின் செல்வாக்கிற்கு உட்படாதவாறு மக்கள்தொகைக் காரணி செயல்படுகிறது என்று அனுமானிக்கிறார்கள். மக்கள்தொகையைப் புறம் சார்ந்த சக்தியாக ஏற்பதற்கு இல்லை. இது தவறு என்பதை நிரூபிக்கமுடியும்.

மக்கள்தொகைப் பெருக்கமும், பொருளாதார வளர்ச்சியும் தனித்தனியே ஏற்படும் நிகழ்ச்சிகளாக இல்லை. இவை ஒன்றை ஒன்று சார்ந்துள்ளன. அதாவது, மக்கள்தொகை என்பது பொருளாதாரச் சக்திகளின் ஆதிக்கத்தில் செயல்படும் அகம் சார்ந்த காரணியாக உள்ளது.

பொருளாதார வளர்ச்சியின் விளைவாக மக்கள்தொகைப் பெருக்கம் தூண்டப்படுகிறது. சத்துணவு, ஆரோக்கியம், மருத்துவ வசதிகள், பொதுச் சுகாதாரம் முதலியன பொருளாதார வளர்ச்சியுடன் அதிகரிக்கின்றன. இதனால் உடனடியாக இறப்பு விகிதம் குறைந்து விடுகிறது. அதேசமயம் பிறப்புவிகிதம் குறையாத காரணத்தால் மக்கள்தொகைப் பெருக்கம் ஏற்படுகிறது. பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் இறப்புக் கட்டுப்பாடும், வளர்ச்சியின் மையக்கட்டத்தில் பிறப்புக் கட்டுபாடும் ஏற்படுகின்றன. பின்னர் ஏற்படும் பிறப்பு விகிதக் குறைப்புக்குப் பொருளாதார வளர்ச்சியே காரணமாக இருக்கிறது. தொழில் வளர்ச்சி, நகரங்களின் வளர்ச்சி, கல்வி வசதிகள், வேலை வாய்ப்பு, பெண்களின் கல்வி, மற்றும் வேலை வாய்ப்பு முதலியன குறிப்பிடத்தக்கவை. ஒவ்வொரு குடும்பத்தினரும் வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொள்ளவும், சமுதாயத்தில் மேலான நிலையை அடையவும் சிறிய அளவு குடும்பங்கள் அவசியமாக இருக்கின்றன.[12] இவ்வாறு மக்கள்தொகைப் பெருக்கவேகம் குறைக்கப்படுகிறது.

*1951-61*ஆகிய ஆண்டுகளில் பாரதத்தின் மக்கள்தொகை 21%—ம், நாட்டு வருமானம் 44%—ம், தலா வருமானம்

[12] Harvey Leibenstein-Economic Backwardness and Economic Growth: Science Edition, 1965, Chap.10, pp. 147-175.

18.4%—ம் அதிகரித்துள்ளன.[13] 1951-க்குப் பின்னர் மக்கள் தொகை பெருகும் வேகமும், வருமானம் உயரும் விகிதமும் அதற்கு முன்புள்ள ஆண்டுகளில் ஏற்பட்டதை விட மிக அதிகம். பொருளாதார வளர்ச்சியின் ஒருகூறாக மக்கள்தொகை பெருகுவதை இது சுட்டிக்காட்டுகிறது.

**சுரண்டல் கொள்கையும் தேக்கநிலையும்**

இந்தியத் தேசியப் பொருளாதாரக் கருத்தினர் பிரிட்டிஷ் ஆட்சியின் சுரண்டல் தன்மை வாய்ந்த வரிக்கொள்கைகளையும், வாணிபக் கொள்கைகளையும் கண்டனம் செய்துள்ளார்கள். முக்கியமாக ரமேஷ்டட், தாதாபாய் நௌரோஜி, ரானடே, கோகலே முதலியோர் இக் கருத்தை ஆதரித்துள்ளார்கள். பிரிட்டிஷாரின் திட்டமிட்ட கொள்கையின் விளைவாக இந்தியாவில் பொருளாதாரத் தேக்கநிலை ஏற்பட்டுள்ளது என்று கூறியுள்ளார்கள்.

தொழில் வளர்ச்சி குன்றியதற்கும், பொருளாதாரத் தேக்கநிலை ஏற்பட்டதற்கும் இந்தியர்கள் எவ்வகையிலும் பொறுப்பாளிகளாக இல்லை. அளவுக்குமதிகமான வரிச்சுமையை விவசாயிகளும், தொழில் செய்வோரும் ஏற்க வேண்டியிருந்தது. வரி செலுத்துவதற்குப் போதிய வருமானத்தை அவர்களால் ஈட்டமுடியவில்லை. செல்வத்தைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் புதிதாக ஏற்படவில்லை. பொருளாதார வளர்ச்சிக்கான அடிப்படை தேய்ந்து போயிற்று. இதற்குக் கிழக்கு இந்தியக் கம்பெனியும், பிரிட்டிஷ் ஆட்சியும் பொறுப்பு ஏற்கவேண்டும். இவர்கள் நூருண்டுகளுக்கும் மேலாகத் தங்கள் சுயநலத்தை மேம்படுத்திக் கொள்ளும் நோக்கத்தோடு பின்பற்றிய வாணிபக் கொள்கையின் விளைவாக இந்தியாவின் தொழில்கள் நசுக்கப்பட்டன. இங்கிலாந்தின் தொழில்கள் வளர்ச்சி அடைந்தன. இவை இரண்டும் பிரிக்க முடியாத நிகழ்ச்சிகள். இந்தியாவின் தொழில்களை நசுக்குவதற்கு அரசியல் அதிகாரம், செல்வாக்கு, தொழில் கொள்கை, வாணிபக் கொள்கை, பேதப்படுத்தும் வரிக் கொள்கை, போக்குவரத்து வளர்ச்சி முதலியன பயன்படுத்தப்பட்டன. இங்கிலாந்தின் தொழில் வளர்ச்சிக்குத் தேவையான கச்சாப் பொருள்களைப் பயிரிடுவதற்கு ஊக்கம் அளித்தார்கள். அதேசமயம் இந்தியத் தொழில்களைப் பாதுகாக்க எவ்வித நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை. இந்தியத் தொழில்களின் அழிவிற்குப் பிரிட்டிஷ் ஆட்சியின் கொள்கைகள் காரணமாக இருந்தன. இந்தியாவை ஒரு நாடாகக் கருதாமல் **பின்நிலம்** (Hinter land) ஆகக் கருதினர்கள்.

[13] V. V. Bhatt, *ibid*, p. 119.

தொழில்களின் வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தபின்னர் இந்தியர்களின் புகலிடமாக வேளாண்மை மட்டுமே விளங்கியது. சராசரியாக ஐந்தில் நான்கு பேர் விவசாயத்தை நம்பியிருந்தார்கள். ஒரே தொழிலான விவசாயமும் வரிச்சுமையால் அவதிப்பட்டது. இந்தியாவில் நிலவரி ஆண்டுக்கு ஆண்டு, மாநிலத்திற்கு மாநிலம் வேறுபட்டது. நிலவரி விகிதங்கள் வேறுபட்டதுடன், வெவ்வேறு அடிப்படையில் (நிலவரி) நிர்ணயிக்கப்பட்டன. இந்திய நிலவரி மிக அதிக அளவாக இருந்தது. பதினெட்டாவது நூற்றாண்டு முழுவதிலும் இங்கிலாந்தின் உயர்ந்த அளவு நிலவரி நிகர உற்பத்தியில் 20%—க்கும் குறைவாக இருந்தது. ஆனால், 1793முதல் 1882 வரை வங்காளத்தில் நிலவரி நிகர உற்பத்தியில் 80%முதல் 90%வரை இருந்தது. சென்னை மாநிலத்தில் மொத்த உற்பத்தியில் 50% வரியாக வசூலிக்கப்பட்டது. சுதேச மன்னர்கள் ஆட்சியில் இருந்ததைவிடக் கிழக்கு இந்தியக் கம்பெனியின் ஆட்சியில் நிலவரி அதிகம். முப்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை நிலவரி உயர்த்தப்பட்டது (சாசுவத நிலவரித் திட்டம் அமுலாக்கப்பட்ட பகுதிகள் நீங்கலாக). ஒரு பகுதியில் வாழும் விவசாயிகள் ஓரளவிற்கு வசதியான வாழ்க்கை உடையவர்களாக இருந்ததாலும், தானியத்தின் விலை அதிகரித்ததாலும் தீர்வைகள் உயர்த்தப்பட்டன.

அரசாங்கம் மக்களை வாழ வைத்து, அவர்களின் வருமானத்தில் ஒரு பகுதியை வரியாக வசூலிப்பதுதான் உலக இயற்கை. ஆனால், இந்த (பிரிட்டிஷ்) அரசாங்கம் மக்களின் வருமான வாய்ப்புகளை எவ்வகையிலும் அதிகரிக்கவில்லை. வரியாக வசூலித்த பணத்தை மக்களின் மேம்பாட்டிற்காகச் செலவிடவில்லை. அவை மூலதனமாக வெளியேற்றப்பட்டன. இதை ஏகாதிபத்தியச் சுரண்டல் என்று அழைப்பார்கள்.

பூமியில் சுவர்ந்துள்ள ஈரத்தைச் சூரிய வெப்பம் பிரித்து எடுப்பதைப்போல மக்களிடமிருந்து அரசன் வரித்தொகையைத் திரட்டுகிறான். மேலே கிளம்பிய நீராவி மேகங்களாகித் திரும்பவும் பயிர்களுக்கு உயிர் ஊட்டும் மழையாகப் பூமியின் வளத்தைப் பெருக்குகின்றன.[14] அரசனும் தான் திரட்டிய வரித்தொகை முழுவதையும் நாட்டின் நலனுக்காகச் செலவிடுகிறான். இதனால் உற்பத்தி வாய்ப்புகள் அதிகரிக்கின்றன.

[14] Quoted by R. C. Dutt, The Economic History of India, vol. I. (1757-1837) Publications Dvision. p. XXVIII.

பிரிட்டிஷ் ஆட்சியில் வரியாக வசூலிக்கப்பட்ட தொகை முழுவதும் இந்தியாவிலேயே செலவிடப்படவில்லை. இதனால் வரித்தொகையின் சுமை மேலும் அதிகமாகிவிட்டது. இந்தியாவில் வசூலிக்கப்பட்ட தொகை இங்கிலாந்தில் செலவிடப்பட்டது. இதனால் இந்தியாவில் உற்பத்தி வாய்ப்புகள் அதிகரிக்கவில்லை. இந்தியப் பொருளாதாரம் தேக்கமடைவதற்கு மேற்படி மூலதனச் சுரண்டல் ஒரு முக்கியக் காரணம் ஆகும்.

சுரண்டல் மூலதனக் கணக்கிலும், நடப்புக் கணக்கிலும் ஏற்பட்டது. 1858-ல் பிரிட்டிஷ் அரசியார் இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும் கிழக்கு இந்தியக் கம்பெனி மூடப்பட்டது. கம்பெனியின் பங்குதாரர்களுக்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுப்பதற்காக இந்தியாவில் கடன் எழுப்பப்பட்டது. மேற்படி கடன் தொகையை இந்தியர்கள் வரிப்பணத்திலிருந்து திருப்பித் தரவேண்டும். அடுத்து இருப்புப்பாதை போடுவதற்குத் தேவையான மூலதனம் முழுவதும் இங்கிலாந்தில் எழுப்பப்பட்டது. இது அனுவசியமானது என்று தேசியவாதிகள் கருதுகிறார்கள். இதில் பெரும்பகுதியை இந்தியாவிலேயே வாங்கியிருக்கலாம். இதைத்தவிரக் கடன் தொகை முழுவதும் சிக்கனமாகவோ உற்பத்தியை அதிகரிக்கும் முதலீட்டிற்காகவோ செலவிடவில்லை. இதனால் பொதுக்கடன் அதிகரித்தது. 1857-ல் 51 மில்லியன் ஸ்டர்லிங் ஆக இருந்த கடன் தொகை, 1901-ல் 200 மில்லியன் ஸ்டர்லிங்கைவிட அதிகமாக இருந்தது.

நடப்புக்கணக்கில் நிருவாகச் செலவுகள் (Home charges) என்ற தலைப்பில் ஆண்டுதோறும் இங்கிலாந்திற்கு 16 மில்லியன் ஸ்டர்லிங் அனுப்பப்பட்டது. இதைத் தவிர ஆங்கில அதிகாரிகள் ஆண்டுதோறும் தங்கள் தாய்நாட்டிற்கு அனுப்பும் தொகை 4 மில்லியன் ஸ்டர்லிங். ஆண்டுதோறும் இந்தியாவின் நிகர வரித் தொகையில் பாதிக்குமேல் வெளியேற்றப்பட்டது. [15]

1757 முதல் 1939 வரை ஆண்டுதோறும் நாட்டு வருமானத்தில் 2·3% சுரண்டல் இனமாக வெளியேற்றப்பட்டது என்று பட் கணித்துள்ளார். [16]

மூலதனச் சுரண்டல் என்பது இந்தியர்களின் உயர்வு நவிற்சியால் உருவாக்கப்பட்டது என்று கருதும் திருமதி. வீரா

[15] R. C. Dutt, *ibid*-pp. XXIX

[16] V. V. Bhatt, *ibid*-p. 51.

அன்ஸ்டே கூட திரு. சி. என். வக்கீலின் கூற்றை ஏற்றுக் கொண்டுள்ளார்.[17]

> திரு சி. என். வக்கீலின் (சுரண்டல்) மதிப்பீட்டைக் குறைந்த அளவு மதிப்பீடாகப் பலரும் கருதுவார்கள். இவரது மதிப்பீட்டை அடிப்படையாகக்கொண்டு 1834 முதல் 1939 வரை சுமார் 850 மில்லியன் வெளியேற்றப் பட்டது என்று பட் கணித்துள்ளார்.

இந்தியாவின் ஏழ்மைக்கு இந்தியர்கள் எவ்விதத்திலும் பொறுப்பாக இல்லை. ஏகாதிபத்திய ஆட்சியும் அதன் சுரண்டல் கொள்கையும்தான் இதற்கு முக்கியக் காரணமாகும். இந்தியாவில் நிலவிய சூழ்நிலை வேறு எந்த நாட்டில் நிலவி யிருந்தாலும் அந்த நாடு (விரைவில்) வறுமையில் ஆழ்த்தப் பட்டிருக்கும். பேரரசின் திட்டமிட்ட சுரண்டலுக்கு உள்ளாக்கப் பட்ட எந்த நாடும் ஏழ்மையாக்கப்படும் என்பது திண்ணம்.

ஏகாதிபத்திய ஆட்சியின் சுரண்டல் தன்மையை ஜான் ஸ்டுவர்ட் மில் விளக்கமாகக் கூறியுள்ளார்:[18]

> ஒரு நாட்டினர் தங்களைத் தாங்களே ஆட்சிசெய்வது இயற்கை. மாறாக ஒரு நாட்டினர் வேறொரு மக்களை ஆளுதல் என்பது முடியாத காரியம். ஆட்சி செய்பவர்கள் எப்போதும் தங்களுடைய நன்மைகளை மட்டுமே கருத்தில் கொண்டிருப்பார்கள். ஆளப்படுபவர்களின் நன்மையைக் கவனிக்க மாட்டார்கள். கால்நடைகளை லாப நோக்கத்திற்காகப் பண்ணையில் எவ்வாறு பராமரிக்கிறார்களோ அதைப்போலப் பிறநாட்டு மக்களை யும் தங்கள் இலாப நோக்கத்திற்காகப் பயன்படுத்து வார்கள்.

## வளர்ச்சிநிலைக் கோட்பாடும் பாரதமும்

பொருளாதார வரலாற்றின் அடிப்படையில் வளர்ச்சி நிலைகளைப் பொதுமைப்படுத்தி வளர்ச்சிநிலைக் கோட்பாட்டை

[17] Vera Anstey, *ibid*, p. 599-601.

[18] Quoted by R. C. Dutt, *ibid*, p. xxxI

உருவாக்கியவர் திரு. ரஸ்டவ்.[19] அவரது கோட்பாடு பாரதச் சூழ்நிலைமைக்குப் பொருந்துகிறது.

ஒவ்வொரு நாட்டிலும் இயல்பாக உள்ள சமூக, பொருளாதார அரசியல் கட்டமைப்புகள் ஆரம்ப நிலையில் பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கின்றன. கட்டமைப்பு இடையூறுகள் அகற்றப்பட்டவுடன் மக்கள் அனைவரும் பொருளாதார வளர்ச்சியில் முழுமூச்சுடன் ஈடுபட முடிகிறது. வளர்ச்சி தொடர்ந்து ஏற்படுவதுடன், பொருளாதார அமைப்பின் இயல்பாக—நிரந்தரமான கூறாக—காணப்படுகிறது. உயிரினங்கள் வளருவது எப்படி இயல்பாக இருக்கிறதோ அதைப்போலப் பொருளாதார அமைப்பும் வளருகின்றன. தேக்கமுற்று இருந்த பொருளாதார அமைப்பு நாளடைவில் வளரும் தன்மையை இயல்பாக அடைகிறது. வளர்ச்சி நிலைகளில் முக்கிய திருப்புமையமாக எழுநிலை (Take-off Stage) உள்ளது. இது சுமார் 20 ஆண்டுகள் முதல் 25 ஆண்டுகள் வரை நீடிக்கும்.

விளக்கம்

'எழுநிலை' என்றால் என்ன? இது விமானம் மேல்நோக்கி எழும்புகின்ற நிலையைச் சுட்டிக்காட்டுகிறது. தரையில் நிறுத்தப்பட்ட விமானம் புவிஈர்ப்புச் சக்தியின் முழுமையான ஆளுகையில் இருக்கிறது. புவிஈர்ப்புச் சக்தியிலிருந்து முற்றிலும் விடுபடுவதற்கு அதைவிட அதிகமான உந்து சக்தியைத் தானே உற்பத்தி செய்வதால் விமானம் பறக்கமுடிகிறது. உந்துசக்தியை ஏற்படுத்திக் கொள்ளுவதற்காக விமானம் ஓடு பாதையில் விரைந்து செல்கிறது. இங்கு விமானம் தரையிலிருந்து மேலே கிளம்புவதால் இதை 'எழுநிலை' என்று கூறுகிறோம்.

விமானம் தரையில் இருந்தாலும் ஆகாயத்தில் பறந்தாலும் சமநிலையில்தான் இருக்கிறது. அதைப்போலப் பொருளாதார அமைப்புத் தேக்கமுற்ற நிலையில் அசையாச் சமநிலையிலும், வளரும் காலத்தில் இயக்கச் சமநிலையிலும் இருக்கும். புவிஈர்ப்பைப் போலப் புராதனச் சமுதாயத்தில் கட்டமைப்புச் சக்திகள் உள்ளன. அரசியல், சமூக, பொருளாதார நடவடிக்கைகளை முறைப்படுத்துவதால் வளர்ச்சிக்குத் தேவையான உந்து சக்தியை நாட்டிலேயே திரட்டமுடியும்.

[19] W. W. Rostow—The Stages of Economic Growth, Cambridge, 1960.

'எழுநிலை'க் காலத்திலும், அதற்கு முன்னரும் அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படுகின்றன. 'எழுநிலை'க்கு முன்பு உள்ள நிலைமையும், அதன்பின் உள்ள நிலைமையும் ஒப்பிட்டால் இது தெளிவாகும்.

பழமையான சமுதாயங்களின் முக்கியத் தொழிலாக வேளாண்மை இருந்தது. சராசரியாக நால்வரில் மூவர் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பார்கள். பொருளாதார வளர்ச்சி ஏற்படுமானால் விவசாயத்தில் ஈடுபட்ட மக்களின் எண்ணிக்கை ஒப்புமையாகக் குறையும். தொழில், வாணிபம், போக்குவரத்து முதலிய துறைகளின் முக்கியத்துவம் அதிகரிக்கும். இத் துறைகளின் வேலைவாய்ப்பும் ஒப்புமையாக உயரக்கூடும்.

புராதனச் சமுதாயங்களில் முக்கியமாகத் தன்னிறைவு நிலை குறிப்பிடத்தக்கது. பொருளாதாரத் தன்னிறைவு நிலைக்கு சமூக, அரசியல் சக்திகள் துணையாக இருக்கின்றன. சிறு பிரிவுகளாக உள்ள அமைப்புகளில் மனிதன் தனக்காகவும், தன்னை அடுத்துள்ளவர்களுக்காகவும் உற்பத்தி செய்கிறான். பொருளாதார வளர்ச்சி ஏற்படுவதால் இந் நிலை மாறி, மனிதன் அங்காடிக்காகவும், இலாப நோக்கத்திற்காகவும் உற்பத்தி செய்வான்.

குடும்பத்தின் அளவு, மக்கள் பேறு பற்றிய கருத்துகள் சிறப்பாக மாற்றம் அடைகின்றன.

நாட்டின் வருமானப் பகிர்வு பொருளாதார வளர்ச்சிக்குச் சாதகமாக இருக்கவேண்டும். புராதனச் சமுதாய அமைப்பில் உபரியான வருமானம் ஆடம்பரங்களுக்காக விரயம் செய்யப் பட்டது. காட்டாக, வீடுகள் (கோயில்கள், மாளிகைகள்), பணியாளர்கள், ஆடை ஆபரணங்கள் முதலியன. நாட்டின் சேமிப்பை உற்பத்தி அல்லது உற்பத்தித்திறனை அதிகரிக்கும் வழிகளில் அவர்கள் செலவிடவில்லை. பொருளாதார வளர்ச்சி தொடர்ந்து ஏற்படுவதற்கு வருமானக்கட்டமைப்பிலும் தகுந்த மாறுதல்கள் ஏற்படவேண்டும். புதிய அமைப்பில் உபரியான வருமானத்தை உடையவர்கள் உற்பத்தித்திறனை அதிகரிக்கும் துறைகளில்—காட்டாக, கல்விக் கூடங்கள், தொழிற்சாலைகள், போக்குவரத்து முதலியன—முதலீடுகள் செய்வார்கள்.

மதிப்பு அல்லது முக்கியத்துவ அடிப்படையும் பொருளாதார வளர்ச்சியால் மாறுபடுகின்றன. சாதி அல்லது குலத்தின் அடிப் படையில் ஒருநபரைப் புராதனச்சமுதாயத்தில் மதித்தார்கள்.

சூழ்நிலைக்கும், பாரம்பரியத்திற்கும் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. புதிய சமுதாயத்தில் திறமைக்காகவும், ஆற்றலுக்காகவும் ஒரு நபருக்கு மதிப்புக் கொடுக்கிறார்கள்.

இயற்கையும், சமுதாயமும் மாற்றுதற்கியலாதவை என்று கருதப்பட்டன. இவை மாற்றக் கூடியவை என்ற எண்ணம் ஏற்படுகிறது. இவற்றைத் தனக்குச் சாதகமாக இப்பொழுது பயன்படுத்த முடியும் என்று நினைக்கிறார்கள். மனிதனால் ஆகக் கூடியது ஒன்றுமில்லை என்ற எண்ணம் மாறி, சாதிக்க முடியாதது ஒன்றுமில்லை என்று நம்புகிறார்கள்.

தொன்மையான சமுதாயத்தில் தலைவர்களாக இருப்பதற்குச் சாதி, பரம்பரை, நிலம் முதலிய தகுதிகள் வலியுறுத்தப் பட்டன. புதிய சமுதாயத்தின் தலைவர்கள் முற்போக்கான கருத்துகளை உடையவர்கள்; மரபிற்குப் புறம்பான புதிய முயற்சிகளையும், மாற்றங்களையும் ஆதரிப்பவர்கள்.

**'எழுநிலை'யின் இலக்கணம் :**

'எழுநிலை'க்குப் பேராசிரியர் ரஸ்டவ் கூறிய இலக்கணத்தைக் கூறுவோம். இதற்கு மூன்று நிபந்தனைகள் உள்ளன.

**முதலில்,** நாட்டு வருமானத்தில் முதலீட்டின் விழுக்காடு உயரவேண்டும். நிகர நாட்டு வருமானத்தில் 5% அல்லது அதைவிடக் குறைவாக இருந்த முதலீட்டு விகிதம் 10% அல்லது அதைவிட அதிகமாக உயர வேண்டும்.

**இரண்டாவதாக,** பொருளாதார அமைப்பில் முக்கியத்துவம் உடைய செய்பொருள் உற்பத்தித்துறைகள் அதிவேகமாக வளர்ச்சி அடைய வேண்டும்.

**மூன்றாவதாக,** நாட்டின் அரசியல், சமூக, நிறுவன கட்டமைப்புகள் வளர்ச்சிக்குச் சாதகமாக இருக்க வேண்டும். புதிய துறைகளின் வளர்ச்சி வாய்ப்புகளைப் பயன்படுத்துவதாலும், 'எழுநிலை'யில் உள்ளுருகத் தோன்றும் புறச்சிக்கன விளைவுகளாலும் பொருளாதார வளர்ச்சி தொடர்ந்து நீடிப்பதற்கு இந்த அமைப்புகள் உதவுகின்றன.

இந்த நிபந்தனைகள் அனைத்தும் நிறைவேற்றப்படவில்லையானால் **'எழுநிலை'** ஏற்பட முடியாது. பத்து சதவீதத்திற்கும் அதிகமான முதலீடு ஏன் வலியுறுத்தப்படுகிறது? மக்கள் தொகை ஆண்டு தோறும் அதிக அளவு 3% உயரலாம் என்றும்,

சராசரியாக மூன்று ரூபாய் மதிப்புள்ள முதலீடு ஆண்டுதோறும் ஒரு ரூபாய் மதிப்புள்ள உற்பத்தியை ஏற்படுத்துகிறது என்றும் அனுமானித்துள்ளார். அதாவது, மூலதன உற்பத்தி விகிதம் 3:1 ஆகும். நாட்டு வருமானத்தில் 10% முதல் 15%வரை முதலீடு செய்யப்படுமானல் உற்பத்தி 3%முதல் 5%வரை அதிகரிக்கும். இது மக்கள்தொகைப் பெருக்கத்தைவிட அதிகமாக இருப்பதால் வளர்ச்சி தொடர்ந்து ஏற்படுகிறது.

சேமிப்பு முதலீட்டு விகிதம் உற்பத்தித் திறனைச் சார்ந்து இருக்கும். எல்லா (உற்பத்தித்) துறைகளின் உற்பத்தித்திறனும் சமமாக இருப்பதில்லை. குறிப்பிட்ட துறையில் உற்பத்தித்திறன் அதிகமாக இருந்தால், கூடுதலான இலாபத்தை அளித்து, அதைத் திரும்பவும் முதலீடு செய்யத் தூண்டுகிறது. மேற்படி துறையின் வளர்ச்சி நாளடைவில் இதர துறைகளுக்கும் பரவுகிறது. பொதுவாகச் செய்பொருள் உற்பத்தித் துறையில் உற்பத்தித்திறன் அதிகமாக இருப்பதால் அவற்றின் வளர்ச்சியைச் சிறப்பாகக் கூறியுள்ளார். விவசாயம், விவசாயப் பொருள், அதைச் சார்ந்த தொழில்கள் முதலியவற்றின் உற்பத்தித் திறன் அதிகரித்தாலும் அவை 'எழுநிலை'க்கு உதவியாக இருக்கும்.

முதலிரண்டு நிபந்தனைகளைவிட மூன்றுவது மிகவும் முக்கியமானது. ஆக்கசக்திகளை ஒருமுகப்படுத்தி, வளர்ச்சி வாய்ப்புகளை முழுமையாகப் பயன்படுத்துவதற்கு அரசியல், சமூகக் கட்டமைப்புகள் இடம் கொடுக்க வேண்டும். மக்கள் ஆற்றல் மிக்கவர்களாக இருந்தபோதிலும், அவர்களுடைய சிந்தனையையும் செயலையும் ஒருமுகப்படுத்த வேண்டும்.

பொருளாதார வளர்ச்சிக்கு நாட்டுப்பற்றும் அரசியல் விழிப்புணர்ச்சியும் அடிப்படையானவை. இவை இல்லை என்றல், மக்கள் எத்தகைய வெற்றிகளை அடைந்தாலும் அவற்றின் பலனை அனுபவிக்க முடியாது. இதை ஜான் ஸ்டிராச்சி (John Strachey) அழகாக எடுத்துக் கூறியுள்ளார்:[20]

> 1857-இல் இந்தியாவின் முதல் தன்னுரிமைப் போராட்டம் நடைபெற்றது. இந்தியர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துத் தங்கள் உரிமைக்காகப் போராடினர்கள். இராணுவ ரீதியில் கருதுவோமானல் இந்தியப் புரட்சி வெற்றி அடைந்தது எனலாம். புரட்சி வீரர்கள் டெல்லி

[20] John Strachey, The End of Empire, P. 52, Quoted by V. V. Bhatt. ibid. p. 59.

யைக் கைப்பற்றி, மொகலாய வம்சத்தைச் சார்ந்த ஒருவரை அரசராக அமர்த்தினர்கள். சில மாதங்கள் வரை டெல்லி புரட்சித்தலைவர்களின் வசம் இருந்தது. ஆனல், இந்தியர்கள் தங்கள் வெற்றியை நிலைநாட்டும் வகையில் எதையும் செய்யவில்லை. இந்தியர்களுக்குப் போரில் வெற்றி பெறுவது எளிதாக இருந்தது; இந்தியாவை ஆட்சி செய்வது கடினமாக இருந்தது. இவர்கள் புதிய நிருவாக அமைப்பை ஏற்படுத்தவில்லை. நேசிய மனப் பான்மை மக்களிடம் வளரவில்லை. புரட்சி வீரர்கள் மக்களை ஒன்று திரட்டவில்லை. இதனுல் புதிதாக இணைக்கப்பட்ட பஞ்சாபில் பிரிட்டிஷார் படைதிரட்டினர்கள். இப் படையின் உதவியால் டெல்லியை மீண்டும் கைப்பற்றினர்கள். நாட்டுப்பற்று இல்லாத காரணத்தால் இந்தியா ஒரு நாடாக இல்லை. ஆகையால், அது தன்னுரிமை உடைய நாடாக இருக்கவில்லை. இந்தியர்கள் சொந்தமாக ஆள முடியாமையால் மேலும் தொடர்ந்து (சுமார்) 100 ஆண்டுகள் பிரிட்டிஷார் ஆளுவதைத் தடுக்க முடியவில்லை.

### பாரதத்தின் 'எழுநிலை'

ஐந்தாண்டுத் திட்டங்களுடன் பாரதத்தின் 'எழுநிலை' (1952-லிருந்து) ஆரம்பமாகி உள்ளது என்று ரஸ்டவ் கூறுகிருர். பொருளாதார வளர்ச்சியில் 'எழுநிலை'யைப் பாரதம் கடந்து விட்டதா அல்லது எப்போது கடக்கும் என்பதை உடனடியாகக் கூறமுடியவில்லை. நாட்டு வருமானம் தொடர்ந்து அதிகரிக்க வேண்டும். பொருளாதார வளர்ச்சி பாரதப் பொருளாதார அமைப்பின் இயல்பாக இருக்கவேண்டும். இந்த நிலையைப் பாரதம் அடையுமானுல் பாரதம் 'எழுநிலை'யைக் கடந்து விட்டது என்று தெரிந்துகொள்ளலாம்.

'எழுநிலை'க்கு இலக்கணமாக உள்ள மூன்று நிபந்தனைகளும் தற்சமயம் உள்ளன. ஐந்தாண்டுத் திட்டங்களின் விளைவாக முதலீட்டு விகிதம் (நாட்டு வருமானத்தில்) 15%தை விட அதிகமாக உயர்ந்துள்ளது. பல புதிய செய்பொருள் தொழில்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இவற்றின் உற்பத்தித்திறன் அதிகம். மேலும், பல செய்பொருள் தொழில்கள் தோன்றுவதற்கு அடிப்படையான சமூக மூலதனம்—காட்டாக மின்சக்தி, பாசன வசதிகள், போக்குவரத்து, கல்வி முதலியன — வளர்ச்சி அடைந்துள்ளன. உற்பத்தித்திறன் அதிகமாக உள்ள பல தொழில்களின் வளர்ச்சிக்கு அரசாங்கம் நேரிடையாகவும், மறைமுகமாகவும் பொறுப்பு ஏற்றுள்ளது. அரசியல் அமைப்பு

பொருளாதார வளர்ச்சிக்கு ஆதரவு அளிக்கிறது. மக்கள் தங்கள் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்திக்கொள்ள ஆவலாக உள்ளார்கள். கிட்டத்தட்ட ரஸ்டவ் கூறிய மூன்று முக்கிய நிபந்தனைகளும் நிறைவேற்றப்பட்டுள்ளன. இருந்தபோதிலும் வளர்ச்சி வேகம் 1962–67 ஆண்டுகளில் தடைபட்டும், குறைந்தும் காணப்பட்டன. ஓரளவுக்குப் பொருளாதார வளர்ச்சி தேக்கமுற்றது என்று கூடச் சொல்லலாம்.

1967–வரையிலும் விவசாயத்துறையின் வளர்ச்சி வேகம் திருப்திகரமாக இல்லை. இத்துறையின் உற்பத்தித்திறன் அதிகரிக்கவில்லை. கட்டமைப்பு மாற்றங்களை ஏற்படுத்தும் நிலச்சீர் திருத்தங்கள் 1950-லிருந்து அமுலாக்கப்பட்ட போதிலும், நுட்பரீதியான முன்னேற்றம் இல்லாமையால் உற்பத்தித்திறன் அதிகரிக்கவில்லை. நாட்டில் உணவு நெருக்கடிகள் அவ்வப்போது தோன்றின. விவசாயத் துறையின் மொத்த உற்பத்தி போதுமானதாக இல்லை. மிகப்பெரிய துறையான விவசாயத்தின் உற்பத்தியும், உற்பத்தித்திறனும் குறைவாக இருந்தமையால் நாட்டின் பொருளாதார வளர்ச்சி தடைபட்டது.[21] 1968-க்குப் பின்னர் **பசுமைப் புரட்சியின்** விளைவாக உணவு உற்பத்தியில் ஓரளவு தன்னிறைவு ஏற்பட்டது. 1970-வரை பசுமைப் புரட்சி கோதுமைப் புரட்சியாக மட்டுமே உள்ளது. இருந்தபோதிலும் இதர உணவு தானியங்கள், ரொக்கப்பயிர்கள் (பருத்தி முதலியன) முதலியனவற்றின் உற்பத்தித்திறனையும் இதே தத்துவத்தின் அடிப்படையில் அதிகரிக்க முடியும் என்று விவசாய நிபுணர்கள் நம்பிக்கை தெரிவித்திருக்கிறார்கள்.

பசுமைப் புரட்சி நாடெங்கிலும் ஏற்படுமானால் விவசாயிகள், கிராம மக்கள் ஆகியோரின் வருமானம் உயரும். இதர துறைகளின் வளர்ச்சிக்கு இதன் வருமான விளைவு தூண்டுகோலாக இருக்கும். தானியங்கு தன்மை உடைய பொருளாதார வளர்ச்சியைப் பாரதம் எட்டிப்பிடிக்கும் தறுவாயில் உள்ளது. 1970, 1971 ஆகிய ஆண்டுகளில் காணப்படும் வளர்ச்சிவேகம்

[21] உள்நாட்டில் உணவு உற்பத்தி குறைவாக இருந்தால் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்து கொள்ளலாம். பாரதத்தின் ஏற்றுமதிகள் அதிகரித்து, ஏற்றுமதி உபரி கணிசமாக இருக்குமேயானால் இது ஒரு தடையாக இருக்காது. உற்பத்தி அளவைவிட உற்பத்தித்திறனை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். வளர்ந்து வரும் செய்பொருள் உற்பத்தித்துறைகளின் உற்பத்தித்திறன் கூடுதலாக இருந்தாலும் மிகப்பெரிய அளவிற்கு உள்ள விவசாயத் துறையின் குறைந்த அளவு உற்பத்தித்திறனை ஈடுசெய்ய முடியவில்லை. ஆகையால்தான் விவசாயத் துறையின் குறைந்த அளவு உற்பத்தித்திறன் பாரதத்தின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ளது என்று கூறுகிறோம்.

தொடர்ந்து நீடிக்குமானல் பாரதத்தின் மிக முக்கியமான பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு விரைவில் தீர்வு காண முடியும்.

சென்ற நூற்ருண்டில் 'எழுநிலை' ஏன் தோன்றவில்லை என்று பார்ப்போம். இருப்புப்பாதையின் வளர்ச்சியால் மேற்கு ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா, கானடா, சோவியத் ஒன்றியம், ஜப்பான் ஆகிய நாடுகளில் 'எழுநிலை' ஏற்பட்டது. பத்தொன்பதாவது நூற்ருண்டிலேயே இந்தியாவிலும் இருப்புப் பாதைகள் போடப்பட்டன. இருந்தபோதிலும் 'எழுநிலை' தோன்றவில்லை.

சென்ற நூற்ருண்டில் இந்தியா அரசியல் தன்னுரிமையற்ற **'காலனி'** நாடாக இருந்தது. இரயில்வேயின் வளர்ச்சி இந்தியத் தொழில்களை ஊக்குவிப்பதற்குப் பதிலாக அவற்றின் அழிவிற்குக் காரணமாக இருந்தது. பிரிட்டிஷாரின் ஏகாதிபத்தியக் கொள்கைகளுக்கு உதவியாக இருந்த அளவு இந்தியாவின் தேசிய நலன்களுக்கு உதவியாக இல்லை.

இந்தியத் தொழில்களுக்கு இரயில்வேயின் வளர்ச்சி ஏன் முன்னேடியாகத் திகழவில்லை என்பதை **ரானடே**[22] விளக்கியுள்ளார். இவர் எழுதிய **இந்தியப் பொருளாதாரக் கட்டுரைகள்** (1893) என்ற நூலில் **புவியியல் சர்வேயில்** பணியாற்றிய **திரு. பால்** (Mr. Ball) என்பவரின் கருத்துகளைக் கூறியுள்ளார். இருப்புப் பாதைகளுடன், இரும்பு, எஃகுத்தொழில் இந்தியாவில் ஆரம்பிக்கவில்லை. அரசாங்கம் முன்னின்று இருப்புப் பாதை போட்டதைப் போல இரும்பு, எஃகுத் தொழில்களையும் ஆரம்பித்திருக்கலாம். இரயில்வேக்குத் தேவையான சாதனங்கள், கருவிகள் முதலியவற்றை இந்தியாவிலேயே உற்பத்தி செய்துகொள்ள இது உதவியாக இருந்திருக்கும். சுமார் 150 ஆண்டு பிரிட்டிஷ் ஆட்சியில் இரும்பு எஃகுத்தொழில் வளர்ச்சியடையவில்லை. இதனல் ஆண்டுதோறும் 10 கோடி ரூபாய் மதிப்புள்ள இரும்பை இந்தியா இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. இவ்வாறு இரும்புத் தொழில் ஏற்படாத காரணத்தால் இந்தியாவின் பொதுவான தொழில் வளர்ச்சி தடைபட்டுள்ளது.

அடுத்து, பஞ்சாலைத்தொழில் பிரிட்டனின் தொழில் வளர்ச்சிக்கு முன்னேடியாக இருந்தது என்று பொருளாதார வரலாறு கூறுகிறது. பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் இந்தியாவிலும் பஞ்சாலைத்தொழில் வளர்ச்சி அடைந்தது.

[22] Quoted by V. V. Bhatt. *ibid*, p. 47-4 .

இதனால் இந்தியாவில் பொருளாதார வளர்ச்சி வேகத்தை ஊக்குவிக்க முடியவில்லை.

பஞ்சாலைத்தொழிலின் உற்பத்தியும், ஏற்றுமதியும் பிரிட்டனின் நாட்டு வருமானத்தில் கணிசமான விழுக்காடாக இருந்தன. ஆலைத்தொழிலின் வளர்ச்சியால் (பிரிட்டனில்) ஆக்கச் செலவு அதிக அளவுக்கு வீழ்ச்சி அடைந்தது. பொருளாதார முக்கியத்துவம் உடைய பஞ்சாலைத் தொழிலின் ஆக்கச் செலவு குறைந்தமையால் வளர்ச்சியைத் தூண்டக்கூடிய உந்து சக்தியாக (பிரிட்டனில்) இத்தொழில் செயல்பட்டது. ஆனால், இந்தியாவில் மேற்படி ஆலைத்தொழில் தோன்றும் முன்னர் ஆலைத் துணி இறக்குமதி செய்யப்பட்டது. இந்தியாவைப் பொறுத்த வரை ஆலைத்தொழிலின் வளர்ச்சி இறக்குமதி செய்யப்பட்ட ஆலைத்துணிகளுக்குப் பதிலீடாக இருந்ததே யல்லாமல் உற்பத்தித்திறனை அதிகரிக்கவோ, ஆக்கச்செலவைக் குறைக்கவோ இல்லை. பத்தொன்பதாவது நூற்றாண்டில் இத்தொழில் இந்தியாவின் பொருளாதார அமைப்பில் குறிப்பிடத் தக்க அளவுக்கு முக்கியத்துவம் பெற்ற துறையாக இல்லை. ஆகையால், இந்தியாவில் பஞ்சாலைகள் தோன்றியபோதிலும் ‘எழுநிலை’ ஏற்படவில்லை.

# 2. சமூக அமைப்பு

பொருளாதார வளர்ச்சி இருவகைக் காரணிகளால் அதிகம் பாதிக்கப்படுகின்றன. ஒன்று அமைப்புக்காரணிகள். இரண்டு தொழில் நுட்பம். அமைப்புக்காரணிகள் நீண்டகால ரீதியில் மாற்றம் அடைகின்றன. அமைப்புக்காரணிகளில் சமூக அமைப்பு முக்கியமானது. ஒரு நாட்டின் பொருளாதார வரலாற்றை விவரிக்கும் நூல்களில் சமூக அமைப்பு கட்டாயமாக விளக்கிக் கூறப்படுகின்றது. பொருளாதார வரலாறு சமூக வரலாற்றின் ஒரு கூறாக உள்ளது. சமூக அமைப்புகளிலிருந்து பொருளாதார வளர்ச்சியைத் தனியாகப் பிரித்துக் கூறமுடியாது. ஏனெனில், மனிதர்கள் தங்களுடைய பொருளாதார விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளுவதற்கு அமைப்புகள் தேவைப் படுகின்றன. அந்தந்த நாட்டின் அரசியல், சமய, கலாச்சாரப் பண்புகள், பழக்கவழக்கங்களுக்கு ஏற்ப அமைப்பு முறைகளை ஏற்படுத்திக்கொண்டு பொருளாதார நடவடிக்கைகளில் ஈடு படுகின்றன. இந்த அமைப்புகள் சில கட்டுதிட்டங்களுடன் செயல்படுகின்றன. சமூக அமைப்புகள், பொருளாதார நடவடிக்கைகள் ஆகிய இரண்டும் நெருங்கிய தொடர்பு உடையன. புதிய உற்பத்திமுறையும், உற்பத்திக்கட்டமைப்பும் சமூக அமைப்பை மாற்றும் திறன் உடையவை. அதைப் போலவே சமூக அமைப்பின் கட்டுதிட்டங்கள், நெறிமுறைகள் பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கக்கூடும்.

இயற்கை வளங்களும், தொழில் நுட்பமும் எந்த அளவிற்கு முக்கியமோ அந்த அளவிற்கு அமைப்பு முறைகளும் முக்கியமானதாகும். அமைப்பு முறையின் அடிப்படையில்தான் மக்கள் ஒருங்கு இணைகிறார்கள்; உற்பத்திச்சாதனங்கள் இணைக்கப் படுகின்றன. அமைப்பு முறைகள் நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம் வேறுபடுவதால் பொருளாதார வளர்ச்சிக்கான வாய்ப்பு களும் வேறுபடுகின்றன. அமைப்பு முறைகள் வேறுபட்டுள்ள

இருநாடுகளில் ஒரே மாதிரியான நிகழ்ச்சி ஏற்பட்டது என்போம் (காட்டாக இருப்புப்பாதையின் வளர்ச்சி). முதலாவது நாடு இருப்புப்பாதையைப் பயன்படுத்திக் கொண்டு பொருளாதார ரீதியில் முன்னேற்றம் அடைந்துள்ளது. ஆனால், இரண்டாவது நாட்டில் அங்ஙனம் பொருளாதார வளர்ச்சி ஏற்படவில்லை. இவ்வாறு வெவ்வேறான அமைப்பு முறைகள் காரணமாகப் பொருளாதார வளர்ச்சிக்கான சாத்தியக்கூறுகளும் வேறு படுகின்றன.

பொருளாதார நிறுவனங்களும், அமைப்புகளும், நிகழ்ச்சி களும் தனித்து இயங்கும் தன்மை உடையன அல்ல. இவை பொருளாதார சக்திகளால் மட்டும் இயக்கப்படவில்லை. பொருளாதார நிறுவனங்கள், அமைப்புகள் முதலியன சமூக நிறுவனங்கள், அமைப்புகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. ஆகையால், ஏனைய துறைகளில் ஏற்படும் மாற்றங்கள் அல்லது நிகழ்ச்சிகள் பொருளாதார நடவடிக்கை களைக் கட்டுப்படுத்துகின்றன. ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியின் முக்கியத்தையும், அதன் விளைவுகளையும் ஆராயும்போது ஒன்றோடு ஒன்று தொடர்புடைய அமைப்புகளையும், அவற்றில் ஏற்பட்டுள்ள மாறுதல்களையும் நினைவில் கொள்ள வேண்டும். காட்டாக, சமூக வாழ்க்கையை முழுமையாக அறிவதற்கு மானிடவியல் அறிஞர்களும் (Anthropologists), சமூக இயல் அறிஞர்களும் பொருளாதார நிகழ்ச்சிகளை ஆராய்ந்து அறிய வேண்டும். ஏனெனில், சமுதாயத்தில் உள்ள ஒரு குழுவின ருக்கும், மற்ற குழுவினர்களுக்கும் உள்ள தொடர்புகளும், ஒரு நபருக்கும் ஏனைய நபர்களுக்கும் உள்ள தொடர்புகளும் பொரு ளாதார அடிப்படையில் அமைந்துள்ளன. சமூகத்தொடர்புகள் வருமானம் ஈட்டுதல் அல்லது செலவிடுதல் ஆகியவற்றைச் சார்ந்துள்ளன.

சமூக அமைப்பில் பல குழுக்கள் உள்ளன. இவை சமூக அமைப்பு, பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றுடன் வேறு படுகின்றன. காட்டாகப் பழங்குடி (Tribe)ச் சமூக அமைப்புகளில் குடும்பம், குலம் (Clan), பழங்குடி என்ற குழுக்கள் இருந்தன. கிராம சமுதாய அமைப்பில் குடும்பம், சாதி, கிராம சமுதாயம் என்ற குழுக்கள் இருந்தன. நகர சமூக அமைப்பில் குடும்பம், சாதி ஆகியவற்றுடன், தொழில் தொடர்பு காரணமாகவும் குழுக்கள் (காட்டாகத் தொழிற்சங்கம்) ஏற்படுகின்றன. அரசியல் அடிப்படையிலும் குழுக்கள் அமைந்துள்ளன. இக்கட்டுரையில் சாதி, ஏகக்குடும்பம் ஆகியவை மட்டுமே ஆராய்ந்து பார்க்கப்

படுகின்றன. கிராம சமுதாயம் தனி ஒரு அத்தியாயமாக உள்ளது.

**ஏகக்குடும்பம் :**

ஏகக்குடும்பமும் சாதியும் இந்து சமூக வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றன. இருந்த போதிலும் இந்துக்களைத் தவிர ஏனைய சமயங்களைப் பின்பற்றுபவர்களும் ஏகக்குடும்பம், சாதிப்பாகுபாடு ஆகியவற்றை ஏற்றுக்கொண்டார்கள். **கபடியா** இதைப்பற்றிப் பின்வருமாறு கருத்துத் தெரிவித்துள்ளார்: ''ஏகக்குடும்பம் பொதுவாக இந்துக்களின் தனிப்பட்ட சின்னமாகக் கருதப்படுகின்றது. உண்மையில் இந்தியா முழுவதிலும் உள்ள எல்லாச் சமூகத்தினர்களிடத்திலும்—அதாவது இந்துக்களிடத்தும் இதர சமயங்களைச் சார்ந்தவர்களிடத்திலும்—காணப்படுகிறது.''[1]

ஏகக்குடும்பம் என்ற சொல்லிற்கு அனைவரும் ஒரே மாதிரியாக விளக்கம் கூறவில்லை. ஏகக்குடும்பம் என்பது குடும்பக்குழுவின் விரிவான ஒருவகையைக் குறிக்கின்றது என்று எல்லோரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். **'கானே'** என்ற ஆசிரியர் பின்வருமாறு கூறியுள்ளார்: ஒரு ஆண் மூதாதையின் வழிவந்த எல்லா ஆண்களும், அவர்களின் மனைவியர்களும், திருமணம் ஆகாத பெண்களும் ஏகக்குடும்ப உறுப்பினர்களாக இருப்பார்கள். ஒரு மூதாதையின் வழிவந்தவர்கள் அனைவரும் ஏகக்குடும்ப உறுப்பினர்களாக இருப்பார்கள் என்று கூறமுடியாது. ஏனெனில், மூதாதைக்குப் பின்னால் வரும் ஒவ்வொரு தலைமுறையிலும் குடும்ப ஒற்றுமை குறைந்துகொண்டு வரும். கானேயின் இலக்கணத்தில் ஏகக்குடும்பம் எந்த அளவிற்கு விரிவடைந்து இருக்க வேண்டும் என்று தெரிவிக்கவில்லை. இதற்கு **மண்டல்பாம்** என்ற ஆசிரியர் ஒரு வழி கண்டுபிடித்துள்ளார். சுமார் நான்கு தலைமுறைகளைக் கொண்ட குடும்பத்தை ஏகக்குடும்பம் என்று கூறியுள்ளார்.

ஏகக்குடும்பத்தில் அடிப்படையாக நிலவக்கூடிய உறவு வரையறுக்கப்படவில்லை. **தேசாய், மண்டல்பாம்** ஆகிய இரு ஆசிரியர்களும் ஒரு மூதாதையின் வழியில் தோன்றிய வம்சாவளி உறவு முறையை வலியுறுத்தினார்கள். இது சில ஏகக்குடும்பங்களை மட்டுமே விளக்கிக் கூறுகிறது. அதாவது, ஒரு மூதாதையின் வம்சாவளியினர் என்ற உறவின் அடிப்படையில் அனைத்து ஏகக்குடும்பங்களும் அமையவில்லை. அண்ணன், தம்பி என்ற

[1] Quoted by T.N. Madan, Social organisation, printed in V. B. Singh, *ibid*-p.61, இக்கட்டுரையில் காணப்படும் பல முக்கியக் கருத்துகள் 'மதன்' கூறியவையாகும்.

சகோதரவாஞ்சையின் அடிப்படையிலும் உறவுநிலை வேரூன்றி இருக்கிறது. இதை அடிப்படையாகக் கொண்டும் ஏகக் குடும்பங்கள் தோன்றியுள்ளன.

ஏகக்குடும்பம் என்பது சொத்துரிமையை மையமாகக் கொண்ட ஒரு குழுவாகும். சொத்துரிமையை வலியுறுத்துகையில் சில கருத்து வேறுபாடுகள் தோன்றுகின்றன. சொத்துரிமை ஏகக்குடும்பம் என்ற குழுவின் முற்றுரிமையாக அல்லது தனி உரிமையாகக் கருதப்படுகிறது. இப்படிக் கூறுபவர்கள் குடும்ப உறுப்பினர்களுக்குத் தனிப்பட்ட முறையில் எவ்வித உரிமையும், சலுகையும் கிடையாது என்று மறுக்கின்றனர். குடும்பத்தின் உறுப்பினராக ஒருவரைக் கருதலாமே தவிர, குடும்பத்தினின்றும் பிரிந்துள்ள தனி நபர்களின் உரிமைகளை இவர்கள் ஏற்பதில்லை. சொத்துரிமைக்கு வேறு ஒரு விளக்கம் கூறப்படுகிறது. தனி நபர்களின் கூட்டு அமைப்பாகக் குடும்பத்தைக் கருதுகின்றனர். அதாவது, தனி நபர்களுக்குச் சொத்துரிமைகள் உண்டு என்றாலும், குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் சொத்துகளையும் குடும்பத்தலைவர் நிருவகித்து வருகின்றார்.

ஏகக்குடும்ப உறுப்பினர்கள் சொத்து, வருமானம், பரஸ்பர உரிமைகள், கட்டுப்பாடுகள் என்ற வகையில் ஒருவருக்கொருவர் ஒன்றுபட்டுள்ளனர் என்று தேசாய் கூறியுள்ளார். கார்வே, முகர்ஜி முதலிய ஆசிரியர்கள் மேலும் சிலவற்றைக் கூறியுள்ளார்கள். ஏகக்குடும்பத்தில் சொத்து பொதுவாக உள்ளது; பொதுவாக நிருவகிக்கப்படுகிறது. ஏகக்குடும்பத்தில் இணை உரிமைகளை உடைய பங்காளிகளும் இருக்கின்றனர். அவர்களது சொத்துரிமைகளையும் உள்ளடக்கியதாக ஏகக்குடும்பம் உள்ளது. பங்காளிக் குடும்பம் ஏகக்குடும்பத்தைவிடச் சிறியது என்று காணே கருத்துத் தெரிவித்துள்ளார். ஏகக்குடும்பத்தில் பங்காளிகளாக உள்ள சகோதரர்களும், அவர்களின் மனைவியர்களும், மணமாகாத பெண்களும் உறுப்பினர்களாக இருப்பார்கள். ஆகையால், ஏகக்குடும்பம் என்பது பங்காளிகளின் குடும்பத்தைவிடப் பெரியது.

பிரிட்டிஷ் ஆட்சியில் நிலவிய ஏகக்குடும்பங்களில் ஒரு மூதாதையின் வழியில் பல தலைமுறைகளாக வரும் ஆண்களும், அவர்களின் மனைவியரும், திருமணமாகாத பெண்களும், சகோதரிகளும் உறுப்பினர்களாக இருப்பார்கள். இந்த ஏகக் குடும்பங்கள் யாவும் ஒரு கூரையின் கீழ் உள்ள ஒரு குடும்ப

அமைப்பாக இல்லை. பல குடும்ப அமைப்புகளை உடையன வாகவும் இருந்துள்ளன. அவ்வாறு குடும்ப அமைப்புகள் பலவாக இருந்தாலும் குலதெய்வ வழிபாடு பொதுவாக இருந்தது. சமையற்கட்டு அனைவருக்கும் பொதுவாக இருந்தது. இவர்கள் அனைவரும் சேர்ந்து உணவு அருந்தினர்கள். பொருள் உற்பத்தியிலும், நுகர்விலும் குடும்ப உறுப்பினர்கள் கூட்டாகப் பணியாற்றினர்கள். குடும்ப உறுப்பினர் அனைவரின் தேவைகளையும் கருத்தில் கொண்டு எந்த அளவிற்கு ஒருவரின் தேவையைப் பூர்த்தி செய்யலாம் என்று முடிவு செய்தார்கள். ஆனால், பங்காளிக் குடும்பங்களில் பெண்கள்—முக்கியமாக மனைவியர்கள்—சொத்துரிமை உடைய உறுப்பினர்களாகக் கருதப்படவில்லை. ஆண்கள் மட்டுமே சொத்துரிமை உடைய உறுப்பினர்களாக இருப்பர். இவர்களின் வருமானம் யாவும் ஏகக் குடும்பத்தின் வருமானமாக இருக்கும். இவர்கள் தனிப்பட்ட முறையில் சுய முயற்சியால் பொருளீட்டினாலும் அது குடும்பத் தலைவரிடம் ஒப்படைக்கப்படும். குடும்ப உறுப்பினர்கள் தங்களுடைய திறன், கல்வியறிவு, உழைப்பு ஆகியவற்றைக் கொண்டு வருமானம் ஈட்டினாலும் அதைத் தனியாக உபயோகிக்கும் உரிமை அவருக்குக் கிடையாது. குடும்ப உறுப்பினர்களின் வருமானம் யாவும் குடும்ப வருமானமாகக் கருதப்படும். ஏகக் குடும்ப அமைப்பு தனி நபர்கள் பொருளீட்டுவதற்கு ஊக்கம் அளிக்கவில்லை என்று குறை கூறுவார்கள்.

பங்காளி ஏகக்குடும்பத்தில் வயதில் மூத்தவர் 'கர்த்தா'வாக (தலைவராக) இருப்பார். குடும்ப உறுப்பினர் ஒவ்வொருவரின் பொறுப்பையும் நிர்ணயிப்பது இவரது கடமையாகும். குடும்பத்தில் முக்கியமான தீர்மானங்களைச் செய்யும்போது மற்றவர்களைக் கர்த்தா கலந்து ஆலோசிப்பார். குடும்ப உறுப்பினர்களின் சார்பில் முடிவு எடுக்கும் உரிமை கர்த்தாவிற்கு உண்டு. எந்த அளவிற்குச் சுயேச்சையாகக் கர்த்தா தீர்மானிக்கலாம் என்பது குடும்ப அமைப்பையும், அதில் அவருடைய நிலையையும் சார்ந்து இருக்கும். தந்தை அல்லது பாட்டனாராக உள்ளவருக்கு அதிக உரிமைகள் உண்டு. சிற்றப்பா அல்லது அண்ணன் கர்த்தாவாக இருந்தால் இந்த அளவிற்கு உரிமைகள் கிடையா. தந்தை அல்லது பாட்டனாக உள்ள கர்த்தா தன்னுடைய வயதுவந்த பிள்ளைகள் அல்லது பேரன்களின் விருப்பங்களுக்கு எதிராக முடிவு செய்தாலும், அம்முடிவுகள் இவர்களுக்கு மனத்தாங்கலை ஏற்படுத்தினாலும், ஏகக்குடும்ப உறுப்பினர்கள் யாவரும் கடமை உணர்ச்சியாலும், பெரியவர் களின் சொல்லிற்குக் கட்டுப்பட வேண்டும் என்ற மரியாதை

உணர்ச்சியாலும் உந்தப்படுவார்கள். அப்படியிருந்த போதிலும் எப்போதாவது பெற்றோர்களுக்கும், பிள்ளைகளுக்கும் இடையே பாகப்பிரிவினை ஏற்படும்.

வம்சாவளிக் குடும்பத்தைவிட இணையுறவுக் குடும்பங்களில் பாச உணர்ச்சியும், உறவுப்பிணைப்பும் ஒருபடி குறைவாக இருக்கின்றன. கர்த்தாவாக உள்ள அண்ணன் தனியாக, மற்ற சகோதரர்களைக் கலந்து ஆலோசிக்காமல் முடிவு எடுக்க முடியாது. அவர் தனியாக முடிவு செய்வாரேயானால் பங்காளிகள் பாகப்பிரிவினை கோருவார்கள். ஆகையால், இணையுறவுக் குடும்பங்கள்—அதாவது பங்காளிகள்—ஏகக்குடும்பங்கள் தொடர்ந்து நீடிப்பதில்லை. இவை உடனடியாக இல்லாது போனாலும், காலம் கடந்த நிலையில் பிரிவினைக்குள்ளாக்கப்படுகின்றன.

ஏகக்குடும்பங்களின் அமைப்பு மூவகைப்படும். **ஒன்று**, வம்சாவளியின் மூலம் விரிவடைந்த குடும்பம். **இரண்டு**, வம்சாவளியாலும், இணையுறவாலும் விரிவடைந்த குடும்பம். **மூன்று**, இணையுறவின் மூலம் விரிவடைந்த குடும்பம். இவ்வாறு ஒவ்வொருவகையாக விரிவடைந்த குடும்பமும் வெவ்வேறு கால அளவுகளுக்கு ஏகக்குடும்பமாக நீடித்திருக்கும். மூன்று வகைகளில் விரிவடைந்த ஏகக்குடும்பங்களைப் பின்வருமாறு விளக்கிக் கூறலாம்.

### முதல் வகை

### வம்சாவளி மூலம் விரிந்த குடும்பம்

முதல் தலைமுறை—I பாட்டனர் (குடும்பத்தலைவர்)

2-வது தலைமுறை—II மகனும் மருமகளும்

3-வது தலைமுறை—III பேரன்களும் பேத்திகளும்

முதலாவது குடும்பம் வம்சாவளியில் விரிவடைந்துள்ளது. இங்கே குடும்பத்தலைவரின் ஒரே மகன் ஏகவாரிசாக இருப்பதால் பிரிவினை ஏற்படுவதற்கில்லை. இந்த வகைக் குடும்பங்கள் குறைந்து இரண்டு தலைமுறைகளுக்குப் பாகப்பிரிவினை இல்லாமல் நீடிக்கும்.

### இரண்டாவது வகை

### வம்சாவளி, இணையுறவு ஆகியவற்றால் விரிந்த குடும்பங்கள்

தலைமுறை—I பாட்டனார் (குடும்பத்தலைவர்)

↓

தலைமுறை—II மூத்த மகன், இளைய மகன்,

மூத்த மருமகள், இளைய மருமகள்.

↓ ↓

தலைமுறை—III பேரன் பேத்திகள்; பேரன் பேத்திகள்.

ஒரு மூதாதைக்கு ஒன்றுக்கும் அதிகமான மகன்கள் பிறப்பதால் விரிவடையும் குடும்பங்களை வம்சாவளி மூலமாகவும், இணையுறவு மூலமாகவும் விரிவடையும் குடும்பங்கள் என்று சொல்லுகிறோம். இந்தக் குடும்பத்தில் பாட்டனார் உயிரோடு இருக்கும் வரை பாகப்பிரிவினை ஏற்படுவதற்கான வாய்ப்புகள் குறைவு. அதன்பின்னர் அவர்கள் தொடர்ந்து ஒன்றாக இருப்பார்களேயானால், இது இணையுறவின் மூலம் விரிவடைந்த குடும்பமாக இருக்கும்.

### இணையுறவின் மூலம் விரிவடைத்த குடும்பங்கள்

### மூன்றாவது வகை

தலைமுறை—I பெரிய அண்ணன், சின்ன அண்ணன், தம்பி.
இவர் மனைவி.

தலைமுறை—II பெரிய அண்ணி, சின்ன அண்ணி,

குழந்தைகள், குழந்தைகள் குழந்தைகள்.

தந்தையின் காலத்திற்குப் பின்னர் அண்ணன் தம்பிகள் ஒன்றாக இருப்பதை இணையுறவின் மூலம் விரிவடைந்த குடும்பங்கள் என்று கூறலாம்.

இரண்டாவது, மூன்றாவது வகை ஏகக்குடும்பங்கள் தொடர்ந்து இரண்டு தலைமுறைகள் பாகப்பிரிவினையின்றி நீடிக்குமா என்று கூறமுடியாது.

ஏகக்குடும்பம் என்பது ஒரு குடும்ப அமைப்பாகவும், ஓர் உறவுக்குழுவாகவும் உள்ளது. ஏகக்குடும்பத்தின் பொருளாதாரக்

கூறுகளை இங்கே விவரிப்போம். ஏகக்குடும்பம் ஒரு பொருளாதார அலகாக உள்ளது. இன்றும் கிராமங்களில் அது ஒரு பொருளாதார அலகாகவே உள்ளது—அதாவது உற்பத்தி, நுகர்வு ஆகியவற்றிற்கான அலகாகச் செயல்படுகிறது. குடும்ப உறுப்பினர்கள் எந்த எந்த வேலைகளைச் செய்ய வேண்டும் என்பதைக் குடும்பத்தலைவர் (கர்த்தா) நிர்ணயிப்பார். ஒருவருக்கு ஒரு குறிப்பிட்ட வேலையைக் கொடுக்கும் போது அவருடைய வயது, தலைமுறையில் உள்ள முன்னுரிமை, வம்சாவளி உறவில் குடும்பத் தலைவருக்கும் அவருக்கும் உள்ள தொடர்பு, பால், திறன் முதலியன கருதப்படும். பெரும்பாலும் திறன் அதிகமாக வலியுறுத்தப்படுவதில்லை. ஆக்க வேலைகள் பெண்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை. இவர்கள் வீட்டு வேலைகளை மட்டுமே செய்வார்கள். வயதுவந்த ஆண் உறுப்பினர்கள் மட்டுமே ஆக்க வேலைகளில் ஈடுபடுவார்கள். குழந்தைகள் பெரியவர்களுக்கு உதவி செய்வார்கள். குடும்பத்தில் உள்ள பொருள்கள், பணம் ஆகியவற்றின் அளவைப் பொருத்து நுகர்பொருள்கள் பகிர்ந்து கொடுக்கப்படும். குடும்ப உறுப்பினர் அனைவரின் விருப்பங்களையும் பூர்த்தி செய்ய முடியாது. இருந்தாலும், தனி ஒருவரின் தேவை அல்லது விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் முன்னர் குடும்ப உறுப்பினர்களின் மொத்தத் தேவையை மனத்தில் வைத்துக் கொள்ளுவார்கள்.

உணவுப் பொருள்களைப் பரிமாறுவதில் ஆண்களுக்கு முன் உரிமை கொடுக்கப்படும். வயதில் முதியவர்களுக்கு மரியாதையும், உபசரிப்பும் அதிகம். இடைப்பருமையான பொருள்கள், அல்லது ஆடம்பரப் பொருள்கள் ஆகியவற்றை நுகர்வதில் முதியவர்களுக்குச் சலுகைகள் காட்டப்படும். குடும்பத்தை நிர்வகிப்பவர்கள் குடும்ப கௌரவத்தை முக்கியமாகக் கருதுவார்கள். குடும்ப சேமிப்புகள் குடும்ப கௌரவத்தை வெளிப்படுத்தக் கூடிய நிலம், கால்நடை, நகை முதலியவற்றிற்காகச் செலவிடப்படும். திருமணம், இறப்பு, வழக்காடுதல் முதலியன முக்கிய செலவுகளாகும். குடும்பத்தின் செலவு, நுகர்பொருள்களைப் பகிர்ந்து கொடுத்தல் ஆகியவை கர்த்தாவால் முடிவு செய்யப்படும். பொதுவான காரியங்களுக்கு முடிவு எடுக்கையில் வயது வந்த ஆண்களையும், (கர்த்தா தன்னுடைய) மனைவியையும் கலந்து ஆலோசிப்பார். குடும்பப் பெண்கள் தங்கள் கருத்துகளைக் கணவர்களின் மூலம் வெளிப்படுத்துவார்கள். பெண்களின் செல்வாக்கு வெளிப்படையாகத் தெரியவில்லை என்றாலும், ஏகக்குடும்பத்தில் எவ்விதச் செல்வாக்கும் பெண்களுக்கு இல்லை என்று கூறமுடியாது. குடும்ப அமைப்பையும், அதில் தனக்

குள்ள நிலையையும் அனுசரித்துக் கர்த்தா செயல்படுவார். அவர் எந்த அளவுக்குத் தன்னிச்சையாகத் தீர்மானிக்க முடியும் என்பது இதைச் சார்ந்து இருக்கும். குடும்பத்தலைவர் அல்லது கர்த்தா வின் செயல்களை எதிர்க்கவும், அவரது கட்டளைகளை மீறவும் செய்வதால்தான் பாகப்பிரிவினைகள் ஏற்படுகின்றன. எனவே, ஏகக்குடும்பங்கள் எத்தனை காலமாக இருந்து வந்துள்ளனவோ அத்தனை காலமாகப் பிரிவினையும் ஏற்பட்டுள்ளன.

**சில நூற்றாண்டுகளில் ஏற்பட்ட மாற்றங்கள்**

பிரிட்டிஷார் தங்களுடைய ஆட்சிக்காலத்தில் இந்தியர்களுடைய சமூக பழக்க வழக்கங்களில் தலையிடுவதில்லை என்று உறுதி கூறினர். முக்கியமாகச் சாதி, மதப் பழக்கவழக்கங்களில் தலையிடுவதில்லை என்று சொன்னார்கள். இந்தியர்கள் சமூக அமைப்புகளையும் கலாச்சாரப்பின்னணிகளையும் முழுமையாக உணர்ந்து கொள்ளாத காரணத்தாலும், அவ்வப்போது ஆங்கிலேய அதிகாரிகள் நடைமுறையில் அமுலாக்கிய தீர்மானங்கள் காரணமாகவும் சமூகப் பழக்கவழக்கங்கள் அதிக அளவிற்கு மாறுதல் அடைந்தன.

இந்துமத நியதிகள், நெறியுரைகள் அவ்வப்போது மாற்றப்பட்டு வந்தன. சமுதாயத்தில் தோன்றிய நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப இந்த மாற்றங்கள் ஏற்பட்டன. அவற்றிற்கு ஒரு முடிவு கட்டும் வகையில் இந்துமத நியதிகளைத் தொகுத்து வெளியிட்டனர். பதினோராவது, பன்னிரண்டாவது நூற்றாண்டுகளில் வெளியிடப்பட்ட 'மிதாக்ஷரா' 'தயாபாகா' விளக்கவுரைகள் முக்கியமானவை. 'தயாபாகா' கருத்தினம் வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் பின்பற்றப்பட்டது. 'மிதாக்ஷரா' கருத்தினம் நாடு முழுவதிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. 'மிதாக்ஷரா' கோட்பாட்டில் மகன் பிறந்த நேரத்திலிருந்து தன்னுடைய தந்தையின் பூர்வீகச் சொத்தில் உரிமை உடையவனாகக் கருதப்படுகின்றான். மகன் சிறுவனாக இருந்த போதிலும், பூர்வீகச் சொத்தைத் தந்தையால் விற்கவோ, இதர வழிகளில் பராதீனம் செய்யவோ முடியாது. இதே காரணத்திற்காகச் சொத்துகளை வாங்க நினைப்பவர்களும் தயங்குகின்றனர். ஆனால் 'தயாபாகா' கோட்பாட்டில் சொத்துகளின் முழு உரிமையாளராகத் தந்தையைக் கருதுகின்றனர். அவருக்குச் சிறு வயதில் மகன் இருந்தாலும் சொத்துகளைப் பராதீனம் செய்யக் கூடிய முழு உரிமை தந்தைக்கு அளிக்கப்பட்டுள்ளது. இந்த விளக்க உரைகள் எழுதப்பட்டுக் கிட்டத்தட்ட 800 ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்த நீண்டகாலத்தில் பல முக்கிய மாறு

தல்கள் ஏற்பட்டன. அவ்வாறு தோன்றியவற்றுள் இரண்டை மட்டும் **கபடியா** எடுத்துக் கூறியுள்ளார். முதலாவதாக, தந்தை வழி உறவைப் போலவே, தாய் வழி உறவும் வலியுறுத்தப் படுகின்றது. இரு வழி உறவுகள் இதற்கு முன்பு இல்லாத ஒரு புதிய வளர்ச்சியாகும். இரண்டாவதாகத் தனித்துவப் போக்கு உயர்ந்து காணப்பட்டது. தனி நபர்களின் நிலை ஓரளவுக்கு முன்னேற்றம் அடைந்தது. இருந்த போதிலும் குடும்பப் பிணைப்பைத் துண்டித்துச் செல்லும் அளவிற்குத் தனித்துவம் வளரவில்லை. தனித்துவப் போக்கு அங்கீகரிக்கப்பட்டது என்றாலும் அதனால் ஏகக்குடும்ப நலன்கள் பாதிக்கப்படாமல் பாதுகாக்கப்பட்டன. புதிய இணைப்பு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

காலத்திற்கு ஏற்ப இந்துமத நியதிகளைத் திருத்தி அமைக்க வில்லை என்றாலும், இந்துக்களின் சமூக வாழ்க்கை மாறிக் கொண்டே வந்துள்ளது. இதனால் மதத்தின் நியதிகள் ஏகக் குடும்பங்களின் நடப்பு நிலையைப் பிரதிபலிக்கவில்லை. காலப் போக்கில் தனித்துவத்தன்மை வளர்ந்த அளவிற்குப் புதிய குடும்பப்பிணைப்புகள் அதிகரிக்காமையால் பிரிவினைகள் அதிகரித்தன. இதற்கு உதவியாக இருந்த காரணிகள்; நிலத்தின் கிடைப்பருமை, சொத்துரிமை மாற்றங்கள், நகரங்களின் வளர்ச்சியும் அதன் செல்வாக்கும், கிராமங்களிலிருந்து நகரங்களுக்கு மக்கள் குடிபெயர்தல், கல்வி வளர்ச்சி, வேலை வாய்ப்புகள் முதலியன.

இந்து குடும்ப நியதிகள் தெளிவாக்கப்பட்டன. அதாவது 'மிதாக்ஷரா', 'தயாபாகா' விளக்கவுரைகளை மையமாகக் கொண்டு இந்து குடும்பங்களின் சொத்துரிமைகள் அமைந்திருந்தன; குடும்ப உறுப்பினர்களின் உரிமைகள் வரையறுக்கப் பட்டிருந்தன. இந்தப் பொறுப்புகளை நீதிமன்றங்களே எடுத்துக் கொண்டன. நீதிமன்றங்களில் ஆங்கிலேயர்கள் நீதிபதிகளாக இருந்தனர். இவர்கள் தனி நபர்களின் சொத்துரிமைகளையும், சொத்துகளை உடைமை மாற்றம் செய்யும் உரிமைகளையும் ஏற்றுக் கொண்டார்கள். எனவே, இவர்களின் தீர்ப்புகள் தொன்மையான 'மிதாக்ஷரா' நியதிகளுக்கு மாறுபட்டவையாக இருந்தன.

பிரிட்டிஷார் இந்துக்களின் சாதி, சமயப் பழக்கவழக்கங்களில் தலையிடுவதில்லை என்று உறுதி கூறியிருந்தார்கள். இருந்த போதிலும் நீதிமன்றங்களின் தீர்ப்புகள் இவற்றை மீறியிருக்

கின்றன. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் 'மிதாக்ஷரா' நியதியைத் தாங்கள் பின்பற்றுவதாக உறுதி கூறினர்கள். ஆனல், பங்காளி ஏகக் குடும்பங்களில் பாகப்பிரிவினையை ஆமோதித்தார்கள். சொத்துரிமை மாற்றங்களுக்கு மறைமுக ஆதரவு கொடுத்தார்கள். இவை யாவும் 'மிதாக்ஷரா' நியதிகளுக்கு முற்றிலும் மாறுபட்டவை. பிரிட்டிஷ் ஆட்சியில் நீதி நிருவகிக்கப்பட்ட விதம் காரணமாக ஏகக்குடும்பங்கள் தொடர்ந்து நீடிக்க முடியவில்லை.

ஏகக்குடும்ப உறுப்பினர்களுக்குப் பூர்விகச் சொத்தில் தனியான உரிமை ஏதும் இல்லை. இது இந்து ஏகக் குடும்பத்தின் முக்கியக் கூருக இருந்தது. பங்காளிகளின் சந்ததிகளுக்கும், நேர்வழி வாரிசுகளுக்கும் பூர்விகச் சொத்தில் உரிமை உண்டு. ஆனல், நீதிமன்றங்களின் தீர்ப்புகள் இதற்கு முற்றிலும் மாறுபட்டதாக இருந்தன. காட்டாகக் கைம்பெண் ஒருத்தி தன் கணவன் பெயரில் இருக்கும் சொத்திற்கு வாரிசு ஒருவரைத் தேர்ந்து எடுக்கலாம் என்றும், அதற்குத் தன் கணவனின் பங்காளிகளின் இசைவு அவசியமில்லை என்றும், 'பிரிவி கவுன்ஸில்' (Privy Council) தீர்ப்பு வழங்கியுள்ளது. இது ஏகக் குடும்பத்தின் சொத்துரிமையைப் பாதித்துள்ளது என்று கபடியா கூறியுள்ளார்.

இருபதாம் நூற்றுண்டில் கொண்டுவரப்பட்ட சில புதிய சட்டங்கள் ஏகக் குடும்பங்களின் பிணைப்பைப் பாதித்துள்ளன. ஆனல், இந்தச் சட்டங்கள் ஏகக் குடும்பங்களைப் பிளக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு இயற்றப்படவில்லை. பொதுமக்களுக்கு இவை உதவியாக இருக்கும் என்று எண்ணி இதை ஏற்படுத்தினர்கள். முதலில் 1930-இல் கல்வி பற்றிய சட்டம்[2] ஒன்று கொண்டுவரப்பட்டது. இதன்படி ஒருவர் ஏகக்குடும்பத்தின் செலவில் கல்வி பயின்றுலும், அதன் பயனுக ஈட்டும் வருவாய் அவருடைய தனிப்பட்ட வருமானமாகக் கருதப்படும். இரண்டாவதாக 1937-இல் இந்துப் பெண்களின் சொத்துரிமைச் சட்டம் இயற்றப்பட்டது. வம்சாவளி ஏகக்குடும்பம் அல்லது பங்காளிகள் ஏகக் குடும்பத்தில் உறுப்பினராக உள்ள கணவனை இழந்த ஒருத்தியின் நலன்களைப் பாதுகாப்பதற்கு இந்தச் சட்டம் வழி செய்கிறது. கணவனுக்குரிய உரிமைகள் அவனுடைய காலத்திற்குப் பின்னர் அவன் மனைவியைச் சாரும். குடும்பத்தின் பொதுச் சொத்தில் பங்கு கேட்கும் உரிமை கைம்பெண்ணுக்கு

[2] The Gains of Learning Act. 1930.

வழங்கப்பட்ட போதிலும் பங்காளிகளுக்குச் சமமான உரிமை அளிக்கப்படவில்லை. மூன்றாவதாக 1954-இல் இந்து திருமணச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இந்துக்களின் மேல் சாதியினரின் மரபுக்கு முற்றிலும் மாறுபட்ட பழக்கத்தை—அதாவது மண விலக்குக் கோரும் உரிமையை—இது அனுமதித்தது. நான்காவதாக 1956-இல் இந்து வாரிசுரிமைச் சட்டம் முக்கியமானது. இது 1929-இல் நிறைவேற்றப்பட்ட ''இந்து சொத்துரிமைப் பேறு (திருத்த) சட்ட''த்தினும் ஒரு படி மேலானது. இது பெண்களின் சொத்துரிமையை முழுமையான உரிமையாக்கியது. அவர்களுக்கு ஆண்களைப் போலச் சம உரிமை கொடுக்கப்பட்டது. ஒருவர் 'உயில்' எழுதாமல் இறந்துவிடுவாரானால் பின் குறிப்பிட்டவர்கள் சமமாகப் பகிர்ந்து கொள்ளலாம்; இறந்தவரின் மகன், மகள், (விதவையாகிவிட்ட) அவர் மனைவி, அவருடைய தாயார் முதலியோர், இவருக்கு முன் இறந்த [pre-deceased] மகன் அல்லது மகள் ஆகியோரின் பிள்ளைகள் (ஆண்களும், பெண்களும்), பேரன், பேத்திகள் ஆகியோர். இவர்கள் ஒவ்வொருவருக்கும் சொத்தில் சமபங்கு உண்டு. இதைப் போன்ற இன்னும் பல சட்டங்கள் ஏகக் குடும்ப அமைப்பில் அடிப்படையான மாறுதல்களைத் தோற்றுவித்தன.

ஏகக் குடும்பங்களின் கட்டமைப்பைப் பாதிக்கும் பல பொருளாதாரக் காரணிகள் இயங்கிவந்துள்ளன. முதலில் நிலம். ஆள் விகிதம் பாதகம் அடைந்தது. நிலப்பரப்பு கிட்டத்தட்ட அதே அளவில் இருந்த போதிலும் பத்தொன்பதாம் நூற்றுண்டில் மக்கள்தொகைப் பெருக்கம் அடைந்தது. 1871-இல் கிங்ஸ்லே டேவிஸ் அவர்களின் மதிப்பீட்டின்படி 255 மில்லியன் மக்கள் இருந்தார்கள். 1941-இல் இது **400** மில்லியனுக (இந்தியா முழுவதற்கும்) பெருகியது. மக்கள்தொகை பெருகியதாலும், நெடுங்காலமாக ஏகக் குடும்ப வளர்ச்சியுடன் பிரிவினைகளும் தொடர்ந்து ஏற்பட்டுள்ளதாலும் நிலம் சிதறுண்டது. சிறிய நிலப்பரப்பு காரணமாக விவசாயம் ஆதாயமற்ற தொழில் முயற்சியாக மாறியது. ஏகக்குடும்ப அமைப்பில் திருமணம், மரணம் முதலியன ஏற்பட்டன. இதற்கான செலவுகளைக் குறைக்க முடியவில்லை. நிலம் சிதறுண்டு, சிறு உடைமைகளாக்கப்பட்ட போதிலும், குடும்பச் செலவுகள் குறைக்கப்படவில்லை. இயற்கைக் காரணிகளால் உற்பத்தி குறைந்ததாலும், உணவுப் பொருள்கள் அல்லது விவசாயப் பொருள்களின் விலை குறைந்ததாலும் பணமாக நிலவரியைச் செலுத்த இயலாமல் கடன் வாங்கினார்கள். பணத்தின் இடைப்பெருமையால் வட்டி விகிதம் அதிகரித்தது. நிலத்தை அடமானமாக வைத்துக் கடன்

வாங்கியவர்கள் அதை மீட்கமுடியாமல் நிலத்தை இழந்தனர். ஏகக்குடும்பம் சொத்துடைமை அடிப்படையில் உள்ள சமூக அமைப்பு ஆகும். நிலத்தை இழந்தவர்கள் ஏகக்குடும்பத்தினின்று பிரிந்து சென்றார்கள். இவர்கள் தனித்தனியே செல்வம் திரட்ட முயன்றார்கள். இவர்களால் உறவினர்களைக் காப்பாற்ற இயலவில்லை. இந்த நிலைமையில் மிகவும் நெருக்கமான பிணைப்புகளை உடைய கருக்குடும்பம் மட்டுமே ஒரு அலகாகச் செயல்பட்டது.

நிலம் உடையவர்களிடையே தொடர்ந்து ஏகக் குடும்பம் நீடித்தது. நில உடைமைக்கு உச்சவரம்பு கொண்டுவரப்பட்டதால் ஏகக்குடும்பங்கள் கருக்குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டன. ஏகக்குடும்ப உறுப்பினர்கள் ஒன்றாகக் கூடிவாழ்ந்தாலும், ஒவ்வொரு உறுப்பினருக்கும் நிலம் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டது.

ஏகக்குடும்பத்திற்குப் போதுமான வருமானம் ஒரே இனத்திலிருந்து கிடைக்கும் வரை உறுப்பினர்கள் யாவரும் மன நிறைவுடனும் இருந்தார்கள். உறுப்பினர்கள் தனிப்பட்ட முறையில் வருமானம் ஈட்டுவார்களானால் அதன் காரணமாக மனக்கசப்பும், கருத்து வேறுபாடும் ஏற்படுகின்றன. போதுமான வருமான வாய்ப்புகள் இல்லாத சூழ்நிலையில் ஏகக்குடும்பம் தொடர்ந்து நீடிக்க முடியவில்லை.

கிராமங்களில் காணப்படும் ஏகக்குடும்பங்களுக்குப் பின்வரும் இனங்கள் முக்கிய வருமான இனங்களாக இருக்கின்றன. நிலத்தின் விளைவு, தோட்டம் (காய்கறிகள், பழங்கள்), தோப்புகள், பால், பால் பொருள்கள், காடுகள், காட்டுப் பொருள்கள் முதலியன. நிலம் சார்ந்த இனங்களிலிருந்து கிடைக்கும் வருமானம் போதுமானதாக இல்லை. ஆகையால், ஒவ்வொரு உறுப்பினரும் முயன்று குடும்ப வருமானத்தை உயர்த்திக்கொள்ளுகின்றார்கள். வருமானம் ஈட்டும் வாய்ப்புகள் கிராமங்களைவிட நகரங்களில் அதிகம் உள்ளன. கிராமத் தொழில்கள் வளர்ச்சிகுன்றி இருக்கின்றன என்பதுடன், அங்கே சாதி உணர்ச்சியும், சாதிப்பாகுபாடும் அதிகமாக இருப்பதால் யாவருக்கும்—திறன் அடிப்படையில்—வேலை கிடைப்பதில்லை. இவ்வாறு வேலை வாய்ப்பைத் தேடிக் கொண்டு நகரங்களுக்கு மக்கள் இடம் பெயர்ந்து செல்வதால் ஏகக்குடும்பங்கள் சிதைவுறுகின்றன. நகரங்களின் வளர்ச்சியும், தொழில் வளர்ச்சியும், கல்வி வளர்ச்சியும் இதற்குத் துணையாக இருந்தன. கிராமங்களில்

கல்வி பயின்றவர்கள் நகரங்களில் எளிதாக வேலை தேடிக் கொண்டனர்.

ஏகக்குடும்ப அமைப்பில் தோன்றிய முக்கியமான மாறுதல்களை இங்கே குறிப்பிட வேண்டும். நில உடைமை இழந்தவர்களும், வருமான வாய்ப்புகளை நாடி நகரங்களுக்கு இடம் பெயர்ந்தவர்களும் புதிய மாறுதல்களைத் தோற்றுவித்தார்கள். தலைமுறை தலைமுறையாக ஒரு இடத்தில் வாழ்ந்து, ஒரு இடத்தில் உணவு பொங்கி, ஒரு இடத்தில் உணவு அருந்தி ஏகக்குடும்பமாக வாழ்ந்தவர்கள் புலம் பெயர்தல் காரணமாக இப்பிணைப்புகளிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டார்கள். ஏகக்குடும்ப அமைப்பில் ஓரிடத்தில் உணவு பொங்குதல் வலியுறுத்தப்பட்டது. வட இந்தியாவில் ஏகக்குடும்பத்தை 'சூளா' என்று அழைக்கிறார்கள். 'சூளா' என்றால் அடுப்படி, அல்லது சமையற்கட்டு என்று பொருள். ஏகக்குடும்பத்தில் பொதுவான அடுப்படியும், சமையற்கட்டும் இருக்கின்ற காரணத்தால் 'சூளா' என்று பெயர் சூட்டப்பட்டது. தமிழ் நாட்டில் கூட ஏகமாக இருந்த குடும்பத்தினர் பிரிந்து சென்று விட்டதைக் குறிப்பிடுவதற்குத் 'தனி உலை' வைத்து விட்டனர் என்று கூறுவார்கள்.

புலம் பெயர்ந்த பின்னரும் தங்கள் நலன்கள் பாதிக்கப் படாதவரை இவர்கள் தொடர்ந்து ஏகக்குடும்ப உறுப்பினர்களாக இருப்பார்கள். ஆனால், நடைமுறையில் கிராமங்களிலிருந்து குடும்ப உறுப்பினர்கள் வெளியேறியவுடன் பாகப்பிரிவினை ஏற்படவில்லை என்றாலும், குடும்பத்தை விட்டு வெளிக்கிளம்பும் நிலையிலேயே அதன் பிளவிற்கான வித்து விதைக்கப்படுகிறது.

நகரங்களுக்கும் பட்டணங்களுக்கும் இடம் பெயர்ந்த கிராம வாசிகள் அங்கு நிலவும் புதிய சூழ்நிலைக்கு ஏற்பத் தங்களை மாற்றிக் கொள்ளுகிறார்கள். போட்டி அடிப்படையில் அமைந்துள்ள தனித்துவ வாழ்க்கையை அவர்கள் மேற்கொள்ளுகிறார்கள். இவர்கள் ஏகக்குடும்பங்களின் பிணைப்பிலிருந்து விடுபட்டதாலும், தன்னுடைய உழைப்பால் ஈட்டும் வருமானத்தைக் கொண்டு குடும்பத்தைப் பராமரிக்க வேண்டியிருப்பதாலும் (இவர்கள்) விரிவான அளவில் பலரை ஆதரிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள். இதர உறவினர்களுடன் தங்கள் வருமானத்தைப் பகிர்ந்து கொள்ள இவர்களால் முடியவில்லை.

ஏகக்குடும்பத்தின் சிதைவு என்றால் என்ன என்பதை விளக்க வேண்டும். சிலர் பின்வருமாறு கூறுகிறார்கள். தற்போது

இந்துக்களிடையே ஏகக்குடும்பங்கள் மறைந்து வருகின்றன என்றும், அதற்குப் பதிலாகக் கருக்குடும்பங்கள் (nuclear family) அதாவது கணவன், மனைவி, குழந்தைகள் உள்ள குடும்பம் பெருகி வருகின்றன என்றும் கூறுகிறார்கள். இப்படிக் கூறுவது உண்மை நிலையை விளக்குவதாக இல்லை. ஐரோப்பிய நாடுகளில் உள்ளதைப்போன்ற கருக்குடும்பங்கள் பாரதத்தில் ஏற்படவில்லை. இதைக் கபடியாவும், நேசாயும் விளக்கியுள்ளார்கள். இவர்கள் ஆராய்ச்சியின் பயனாக அறிந்த உண்மைகள் பின் வருமாறு உள்ளன. ஒருபுறம் கருக்குடும்பங்கள் அதிகரிக்கின்றன என்றும், மற்றொருபுறம் ஏகக்குடும்பங்கள் நலிவடைந்துள்ளன என்றும் கூறுகிறார்கள். இது ஒரு முரண்படு உண்மையாகும். இதைப் பின்வருமாறு விளக்க முடியும்.

நெடுங்காலமாகக் குடும்ப ஆய்வுகள் நடைபெறுகின்றன. இவை குடும்ப வகைகளைப்பற்றி ஆராய்ந்துள்ளன. குடும்பம் என்ற சொல்லிற்குச் சரியான இலக்கணம் கூறுவதற்கு முன்னர் குடும்ப அமைப்பு வகைகளைக் கணக்கெடுப்பது பயனுள்ள ஒரு முடிவைத் தராது. குடும்பத்தைப்பற்றிய கணிப்பாகவும் இதைக் கருதமுடியாது. மக்களின் குடும்ப வாழ்க்கையை உண்மையாக உணர வேண்டுமானால் குடும்பத்தினின்றும், குடும்ப அமைப்பை வேறுபடுத்தவேண்டும். குறிப்பிட்ட காலத்தில் நிலவிய குடும்ப அமைப்பை மட்டும் கருதாமல் குடும்ப அமைப்பின் தோற்றம், வளர்ச்சி, மாறுதல்கள் முதலியவற்றைப் பொதுப்படையாக ஆராயவேண்டும். குடும்ப அமைப்பு மாறுபடக்கூடியது. கருக் குடும்பமாக உள்ள குடும்ப அமைப்பானது திருமணங்கள், மகப் பேறுகள் முதலியவற்றால் விரிவடைந்த குடும்பங்களாக மாறுகின்றன. மரணங்களால் மீண்டும் கருக்குடும்பமாக மாறும். அதைப்போலவே பங்காளிகள் கூடி வாழும் ஏகக்குடும்பங்கள் பாகப்பிரிவினையால் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கருக் குடும்பங்களாக மாறுகின்றன.

ஏகக்குடும்பம் என்பது தலையான ஒரு குடும்ப அமைப்பாகும். குடும்ப அமைப்பு ஒரு பொருளாதார அலகாக உள்ளது. பாகப் பிரிவினையால் பொருளாதார அலகாக உள்ள அமைப்பு பிரிக்கப் படுகிறதே தவிர, உறவின் பிணைப்பால் உருவாகிய குடும்பம் பிரிக்கப்படுவதில்லை. காட்டாக வெவ்வேறுகக் குடும்ப அமைப்புகளை ஏற்படுத்திக் கொண்டு வாழும் உறவினர்கள் பொதுவான காரியங்களில், குலதெய்வ வழிபாட்டில் ஒன்று கூடுகின்றனர். ஒரே இடத்தில் உணவு அருந்துதல், உறங்குதல் அல்லது வசித்தல் பாகப்பிரிவினையால் முடியாத காரியங்களாகி விடு

கின்றன. மேற்படி தொடர்புகள் குறைவதால் உறவின் பிணைப்பு அல்லது பற்றுதல் குன்றிவிடவில்லை.

பாகப்பிரிவினைகள் நெடுங்காலமாக — பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படும் முன்னதாக — நிகழ்ந்துள்ளன. அவை தற்காலத்திலும் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் ஏகக்குடும்பம் பெருமளவுக்கு விரிவடைந்த பின்னரே பிரிக்கப் பட்டது. தற்காலத்தில் ஏகக்குடும்பங்கள் அதிக அளவிற்கு விரிவடையும் முன்னரே பிரிக்கப்படுகின்றன. அதாவது முற் காலத்தில் ஏற்பட்ட பாகப்பிரிவினைகளுக்கும், இப்போது ஏற்படு கின்றன பாகப்பிரிவினைகளுக்கும் அதிக வேறுபாடுகள் உள்ளன. குடும்ப அமைப்பின் அளவு, விரிவாக்கம் ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு பார்ப்போமானால் பாகப்பிரிவினை இதற்கு முன்பு ஏற்பட்டதைவிட அதிக விரைவாகவும், முன்னதாகவும் ஏற்படுகின்றன. இது ஒரு குறிப்பிடத்தக்க மாற்றமாகும். காட்டாக, ஆந்திரா, உத்தரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் சர்வேக்கள் நடத்தப்பட்டன. ஷமிர்பேட் பகுதிகளில் வெகு சாதாரணமாகப் பாகப்பிரிவினைகள் ஏற்படுகின்றன. திருமண மான ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னரும் தங்கள் பெற்றோர் களுடன் சேர்ந்து வாழும் மகன்கள் மொத்தத்தில் 22% ஆக உள்ளனர். அதாவது பெரும்பான்மையானவர்கள் திருமண மானதும் (ஐந்து ஆண்டுகளுக்கு முன்னதாக) தனியாகப் பிரிந்து செல்கின்றனர்.

தற்காலத்தில் அடிக்கடி பாகப்பிரிவினை ஏற்படுவதால் குடும்ப அமைப்புகள் பெரிய அளவில் வளரும் முன்னதாகவே பிரிக்கப்படுகின்றன. இதனால் முன்பு இருந்ததைவிட அதிக மான கருக்குடும்பங்கள் ஒரு குடும்ப அமைப்பிலிருந்து தோன்று கின்றன. இக்கருத்தை ஆதரிக்கும் வகையில் 1951-இல் மக்கள் தொகைக் கணிப்பு ஆணையாளர் அறிக்கை விடுத்துள்ளார். பல கருக்குடும்பங்களைக் கொண்ட குடும்ப அமைப்பு அதிகரித்து வருகின்றது. இது கிராமங்களில் 33% ஆகவும், நகரங்களில் 38% ஆகவும் அதிகரித்துள்ளன. ஏகக்குடும்ப அமைப்பி லிருந்து விலகித் தனியாகக் குடும்பம் அமைக்கும் மனப்பான்மை ஓங்கி வருகிறது. ஆகையால் முன்பு இருந்ததைப் போல மரபு அடிப்படையில் இயங்கிய ஏகக்குடும்ப அமைப்புகள் நீடிப்ப தற்கான வாய்ப்புகள் குறைந்துள்ளன.

குடும்ப அமைப்புகள் பாகப்பிரிவினை காரணமாக இரண்டு அல்லது அதிகமான கருக்குடும்பங்களாகப் பிரிக்கப்பட்ட

போதிலும் இவை ஒன்றாக இணைந்து, கூட்டுக் குடும்ப அமைப்பாக வாழமுடியும் என்பதைப் பலரும் உணரவில்லை. ஏகக் குடும்பத்தை ஒரு பொருளாதார அலகாகக் கருதாமல் சமூக அமைப்பாகவும், சமூக அலகாகவும் கருதவேண்டும். பொருளாதார அலகான ஏகக்குடும்ப அமைப்பு சிதைவுற்றது உண்மை. அதன் விளைவாகப் பல கருக்குடும்பங்கள் தனித்தனிப் பொருளாதார அலகுகளாக இயங்கி வருகின்றன. ஆனால், குடும்பம் என்பது உறவின் பிணைப்பில் அமைந்த சமூக அமைப்பாகவும், சமூக அலகாகவும் உள்ளது.

இந்து நியதிப்படி தந்தையின் பூர்விகச் சொத்தில் மகனுக்குப் பங்கு உண்டு. இவர்கள் சம உரிமையுடைய பங்காளிகளாக இருக்கின்றனர்.

### சாதிகள்—அமைப்பும் அவற்றின் சிறப்பு இயல்புகளும்

சாதியைப்பற்றி விவரிக்கும்போது அறிஞர்களிடையே சிறந்த கருத்தொற்றுமை நிலவக் காண்கிறோம். சாதியை எல்லோரும் விவரித்துரைப்பதன் மூலம் தெரிந்துகொள்ளும் அளவிற்கு, இதைச் சுருக்கமாகக் கூறும் இலக்கணத்தில் மூலம் தெரிந்துகொள்ள முடிவதில்லை. சாதியின் பல கூறுகளைச் சுருக்கிக் கூறுதல் இயலாது. ஆகையால், அதற்கு இலக்கணம் கூறுபவர்கள் சிலவற்றை வலியுறுத்தியும், சிலவற்றை நீக்கியும் விடுகின்றனர். இதைப்பற்றிப் பேராசிரியர் எம். என். சீனிவாஸ் கூறியதை இங்குக் கூறுவோம்.[3] இதன் சிறப்பு இயல்புகளை ஒன்பது தலைப்புகளில் வகைப்படுத்தலாம். ஒன்று, படியமைப்பு உடையது; இரண்டு, அகமண முறையும், சிறப்பு விதிகளும்; மூன்று, தொழில் சார்பு உடையது; நான்கு, உணவு, நுகர்வு கட்டுப்பாடுகள்; ஐந்து, பழக்க வழக்கங்கள், உடை, பேச்சு வேறுபாடுகள்; ஆறு, தீட்டு (Pollation); ஏழு, சடங்குகளும், சம்பிரதாயங்களும்; எட்டு, சாதி அமைப்பு; ஒன்பது சாதியின் வளர்ச்சியும், இயக்க நிலையும்.

படியமைப்பு முறை சாதியின் முக்கியக் கூறுகும். சமுதாய மக்களுக்கு இயல்பாக உள்ள சமத்துவம் பிறப்பின் அடிப்படையில் மறுக்கப்படுகிறது. சாதியின் அடிப்படையில் சலுகைகள், உரிமைகள் வழங்கப்படுகின்றன. மேல்நிலையில் உள்ள சாதியினர் அதிக சலுகைகளைப் பெற்று இருந்தார்கள். சொத்து உடைமை, வருமானம், மற்றவர்களின் உழைப்பை உரிமை

[3] The Gazetteer of India,-Social Structure-ch. ix. (1965)

யுடன் கோரிப்பெறுதல் முதலிய சலுகைகள் மேல் சாதியினருக்கு வழங்கப்பட்டன; கீழ் சாதியினருக்கு இவை மறுக்கப்பட்டன. சாதியின் சிறப்பு இயல்புகளைப்பற்றி ஹட்டன் கூறிய கருத்துகளை இங்கே கூறுவோம். பிராமணர்களை முதன்மையாகக் கொண்டு படிப்படியாக ஏனைய சாதிகள் அதன் கீழ் அமைந்திருக்கும் தீண்டல் (தீட்டு) அடிப்படையில் விலக்கி வைக்கப்படுகின்றன. சாதிகளின் அந்தஸ்து நிலைமாறுது உள்ளது. அகமண முறை வலியுறுத்தப்படுகிறது. சமபந்தியில் உணவு அருந்துதல், அதில் பின்பற்றப்படும் நியதிகள், தடைகள் வலியுறுத்தப்படுகின்றன.

சாதியைப்பற்றிக் சூர்யே கூறியவற்றை இங்கே காண்போம். சமூகம் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. சாதிகளுக்குச் சம அளவு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. சாதிகள் படிகளின் வரிசையைப்போல ஏற்ற இறக்கங்களுடன் இருக்கின்றன. உணவு அருந்துதல், சமூக உறவு ஏற்படுத்துதல் ஆகியவற்றில் பல தடைகள், கட்டுப்பாடுகள் உள்ளன. சில சாதிகள் பொது நல உரிமைகளை அநுபவிக்கின்றன. வேறு சில சாதிகள் அவற்றை அநுபவிக்க முடியாமல் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன. சாதியினர் ஏற்கக்கூடிய தொழில்கள் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன. திருமணம் செய்வதிலும் சில தடைகள், கட்டுப்பாடுகள் உண்டு. டேவிஸ் என்பவர் இந்திய சாதி அமைப்பின் பொதுவான அமைப்பைப் பின்வருமாறு விளக்கியுள்ளார். பரம்பரை பரம்பரையாகச் சாதியில் தொடர்ந்து இருக்க வேண்டிய நிலையும், மாறுத அந்தஸ்தும், ஒரே சாதிக்குள் அமைந்த அகமண முறையும், சமூகத்தொடர்பு, உணவு அருந்துதல் ஆகியவற்றில் அனுசரிக்க வேண்டிய கட்டுத்திட்டங்கள் முதலியனவும் முக்கியமானவை. ஒரு சாதியைச் சேர்ந்தவன் என்ற உணர்வு அச் சாதியின் பெயரைச் சொல்லும் போது ஏற்படுகிறது. அச் சாதியில் ஒருவன் பிறந்துள்ளான் என்று சமுதாயத்தினர் கருதுவதால் அவன் தன் சாதியைப்பற்றிப் பெருமைப்படுகிருன். அதேபோலச் சாதிக்குரிய பழக்கவழக்கங்களைக் கடைப்பிடிக்கும்போதும், அச்சாதியின் கட்டளைகளுக்கு உட்பட்டு ஒழுகும்போதும் சாதி உணர்வு வலியுறுத்தப்படுகிறது. சாதியுடன் இன்னும் சில பண்புகளும் காணப்படுகின்றன. அவையாவன: பொதுவான பரம்பரைத் தொழில், ஒரு குறிப்பிட்ட பழங்குடி வகுப்பு அல்லது இனத்திலிருந்து வந்தவர்கள் என்ற நம்பிக்கை, மதத்தின் ஒரு பிரிவைச்சார்ந்து இருப்பதால் மாறுத சமூக அந்தஸ்து ஆகியவை.

இவ்வாறு ஒவ்வொரு ஆசிரியரும் இந்து சாதி அமைப்பில் தாங்கள் சிறப்பாகக் கருதும் இயல்புகளை வலியுறுத்திய போதிலும், இவர்களின் விளக்கங்கள் முரண்பாடு இல்லாமல் இருக்கின்றன.

சாதியானது சமூகத்தைச் சிறு குழுக்களாகப் பிரித்து விடுகிறது என்றும், இவை ஒற்றுமையின்றி இருப்பதற்கும், இவற்றிடையே பூசல்கள் ஏற்படவும் சாதிதான் காரணம் என்றும் சிலர் நினைக்கிறார்கள். சாதி அமைப்பில் சமூகம் பல உட்பிரிவுகளாகப் பிரிக்கப் படுகின்றன என்பது உண்மை. சாதி வேறுபாடுகள் இருவகைகளில் செயல்படுகின்றன. பிறப்பின் அடிப்படையில் ஒருவர் ஒரு குறிப்பிட்ட சாதியைச் சேர்ந்தவர் என்று கருதப்படுகிறார். அதன் காரணமாக அவர் இன்னொரு சாதியில் சேரமுடிவதில்லை. இரண்டாவதாகத் தீண்டாமை, சாதிக்கௌரவம் போன்ற கட்டுப் பாடுகள் சாதிகளுக்கு இடையே உள்ள சமூகத்தொடர்பைத் தடைசெய்கின்றன. இருந்த போதிலும் சாதிகள் எவ்விதத் தொடர்பும் இல்லாமல் இயங்குகின்றன என்றோ, அவை எப்போதும் பிணக்குடன், பூசல்களுடன் வாழ்கின்றன என்றோ கூறுவதற்கில்லை. சாதி அமைப்புகள் கிராம அமைப்பிற்கு உட்பட்டு இருக்கின்றவரை அவை ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டு வாழ்கின்றன. ஆனால், பூகிள் என்ற ஆசிரியர் இதற்கு நேர்மாறான கருத்துகளைத் தெரிவிக்கிறார். சாதி உணர்வு சமூகத்தை ஆளுகிறது. அதாவது சமூகம் வெவ்வேறு குழுக்களாகப் பிரிந்துள்ளன என்றும், அவை ஒன்றை ஒன்று நேசிப் பதற்குப் பதிலாக வெறுக்கின்றன என்றும், இவை ஒற்றுமையாக இணைந்து செயல்படுவதற்குப் பதிலாகத் தனித்தனியே செயல் படுகின்றன என்றும், ஒரு சாதியின் உறுப்பினர் இதர சாதிகளுடன், அவற்றின் உறுப்பினர்களுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள முடியவில்லை என்றும் பூகிள் விளக்கம் தருகிறார். இவரைப் பற்றிப் பாரதத்தில் நிலவும் சாதி அமைப்பை நேரிடையாகப் பார்த்து, ஆராய்ந்து தெரிந்துகொள்ளவில்லை என்பதைத் தவிர வேறொன்றும் சொல்வதற்கில்லை. இவர்கள் தங்கள் நாட்டில் காணும் சமூகத் தொடர்புகளை அளவுகோலாகக் கொண்டு சாதி அமைப்பின் தன்மை, சிறப்பு இயல்புகளை அறிய முற்படுகின்றனர். கலாசாரம், சமயம் ஆகியவற்றின் பிரதிபலிப்பாக மட்டுமே சமூக அமைப்பு இருக்க முடியும். ஆகையால் ஒரு நாட்டில் நிலவும் அமைப்புகளை அந்த நாட்டின் நம்பிக்கை, மதிப்பீடுகள் ஆகியவற்றின் அடிப்படையில் காணவேண்டும்.

தனி ஒருவர் தாம் செய்ய விரும்பும் தொழிலைச் செய்ய முடியவில்லை. இது சாதியினால் தோன்றிய நிலையாகும். அவ்வாறு விரும்பிய தொழிலை ஏற்க முடியாது போனாலும், அதைச் செய்கின்ற சாதியினர் பொருளாதாா அடிப்படையில் நெருங்கிய தொடர்புகொண்டு இருக்கின்றனர். சாதி அடிப்படையில் சமூகம் பிளவுபட்டு இருப்பது உண்மையாக இருந்தாலும், சாதி அடிப்படையில் தொழில்கள் சிறப்பாகச் செய்யப்படுகின்ற காரணத்தால், பொருளாதார அடிப்படையில் பல சாதியினரும் ஒன்றுபடுகின்றனர். சாதிகள் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றைப் பரிவர்த்தனை செய்துகொள்வதுடன், பெண் எடுக்கவும், பெண் கொடுக்கவும் வேண்டும் என்று வொய்சர் கூறுகிறார். இதற்கு ஆதரவாகச் சில வடஇந்தியப் பகுதிகளில் உள்ள சமூக வாழ்க்கையைச் சுட்டிக்காட்டுகிறார். ஜாஜ்மன், காமின் ஆகிய சாதிகளுக்கிடையே சமூக ஏற்றத்தாழ்வுகள் இருந்தபோதிலும் அவை ஒன்றுக்கொன்று உதவியாக உள்ளன என்று கூறுகிறார். ஜாஜ்மன் முறையில் அமைந்த சமூக, பொருளாதாரத் தொடர்புகளை எடுத்துக்காட்டுகிறார்.

சாதி அமைப்பைப்பற்றி லீச், டர்க்கெயம் ஆகியோர் கூறிய கருத்துகளை ஆராய்ந்து பார்க்கவேண்டும். பொதுவாக மேலெழுந்த வாரியாகக் காணப்படும் படியமைப்பு முறையும், தனித்து இயங்கும் தன்மையும்—தொடர்பு இல்லாமல் பிரிந்து நிற்பதும்—வற்புறுத்தப்படுகின்றன. ஆனால், சாதி அமைப்பில் உள்ளூறாக உள்ள தொழில் சிறப்புத்தேர்ச்சியும், பகுப்பும் முக்கியமானவை. கிராமவாசிகள் மற்றவர்களின்—மற்ற சாதியினரின்—ஒத்துழைப்பை நம்பியிருக்கிறார்கள் என்பதைச் சமூக இயல் ஆய்வாளர்கள் மறந்துவிடக்கூடாது.

சாதி அமைப்பைப் பல கோணங்களிலிருந்து பார்க்கமுடியும் என்பதைத்தான் இதுவரை விளக்கிக்கூற முற்பட்டோம். புனிதமாகக் கருதப்படுகின்ற சடங்கு முறைகளின் அடிப்படையில் சாதி அமைப்பு உருவாகியது; படிப்படியாக உள்ள சமூக ஏற்றத் தாழ்வை நிலைபெறச் செய்வதற்காக உருவாகியது; மாறாத தன்மையுடைய தொழில் பகுப்பின் அடிப்படையில் தோன்றியது; ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் பொருளாதார வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது. இவ்வாறு சாதி அமைப்பைப் பற்றியும், அதன் முக்கிய நோக்கம் குறித்தும் பல விளக்கங்கள் கூறலாம். இவ்வாறு கூறப்படும் பலவகையான விளக்கங்களில் பொருளாதார அடிப்படையில் இணைந்து வாழும் தன்மையும், பிணைப்பும் முக்கியமானவை என்று கிராமங்களில் சர்வே

செய்பவர்கள், அங்குப் பணியாற்றும் கள ஊழியர்கள் வற்புறுத்துகிறார்கள்.

சில அறிஞர்கள் சாதியின் பொருளாதார முக்கியத்துவத்தைப் புறக்கணித்துள்ளனர் என்று மேலே சுட்டிக்காட்டினோம். உண்மையில் சாதி அமைப்பின் பொருளாதார முக்கியத்துவம் குறிப்பிடத்தக்கது. அதை ஒரு சிலர் அளவுக்கும் அதிகமாக வலியுறுத்தி உள்ளனர். காட்டாக நெஃபீல்ட் (Nesfield) என்பவரைக் கூறலாம். ஒவ்வொரு சாதியினரும் குறிப்பிட்ட தொழிலைச் செய்கிறார்கள் என்பது உண்மை. சாதி அமைப்பில் தொழில் சிறப்புப் பயிற்சி வலியுறுத்தப்படுகிறது. ஆனால், சாதியின் வளர்ச்சிக்கும், தொழில் சிறப்புப் பயிற்சிகளுக்கும் பரம்பரை பரம்பரையாகத் தொழில்களைச் செய்வதே முக்கிய அடிப்படையாக உள்ளது என்று கூறுவதை ஏற்கமுடியாது. ஏனெனில், சாதிக்கும் தொழிலிற்கும் இடையே உள்ள தொடர்பைக் குறைத்து மதிப்பிடுவதைப்போல, மிக அதிகமாக வலியுறுத்துவதும் தவறாகும். சாதியை ஒரு தொழில் பகுப்பின் நிலைக்குத் தாழ்த்துவதும் தவறாகும். நெஃபீல்ட் இவ்வாறு தவறு செய்துள்ளார். தொழில் பகுப்பின் அடிப்படையில்தான் இந்தியாவில் சாதி அமைப்பு தோன்றியது என்று அழுத்தம் திருத்தமாக இவர் கூறியுள்ளார். இக் குறைபாட்டை வேறு சில சமூக இயல் அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளார்கள். இயந்திரத் தொழில்கள் வளர்ச்சி அடையாத நிலைமையில், கைவினைஞன் தன் தொழிலை விளக்கிக் கூறுவதற்கும், பயிற்சி அளிப்பதற்கும் தன் மகனைத் தேர்ந்து எடுக்கலாம். இருந்தபோதிலும் தொழில் பயிற்சி பெறுபவர் தன் மகனாகவே இருக்கவேண்டும் என்பதில்லை. சாதியைப் பரம்பரைத் தொழில்களின் அடிப்படையில் எப்படி விளக்கிக் கூறமுடியாதோ, அதைப்போலவே சாதியின் அடிப்படையில் பரம்பரைத் தொழில்களையும் விளக்கிக் கூறமுடியாது.

தொழில் அடிப்படையில் சாதி தோன்றியது என்று கூறுவதில் உள்ள குறைபாடுகளை இங்கே விளக்குவோம். வாழையடி வாழையாகச் சில தொழில்கள் செய்யப்படுகின்றன. கிட்டத்தட்டக் கைவினைத் தொழில்கள் சாதி அடிப்படையில் அமைந்து உள்ளன என்று பெக்ஜவர், பேஜ் ஆகியோர் கூறியுள்ளார்கள். சில குறிப்பிட்ட தொழில்கள் குறிப்பிட்ட சாதியினரால் செய்யப்படுகின்றன என்று கூறலாமே தவிர, சாதிக்கும், தொழில்களுக்கும் இடையே நெகிழ்வில்லாத தொடர்பு உள்ளது என்று கூறுவதும், அதை ஒரு பொதுமை உரையாகக் கூறுவதும் தவறு. காட்டாக, வடஇந்தியாவில் உள்ள ஆஹிர்,

**காதரியா, கோலா, குஜா** ஆகிய நான்கு சாதிகளை எடுத்துக் கொள்வோம். இவை தனித்தனியே தங்களுக்குள் அகமணத்தைப் பின்பற்றுகின்றன. இருந்தபோதிலும் இந்தச் சாதியினர் ஆடு மாடுகளை மேய்த்தல், வளர்த்தல், பால் கறத்தல், விற்பனை செய்தல் ஆகிய தொழில்களைச் செய்து வருகின்றனர். இத் தொழில்கள் இச் சாதியினருக்குப் பொதுவாக உள்ளன. தவிரவும், பாரதம் முழுவதிலும் விவசாயம், வாணிபம் ஆகியவை எல்லாச் சாதியினராலும் பொதுவாகச் செய்யப்படுகின்றன. நிலத்தை உடையவர்கள் எந்தச் சாதியை சேர்ந்தவர்களாக இருந்தாலும் விவசாயத்தில் ஈடுபட்டவர்களாக இருக்கின்றார்கள். ஆனல், மேல் சாதியினரைவிட, கீழ் சாதியினர்தான் அதிக அளவுக்கு விவசாயத் தொழிலாளர்களாகவும், சாகுபடியாளர் களாகவும் இருக்கின்றனர்.+ இதைப் பொதுமைப்படுத்திக் கூறமுடியாது.

விவசாயத்தைப்போலவே வாணிபமும் தற்சமயம் எல்லாச் சாதியினராலும் செய்யப்படுகிறது. ஒருகாலத்தில் கோமுட்டிச் சாதியினர் மட்டுமே வாணிபம் செய்து வந்தனர். வடபகுதிகளில் 'பனியா' வியாபாரிகளாக இருந்தார்கள். ஆனல், அனைத்துச் சாதியினரும் இப்போது வாணிபத்தில் ஈடுபட்டுள்ளனர். இதற்குத் தற்காலத்தில் ஏற்பட்டுள்ள வாணிப வளர்ச்சியும், பொதுவான தொழில் வளர்ச்சியும் முக்கியமானவையாகும். காட்டாக, இரு பிறப்பாளர்கள் என்று கருதப்படும் பிராமணர்கள் வேதம் ஓதுதல், ஓதுவித்தல் ஆகியவற்றைத் தங்கள் தொழிலாகக் கொண்டு இல்லை. சென்ற நூற்றண்டிற்கு முன்பு கல்விடைக் குறிச்சி அந்தணர்கள் லேவாதேவித் தொழிலில் தீவிரமாக ஈடுபட்டார்கள் என்று பேராசிரியர் **எஸ். கே. முரன்ஜன்** கூறியுள்ளார். பிரிட்டிஷார் ஆட்சி செய்த காலத்தில் மேலை நாட்டு நாகரிகத்திலும், கல்வியிலும் முதலில் பயன் அடைந்தவர்கள் இவர்களேயாவர். இவர்கள் பழமையான சமூக அமைப்பில் மேலான நிலையை வகித்ததாலும், சமஸ்கிருதத்திற்குப் பதிலாக ஆங்கிலக் கல்வியை விரும்பிப் படித்ததாலும் அரசு அலுவலங்களுக்கும், தொழில், வாணிபத் துறைகளுக்கும் வேலைதேடிச் சென்ருர்கள். தற்சமயம் கிட்டத் தட்ட இரண்டு தலைமுறைகளாகப் பிராமணர்களின் ஆதிக்கத் தைப் பலரும் எதிர்க்க ஆரம்பித்தவுடன் அரசியலிலும், வாணிபம், தொழிற்றுறை ஆகியவற்றிலும் ஈடுபட்டுப் பிரமிக்கத்

+ George Rosen: Democracy and Economic change in India-1966, P. 35-36: பார்க்கவும். இப்புத்தகத்தில் அட்டவணை 3.1

தக்க அளவில் வெற்றி அடைந்துள்ளார்கள். பிராமணர்களைப் போலவே மேல் சாதிகளைச் சேர்ந்தவர்கள் அனைவரும் குலத் தொழில்களை விடுத்து இதர துறைகளில் செல்வாக்கான நிலையை எய்தியுள்ளார்கள். முக்கியமாக நடிப்பு, நாடகம், நாட்டியம், இசை ஆகிய துறைகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

### சாதியினுல் ஏற்பட்ட மாறுதல்கள்

இந்து சமூக அமைப்பு மாருத தன்மையுடையது என்று கருதுவது தவறு. இது தொன்மையான அமைப்பாக இருந்தபோதிலும், ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகத் தோன்றிய பல புதிய மாற்றங்களை வரவேற்றும், அதற்கு ஈடுகொடுத்தும் வந்துள்ள காரணத்தால் நெகிழ்வுடைய அமைப்பு முறையாகவே செயல்பட்டு வந்துள்ளது. பிறநாட்டினர், பிற சமயத்தினர் ஆகியோருடைய படையெடுப்புகளால் சாதிக் கோட்பாடுகளும், நியதிகளும் நெகிழ்வற்ற தன்மையை எய்தின என்று கூறலாம்.

'சாதி' என்பது 'வர்ணம்' என்பதிலிருந்து வேறுபட்டது என்று கூறுகிருர்கள். வேதகாலங்களில் நான்கு வகைச் சமூகப் பிரிவினர் தோன்றியதாகக் கூறப்படுகிறது (பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என்போர்). வேத காலத்திய வர்ணப் பிரிவுகள் தற்காலத்திய சாதிப் பிரிவுகளைப் போல நெகிழ்வற்றதாக இல்லை. ஆனல், பிற்காலத்தில் தோன்றிய பல கொந்தளிப்பான நிலைமையிலிருந்து மக்கள் தங்களைக் காத்துக்கொள்வதற்காக அமைத்துக்கொண்ட சமூக அமைப்பு நாளடைவில் நெகிழ்ச்சியற்றவையாக மாறிவிட்டன. மக்களின் பாதுகாப்பிற்காகத் தோன்றிய அமைப்புகள் நாளடைவில் மக்களின் முன்னேற்றத்திற்கு இடையூருக மாறின.

சாதி அடிப்படையில் அமைந்த சமூகம் படியமைப்புடைய தாக இருக்கிறது என்று கூறுகிருேம். ஒரு சாதியினர் மேலான மட்டத்தில் இருக்கவும், மற்ருெரு சாதியினர் கீழ் மட்டத்தில் இருக்கவும் தகுந்த சித்தாந்த அடிப்படை அவசியமாக உள்ளது. இவை பெரும்பாலும் உணவு, பழக்க வழக்கங்கள், தூய்மை அல்லது தீண்டாமை, கல்வி, ஒழுக்க நெறிகள் முதலியவற்ருல் நிர்ணயிக்கப்படும். படியமைப்புடைய சமூக அமைப்பில் ஆரம்பகாலத்தில் நிலவிய ஏற்றத்தாழ்வுகளைவிடப் பிற்காலத்தில் அதிக அளவிற்கு ஏற்பட்டு உள்ளன. கல்வி வாய்ப்புகளை மறுத்துள்ள காரணத்தால் சூத்திரர்கள் சமூகத்தில் தாழ்த்தப்

பட்ட மக்களாக மாற்றப்பட்டனர் என்று அம்பேத்கார் கூறியுள்ளார்.[4]

குறிப்பிட்ட சாதியில் பிறந்தவர்கள் தங்கள் நிலையை மாற்றிக் கொள்ள முடியாது. ஆனால், ஒரு சாதியைச் சேர்ந்த மக்கள் அனைவரும் ஒன்று கூடி உயர்ந்த சாதி மக்களின் பழக்க வழக்கங்களைப் பின்பற்றலாம். காட்டாக, சமயச் சடங்குகளைப் பிராமணர்களைக் கொண்டு செய்யலாம். அப்படிச் செய்வதால் தாங்கள் மேல் சாதியினரைப் பின்பற்றுவதாகக் கருதுகின்றனர். சாதி அமைப்பில் பிராமணர்கள் மேலான நிலையில் இருக்கிறார்கள். பிராமணர்களைப்போலவே உணவு, பழக்கவழக்கங்களையும், சடங்குகளையும், இறைவழிபாட்டையும் மேற்கொள்ளுகின்றனர். இவர்கள் சமஸ்கிருத முறைகளைப் பின்பற்றுவதன் மூலம் தங்கள் சாதியின் அந்தஸ்தை உயர்த்திக் கொள்ளுகின்றனர். இதைச் 'சமஸ்கிருதமயம்' (Sankritisation) என்று பேராசிரியர் எம். என். சீனிவாஸ் கூறியுள்ளார். சமஸ்கிருதமயம் என்பதற்குப் பிராமணர் அல்லாத (மக்கள்) சாதியினர் பிராமணீயப் பழக்கவழக்கங்களைப் பின்பற்றுகின்றனர் என்பது பொருள். காட்டாக, பிராமணர்களைப் போலப் பூணூல் அணிதல், இறைவழிபாடு செய்தல், சமஸ்கிருதச் சொற்களைக் கலந்து உரையாடுதல், புலால் மறுத்தல், மதுபானம் தவிர்த்தல் முதலியன வலியுறுத்தப்படுகின்றன. இச்சாதியினர் மற்ற சாதியினர்களைத் தீண்டுவதில்லை. பிற சாதியினரைத் தீண்டாமல் ஒதுங்கியிருப்பதாலும், மற்ற சாதியினரிடம் உணவு அருந்தாமையாலும் தங்கள் சாதியின் உயர்வான தன்மையை எடுத்துக்காட்டுகின்றனர். இவர்கள் தங்கள் சாதியின் நிலையை மேல் நோக்கி உயர்த்துவதன் மூலம் தங்கள் சமூக நிலையையும் உயர்த்திக் கொள்ளுகின்றனர். கல்வி கற்கவும், அரசியல் சலுகைகளைப்பெறவும், பொருளாதார மேம்பாட்டை அடையவும் இம் முறை அவசியமாக இருக்கிறது.

[4] பார்க்கவும்: BR Ambedkar-Who were the Sudras?-How they came to be the fourth Varna in the Indo-Aryan Society? Published by Thacker and Co Ltd., Bombay.

இந்த நூலில் டாக்டர் அம்பேத்கார் பல அரிய கருத்துகளைக் கூறியுள்ளார். 'ரிக்கு' வேதகாலத்தில் நால்கு வர்ணங்கள் நிலவவில்லை என்றும், சூத்திரர்கள் என்று அழைக்கப்படும் நான்காவது வர்ணம் பிற்காலத்தில் தோன்றியது என்றும் கூறியுள்ளார். ஆரம்பகாலத்தில் மூன்று வர்ணங்கள் மட்டுமே இருந்தன. க்ஷத்திரியர்களில்—சூரியகுல அரசர்களில்—ஒரு பிரிவினர்தான் நாளடைவில் சூத்திரர்களாக மாறினர் என்று கூறுகிறார். சமுதாயத்தில் தோன்றிய பல நிகழ்ச்சிகள் இதற்குக் காரணமாக இருந்தன. இவற்றுள் மிகவும் முக்கியமானது இவர்களுக்குக் கல்வி வாய்ப்புகள் மறுக்கப் பட்டதாகும். கல்வி பயில முடியாத காரணத்தால் நாளடைவில் தாழ்த்தப்பட்ட மக்களாக மாறினர். கல்வி கற்பிக்கும் பணி குறிப்பிட்ட குழுவின் ஏகபோக உரிமையாக இருந்தது குறிப்பிடத்தக்கது.

சாதி அமைப்பு எந்தக் காலத்தில், எந்தக் காரணத்திற்காக ஏற்பட்டது என்று கூறமுடியவில்லை என்றாலும், ஆரம்பகாலம் தொட்டே பல எதிர்ப்புகளைச் சாதிமுறை சமாளித்து வந்துள்ளது. இவ்வாறு முதன்முதலில் ஏற்பட்ட எதிர்ப்பு கௌதமபுத்தரால் ஏற்பட்டது. பிராமணர்களின் ஆதிக்கத்தை க்ஷத்திரியர்கள் எதிர்த்துள்ளார்கள் என்ற அடிப்படையில் புத்தரை ஒரு புரட்சி வீரராகக் கருதுகிறார்கள். புத்தசமயம் செல்வாக்கான நிலைமையை எய்திய காலங்களில், அரசர்கள் புத்தசமயத்தை ஆதரித்த காலங்களில், இவர்கள் தங்கள் ஆதிக்கத்தைச் சமூகத்தில் நிலைநாட்டினார்கள். கடைச்சங்க காலத்தில் தமிழகத்தில் சமணமும், சாக்கியமும் சிறப்புற்று விளங்கின என்பது குறிப்பிடத்தக்கது.

பிற்காலத்தில் பௌத்தர்களைச் சமயத்திருத்தவாதிகள் என்று அழைத்தார்கள். அதன்பின்னர் 13-வது, 14-வது, 15-வது நூற்றாண்டுகளில் பல ஞானிகளும், முனிவர்களும் தோன்றினார்கள். இவர்கள் சமய நம்பிக்கையை வலியுறுத்திய போதிலும், இந்து சமயத்தின் ஒரு கூறாக உள்ள சாதி அமைப்பையும், அதில் பொதிந்துள்ள ஏற்றத்தாழ்வுகளையும் ஏற்கவில்லை. அடிப்படையாக மனித சமுதாயத்தில் எல்லோரும் சமம் என்ற கருத்தை இவர்கள் பரப்பினார்கள். பக்திமார்க்கத்தில் சமத்துவக் கருத்துக்கள் வலியுறுத்தப்பட்டன. இவர்களில் இராமனுஜர், இராமானந்தர், மாத்துவர், ஜனனேஸ்வரர், சைதனியர், வல்லபர் ஆகியோர் முக்கியமானவர்கள். தமிழ் நாட்டில் சமயகுரவர்கள் (சைவம், வைணவம் இரண்டிலும்) பக்திப்பாக்களின் மூலம் பக்தி மார்க்கத்தைப் போதித்தார்கள். இறைவழிபாட்டிற்குச் சாதி ஒரு தடையாக இல்லை என்பதைத் தெளிவுபடுத்தினார்கள். இவர்கள் சாதி, சமயம் ஆகிய அமைப்புகளை மாற்றுவதற்கு முற்படவில்லை. ஆனால், மக்களிடையே சுயேச்சையான வளர்ச்சியை உருவாக்க முற்பட்டனர். மக்களிடையே ஏற்றத்தாழ்வுகள் இல்லை என்றும், சாதி வேறுபாடுகளிலிருந்து மேம்பட்ட நிலையில் இறைவழிபாடு உள்ளது என்றும் பிரசாரம் செய்தார்கள்.

பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் இந்தியச் சாதிமுறை அரசியல், பொருளாதார, சமூக சக்திகளால் பல விதங்களிலும் மாற்றம் அடைந்தது. காட்டாக, ஒவ்வொரு சாதியிலும் ஒரு பஞ்சாயத்து இருந்து வந்துள்ளது. சாதிப்பஞ்சாயத்துகள் நெடுங்காலமாகச் சாதியின் தூய்மையை, நெறிமுறைகளைப் பாதுகாத்து வந்தன. இவற்றைப் புறக்கணித்தவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள்.

செல்வாக்கான நிலைமையில் இருந்த சாதிப்பஞ்சாயத்துகளின் அதிகாரங்களும், செல்வாக்கும் பிரிட்டிஷார் ஏற்படுத்திய நீதி மன்றங்களால் கட்டுப்படுத்தப்பட்டன. இந்தியாவில் மாநிலத்திற்கு மாநிலம் சமூகப் பழக்கவழக்கங்கள் மாறுபட்ட போதிலும், நாடு முழுவதற்கும் பொருந்தக்கூடிய வகையில் அனைவருக்கும் சமமான முக்கியத்துவம் கொடுத்து, நீதி வழங்கு வதற்கான நியதிகள் தொகுக்கப்பட்டன. இடைக்காலத்தில் தோன்றிய சமயவாதிகள் இறைவன் முன் மக்கள் யாவரும் சமம் என்று போதித்தார்கள். பிரிட்டிஷார் தங்கள் ஆட்சியில் சட்டத்திற்கு முன் மக்கள் யாவரும் சமம் என்று அறிவுறுத் தினர்கள். இவை இரு வேறு அடிப்படையில் சாதி அமைப்பைப் பாதித்தன. நீதிமன்றங்களின் தீர்ப்புகளும், சட்டமன்றங்களில் இயற்றப்பட்ட சட்டங்களும் சாதி அமைப்பின் சமனற்ற தன்மையை ஏற்கவில்லை. சாதிப்பஞ்சாயத்துகளின் உரிமைகள் வரையறுக்கப்பட்டன. அதிகாரக்குவிப்புடைய ஆட்சி முறை சாதிப்பஞ்சாயத்துகளை வலிமை குன்றச் செய்தது. காட்டாக, குர்யே மேற்கோளாகக் கூறிய ஒரு நீதிமன்றத் தீர்ப்பை இங்கே கூறுவோம். 1876-இல் பம்பாய் நீதிமன்றம் ஒரு தீர்ப்பு அளித்தது. சாதிப்பஞ்சாயத்துகளுக்கு ஒரு திருமணத்தை மறுக்கவோ, அல்லது ஒரு பெண் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கவோ எவ்விதமான அதிகாரமும் இல்லை. இத்தகைய அதிகாரங்களை நீதிமன்றங்கள் அங்கீகரிக்காது என்று கூறியுள்ளார்.

பிரிட்டிஷ் ஆட்சியில் மேலும் பல விளைவுகள் தோன்றின. முதலில் சாதித்தலைமை முக்கியத்துவம் குன்றியது. சாதியினர் குறிப்பிட்ட பகுதிகளில் செறிந்து காணப்பட்டவரை சாதித் தலைமையகம் செல்வாக்காக இருந்தது. மரபு அடிப்படையில் பொருளாதார நடவடிக்கைகள் இருந்தவரை சாதி அமைப்பும் செல்வாக்குடன் இயங்கி வந்தது. ஆனால், பிரிட்டிஷ் ஆட்சியில் போக்குவரத்து வசதிகள் அதிகரித்தன. மக்கள் இடம் பெயரலாயினர். நெடுந்தூரம் சென்று வருமானம் ஈட்டும் வாய்ப்புகள் அதிகரித்தன. நெடுந்தூரப் பயணத்தால் மக்களின் மனப்பான்மை விரிவடைந்தது. இதனால் சாதி அடிப்படை வலிமை குன்றியது. அடுத்து மரபான செலுத்தல்களுக்குப் பதிலாகப் பணச்செலுத்தல்கள் வலியுறுத்தப்பட்டன. இதனால் புதிய அடிப்படையில் சமூகத் தொடர்புகள் ஏற்பட்டன.

பிரிட்டிஷார் தங்கள் ஆட்சியை நிலைநாட்டுவதற்காகச் சாதி அமைப்புகளைப் பயன்படுத்திக் கொண்டார்கள். சாதி அமைப்புகள் அரசியல் கழகங்களாகச் செயல்பட்டன. இதற்குப்

பிரிட்டிஷார் ஆதரவு அளித்தார்கள். சாதி அமைப்புகள் அரசியல் அமைப்புகளாகச் செயல்படத் தொடங்கியதைச் சீனிவாஸ் பின்வருமாறு வருணித்துள்ளார்: 'குப்பியில் அடைக்கப்பட்டிருந்த பூதத்தை பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் வெளியே கொண்டுவந்துள்ளனர்' என்று கூறியுள்ளார். சாதிகளின் செல்வாக்கை அரசியல் நோக்கத்திற்காகப் பயன்படுத்தவும், அரசியலில் ஆதிக்கம் பெறச் சாதிகள் போட்டியிடுவதையும் குறிப்பிடும் வகையில் அவர் அங்ஙனம் கூறியுள்ளார். சாதியும், அரசியலும் வெவ்வேறு அடிப்படையில் அமைந்த குழுக்கள். இவை தங்கள் உறுப்பினர்களின் நலன்களைப் பாதுகாக்கும் அமைப்புகளாக உள்ளன. எனவே, சாதியும், அரசியலும் இணைக்கப்படுவதால் சமூகத்திற்குத் தீங்கு விளையும் என்று கூற முடியாது. சாதியின் பரிணாம வளர்ச்சியில் இதை ஒரு தீர்ப்பு மையமாகக் கருதவேண்டும்.

பிரிட்டிஷார் ஆட்சிக்காலத்தில் பொருளாதாரத் துறையிலும் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டது. இதற்கு முன்பு தன்னிறைவு பெற்று இருந்த கிராம சமுதாயங்கள் அழிக்கப்பட்டன. வாணிபம் அதிகரித்தது. மரபான கைவினைத் தொழில்கள் நலிவுற்றன. புதிய நகரங்கள், தொழில் முறைகள், தொழில் அமைப்புகள் தோன்றின. இக்காரணிகளின் கூட்டு விளைவாகச் சாதித்தொழில்கள் என்று கருதப்பட்டவை முக்கியத்துவம் இழந்தன. மரபான தொழில்கள்—முக்கியமாக வருமான வாய்ப்புகளை அதிகரிக்காத தொழில்கள்—முக்கியத்துவம் குன்றின. சாதிகளுக்கு இடையே தொழில் பெயர்ச்சி ஏற்பட்டது. புதிய தொழில்கள்—கூடுதலான வருமானம் நல்கக்கூடிய தொழில்கள்—தோன்றின. எனவே, புதிய திறன்களை வளர்த்துக் கொள்ள விரும்பினர்கள். புதிய தொழில்கள், புதிய திறன்களையும் புதிய அமைப்புகளையும் தோற்றுவித்தன. மரபான தொழில்களைக் கைவிட்டதாலும், புதிய தொழில்களை மேற்கொண்டதாலும் சாதி அமைப்பு சீர் குலைந்தது என்று எண்ணுவது தவறு. சாதி உணர்வும், சாதிப்பற்றுதலும் பொருளாதார நடவடிக்கைகளால் கட்டுப்படுத்தப்படவில்லை.

சாதிகளுக்கு இடையே உள்ள பொருளாதாரத் தொடர்புகள் முக்கியமானதாக இருந்த போதிலும் அவை முதன்மையாக இல்லை. புதிய பொருளாதார வாய்ப்புகள் சாதியினரின் நலன்களை மேம்படுத்தும் சாதனங்களாகச் செயல்பட்டன. சாதிப் பிணைப்பின் அடிப்படையில் புதிய வகையில் சலுகைகள் வழங்குகின்றர்கள். எனவே, பரம்பரையான தொழில்களை விட்டு விட்ட

தால் சாதிக் கட்டுக்கோப்புத் தளர்ந்து விடவில்லை. அதற்குப் பதிலாக மேலும் புதிய பிணைப்புகள் ஏற்பட்டதால் சாதி அமைப்பு வலிமை பெற்றுள்ளது. இதை கௌல்ட் என்பவர் பின்வருமாறு கூறியுள்ளார்: தொழில் வளர்ச்சியால் தோன்றும் மாற்றங்கள் பாரம்பரியமாக உள்ள தொழிற்பயிற்சி, தொழிற்பகிர்வு முறை ஆகியவற்றை மாற்றி அமைக்கின்றன. இருந்த போதிலும் சாதிமுறை தொடர்ந்து நீடிக்கக்கூடும். அதிகாரவர்க்க ஆட்சி உடைய சமூகத்தில் சாதி அடிப்படையில் ஏற்படும் தனி உறவுகள் தொடர்ந்து நீடிக்கின்றன. உறவினர்களுக்குச் சலுகைகள் வழங்கும் முறையில் சாதியினும் மேம்பட்ட ஒரு முறையைக் காண்பது அரிது.

மரபாக உள்ள சாதி முறையில் தொழில் சிறப்புப் பயிற்சி வலியுறுத்தப்பட்டது. இவை இரண்டும் பாரம்பரியமாக இருந்ததால் பிரித்து அறியமுடியாதவையாக இருந்தன. இன்றைய நிலை அவ்வாறு இல்லை.

அதைப்போலவே முற்காலத்தில் மதச்சடங்குகளின் அடிப்படையில் இயங்கிய முக்கியமான சமூகப்பிரிவாகச் சாதிமுறை கருதப்பட்டது. ஆனால், இன்று அவ்வாறு கருதப்படவில்லை. இன்றைய சமூகத்தில் அரசியலின் ஒருகூறாகச் சாதி விளங்குகிறது. சாதித்தடைகள், கட்டுப்பாடுகள் இன்னும் பல கிராமங்களில் நிலவுகின்றன. சாதிப் பஞ்சாயத்துகளும் சில இடங்களில் உள்ளன. ஆனால், அவற்றின் முக்கியத்துவம் மிகவும் குறைந்துவிட்டன. இவற்றையெல்லாம்விட சாதிக்குள் அமைந்த அகமண முறை இன்னும் பின்பற்றப்படுகிறது. இந்த முறை சாதி அமைப்புகள் மக்களின் இடப்பெயர்ச்சியால் சிதைவுறாமல் பாதுகாக்கின்றது. இவர்கள் கிராமங்களில் இருந்தாலும், நகரங்களில் அல்லது பெரிய பட்டணங்களில் இருந்தாலும் சாதி அமைப்பு அடிப்படையில் பெண் கொள்ளும் வரை அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் அந்தச் சாதியினராகவே இருப்பார்கள். இவர்கள் எந்தத் தொழிலை மேற்கொண்டாலும், யாருடன் உணவு அருந்தினாலும், யாருடன் பழகினாலும், அவர்களுடைய சாதியை அவை பாதிக்கவில்லை. அவ்வப்போது சாதியின் வளர்ச்சிப் பாதையில் சில திருப்பங்கள் ஏற்பட்டன என்றாலும், அவை இன்று வரை நசுக்கப்படவில்லை.

# 3. கிராம சமுதாயம்

கிராமங்கள் நெடுங்காலமாக இந்திய சமுதாய அமைப்பின் முதுகெலும்பாக விளங்குகின்றன. தற்காலத்தில் சராசரியாக ஐவரில் நால்வர் கிராமவாசிகள்.[1] பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் கிராமங்கள் மேலும் செல்வாக்கான நிலையில் இருந்தன. அக்காலத்தில் சராசரியாகப் பத்தில் ஒன்பது பேர்கள் கிராமவாசிகளாக இருந்தனர்.[2] கிராம சமுதாயம் நாடெங்கிலும் பரவலாக உள்ளது. அஸ்ஸாம் மாநிலம், வங்கமாநிலத்தின் கிழக்குப்பகுதிகள் நீங்கலாக உள்ள ஏனைய பகுதிகள் அனைத்திலும் கிராம சமுதாய அமைப்பு பொதுவாகக் காணப்பட்டது.[3] கிட்டத்தட்ட இந்தியா முழுவதிலும் கிராம சமுதாயம் பரவி இருப்பதாலும், இங்கே பெரும்பான்மையான மக்கள் வசிப்பதாலும் கிராமங்கள் இந்தியாவின் பொருளாதார வரலாற்றிலும் வளர்ச்சியிலும் முக்கிய இடம் பெற்றுள்ளன.

கிராம சமுதாயங்களின் அமைப்பும், மக்களின் வாழ்க்கை முறையும் அக்காலத்தின் நிறுவன அமைப்புகளைப் பிரதிபலிப்பதுடன், அவை நாட்டில் நிலவும் அரசியல், பொருளாதார, சமூக மாற்றங்களையும் எடுத்துக்காட்டுகின்றன. அநேகமாக வேளாண்மை கிராம வாழ்க்கையில் முக்கிய தொழிலாகும். உலகெங்கிலும் உள்ள கிராம அமைப்பும், கிராம வாழ்க்கையும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாக இருந்துள்ளன. காட்டாக, ஆயிரம்

[1] A. J. Coale and E. M. Hoover-Population and Economic Development in Low-Income Countries-Rincetow, 1958, P. 133.

[2] பார்க்கவும், D. R. Gadgil, The Industrial Evolution of India, Oxford, (1946) P. 9.

[3] D. R. Gadgil-முன் கூறியபடி பக். 9.

ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியாவிலும், ஐரோப்பாவிலும் நிலவிய கிராம சமுதாய அமைப்புகளில் எவ்வித வேறுபாடும் இல்லை. ஆனால், அதன் பின்னர் ஐரோப்பிய நாடுகளில் அரசியல், பொருளாதார, சமூக வாழ்க்கையில் புரட்சிகரமான மாற்றங்கள் ஏற்பட்டன. இவற்றிற்கு ஏற்ப ஐரோப்பிய கிராம சமுதாயங்களும் மாற்றம் அடைந்தன. அங்குக் கிராம சமுதாயத்தின் அழிவிற்குப் படைமானிய—நில அடிமை — பண்ணை முறை காரணமாக இருந்தது.[4]

ஐரோப்பாவில் படைமானியமுறை தோன்றுவதற்கு அங்கு நிலவிய சமூக அமைப்பு (முக்கியமாகச் சொத்து உரிமைகள்) ஒரு சிறப்புக்காரணமாகும். அதைப்போன்ற சமூக அமைப்பு இந்தியாவில் இல்லாத காரணத்தால் இங்கே கிராம சமுதாயம் அழியாமலும், படைமானியமுறை தோன்றுமலும் இருந்தன.

போரில் வாகைசூடிய ஐரோப்பிய மன்னர்களுக்கு அவர்கள் வென்ற நிலப்பகுதிகள் அனைத்தும் உடைமையாகிவிடும். அவர் தன்னுடைய வெற்றிக்கு உதவிய தளபதிகளுக்கும், மாவீரர் களுக்கும் வென்ற நிலப்பகுதிகளை வெகுமதியாகக் கொடுத்தனர். இவ்வாறு நிலப்பிரபுக்கள் தோன்றினுர்கள். நிலப்பிரபுக்கள் அரசருக்குக் கடமைப்பட்டவர்கள். முக்கியமாகப் போர் ஏற்படும் காலங்களில் அரசர்களுக்குப் படை திரட்டித்தந்து உதவி செய்வார்கள்.

இதைப்போன்ற சூழ்நிலை (சமூக அமைப்பு) இந்தியாவில் காணப்படவில்லை. போரில் வென்றவர்களுக்கு நிலம் சொந்த உடைமை ஆகாத காரணத்தால் நிலப்பிரபுத்துவம் தோன்ற முடியவில்லை. இந்தியாவில் நிலம் சமுதாயத்தைச் சேர்ந்தது. அரசிற்கு வரி அல்லது வாரத்தைச் செலுத்தும்வரை ஒருவரை நிலத்திலிருந்து வெளியேற்ற முடியாது. நிலத்தை விற்பதோ, வாங்குவதோ, அடமானம் வைப்பதோ, இதர வகைகளில் உடைமை மாற்றம் செய்வதோ இயலாத காரியம். தனிநபர் களுக்குப் பராதீனம் செய்யக்கூடிய உரிமை வழங்கப்படவில்லை. விவசாயிகள் தங்களிடம் உள்ள நிலத்தைத் தங்க வைத்துக் கொள்ளுவதற்காக வரி அல்லது வாரம் செலுத்தத் தயாராக இருந்தார்கள். வரியை வசூலிப்பவர் யார் என்று இவர்கள் கவலைப்படவில்லை. மன்னர்கள் போரில் வெற்றி அடைந்தாலும்,

4 பார்க்கவும். B. M. Bhatia, Diseitegration of Village Communities in India, from Readings in Indian Economic History. (Ed) B. N. Ganguli, (Asia) 1964. P. 89-90.

தோல்வி அடைந்தாலும் மக்களின் கிராமிய வாழ்க்கை இதனால் மாற்றம் அடையவில்லை.

பதினெட்டாவது, பத்தொன்பதாவது நூற்றாண்டுகளில் படைமானிய முறையும் ஐரோப்பாவில் அழிந்தது. இதற்குத் தொழில், வணிகப்புரட்சிகள் காரணமாக இருந்தன. இயற்கையாகத் தோன்றிய சில நிகழ்ச்சிகளும் இதற்குத் துணையாக இருந்தன. கடுங்கொள்ளை நோயால் எண்ணிறந்த மக்கள் மடிந்தனர். உழைப்பு கிடைப்பதருமையாகியது. இதனால் நிலஅடிமை முறை ஆட்டம் கண்டது. வாரத்திற்குப் பதிலாக உழைப்பை நல்கவேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியவில்லை. அன்றைய ஐரோப்பிய சமுதாயத்தில் தனி ஒருவருக்குக் கௌரவம் அல்லது சமூக அந்தஸ்து செல்வத்தின் அடிப்படையில் வழங்கப்படவில்லை. இது நிலவுடைமையின் அடிப்படையில் மட்டுமே வழங்கப்பட்டது. ஆகையால் வாணிப வளர்ச்சியால் செல்வம் திரட்டியவர்கள் நிலத்தை வாங்கினார்கள். இவர்கள் நிலஅடிமைகளை வைத்துக்கொள்ள விரும்பவில்லை. இவ்வாறு வணிகப்புரட்சியும், அதைத் தொடர்ந்து ஏற்பட்ட தொழில்புரட்சியும் கிராமங்களில் நிலவிய படைமானிய நில அடிமை முறைக்கு முற்றுப்புள்ளி வைத்தன.

ஐரோப்பாவில் ஏற்பட்டதைப் போன்ற மாற்றங்கள் இந்தியாவில் ஏற்படவில்லை. இதனால் கிராம சமுதாயம் நெடுங் காலமாக நீடித்து வந்தது. கிட்டத்தட்ட 18-வது நூற்றாண்டின் இறுதிவரை அதிக அளவுக்கு (அடிப்படையான) மாற்றங்கள் இன்றிக் கிராம சமுதாயம் நிலையாக இருந்தது.

தனி நபர்களுக்குச் சொத்துரிமை வழங்குதல் பிரிட்டிஷ் ஆட்சியின் வரப்பிரசாதமாகும். நிலம் அல்லது சொத்துகள் யாவும் குடும்பத்தின் உடைமையாகவே கருதப்பட்டன. இவற்றை விற்றல், வாங்குதல் முதலியன இயலாத காரியம். இந்தியாவின் மக்கள்தொகை 19-வது நூற்றாண்டுவரை மிகவும் குறைவாக இருந்தது. மக்கள் தொகையைவிட அதிக அளவுக்கு நிலப்பரப்பு இருந்தது. யார் வேண்டுமானாலும் இயன்ற அளவுக்குச் சாகுபடி செய்யலாம். அரசுக்கு வாரம் அல்லது வரி செலுத்துவது மட்டுமே இதன் முன் நிபந்தனையாக இருந்தது. ஒரு குடும்பத்தில் எந்த அளவுக்கு அதிக நபர்கள் இருக்கிறார்களோ அந்த அளவுக்கு அதிக நிலத்தைச் சாகுபடி செய்யமுடியும் (ஏககுடும்பங்கள் நீடிப்பதற்கு இது ஒரு முக்கிய காரணமாக இருந்திருக்கலாம்). விவசாய நுண்முறையில் குறிப்பிடத்தக்க

முன்னேற்றம் ஏற்படாதவரை உழைப்பின் கிடைப்பருமையை அடிப்படையாகக்கொண்டு சாகுபடி நிலத்தின் பரப்பளவு நிர்ணயிக்கப்பட்டது.

### தன்னிறைவு பெற்ற கிராமங்கள்

பத்தொன்பதாவது நூற்றுண்டில் கிராமங்கள் யாவும் தன்னிறைவு பெற்ற சமுதாய அமைப்புகளாக இருந்தன. தன்னிறைவு பெற்ற சமுதாய வாழ்க்கைக்கு மூலகாரணமாக இருந்த காரணிகளையும், அவை நீடித்து இருப்பதற்கு ஏதுவாக இருந்த காரணிகளையும் இப்பகுதியில் காண்போம்.

போக்குவரத்து வசதிகள் கிட்டத்தட்ட இல்லை என்று சொல்லுமளவுக்கு இருந்தன. இதனுல் மக்கள் இடம் பெயருவதும், பொருள்களை எடுத்துச் செல்வதும் இயலாத காரியம். அக்காலத்தில் நெடுந்தூரத்திற்கு விற்பனைக்காக எடுத்துச்சென்ற பொருள்களில் துணி, உப்பு ஆகிய இரண்டையும் குறிப்பிட வேண்டும். படகுகளைச் செலுத்தக்கூடிய கால்வாய்கள், ஆறுகள் போக்குவரத்து முக்கியத்துவம் பெற்று இருந்தன. முக்கிய நகரங்களுக்குத் தேவையான பொருள்களை எடுத்துச்செல்ல இவை பயன்பட்டன. ஆனுல்,பெரும்பாலான கிராமங்கள் எவ்வித போக்குவரத்து வசதியும் இல்லாமல் தனித்து இருந்தன. இவர்கள் தங்களுடைய தேவைகளைத் தாங்களே நிறைவேற்றிக் கொண்டார்கள். வெளி உலகத்துடன் தொடர்பு கொள்ள இயலாமையால் தன்னிறைவு பெற்ற சமுதாயங்களாகக் கிராமங்கள் விளங்கின.

போக்குவரத்து வசதிகள் எந்த அளவுக்குக் குறைந்து உள்ளனவோ அதைப்போலவே மக்களின் தேவைகளும் மிகச் சிலவாக இருந்தன. கிராம மக்களின் எளிய வாழ்க்கை காரணமாக அவர்களுடைய தேவைகள் குறைவாகவும், உள்ளூரிலேயே பூர்த்தி செய்யக்கூடியதாகவும் இருந்தன. எளிய வாழ்க்கையில் பல தலைமுறைகளாகப் பழகிவிட்டதால் போக்கு வரத்து வசதிகள் இல்லாமல் இருப்பதை ஒரு குறையாக அவர்கள் நினைக்கவில்லை. எளிய வாழ்க்கை அவர்களிடம் எவ்வித மனக் குறையையும் ஏற்படுத்தவில்லை.

எளிய வாழ்க்கையில் அவர்கள் மனநிறைவுடன் வாழ்ந்தார்கள் என்பதை மீண்டும் வலியுறுத்தவேண்டும். கிராம மக்களின் வாழ்க்கைத் தேவைகள் பலவாகவும், பெருகிச் செல்லக் கூடியதாகவும் இருந்திருக்குமேயானுல், எளிமையான

வாழ்க்கை மனக்கசப்பை ஏற்படுத்தி இருக்கும். வசதியான வாழ்க்கையை அக்கால மக்கள் அடையமுடியுமா என்பதை நாம் ஆராயவில்லை. தாங்கள் இன்னும் வசதியுடன் வாழமுடியும் என்று மக்கள் நம்புவர்களேயானால், அது மனக்குறையை ஏற்படுத்தியிருக்கும். மனக்குறை காரணமாகக் கிராம சமுதாயத்தின் கட்டமைப்பு தகர்த்து எறியப்பட்டிருக்கும். ஆனால், 19-வது நூற்றுண்டுவரை கிராமவாசிகள் தங்கள் எளிய வாழ்க்கையை ஒரு குறையாக நினைக்கவில்லை. ஆகையால், கிராம சமுதாயத்தின் கட்டுக்கோப்பு குன்றாமல் நீடித்து வந்தது.

கிராம மக்களின் எளிய வாழ்க்கை 19-வது நூற்றுண்டின் இறுதிவரையிலும் நீடித்து வந்துள்ள விவரத்தை மக்கள் தொகைக் கணிப்பு ஆணையாளர் (1881-இல்) குறிப்பிட்டுள்ளார்.[5] அவர் ஒரு பஞ்சாப் கிராமத்தை விவரித்துள்ளார்.

> கிராம மக்களின் தேவை மிக எளியவை. அவர்கள் தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள் அனைத்தையும் தாங்களே உற்பத்தி செய்துகொண்டார்கள். உணவுப் பொருள்கள், உற்பத்திச் சாதனங்கள், கருவிகள், வீட்டுச் சாமான்கள் முதலியன கிராமத்திலேயே உற்பத்தி செய்யப்பட்டன. கிராமந் தோறும் மருத்துவர் இல்லை. ஆனால், அர்ச்சகர் கட்டாயமாக இருந்தார். வெளி உலகத்தில் உற்பத்தியான பொருள்களில் உப்பு, வாசனைப் பொருள்கள், மிக மெல்லிய துணி மணிகள் முதலியவற்றை வாங்கினர்கள். பிரிட்டிஷ் ஆட்சியில் வரித் தொகையைப் பணமாகச் செலுத்த வேண்டியிருந்ததால் பணத்தைச் சம்பாதிப்பதற்காக வெளி உலகத்துடன் அதிகம் தொடர்பு கொண்டார்கள்.

மேலே கூறிய பஞ்சாப் கிராமத்தைப் போலவே இந்தியா முழுவதிலும் கிராம வாழ்க்கை இருந்து வந்தது. வரித் தொகையைப் பணமாகச் செலுத்தாமல், வாரமாகவும், விளை பொருளாகவும் செலுத்திய காலத்தில் வெளி உலகத் தொடர்பு இன்னும் குறைந்த அளவில் இருந்திருக்கும் என்பதை ஊகித்தறியலாம்.

இந்தியக் கிராமங்களை 'தாஸ் காப்பிடல்' என்ற நூலில் கார்ல் மார்க்ஸ்[6] விவரித்துள்ளார். வர்க்கப் பிளவுகள் இல்லாததும்,

[5] பார்க்கவும் D. R. காட்கில், முன்கூறியபடி பக். 10.

[6] Karl Marx, Capital-Vol. I (Moscow) 1954, p. 357-58.

சுரண்டல் தன்மை இல்லாததுமான பொதுஉடைமைச் சமுதாயங்களாகக் கிராம சமுதாயங்கள் விளங்கின.

மிகவும் புராதனமான கிராம சமுதாயங்களில் சில 19–வது நூற்றாண்டு வரை நீடித்து வந்துள்ளன. நிலம் அனைவரின் பொதுஉடைமையாக இருந்தது. வேளாண்மையும், தொழில்களும் முக்கியமானவை. தொழிற் பகுப்பு சிறந்த முறையில் நடைபெற்றது. இவை காலத்தில் மாறுபடவில்லை. கிராமத்தின் நிலப்பரப்பு குறைந்தது 100 ஏக்கர் ஆகவும், அதிகபட்சம் 1000–க்கும் அதிகமான ஏக்கர் ஆகவும் இருந்தது.

ஒவ்வொரு கிராம சமுதாயமும் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளும் முழுமை பெற்ற அமைப்பாக விளங்கி வந்தன. பெரும்பாலான தேவைகளைத் தாங்களே பூர்த்தி செய்து கொண்டார்கள், விற்பனை செய்யும் நோக்கத்தோடு பண்டங்கள் உற்பத்தி செய்யப்படவில்லை. தங்களுடைய தேவைக்காகவே உற்பத்தி செய்தார்கள். உற்பத்தியில் சுயதேவை போக எஞ்சிய பகுதியை விற்க முயன்றார்கள். அவ்வாறு விற்பதற்கு முன்னர் அரசிற்கு வரி செலுத்த வேண்டும்.

இந்தியாவின் ஒவ்வொரு பகுதிகளிலும் சமுதாய அமைப்பு ஒருவிதமாக இருந்தது. மிகவும் எளிய முறையில் அமைந்துள்ள சமுதாயங்களில் நிலம் பொதுவாகப் பயிரிடப்பட்டது. உற்பத்தியை மக்கள் அனைவரும் பகிர்ந்துகொண்டார்கள். கிராம மக்கள் அனைவருக்கும் உழவுத்தொழில் முக்கியமாக இருந்தாலும் நூல் நூற்றல், நெசவு செய்தல் முதலியன துணைத் தொழில்களாக இருந்தன. மேலே கூறிய தொழில்கள் பொதுவாக இருந்தன. இதைத் தவிரச் சிலர் சிறப்புப் பணிகளைச் செய்து வந்தார்கள். இவர்களில் முதன்மையானவர் நீதிபதியாகவும், காவலராகவும், வரி வசூல் செய்பவராகவும் (மணியக்காரர்) இருந்தார். இவருக்கு அடுத்து பயிர்த்தொழில் கணக்குகளைப் பதிவுசெய்து வைத்திருப்பவர் கர்ணம். மூன்றாவதாக உள்ளவர் தலையாரி. இவர் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கவும், அவர்களின்மேல் வழக்குத் தொடரவும் செய்வார். வெளியூரிலிருந்து வந்துள்ள பிரயாணிகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் பாதுகாப்பு அளிப்பதும் இவரது கடமையாகும். அடுத்து

> கிராமத்தின் எல்லைகளைக் காவல்புரிபவர் தோட்டி அல்லது வெட்டியான்; பாசனத்திற்கு நீரைப் பகிர்ந்து அளிப்பவர் நீராணிக்கன்; சமயச் சடங்குகளைச் செய்விக்கும் பிராமணர்கள்; உழவு காரியங்களுக்கு நல்ல நாள் பார்த்துச் சொல்லும் பஞ்சாங்கப் பிராமணர்கள் அல்லது சோதிடர்கள் முதலியோர் இருந்தனர். கிராமங்களில் மேலும் பலர் இருந்தனர். கருமான், கொல்லன், தச்சன், குயவன், நாவிதன், வண்ணான், பத்தன், ஆசிரியர் முதலியோர் கிராம ஊழியர்கள். இவர்கள் அனைவரும் கிராம சமுதாயத்தின் பொதுவான செலவில் பராமரிக்கப்பட்டார்கள்.

இந்தியக் கிராம சமுதாயம் மாற்றம் இல்லாமல் நீடித்து நிலைத்திருப்பதற்குத் தொழிற் பகுப்புமுறை முக்கியமான காரணி என மார்க்ஸ் குறிப்பிடுகிறார். தொழிற் பகுப்புமுறை எளிதாகவும் இயற்கையின் விதியைப் போல ஆதிக்கம் உடையதாகவும் இருந்தது. இதனால் தொழில் முறைகள் மாறாமலும் சமுதாயத் தொடர்புகள் நிலைத்தும் வந்துள்ளன என்று கூறுகிறார்.

கிராமம் என்பது சமூக வாழ்க்கைக்கு அடிப்படையாக உள்ள ஓர் அமைப்பு முறையாகும். கிராமங்கள் நெடுங்காலமாக இருப்பதாலும் கிராம சமுதாயங்களில் குறிப்பிடத்தக்க மாறுதல் தோன்றாமையாலும் மக்களின் சமூக வாழ்க்கை தேக்கமடைந்து இருப்பதாக நினைப்பது தவறு.

'இந்துக்களின் எளிய உடையும், குடிசையும், விவசாயக் கருவிகளும் கிட்டத்தட்ட ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததைப் போலவே இன்றும் இருக்கின்றன. இப்போதுள்ளதைப் போன்ற சூழ்நிலை தொடர்ந்து நீடிக்குமானால் எதிர்காலத்திலும் இவர்களது வாழ்க்கை எவ்வித சலனமும் இல்லாது நீடிக்கும்' என்று டெ(ன்)னன்ட் என்ற ஆங்கிலேயர்[7] கூறுகிறார்.

சமூக அமைப்பு முறை மாறவில்லை என்பதும், சமூக வாழ்க்கை மாறவில்லை என்பதும் வெவ்வேறானவை. அமைப்பு முறை மட்டிலுமே மாறாது இருந்துள்ளது என்ற காரணத்தால் வாழ்க்கையில் எவ்வித மாறுபாடும் இல்லை என்று கூறமுடியாது. கிராம சமுதாயத்தில் சிறு மாறுதல்கள் ஏற்பட்டவண்ணம் இருந்தன. புதிய பிரச்சினைகளுக்குக் கிராம அமைப்பு முறையில்

[7] Quoted by Saruda Raju, A., Economic Conditions in the Madras Presidency, 1800-1850.-Ph-D. thesis, published by University of Madras, 1941, p. xiii

எளிதாகத் தீர்வு காணமுடிந்தது. பிரச்சினைகள் தீர்க்கக் கூடியதாக இருந்ததாலும், அதற்கு அமைப்பு முறை இடம் கொடுத்ததாலும் கிராம சமுதாயங்கள் தொடர்ந்து நிலைபெற்று வந்துள்ளன.

மாற்றம் என்பது வளர்ச்சியின் மறுபெயராகும். மாறுதல் இல்லாத சமூகம் தேக்கமுற்றுத் தேய்ந்து விடும். இந்தியாவில் அரசியல் மாற்றங்களும் இயற்கை உற்பாதங்களும் ஏற்பட்டுள்ளன. வெளியுலக நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப அவ்வப் போது சமூக வாழ்க்கையிலும் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. கிராம சமூக வாழ்க்கையில் முக்கியமாக நில உரிமையை எடுத்துக்கொள்ளலாம். பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படும் முன்னர் கிராம வாழ்க்கையில் கூட்டு உரிமையும் பொறுப்பும் நிலவின என்றும், சில கிராமங்களில் தனித்தனி உரிமைகள் நிலவின என்றும் கூறுகிறார்கள். இவற்றை முறையே கூட்டுக்கிராமங்கள் என்றும், இரயத்துவாரி அல்லது பன்மைக் கிராமங்கள் [8] என்றும் அழைப்பார்கள். இவை கிராம சமூகத்தின் ஓரினத்தன்மைக்கு எதிர்மறையாக இருக்கின்றன. இதிலிருந்து கிராம சமுதாயம் மாற்றங்களை வரவேற்று, அதற்கு ஈடுகொடுத்து வந்தன என்பதும், அதனால்தான் அவை அழியாமல் நீடித்து வந்துள்ளன என்பதும் தெளிவாகும்.

கிராம அமைப்பு முறை நெகிழ்வுடையதாக இயல்பாகவே அமைந்துவிட்டது. கிராமப் பஞ்சாயத்துகள் இந்தியா முழுவதிலும் தலைசிறந்து விளங்கின. பஞ்சாயத்துகளில் பேரவைக் கூட்டங்கள் ஆண்டுக்கு ஒருமுறை நடைபெறும். இவை கிரேக்க நாட்டு நகரக் குடியரசுகளைப் போல இருந்தன. பஞ்சாயத்துக் கூட்டங்களில் தங்களை எதிர்நோக்கிய பிரச்சினைகளை மக்கள் விவாதிப்பார்கள். விவாதத்திற்குரிய பிரச்சினைகள் அவர்களது வாழ்க்கையோடு ஒன்றிய பிரச்சினைகள். இவற்றிக்குக் கிராமமக்களே தீர்வு கண்டார்கள். கிராம சமுதாயத்தின் பொதுவான நலன்களைக் கருத்தில் கொண்டு பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டார்கள். மக்கள் தங்களை எதிர்நோக்கிய பிரச்சினைகளை விவாதித்து, ஒருமித்த வகையில் தீர்வுகாணும் வாய்ப்பு பஞ்சாயத்து முறையால் ஏற்பட்டது. மக்களிடையே ஒற்றுமையும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் இருந்தன. கிராம சமுதாயங்கள் அழிவின்றித்

[8] பார்க்கவும் V. B. Singh-Village Community, Economic History of India, 1857-1956. Allied publishers (1965), p. 89.

தொடர்ந்து செயல்படுவதற்கு அங்கே நிலவிய மக்கள் ஆட்சி முறையும், கிராமப் பஞ்சாயத்துகளும் முக்கியமானவையாகும்.

பத்தொன்பதாவது நூற்றுண்டில் இந்தியா முழுவதிலும் உள்ள கிராமங்கள் ஓரினத்தன்மையுடன் விளங்கவில்லை. மகமதியர்கள், மராத்தியர்கள், பிந்தாரிகள் ஆகியோரின் படையெடுப்புகள் காரணமாக இந்தியாவின் மத்திய பகுதிகளிலும் மேற்குப் பகுதிகளிலும் கிராம அமைப்புகள் அழிந்துவிட்டன.[9] இதைப் போன்ற படையெடுப்புகள் தமிழ்நாட்டில் அதிகம் இல்லை.

அனைத்து இந்திய ரீதியில் ஆராயும்போது ஏனைய மாநிலங்களில் உள்ளதைவிடத் தமிழ்நாட்டில் கிராம சமுதாயங்கள் கட்டுக்குலையாமல், கால வெள்ளத்தால் சீரெழில் குன்றுமல் விளங்கி வந்துள்ளன எனலாம். கிழக்கு இந்தியக் கம்பெனியின் ஆட்சி தொடங்கும்வரை கிராம நிருவாகமும், கிராம சமுதாயமும் உயிருள்ள அமைப்புகளாகச் செயல்பட்டு வந்துள்ளன. எனவே, தமிழ்நாட்டில் 19-வது நூற்றுண்டில் நிலவிய கிராம சமுதாயத்தைத் தெரிந்துகொள்ளுவதன் வாயிலாக ஒரு காலத்தில் இந்தியா முழுவதிலும் நிலவிய அமைப்பு முறையை நாம் ஊகித்து அறியமுடியும்.

கிராமங்களின் மக்கள் தொகையும், பரப்பளவும் ஒரு சீராக இல்லை. சிலவற்றைக் கிராமம் என்று கூறுவதைவிட (குப்பம்) பட்டி என்று கூறுவது பொருத்தமாக இருக்கும். அங்கு ஒரு வீடும் சில குடிசைகளும் இருந்தன.[10] அங்கு ஐந்து பேரிலிருந்து 50 பேர் வரை வசித்தார்கள். குறைந்த அளவு நிலப்பரப்பு சுமார் 100 ஏக்கர் இருக்கும். இன்னும் சில கிராமங்கள் மிகப் பெரியவை. அங்கு மக்கள் தொகை ஆயிரத்திலிருந்து இரண்டாயிரம் வரை இருக்கும். இவ்வாறு அளவிலும் மக்கள் தொகையிலும் வேறுபட்ட கிராமங்கள் இருந்தன. சராசரியாக ஒரு கிராமத்தில் **100** முதல் **200** வரை வீடுகள் இருந்தன. மக்கள்தொகை **500**-லிருந்து **1000** வரை இருக்கும் என்று சாரதா ராஜு கூறுகிருர்.

பெரும்பாலும் ஆங்கில ஆளுநர்களின் குறிப்புகள், நாளேடுகள், கடிதங்கள் முதலியவற்றைக் கொண்டு இந்த முடிவுக்கு அவர் வந்திருக்கலாம். ஒரு வீட்டில் சராசரியாக ஐந்து நபர்கள் இருந்தார்கள் என்று கணக்கிடுவது 20-வது

[9] பார்க்கவும் (V. B. Singh) முன்கூறியபடி பக். 90.

[10] பார்க்கவும் (Sarada Raju, A.), முன்கூறியபடி பக். 13.

நூற்றுண்டில் உள்ள இன்றைய சமூக அமைப்பிற்குப் பொருந்தக் கூடிய உண்மையாக இருக்கலாம். ஆனால், ஏகக்குடும்பம் சிறப்பாக விளங்கிய பதினெட்டாவது, பத்தொன்பதாவது நூற்றுண்டுகளில் நிலவிய சூழ்நிலைக்கு இது கட்டாயமாகப் பொருந்தாது. போர்கள், பஞ்சங்கள் முதலியன ஏற்பட்ட போதிலும் ஏகக்குடும்ப அமைப்பில் வீட்டிற்கு ஐந்து பேர்கள் மட்டும் இருந்தார்கள் என்று கணக்கிடுவது குறைந்த மதிப்பீடாகவே இருக்கும்.[11]

பத்தொன்பதாம்-நூற்றுண்டின் துவக்கத்தில் கிராமங்களில் ஊர்காவல் ஏற்பாடுகள் சிறப்பாக இருந்தன. கிராமக்காவலுக்கு வெட்டியான் என்ற ஆள் காவல் ஏற்பாடு செய்து இருந்ததை முன்னர் கூறியுள்ளோம். கொங்குநாட்டுக் கிராமங்களில் மக்கள் தங்களைப் பன்னிரண்டு பிரிவாகப் பிரித்துக்கொண்டனர். ஒவ்வொரு பிரிவினரும் ஒவ்வொரு மாதத்திற்கு ஊர்காவல் ஏற்பாட்டிற்குப் பொறுப்பு ஏற்கவேண்டும்.

சென்ற நூற்றுண்டின் துவக்கத்தில் நாடுமுழுவதும் பிரயாணம் செய்த **புச்சானன்** என்ற ஆங்கில உயர் அதிகாரியின் குறிப்பிலிருந்தும், இதர ஆதாரங்களிலிருந்தும் கிராமங்கள் ஒவ்வொன்றைச் சுற்றிலும் மதில் சுவர்கள், கோட்டைகள் எழுப்பப்பட்டு இருந்தன என்று தெரிகிறது. ஐந்து அல்லது ஆறு விடுகளைக் கொண்ட சிறு சிறு குப்பங்களிலும் மதில் சுவர்கள் எழுப்பப்பட்டு இருந்தன.

கிழக்கு இந்தியக் கம்பெனியின் ஆட்சி ஏற்படும் முன்னரும், மேற்படி ஆட்சி ஏற்பட்ட ஆரம்ப காலத்திலும் நாட்டின் அரசியல் நிலைமை கொந்தளிப்புடன் இருந்தது. இதைத் தொடர்ந்து நாடெங்கிலும் சட்ட அமைதி ஓரளவு சீர்குலைந்து இருந்தது. இந்தக் காலத்தில் கிராமமக்கள் தங்கள் உடைமை களையும், தங்களையும் தகுந்த முறையில் பாதுகாத்துக் கொள்ளு வதற்காகச் சுவர்களை எழுப்பி இருப்பார்கள். கிராம மக்கள் தங்களை எதிர்நோக்கிய புதிய புதிய பிரச்சினைகளுக்கு எங்ஙனம் தீர்வு காண்கிறுர் அவர் என்பதற்கான விளக்கமாக இதைக் காண வேண்டும். கிராம மக்களின் பாதுகாப்பு குறிப்பிட்ட

[11] டாக்டர் சாரதாராஜு அவர்கள் போர், பஞ்சம் முதலியன காரணமாக மக்கள் தொகை குறைந்து இருக்கும் என்றும், எனவே வீட்டிற்கு 4 அல்லது 5 பேர் என்ற மதிப்பீடு சரியாக இருக்கும் என்றும் (பக்.18)-கூறிய போதிலும், மக்கள் தொகையை அவர் விவாதிக்கும் போதும் (பக். 257) ஏகக்குடும்பம் நிலவிய காலத்தில் வீட்டிற்கு ஐவர் என்று கணக்கிடுவது குறைந்த (குறையுடைய) மதிப்பீடாக இருக்கும் என்று கூறுகிறுர்.

ஒன்று அல்லது இரண்டு முறையினரை எதிர்நோக்கிய சிறப்பான பிரச்சினையாகும். பன்னெடுங்காலமாகக் கிராம மக்கள் பாதுகாப்பு இன்றி வாழ்ந்தார்கள் என்று முடிவு செய்வதற்கு இடமில்லை. பிரிட்டிஷ் ஆட்சியின் வாயிலாகச் சட்ட அமைதி நிலைமை மீண்டும் ஏற்பட்டவுடன் இவை அவசியமில்லாமல் போய் விட்டன. ஆகையால் 19-வது நூற்றாண்டின் பிற்பகுதிகளில் இத்தகைய மதில்சுவர்களைக் காண முடியவில்லை.

**கிராம ஊழியர்கள்**

கிராம ஊழியர்களில் முக்கியமானவர் **நாட்டாண்மைக்காரர்** (நாட்டாமைக்காரர்). இவர் கிராமத்தின் தலைவராக இருப்பார். இவரை மணியக்காரர் என்றும், பட்டேல் என்றும், பட்டா மணியம் என்றும், நாயுடு என்றும், ரெட்டி என்றும், பெட்டகப்பு (Peddacapu) என்றும் அழைப்பார்கள். இடத்திற்கு இடம் இவரது பெயர் வேறுபட்டாலும், இவருடைய பணிகள் வேறுபடுவதில்லை. கிராம மக்களின் நலன்களைக் காக்கும் பிரதிநிதியாகவும் இவர் செயல்படுவார். அக்காலத்தில் மக்களுக்கும், மன்னர்களுக்கும் இடையே முக்கிய தொடர்பாளராக இவர் செயல்பட்டு வந்தார். ஆட்சிபீடத்தில் மன்னர்கள் மாறினாலும் அதனால் மக்களின் வாழ்க்கை மாறாமல் இருந்ததற்கு இவரே பொறுப்பு ஏற்பார். நாட்டை ஆளும் அரசர்கள் மாறிய போதிலும் கிராமத்தின் ஆட்சிப்பொறுப்பு தொடர்ந்து மணியக்காரரிடம் இருந்து வந்தது.

இவர் கிராம மக்களிடையே அரசரின் பிரதிநிதியாக இருந்து வரிகளை வசூலிப்பார். வரி அல்லது வாரத்தை வசூலிப்பதுடன் இவருடைய அரசியல் வாழ்க்கை முடிந்துவிடுவதாகக் கூறலாம். ஒவ்வொரு பசலிக்கும் சாகுபடி நிலத்தை ஒதுக்குவதும், சாகுபடியாளரிடமிருந்து வரி அல்லது வாரத்தை வசூலிப்பதும் இவரது கடமையாகும். வசூலித்த தொகையில் அரசருக்குச் சேர வேண்டிய பகுதியை அவரிடம் சேர்ப்பிக்கவேண்டும்.

கிராமத்தின் பெருந்தனக்காரர் என்ற முறையில் தனிப்பட்ட செல்வாக்கு உடையவராக இருந்தார். தன்னுடைய செல்வாக்கான நிலைமையைப் பயன்படுத்திக் கிராமத்தில் ஏற்படும் பூசல்களையும், வழக்குகளையும் விசாரித்துத் தீர்ப்புக் கூறுவார். அரசரின் பதிலாளியாகச் செயல்படுவதால் குற்றம் செய்தவரைத் தண்டிக்கவும் உரிமைபெற்று இருந்தார். சில சமயங்களில் விசாரணைக்குப் பஞ்சாயத்தைக் கூட்டலாம். சுருக்கமாகக் கிராமத்தின் தலைவராகவும், மக்களின் பிரதிநிதியாகவும், அரசரின் பதிலாளி

யாகவும், கிராமத்தின் காவலராகவும், நீதிபதியாகவும், தண்டல் நாயகமாகவும் செயல்பட்டார்.

கிராமத் தலைவருக்கு அடுத்தாற் போல பத்வாரி (Patwari) என்று அழைக்கப்படும் கர்ணம் முக்கியமானவர். மேற்குக் கடற்கரைப் பகுதியில் உள்ள கர்நாடகத்தில் இவரை சேனுபோக் (Shenabogue) என்று அழைத்தார்கள். மலபார் பகுதிகளில் மேனன் என்று அழைக்கப்பட்டனர். கிராமத்தின் நிலப்பரப்பை யும், சாகுபடியாகும் நிலப்பரப்பையும், நில உடைமையையும், ஆண்டுதோறும் விளையும் தானியங்களின் அளவையும் பதிவு செய்து கொள்ளுதல் இவரது முக்கிய பணியாகும். இவர் குறித்துள்ள கணக்கின்படி ஒவ்வொரு சாகுபடியாளரும் செலுத்த வேண்டிய வாரம் அல்லது வரி நிர்ணயிக்கப்படும். அரசரின் வருமானத்தையும், மக்களின் (உபயோகிக்கக் கூடிய) வருமானத்தையும் நிர்ணயிக்கும் பொறுப்பைக் கர்ணம் அல்லது கணக்குப் பிள்ளை செய்து வந்தார். ஆகையால் கிராம சமுதாயத்தில் முக்கியத்துவம் பெற்ற நபராக இவர் விளங் கினர். தன்னுடைய அதிகாரங்களைச் சில சமயங்களில் தனக்குச் சாதகமாகவும் பயன்படுத்துவதுண்டு. இதனல் கணக்குப்பிள்ளை உண்மையான ஊழியராகச் செயல்படவில்லை என்று குறை சொல்லுவார்கள்.

கிராம ஊழியர்களுக்கு வாரச் சலுகைகள் வழங்கப்பட்டன. அவர்கள் சாகுபடி செய்யும் நிலங்கள் இறையிலி நிலமாக அறிவிக்கப்பட்டன. சில இடங்களில் வாரத்திலிருந்து முற்றிலும் விலக்கு அளிக்கவில்லை என்றலும், பெயரளவுக்கு வாரம் விதிக்கப்பட்டது.

கிராம மக்கள் தங்கள் உற்பத்தியில் ஒரு பகுதியைத் திரட்டிக் கிராம ஊழியர்களுக்கு ஊதியமாகக் கொடுத்தார்கள். கிராம உற்பத்தியில் 5% முதல் 12% வரை இந்த இனத்திற்காக வசூ லிக்கப்பட்டன. இந்த விழுக்காடு மாவட்டத்திற்கு மாவட்டம் வேறுபட்டது என்றும், செங்கற்பட்டு, மதுரை மாவட்டங்களில் ஓரளவு அதிகமாக இருந்தன என்றும் கூறப்படுகிறது.

கிராம ஊழியர்களுக்குக் கொடுக்கவேண்டிய ஊதியம் உற் பத்தியில் முதல் செலுத்தல் இனமாகக் கருதப்பட்டது. இவர் களுக்கு ஊதியம் செலுத்தாமல் இருந்ததற்காக ஆடுமாடுகள் 'ஜப்தி' செய்யப்பட்டன. அதைத் தவிர திருமணம், பண்டிகைகள் போன்ற சிறப்பான விழாக்களில் இவர்களுக்கு வெகுமதிகள் வழங்கப்படும்.

### பிரிட்டிஷ் ஆட்சியில் கிராம ஊழியர்கள்

கிழக்கிந்தியக் கம்பெனியின் முதல் 50 ஆண்டுகால ஆட்சியில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டன. இவை கிராம நிர்வாக முறையையும், கிராம சமுதாய அமைப்பையும் அடியோடு மாற்றிவிட்டன. முதலில் கிராம மக்கள் சபை கலைக்கப்பட்டது. ஆனால், வரியை விதிக்கவும், வசூலிக்கவும் ஓர் அதிகாரி அவசியம் என்று நினைத்து 1802–இல் கிராமத்திற்கு ஒரு கர்ணம் வீதம் நியமித்தார்கள். கர்ணத்தின் பொறுப்புகள் முன்பு இருந்ததைப் போலவே இருந்தன. 1810–ஆம் ஆண்டில் கிராமத் தலைவர் ஒருவர் நியமிக்கப்படவேண்டும் என்று ஓர் ஆணைக் குழு பரிந்துரைத்தது. அதற்கு அடுத்த ஆண்டில் கிராம முனிசிப் என்ற பெயரில் கிராமத் தலைவர் ஒருவர் நியமிக்கப்பட்டார். ஆனால், அவர் பெயரளவுக்கு மட்டுமே கிராமத் தலைவராக இருந்தார். அவரிடம் ஊராட்சியை நிர்வகிக்கும் அதிகாரம் கொடுக்கப்படவில்லை. அவருக்குச் சிறப்புச் சலுகைகள் ஏதும் வழங்கவில்லை. ஊதியமும் கிடையாது. பெயரளவில் கிராமத்தலைவர் என்ற பெயர் சூட்டப்பட்டது.

பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படும் முன்னர் மிகப் பெரிய கிராமங்களில் நாட்டிய கணிகையர்களும்[12] பணிபுரிந்து வந்தார்கள். பிரிட்டிஷ் ஆட்சியிலும் இந்த முறை நீடித்து வந்தது. மாவட்ட ஆளுநர்கள், ரெவின்யூ அதிகாரிகள் முதலியோரின் ஆதரவில் இவர்கள் தொடர்ந்து பணியாற்றினார்கள். பொதுவான நிகழ்ச்சிகளிலும், விருந்தினர்களை வரவேற்பதிலும் இவர்கள் பங்கு கொண்டார்கள்.

### நீதி வழங்குதல்

கிராம சமுதாய அமைப்பில் கிராமத்தின் தலைவராக இருந்த மணியக்காரர் நீதி வழங்கும் பொறுப்புகளை ஏற்று வந்தார். இவருக்கு உதவியாக இதர கிராம ஊழியர்கள் பணியாற்றினார்கள். வழக்கு விசாரணைகளில் முக்கியமாகக் கர்ணமும், தலையாரியும் சிறப்பாக உதவினார்கள். சிக்கலான வழக்குகளிலும், கிராமத்தின் சமுதாய நலன்களைப் பாதிக்கக்கூடிய வழக்குகளிலும் பஞ்சாயத்தைக் கூட்டுவார்கள். சொத்து உரிமை, தனி உரிமை பற்றிய வழக்குகளில் கட்டாயமாகப் பஞ்சாயத்தார் கூடித் தீர்ப்பு அளிப்பார்கள்.

[12] R. C. Dutt, Economic History of India, Vol-I, p.81, (Publications Division, 1963.)

இங்கிலாந்தில் ஜூரர்களைக் கொண்டு தீர்ப்புக் கூறுவதைப் போல் கிராம சமுதாயத்தில் பஞ்சாயத்தார் கூறும் தீர்ப்பும் வாழ்க்கையோடு ஒன்றியதாக இருந்தது. வழக்கில் சம்பந்தப் பட்டவர்கள் நேரிடையாகத் தங்கள் வழக்கை எடுத்துரைத்தார் கள். கிராம சமுதாயத்தின் ஒழுக்க நெறிகளுக்கும், பழக்க வழக்கங்களுக்கும் ஏற்பத் தீர்ப்பு வழங்கப்படும். சம்பவங்களில் நேரிடையாக ஈடுபட்டவர் பங்கு கொள்ளுவதால் வழக்குகளை உடனுக்குடன் பைசல் செய்ய முடிந்தது. சமுதாய வாழ்க்கை யில் தனிப்பட்ட முறையில் ஒவ்வொருவரைப் பற்றியும் மக்கள் தெரிந்து வைத்திருந்தார்கள். பஞ்சாயத்தார் தீர்ப்புகளில் நியாயம் இருந்தது.

பஞ்சாயத்துகளைப் பிரிட்டிஷ் ஆட்சியினர் அங்கீகரிக்க வில்லை. நீதி வழங்குவதற்கு மாவட்ட நீதிபதிகளை நியமித் தார்கள். மாவட்ட நீதிமன்றங்களைக் கொண்டு நீதி வழங்கும் முறையில் பலவகையான சடங்குகள் இடம்பெற்றன. வழக்குகளை விசாரிக்கும் நீதிபதிக்கோ, அவருக்கு ஆலோசனை கூறும் ஜூரர் களுக்கோ வழக்கைப்பற்றியும், வழக்கு நடைபெற்ற இடத்தைப் பற்றியும், வழக்கில் சம்பந்தப்பட்ட நபர்களைப் பற்றியும் நேரிடையாக ஒன்றும் தெரியாது. வழக்காடுபவர்கள் தங்களுடைய வழக்கை எடுத்துரைப்பதற்காக வக்கீல்களை நியமிக்க வேண்டும். எனவே, நீதிபதிகள் வக்கீல்களின் பிரா தின் மூலமாகவும், அவர்கள் கூறும் விளக்கத்தின் மூலமாகவும் வழக்கைப் புரிந்து கொள்ளுகிறார்கள். வழக்கு விசாரிக்கும் முறை புதிதாக இருந்ததாலும், விசாரணையின் போது பல விதமான சடங்குகள் நிறைவேற்ற வேண்டியிருந்ததாலும் வழக்குகள் குவியாமல் அவ்வப்போது பைசல் செய்ய முடியவில்லை. 1807-இல் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படாமல் **31482** வழக்குகள் மாவட்ட நீதிமன்றங்களில் பதிவாகி இருந்தன. [13]

கிராமவாசிகள் தொடரும் வழக்குகளில் கட்டாயமாக மணியக்காரர் சாட்சியம் சொல்ல வேண்டும். இதற்காக இவர் ஒவ்வொரு முறையும் 50 முதல் 100 மைல் வரை பிரயாணம் செய்ய வேண்டும். இதனால் இவரது சொந்தச் சாகுபடி வேலைகள் பாதிக்கப்பட்டன. கிராம சமுதாய அமைப்பில் இவர் ஒரு காலத்தில் தானே விசாரித்துத் தீர்ப்புக் கூறியது போக, இப் போது மிகவும் சாதாரண வழக்குகளுக்கும் சாட்சியம் சொல்லு வதற்காகத் தன் சொந்த அலுவல்களையும் புறக்கணித்து விட்டு நெடுந்தூரம் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது.

[13] Sarada Raju, A, *ibid*, p. 23.

கிராமப் பஞ்சாயத்துகளில் மக்கள் தங்கள் வழக்குகளைத் தாங்களே எடுத்துரைத்தார்கள். இதனால் அதிகப்படியாகச் செலவு ஏற்படுவதில்லை. நீதிமன்றங்களில் விசாரணை செய்யும் போது தங்கள் வழக்குகளை எடுத்துரைப்பதற்காக வக்கீல்களை நியமிக்க வேண்டியது அவசியமாக உள்ளது. இவர்கள் கட்சிக்காரர்களிடம் பணம் பறிப்பதில் கைதேர்ந்தவர்கள். இதனால் அதிகச் செலவு செய்தாலன்றி நீதிமன்றங்களில் வழக்காட முடியாது என்ற நிலைமை ஏற்பட்டது. இதை ரேவன்ஷா (Ravenshaw) எடுத்துரைக்கின்றார்: "தன்னுடைய சொத்துகளைப் பிறர் கொள்ளை அடிப்பதால் ஏற்படும் இழப்பைவிட அதற்காக அவர் வழக்காடுவதால் அதிகச் செலவு ஏற்படுகிறது"[14]

1816-க்குப் பின்னர் கிராமத்தலைவர்கள் 'கிராம முன்சிப்' என்ற பெயரில் நியமிக்கப்பட்டார்கள். அவர்களுக்கு வழக்குகளை விசாரிக்கும் உரிமை மீண்டும் வழங்கப்பட்டது. ஆனால், மேற்படி வழக்குகளுக்குப் பத்து ரூபாய் மதிப்பு உச்சவரம்பாக இருந்தது. எனவே, கிராம முனிசீபுகளுக்கு நீதிவழங்கும் உரிமை பெயரளவுக்கு மட்டுமே கொடுக்கப்பட்டது. அவர்களைப் பொறுத்தவரை சீரும் சிறப்பும் உடைய செல்வாக்கான நிலைமை ஓர் இழந்த சுவர்க்கமாகவே இருந்தது.

கிராமப் பஞ்சாயத்து நல்லமுறையில் செயல்பட்ட காலத்தில் கிராம ஊழியர்களுக்கு மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஊதியம் அளித்தார்கள். கிராம ஊழியர்களும் தங்கள் கடமைகளைச் சரிவர நிறைவேற்ற வேண்டும் என்ற கடமை உணர்வோடு செயல்பட்டார்கள். கிராம அதிகாரிகளைக் கட்டுப்படுத்தக் கூடிய மேலதிகாரிகள் யாரும் இல்லை. ஆகையால், தங்களை எதிர் நோக்கிய பிரச்சினைகளுக்குத் தாங்களே தீர்வு காணவேண்டும் என்ற கட்டுப்பாட்டு உணர்வோடு செயல்பட்டார்கள். ஆனால், பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்ட பின்னர் கிராம மக்கள் சபை கலைக்கப்பட்டது. பஞ்சாயத்துகள் கலைக்கப்பட்டன. கிராம ஊழியர்களில் கர்ணம் மட்டும் முதலில் நியமிக்கப்பட்டார். அதன் பின்னர் செல்வாக்கோ, அதிகாரமோ, ஊதியமோ இல்லை என்றாலும் பெயரளவுக்குக் கிராமத் தலைவர் (கிராம முனிசீபு) நியமிக்கப்பட்டனர்.

கிராம மக்கள் நிர்வகித்த பொறுப்புகள் அனைத்தும் அவர்களிடமிருந்து பறிக்கப்பட்டன. கிராம மக்கள் நேரிடையாக (இரயத்துவாரி கிராமங்களில்) வரி செலுத்தினார்கள். கூடுத

[14] முன்கூறியபடி பக்கம். 28.

லான நிலவரியை வசூலிப்பதற்காகவும், அதிகாரக் குவிப்புடைய ஆட்சிமுறையை இந்தியாவில் உருவாக்குவதற்காகவும் கிராம மக்கள் சபையின் பொறுப்புகளும், முக்கியத்துவமும் குறைக்கப் பட்டன. பிற்காலத்தில் கிராம சமுதாய அமைப்பின் சீரழிவிற்கு இதுவே முக்கிய காரணமாகும்.

கிராம சமுதாய அமைப்புகள் தன்னிறைவு பெற்று இருந்தன. இவை வெளியுலக மாறுதல்களால் பாதிக்கப்படாமல் தனித்து ஒதுங்கி இருந்தன. இதனால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அழிவு பெறாமல் வந்துள்ளன. இந்தியக் கிராம சமுதாயங்கள் முழுமை பெற்ற சமுதாய அமைப்பு முறையாக நிலைபெற்று விளங்கின. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக நிலைத்து வந்துள்ளதால் கிராம சமுதாய அமைப்பு பழுதற்றது என்றும், அதன் சீர்குலைவு கேடு விளைவிக்கக் கூடியது என்றும் நினைப்பது தவறு.

கிராம சமுதாயம் நிலைபெற்ற தன்மையைப் பெற்றிருப் பதால் ஓரளவு நன்மையும், ஓரளவு கேடும் ஏற்பட்டுள்ளன. சில குறிப்பிட்ட பணிகள் ஆண்டுதோறும் திரும்பத் திரும்பத் தேவைப்படுகின்றன. மாறுதல் இல்லாத வகையில் உற்பத்தி முறையை வகுத்துக் கொள்ளுவதற்குக் கிராம சமுதாயம் மிகவும் உதவியாக இருந்தது.

கிராமக் கைவினைஞர்கள் வெளியுலகின் போட்டியிலிருந்து காப்பாற்றப்பட்டார்கள். ஒரு குடியானவன் தனக்குத் தேவை யான பானைகளை உள்ளூர்க் குயவனிடம் மட்டுமே வாங்குவான். இதைவிடச் சிறந்த மண்பாண்டங்கள் வெளியூரில் கிடைத்த போதிலும் அதைச் சாதாரணமாக வாங்கமாட்டான்.

இந்தியக் கிராம சமுதாயங்கள் பொதுவுடைமைத் தத்துவத் திற்கு இலக்கணமாக இருந்தன என்று சொல்லுவதில் ஓரளவு உண்மை இருக்கிறது என்றாலும், ஓரளவு உயர்வு நவிற்சியும் சேர்ந்துள்ளது. கிராம சமுதாய அமைப்புகளில் சுரண்டல் இயலாத காரியம். வேலையின்மை தோன்றுவதற்கு வாய்ப்பில்லை. ஆனால், அங்காடி சக்திகளை மையமாகக்கொண்ட பொருளாதார அமைப்புகளில் இவை தவிர்க்கமுடியாத வினாவுகளாக இருக்கின்றன.

கிராம சமுதாயத்தில் சிறப்புத்தேர்ச்சி வரையறுக்கப் பட்டிருந்தது. காட்டாக, தச்சன் அல்லது குயவன் தன்னுடைய முழு நேரத்தையும், ஆற்றலையும் தன்னுடைய சிறப்புத்

தொழிலிற்காகச் செலவிடுவதில்லை. இவர்கள் அனைவரும் சாகுபடித் தொழிலில் ஈடுபட வேண்டும். பயிர்த்தொழிலில் ஈடுபட்டது போக எஞ்சிய நேரத்தை மட்டுமே தன்னுடைய சிறப்புத் தொழில்களுக்காகச் செலவிடலாம்.

கிராமக் கைவினைஞர்கள் வெளியாரின் போட்டியிலிருந்து காக்கப்படுவதாக முன்னர் கூறினோம். அதன் பாதக விளைவை இங்கே கூறுவோம். போட்டி ஏற்படாத காரணத்தால் கைவினைஞர்கள் தங்கள் ஆற்றலையும், திறமையையும் வளர்த்துக்கொள்ள முடியவில்லை. சிறப்புத் தேர்ச்சியும், போட்டியும் இல்லாத காரணத்தால் தொழில் வளர்ச்சியும் அவற்றின் இடச்செறிவும் கட்டுப்படுத்தப்பட்டன.

### கிராம சமுதாய அமைப்பு சிதைவுறுதல்

கிராம சமுதாய அமைப்பு பல காரணிகளினால் சிதைவுற்றது. அதை இருவகைப் படுத்தலாம். ஒன்று **புறச்சக்திகள்**. இரண்டு **அகச்சக்திகள்**. பிரிட்டிஷ் ஆட்சியில் இவை சிதைவுற்றன. கிரேக்க அடிமை முறை ரோமானியப்படை எடுப்பால் சிதைவுற்றதைப்போல் இந்தியக் கிராம சமுதாய அமைப்பு பிரிட்டிஷ் ஆட்சியால் சிதைவுற்றது என்று கூறுவார்கள். ஓரளவிற்கு ஏற்கக்கூடிய வாதமாகக் கருதலாம். பிரிட்டிஷ் ஆட்சியைப் புறக்காரணியாகக் கருதவேண்டும். கிராம சமுதாயங்கள் புறக்காரணிகளின் இயக்கத்தால் அழிந்தன என்று கூறுவது முற்றிலும் உண்மையாக இருக்கமுடியாது. இப்படிக் கூறுவதால் உள்ளீடான சக்திகளையும், அதன் முக்கியத்தையும் குறைப்பதாக இருக்கும். புறக்காரணிகளைப் போலவே உள்ளீடான காரணிகளும் கிராம சமுதாயத்தின் சிதைவுக்குக் காரணமாக இருந்துள்ளன.

உள்ளீடாக அமைந்த காரணிகளில் முக்கியமாக உட்பூசல்களைக் கூறவேண்டும். உட்பூசல்களும், உட்கட்சிகளும் இரு வகைகளில் தோன்றக்கூடும். நெருங்கிய உறவினர்களிடையே பொறாமை, பூசல்களினால் பிளவுகளும், உட்கட்சிகளும் ஏற்படுகின்றன. ஆஸ்கார் லூயிஸ் குடும்ப உறவினர்களிடையே உட்கட்சி எவ்வாறு உருவாகின்றது என்று கூறியுள்ளார்.[15] உட்கட்சியில் ஒன்று அல்லது அதிகமான ஏகக்குடும்பங்கள் இருக்கின்றன. அல்லது ஒன்றுக்கும் அதிகமான 'குன்பா'க்களும் (ஒரு மூதாதையின் வழிவந்தவர்களைக் குன்பா என்று கூறுவர்) இருக்கலாம். ஒருவர் தனிப்பட்ட முறையில், தனிநபர் என்ற வகையில் உட்கட்சியின் உறுப்பினராக இருக்கமுடியாது. குடும்பம் என்ற

[15] Quoted by V. B. Singh - Village Community, Chap. 4. p. 93, Economic History of India- 1857 -1956 (1965).

குழுவின் அடிப்படையில்தான் உட்கட்சியின் உறுப்பினராக இருக்கலாம். சில சமயங்களில் பல குன்பாக்களைச் சேர்ந்தவர்கள் ஒரு விரிவடைந்த குடும்பத்தில் இருக்கக்கூடும். அவ்வாறு விரிவடைந்த குடும்பங்கள் ஒரு உட்கட்சியாக இருக்கும். சில சமயங்களில் ஒரு குன்பாவைச் சேர்ந்தவர்கள் பல குடும்பங்களில் இருப்பதால் பல உட்கட்சிகளில் இருக்கலாம். இவ்வாறு உறவின் அடிப்படையில் உட்கட்சிகள் அமைந்துள்ளன என்பதற்குத் தகுந்த ஆதாரங்கள் உள்ளன. கிராம உட்கட்சிகளில் உறவினர்களின் பூசல்கள் முக்கிய காரணங்களாக இருந்துள்ளன. இந்த விளக்கம் நடைமுறையில் உள்ள நிலைமையை முழுமையாகப் பிரதிபலிக்கவில்லை.

**உட்கட்சிகளை அதிகாரவர்க்கக் குழு என்று கருதவேண்டும்.** கிராமங்களில் உள்ள பதவிகள், அதிகாரங்கள் முதலியவற்றைக் கைப்பிடிக்க எழும் போட்டியின் விளைவாக உட்கட்சிகள் தோன்றுகின்றன. பதவிகளை அடைவதற்காக உறவினர்களிடையே போட்டி ஏற்படுமானால், குடும்ப அடிப்படையில் உட்கட்சிகள் தோன்றும். கிராமப் பதவிகளைக் கைப்பிடிப்பதற்குப் பல சாதியினர் போட்டியிடலாம். அப்போது உட்கட்சிகள் மேலும் செல்வாக்குடைய சாதிக் குழுக்களாகச் செயல்படும். உட்கட்சி உறவினர் போட்டியாலும், சாதியினர் போட்டியாலும் தோன்றக்கூடும். இது வர்க்கப் போராட்டத்தாலும் தோன்றக்கூடும். செல்வந்தர்கள் (நிலக்கிழார்கள்), வறியவர்கள் (விவசாயத் தொழிலாளர்கள்) என்று கிராம மக்களை இரு வர்க்கங்களாகப் பிரிக்கலாம். இவர்கள் ஒன்றுக்கும் அதிகமான சாதியினராக இருக்கக்கூடும். சாதி வேறுபாட்டை மறந்து, தங்கள் பொருளாதார நலன்களைப் பாதுகாத்துக்கொள்ளும் நோக்கத்துடன் ஒன்றுபட்டுச் செயல்படுகின்றனர். இவ்வாறு தோன்றும் வர்க்கப் போட்டிகள் உட்கட்சிகளைத் தோற்றுவிக்கின்றன.

கிராமத்தின் வளர்ச்சிக்குக் கிராமம் ஓர் அமைப்பு முறையாகவும், கிராமவாசிகள் அனைவரும் ஒருமித்தவாறு ஒற்றுமையுடன் செயல்படுவதும் அவசியமாகும். ஆனால், கிராமவாசிகள் உட்கட்சிகளாகப் பிளவுபட்டுப் போட்டியிடுகின்றனர். இதனால் ஒரு உட்கட்சியும், அதன் உறுப்பினர்களும் இலாபம் அடைகின்றனர்களே தவிரக் கிராமவாசிகள் அனைவரும் இலாபம் அடைவதில்லை. உட்கட்சிகளின் தோற்றம் கிராம சமுதாய அமைப்பின் அழிவிற்கு முக்கிய காரணமாக உள்ளது.

அடுத்து நில உரிமை முறையில் உள்ள குறைபாடுகளைக் கூறலாம். காட்டாக ஜமீன்தார், ஜாகீர்தார் பகுதிகளில்

விவசாயிகள் அதிக அளவுக்கு வரித்தொகை அல்லது வாரம் செலுத்தினர்கள். படைமானியத் தன்மை உடைய நிலப்பிரபுக்கள் ஆடம்பரமாக வாழ்ந்தார்கள். இதற்கு அதிகப் பணம் தேவைப்பட்டது. இதைத் திரட்டுவதற்காக விவசாயிகளிடத்திலும், கைவினைஞர்களிடத்திலும் அதிக விகிதத்தில் வரித்தொகை வசூலித்தார்கள். வரிச்சுமைக்கு அஞ்சியவர்கள் கிராமத்தைவிட்டு நீங்கிப் பாதுகாப்பான நாடுகளில் குடியேறினர்கள். கிராம மக்களின் வெளியேற்றம் அதன் அழிவிற்குக் காரணமாக இருந்தது.

மூன்றாவதாக நாடெங்கிலும் அடிக்கடி பஞ்சங்கள் ஏற்பட்டன. வளர்ந்து செல்லும் மக்கள்தொகைக்கு உணவு அளிக்க முடியவில்லை. அல்லது கிடைக்கக்கூடிய உணவுப் பொருள்களை மக்களால் (விலைக்கு) வாங்க முடியவில்லை. பஞ்சங்கள் எப்படி இருந்தன என்பதை நாஸிர் அக்பர்பாடி (1736—1830) என்ற கவிஞர் பின்வருமாறு வர்ணித்துள்ளார்: [16]'கரையை உடைத்துக்கொண்டு வெள்ளம் புகுவதைப்போல வறுமை ஒவ்வொரு வீட்டிலும் புகுந்துவிட்டது.' பஞ்சத்தால் 36 வகைத் தொழில்களைச் செய்துவந்த சாதியினர் வேலையற்றுப்போனர்கள்.

நான்காவதாகக் கடும் வட்டி, சுரண்டல் வாரம் ஆகியவை. விவசாயத்தில் நாட்டம் இல்லாதவர்கள் நிலஉடைமையாளர் ஆயினர். விவசாயத்தைத் தங்கள் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர்கள் தங்கள் நில உடைமைகளையும், நிலஉரிமைகளையும் இழந்தனர். இவர்கள் வரித்தொகையைப் பணமாகச் செலுத்துவதற்காகப் பெரும்பாலும் கடன் வாங்கினர்கள். பணத்தொகை கிடைப்பருமையாக இருந்ததால் வட்டி விகிதம் அதிகமாக இருந்தது. கடும் வட்டி காரணமாக நிலஉடைமையை இழக்கவேண்டியதாயிற்று. புதிய நிலக்கிழார் விவசாயத்தில் அக்கறையில்லாத, தலத்தில் இல்லாத நிலக்கிழாராக இருந்தனர். இவர்கள் சுரண்டல் வாரத்தை வசூலித்தனர். கிராம மக்கள் தங்கள் உரிமைகளையும், உடைமைகளையும் இழந்ததால் கிராம சமுதாயம் சிதைவுற்றது.

### பிரிட்டிஷ் ஆட்சி

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் கிராம சமுதாயம் சிதைவுற்றது. தொழிற்புரட்சிக்குக் காரணமாக இருந்த பொருளாதார சக்திகள் இவற்றின் அழிவைத் துரிதப்படுத்தின.

16 முன் கூறியபடி, பக். 94.

ஆங்கிலேயர்கள் அதிகாரக் குவிப்புடைய நிர்வாகத்தையும், வரிவசூல் முறையையும் புகுத்தினார்கள். போலீஸ் படை, நீதிமன்றங்கள் முதலியன ஏற்படுத்தப்பட்டன. போக்கு வரத்து வசதிகள் அதிகரித்தன. இதனால் கிராமங்கள் தனித்து இயங்கமுடியவில்லை. கிராமங்களில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் வெளியூர்களுக்கு எடுத்துச்செல்லபபட்டன. வெளியூர்களிலும், வெளிநாடுகளிலும் உற்பத்தியான பொருள்கள் கிராமங்களில் விற்கப்பட்டன. அதிகக் குத்தகை (வாரமும்)யும், தாங்கமுடியாத கடன்சுமையும் கிராமத்தில் உள்ள இளைஞர்களை வெளியேற்றின. கிராமியத் தொழில்களை ஆதரிப்பவர் யாரும் இல்லை. ஆகையால் அவை சிதைவுற்றன வருமான வாய்ப்புகள் குறைந்து சென்றதால் கிராமத்தை விட்டு இடம் பெயர வேண்டியது அவசியமாயிற்று. சிறு நில உடைமையாளர்கள் தங்கள் நிலத்தின் விளைவைக் கொண்டு வாழ்க்கை நடத்த இயலாது என்று தெரிந்துகொண்டனர். கிராமங்கள் எக்காலத்திலும் சுயேச்சையாக இயங்கியது இல்லை. ஆங்கிலேயர்களின் ஆட்சியால் தோன்றிய மாறுபட்ட சூழலில் இது இயலாத ஒன்றாகி விட்டது. ஓரளவு தன்னிறைவு பெற்று இயங்கிய கிராம சமுதாயங்கள் நாளடைவில் அழிந்து போயின.

கிராம சமுதாயம் என்று கூறும்போது அதன் **'தன்னிறைவு'** பெற்ற தன்மைக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்போமானால், மேற்படி தன்னிறைவு பெற்ற சமுதாயங்கள் வெகு காலத்திற்கு முன்னதாகவே சிதைவுற்றன என்று கூறலாம். அதாவது தன்னிறைவுத் தன்மை பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னதாகவே அகற்றப்பட்டது. ஆனால், பிரிட்டிஷ் ஆட்சியில் ஏற்பட்ட மாற்றம் வேறு வகையானது. கிராம சமுதாய அமைப்பு என்ற சொல், **மரபு அடிப்படையில் கிராம மக்களிடையே தோன்றக்கூடிய சமூக பொருளாதாரத் தொடர்புகளைக்** குறிப்பிடுகின்றன என்று கருது வோம். ஆங்கிலேயர்கள் தங்கள் ஆட்சிக்காலத்தில் **'மரபை'** மையமாகக் கொண்ட சமூகத் தொடர்புகளுக்குப் பதிலாகப் **'பணத்தை'** மையமாகக்கொண்ட சமூகத் தொடர்புகளை ஏற்படுத்தினார்கள். இதனால் கிராமங்களில் நிலவிய சமூக, பொருளாதாரத் தொடர்புகளும் அடியோடு மாறிவிட்டன. இவ்வாறு கிராம **அமைப்பு** சிதைவுற்றதைத்தான் பிரிட்டிஷ் ஆட்சியின் வரப்பிரசாதம் என்று கூறுகின்றோம். இவர்கள் ஓரளவு படைமானியத் தன்மையும், ஓரளவு 'காலனி' ஆதிக்கத் தன்மையும் கொண்ட நிலப் பிரபுக்களை ஏற்படுத்தினார்கள். இதனால் நிலமற்ற விவசாயிகள், சாகுபடியாளர்கள், நிலக்கிழார் கள் என்ற பிரிவினர் தோன்றினர். இவர்களிடையே புதிய

அடிப்படையில் தொடர்புகள் ஏற்பட்டன. இவ்வாறு அமைப்பு முறையில் தோன்றிய அடிப்படையான மாற்றங்களைத்தான் கிராம சமுதாய அமைப்பின் சிதைவு என்று கூறுகின்றோம்.

**விடுதலைக்குப் பின்னர்**

விடுதலைக்குப் பின்னர் நிலப் பிரபுத்துவம் ஒழிக்கப்படும் என்றும், கிராம முன்னேற்றம் ஏற்படும் என்றும், பஞ்சாயத்து ஆட்சி ஏற்படும் என்றும் விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டவர்கள் அனைவரும் எண்ணியிருந்தனர். பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் பஞ்சாயத்துகள் அதிக செல்வாக்குடன் செயல்பட்டன. பொருளாதார, சமூக நீதித்துறைகளின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தன. ஆனால், விடுதலைக்குப்பின்னர் கிராமப் பஞ்சாயத்துகள் ஏற்பட்டன என்றாலும் முன்பு இருந்ததைப் போலச் செல்வாக்குடைய அமைப்புகளாக அவை செயல்பட வில்லை.

நிலச் சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. இடைநிலையாளர்கள் பலர் அகற்றப்பட்டனர். இதனால் இரு மாறுபட்ட விளைவுகள் தோன்றின. சில இடங்களில் முன்னாள் மிராசுதார்கள் பூமிதாரர்களாக மாறினார்கள். புதிதாக நிலத்தை நிர்வாகம் செய்யும் சாகுபடியாளர்கள் ஏற்பட்டனர். இரண்டாவதாக, சாகுபடியாளர்கள் வெளியேற்றப்பட்டார்கள். குத்தகை அல்லது வாரவிதங்கள் உயர்த்தப்பட்டன. நிலச்சீர்திருத்தங்களினால் புதிய பிரச்சினைகள் தோன்றின. கிராமங்களில் செல்வாக்குடைய நிலக்கிழார்கள் நில உச்சவரம்பு சட்டத்தை எளிதாக ஏமாற்றினார்கள். நில உச்சவரம்பு சட்டங்கள் ஏட்டளவில், சட்டப் புத்தகங்களில் இடம்பெற்றனவே தவிர, அதன் பயனாக உபரியான நிலத்தைப் பெறவோ, அரசாங்கம் அதை மற்றவர்களுக்குப் பகிர்ந்தளிக்கவோ முடியவில்லை.

கிராமங்களில் ஏற்றத்தாழ்வுகள் அதிகம் உள்ளன. நில உச்சவரம்பு சட்டங்களால் அதை அகற்ற முடியவில்லை. உணவு தானியக் கிடைப்பருமையால் தோன்றிய விலை உயர்வும் ஏற்றத் தாழ்வை அதிகரித்துள்ளன. பொதுமக்களின் (பாமர மக்களின்) வாழ்க்கை மலரவேண்டும் என்ற நோக்கத்தோடு உருவாக்கப் பட்ட சமுதாய நலத்திட்டங்கள் கிராமங்களில் மேல்மட்டங்களில் உள்ளவர்களுக்குச் சாதகமாகவும், மற்றவர்களுக்குப் பாதகமாக வும் இருந்தன. இவ்வாறு வளர்ச்சித் திட்டங்கள், நிலச்சீர்திருத் தங்கள் ஆகிய கிராமப் பொருளாதார அமைப்பில் ஏற்றத்தாழ்வு களை ஏற்படுத்தியும், அதை அதிகமாக்கியும் உள்ளன. இந்த

விளைவுகள் யாவும் அரசாங்கத்தின் பொருளாதார நோக்கங்களுக்கும், பாரத அரசியல் அமைப்பில் குறிப்பிட்டுள்ள இயக்கநெறிக் கோட்பாடுகளுக்கும் முற்றிலும் மாறுபட்டவை.

கிராமப் பஞ்சாயத்துகளை உயிர்ப்பிக்க வேண்டும் என்று அரசியல் அமைப்புச் சட்டம் கூறுகிறது. கிராமப் பஞ்சாயத்துகள் ஒவ்வொரு மாநிலத்திலும் ஏற்படுவதற்கு வழிவகுக்க வேண்டும். அவை சுயஆட்சி அலகுகளாகச் செயல்பட வேண்டும். அதற்கு வேண்டிய சூழ்நிலையை உருவாக்கவேண்டும் என்று அரசியல் சட்டம் கூறுகிறது.

வளர்ச்சித் திட்டங்களில் பொருளாதாரத் திட்டங்களைக் கிராம மட்டத்தில் உருவாக்கவும், அதைச் செயல்படுத்தவும் கிராம சபை பொறுப்பு ஏற்கவேண்டும் என்று கூறியுள்ளார்கள். மக்களின் பிரதிநிதிகளாகச் செயல்படும் பஞ்சாயத்துகள் கிராம முன்னேற்றத்தை ஏற்படுத்தும் ஆற்றல் உடையவை. கிராம சபை குறைந்தது ஓராண்டில் இரு முறைகள் கூட்டப்படும். கிராம சபைகளுக்குப் போதிய அதிகாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. கிராம சுகாதாரம், மருத்துவம், துப்புரவு, கல்வி, பொழுது போக்கு முதலிய பணிகளைச் செய்யலாம். இவை கிராமத்தின் விவசாயம், கால்நடை, நீர்ப்பாசனம், தோட்டக்கலை ஆகிய துறைகளின் வளர்ச்சிக்கு உதவி செய்யலாம். கிராமங்களில் தொழில், வணிக அமைப்புகளைத் தோற்றுவிக்கலாம். குற்றங்களை விசாரித்து நீதிபரிபாலனம் செய்யலாம். கிராம மக்களின் சமூக, கலாச்சார, பொருளாதார நடவடிக்கைகள் அனைத்தும் கிராம சபையின் செல்வாக்கின்கீழ் அமையும்.

கிராம சபையைத் தோற்றுவிப்பதில் நாட்டுமக்கள் அனைவரும் ஆர்வம் காட்டினர். விடுதலைக்குப்பின்னர் அதனைச் செயல்படுத்தும் வாய்ப்பு ஏற்பட்டது. அரசியல் அமைப்புச் சட்டம் துணை நின்றது. மாநிலங்கள் ஒவ்வொன்றிலும் பஞ்சாயத்தை ஏற்படுத்தும் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இருந்த போதிலும் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட கிராமப் பஞ்சாயத்துகளால் கிராம மக்களிடையே புதிய வாழ்க்கையை, மறுமலர்ச்சியைத் தோற்றுவிக்க முடியவில்லை.

கிராம மக்களிடையே மறுமலர்ச்சி ஏற்படாமல் இருப்பதற்குப் பல காரணங்களைக் கூறலாம். ஆனால், ஒன்றை மட்டும் நிச்சயமாகக் கூறமுடியாது. கிராமவாசிகள் கல்வியறிவு இல்லாதவர்கள், உலக நடப்புத் தெரியாதவர்கள், பிற்போக்கானவர்கள் என்று மட்டும் கூற இயலாது. எழுதப் படிக்கத் தெரிய

தவர்களாக இருந்தாலும் நாட்டு நடப்பு அறிந்தவர்களாக இருக்கின்றனர். விடுதலைக்குப் பின்னர் அமைதியான முறையில் நடைபெற்ற (சுமார்) ஐந்து பொதுத்தேர்தல்கள் கிராமமக்களின் அரசியல் விழிப்புணர்ச்சியைப் பறைசாற்றுகின்றன. கிராம வாசிகளைப் பிற்போக்கானவர் என்றும் கூறமுடியாது. தகுந்த முறையில் அணுகினல், சிறந்த வாய்ப்புகளை ஏற்படுத்தினல் அதைத் தவருமல் பயன்படுத்திக் கொள்வார்கள். தீவிரப் பயிர் சாகுபடித் திட்டத்திலும், வீரியப் பயிர் சாகுபடித் திட்டத்திலும் கிராமவாசிகள் காட்டும் ஆர்வம் குறிப்பிடத்தக்கது.

கிராமப் பஞ்சாயத்துகளுக்கு அதிக அதிகாரங்கள் கொடுக்கப் பட்டுள்ளன என்பது உண்மைதான். ஆனல், அந்த அதிகாரங்கள் ஏட்டளவில் நிற்கின்றன. அவற்றைச் செயல்படுத்துவதற்கு வேண்டிய நிதி வசதிகள், சாதனங்கள் முதலியன கிராம சபையிடம் இல்லை. கிராம நிலத்தையும், இயற்கை வளங்களையும் நிர்வகிக்கும் உரிமை கிராமங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. கிராம மக்கள் ஒன்றுபட்டு வளர்ச்சியை ஏற்படுத்தும் திட்டங்களைத் தயாரித்தாலும், அதை அவர்களால் நிறைவேற்ற முடியாது. அரசாங்க ஊழியர்களின் அனுமதியைக்கோரிப் பெற வேண்டும்; மாநில அரசின் நிதி உதவியை எதிர்பார்க்க வேண்டும். இவ்வாறு எந்த நடவடிக்கையும் எடுக்கமுடியாத அளவிற்குக் கிராம சபை கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. கிராம சுய ஆட்சி என்பது பெயரளவுக்கு இருக்கும். இது ஒரு காகிதப் பூவாகக் காட்சியளிக்கிறது.

தற்காலக் கிராமப் பஞ்சாயத்துகள் முன்புள்ள கிராம சமுதாய அமைப்புகளைப்போல ஒரு காலத்திலும் செயல்பட முடியாது. இயங்காத சமநிலை அடிப்படையில் கிராம சமுதாயம் அமைந்திருந்தது. தற்காலப் பொருளாதார அமைப்பு இயக்கச் சமநிலையை வலியுறுத்துகின்றது. இயக்கநிலைக்குப் பின்வரும் காரணிகள் முக்கியமானவை: போக்குவரத்து வளர்ச்சி, மின் சக்தி, நுட்ப வளர்ச்சி, திறன் வளர்ச்சி, ஆராய்ச்சி, புதுமை புகுத்தல், அங்காடிகள், கல்வி வளர்ச்சி முதலியன. புதிய சூழ்நிலையில் கிராமங்கள் தன்னிறைவு பெற்று விளங்கமுடியாது. மரபு அடிப்படையிலும் இயங்கமுடியாது. கிராமத்தில் உள்ள நிலம் அனைத்தையும் கிராமப் பஞ்சாயத்தின் உடைமையாக மாற்றவும் முடியாது. கிராமப் பஞ்சாயத்து என்பது தல ஆட்சி முறையின் ஒரு கூருக உள்ளது. அதன் அதிகாரங்கள், உரிமைகள் முதலியன வரையறுக்கப்பட்டுள்ளன. இது கிராமமக்களுக்குக் கொடுக்கப்பட்ட புதிய அமைப்பு முறை. கிராமவாசிகளின்

கூலாக மட்டுமே கிராம சபைகள் செயல்படும். குரல் கொடுப்ப துடன் அதன் பணியும் நின்று விடுகிறது.

பஞ்சாயத்துத் தேர்தல்கள் கிராமங்களில் உட்கட்சிகளேயும், பிளவுகளேயும் அதிகரித்துள்ளன. உட்பகை, போட்டி ஆகிய வற்ருல் பிளவுபட்ட மிராசுதார்கள் உட்கட்சிகளின் தலைவர்களாக இருக்கின்றனர். தங்களுடைய செல்வாக்கையும், உட்பகைமை யையும் வெளிப்படுத்தும் சாதனமாகப் பஞ்சாயத்துத் தேர்தல் களேக் கருதுகின்றனர். இதனுல் கிராமங்களில் சூழ்ச்சியும், எதிர் சூழ்ச்சியும், உட்கட்சியும், உட்பகையும் மலிந்து கிடக்கின்றன. கிராமத் தேர்தல்களிலும், பொதுத் தேர்தல்களிலும் உட்கட்சிகள் தனித்து நின்று செயல்படுவதில்லை; மாருக இவை இணைந்து நின்று செயல்படுகின்றன. கிராம நடுத்தர வகுப்பினர், செல்வந்தர்கள் ஆகியோர் தங்களுக்குப் பிடித்தமான அரசியல் கட்சியில் சேருகிருர்கள் என்ரே, மிகவும் செல்வாக்கான அரசியல் கட்சியில் சேர்ந்துள்ளார்கள் என்ரே கூறமுடியாது. தங்களுடைய முன்னுள் பகைவன், தன்னுடன் முன்பு போட்டி யிட்டவன் எந்தக் கட்சியில் சேர்ந்துள்ளானே அதற்கு எதிராக உள்ள கட்சியில்தான் சேர்ந்துகொள்ள விரும்புவர்.

தற்சமயம் கிராமப் பஞ்சாயத்துகளில் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றவர் அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படு வார்கள். பஞ்சாயத்துத் தேர்தலில் சில கிராமவாசிகள் அக்கறை காட்டுவதில்லை. அப்படிப்பட்ட இடங்களில் மிராசுதார்கள், உயர் சாதியினர் முதலியோர் நேரிடையாகப் பஞ்சாயத்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுகின்றனர். இன்னும் சில இடங்களில் தாங்கள் நேரிடையாகப் போட்டியிடுவதற்குப் பதிலாக தங்கள் ஆதரவாளர்களேயும், கையாட்களேயும் தேர்தலில் நிற்க வைக் கின்றனர். இங்குப் பஞ்சாயத்துகள் மறைமுகமாகச் செல்வந்தர் களின் ஆதிக்கத்தில், செல்வாக்குடைய சாதியினரின் கட்டுப் பாட்டில் இருப்பதைக் காணலாம்.

தங்களுடைய பொருளாதார நலன்களை மேம்படுத்திக் கொள்ள நினைக்கும் சில வகுப்பினர் சாதி உணர்ச்சிகளைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுகின்றனர். கிராம அமைப்பில் மேல் சாதியைச் சேர்ந்தவர்கள் (காட்டாக, க்ஷத்திரியர், பிராமணர், சீக்கியர் முதலியோர்) நிலக்கிழார் களாகவும், நடுத்தர சாதியைச் சேர்ந்தவர்கள் (அகிர், குர்மி, காராரியா) பெரும்பாலும் சாகுபடியாளர்களாகவும், தாழ்த்தப் பட்ட சாதியைச் சேந்தவர்கள் விவசாயத் தொழிலாளர்களாக வும் இருக்கின்றனர்.[17] வர்க்க அடிப்படையிலும், சாதி

[17] பார்க்கவும், அட்டவணை (3-1)

அட்டவணை 3·1

**கிராம இந்து குடும்பங்களின் சாதிவாரியான வேலைபகிர்வு (1952-54)[18]**

(மில்லியன்)

| வேலை : | இந்து குடும்பங்கள் [சாதிவாரியாக] | | | | |
|---|---|---|---|---|---|
| | மேல் சாதி: | நடுத்தர சாதி: | கீழ் சாதி : | ஷெட்யூல்டு சாதி: | மொத்தம் |
| விவசாயம் : குடியானவன்/விவசாயி | 1·1 (24·4) | 0·9 (7·6) | 1·7 (7·0) | 0·2 (1·5) | 3·8 (7·5) |
| சாகுபடியாளர் | 2·0 (43·9) | 6·5 (53·3) | 10·2 (41·8) | 3·2 (27·1) | 21·9 (41·4) |
| வாரச் சாகுபடியாளர் | 0·2 (3·9) | 0·8 (6·2) | 1·5 (6·2) | 1·0 (8·5) | 3·4 (6·5) |
| விவசாயத் தொழிலாளர் | 0·1 (1·1) | 1·5 (11·9) | 4·1 (16·8) | 4·3 (36·2) | 9·9 (18·4) |
| காடு, மீன்வளர்ப்பு, கால்நடை முதலியன | 0·02 (0·6) | 0·2 (1·4) | 0·8 (3·3) | 0·3 (2·3) | 1·3 (2·4) |
| மொத்தம்: விவசாயம் | 3·3 (73·9) | 9·8 (80·4) | 18·3 (75·1) | 8·9 (75·7) | 40·4 (76·3) |
| இதர தொழில்கள் | 1·2 (26·1) | 2·4 (19·6) | 6·1 (24·9) | 2·9 (24·3) | 12·5 (23·7) |
| மொத்தம் | 4·5 (100) | 12·2 (100) | 24·4 (100) | 11·8 (100) | 52·9 (100) |

[18] Source : George Rosen : Democracy and Economic Change in India, University of California, 1966 p. 29.

அடிப்படையிலும் கிராம வாசிகளை வகைப்படுத்தலாம். சாதி அடிப்படையில் தோன்றும் வர்க்கம் சக்தி வாய்ந்த கருவியாகி விடுகிறது. இதன் பிணைப்புசக்தி அதிகம். படியமைப்புடைய பாரத சமூக அமைப்பை நிலஉரிமை உடைய வர்க்கத்தினர் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். தாழ்த்தப்பட்ட சாதியினரை ஏழ்மையில் ஆழ்த்துவதற்குச் சாதியை ஒரு கருவியாக உயர்சாதியினர் பயன்படுத்து கின்றனர்.

கிராமவாசிகள் பிளவுபட்டு இருப்பதற்குத் தற்போதுள்ள பஞ்சாயத்துத் தேர்தல் முறையே ஒரு காரணமாக உள்ளது. சாதாரண பெரும்பான்மை வாக்குகள் அடிப்படையில் வெற்றி அடைந்த ஒரு குழுவினர் அல்லது கட்சியினர் கிராமப் பஞ்சாயத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்கின்றனர். அதற்குப் பதிலாகக் கிராமங்களில் உள்ள ஒவ்வொரு வர்க்கத்தினரும் (அல்லது சாதியினரும்) விகிதாசார அடிப்படையில் தேர்ந்து எடுக்கப்படுவார்களேயானல் போட்டியும், உட்கட்சியும் தோன்ருமல் தடுக்கமுடியும். காட்டாக, ஒற்றை மாற்று வாக்கு களின் மூலம் பஞ்சாயத்து சபையினர் தேர்ந்தெடுக்கப்படலாம். அவ்வாறு செய்வதால் பெரும்பான்மை ஆதரவு உடையவர்கள் கூடுதலான பிரதிநிதிகளையும், சிறுபான்மையினர் குறைந்த அளவிலும் பஞ்சாயத்து சபையில் இருக்கமுடியும். ஓரளவுக்கு அதிகாரத்தைக் கைப்பற்றும் போட்டி; குறைக்கப்படுவதால் உட்கட்சிகள், பிளவுகள் தோன்றுவதைத் தடுக்கலாம்.

# 4. மக்கள்தொகை வளர்ச்சி

நீண்டகால அளவில் மாறுபடும் காரணிகளை ஆராய்ந்து பார்ப்பதன்மூலம் பொருளாதார வளர்ச்சியைத் தூண்டக்கூடியதும், அதைப் பாதிக்கக் கூடியதுமான சக்திகளைப் பகுத்து அறிலாம். மக்கள்தொகை நீண்டகால ரீதியில் மாறுப்டும் ஒரு காரணியாகும். மக்கள்தொகை வளர்ச்சி நேரிடையாகவும், மறைமுகமாகவும் பொருளாதார வளர்ச்சியைக் கட்டுப்படுத்தவும், தூண்டவும் செய்கின்றன. அதைப்போலவே பொருளாதார வளர்ச்சியினாலும் மக்கள்தொகை வளர்ச்சி வேகம் பாதிக்கப்படுகின்றது. பாரதத்தின் மக்கள்தொகையை, பொருளாதார வளர்ச்சி வரலாற்றுடன் ஒப்பிட்டுப்பார்ப்பது இக்கட்டுரையின் நோக்கம். இவ்விரண்டிற்கும் உள்ள தொடர்புகளை முழுமையாகப் புரிந்து கொண்டாலன்றி பாரத மக்கள்தொகை வளர்ச்சியின் சிறப்பியல்புகளை அறியமுடியாது. எனவே, மக்கள்தொகைக்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் உள்ள தொடர்பை விளக்கும் மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாட்டை முதலில் (Theory of Demographic Transitition) தெரிந்து கொள்வோம்.

மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாடு இதற்கு முன்னர் மிகவும் பிரபலமாக உள்ள மால்தஸின் மக்கள்தொகைக் கோட்பாட்டையும், உத்தம மக்கள்தொகைக் கோட்பாட்டையும் விட ஒருபடி மேலானது. மால்தஸின் கோட்பாட்டில் நுகர்வுப்பொருள்களுக்கும், மக்கள்தொகை வளர்ச்சிக்கும் உள்ள தொடர்பு ஆராயப்பட்டது. பொதுவான உற்பத்தி புறக்கணிக்கப்பட்டது. பொதுவான உற்பத்தியை உச்சநிலையில் வைக்கக்கூடிய மக்கள்தொகையை உத்தம மக்கள்தொகை என்று கூறலாம். நடைமுறையில் உத்தம மக்கள்தொகை தொழில் நுட்ப அறிவையும் ஆராய்ச்சியையும் அடிப்படையாகக் கொண்டுள்ளன.

ஆகையால் உத்தம மக்கள்தொகையை அறுதியிட்டுக் கூறமுடியாது. தவிரவும் மக்கள்தொகையால் உற்பத்தி எவ்வாறு பாதிக்கப்படும் என்று கூறுகிறதேயல்லாமல் பொருளாதார வளர்ச்சியால் மக்கள்தொகையில் ஏற்படும் மாற்றங்கள் விளக்கப் படவில்லை.

முதன் முதலில் பொருளாதார வளர்ச்சிக்கும் மக்கள் தொகைக்கும் உள்ள தொடர்பை 'கிளாசிக்கல்' கருத்தினர் ஆராய்ந்துள்ளனர். வருமானம் உயருவதால் பிறப்பு விகிதம் அதிகரிக்கும் என்றும், அதனால் மக்கள்தொகை அதிகரிக்கும் என்றும் கூறினார்கள். 'கிளாசிக்கல்' கோட்பாட்டின்படி நாட்டு வருமானம் உயர்வதால், உடனடியாகவோ, சற்று காலம் தாழ்த்தியோ மக்கள்தொகையும் உயர்ந்து விடும். இதனால் தலா வருமானம் உயர்வு அடையாமல் (நீண்ட கால ரீதியில்) கட்டுப் படுத்தப்படுகிறது. இக்கோட்பாட்டின்படி மாறாத தலா வருமானத்தில் நீண்டகால சமநிலை ஏற்படும். இத்தகைய அசை விலாச் சமநிலையின் அடிப்படையில்தான் சமுதாயம் இயங்கும்.

'கிளாசிக்கல்' கோட்பாடு வளர்ச்சியின் ஆரம்ப கட்டத்தை மட்டுமே ஆராய்ந்தது. ஆனால், மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாடு வளர்ச்சியின் பல நிலைகளையும் ஆராய்ந்து கூறுகிறது. இக்கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு மக்கள்தொகை வளர்ச்சிக்கான பொருளாதாரக் கோட்பாட்டை, அதாவது பொருளாதார மக்கள்தொகைக் கோட்பாட்டை (Economic Theroy of Population Growth), ஹார்வி லீபன்ஸ்டீன் (Harvey Leibenstein) உருவாக்கியுள்ளார்.[1]

### மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாடு [2]

மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாட்டில் பல நிலைகள் உள்ளன. அதில் முதல் மூன்று நிலைகளை மட்டும் நாம் ஆராய்ச்சிக்காக எடுத்துக் கொள்கின்றோம்.

### முதல்நிலை

விவசாயம் முக்கிய தொழிலாக உள்ள ஒரு நாட்டை எடுத்துக்கொள்ளவும். விவசாய நாடு என்ற சொல்லிற்குப் பின் வருமாறு விளக்கம் கூறலாம். இந்த நாடு தன்னிறைவு

[1] H. Leibenstein-Economic Backwaradness and Economic Growth, 1965. Science Edition.

[2] A. J. Coale and E. M. Hoover, Population Growth and Economic Development in Low Income Countries, 1958, chap. II.

பெற்றுள்ளது. இங்கு அங்காடிகள் வளர்ச்சி அடையவில்லை. தொழில் நுட்பம் வளர்ச்சியின்றித் தேக்கமுற்று இருக்கின்றது. இந்நாடுகளில் பிறப்பு விகிதமும், இறப்பு விகிதமும் உயர்ந்த மட்டத்தில் இருக்கின்றன. பிறப்பு விகிதம் கிட்டத்தட்ட மாறாத அளவில் மிக அதிகமாக இருக்கின்றனது. (இங்கு) இறப்பு விகிதம் அந்நாட்டின் தானிய உற்பத்தி, அங்கே தோன்றும் கொள்ளை நோய்கள் ஆகியவற்றைச் சார்ந்து இருக்கும். வறட்சி அல்லது பஞ்சம் ஏற்படுவதாலும், தொத்து நோய்கள் பேரளவில் ஏற்படுவதாலும் சிறப்பு விகிதங்கள் அதிகரிக்கின்றன. இதனால் மக்கள்தொகையின் வளர்ச்சியில் நிதானமான போக்கு ஏதும் இல்லை.

மக்கள் மிகவும் ஏழ்மையில் உழலுகின்றனர். இவர்களால் சத்துள்ள உணவுப் பொருள்களை நுகரமுடியவில்லை. இங்கே சுகாதாரம், துப்புரவு முதலியன மோசமான நிலைமையில் இருக்கின்றன. இங்கு மருத்துவ வசதிகள் மிகவும் குறைவு. ஆகையால் நோய்களைத் தடுக்கவோ, நோயுற்றவர்களைக் குணப்படுத்தவோ முடியவில்லை. இக்காரணங்களினாலும் இறப்பு விகிதம் அதிகமாகக் காணப்படுகிறது.

இறப்பு விகிதத்தைப் போலவே பிறப்பு விகிதங்களும் உயர்வாக உள்ளன. பிறப்பு விகிதம் கலாசார அடிப்படையில் தோன்றிய சமூகப் பழக்கவழக்கங்களைப் பிரதிபலிக்கின்றன. மனிதன் தன்னுடைய இனம் சந்ததி இல்லாமல் அழியக்கூடாது என்று விரும்புகின்றான். இறப்புவிகிதம் மிகவும் அதிகமாக உள்ள சமுதாய அமைப்பில் தன்னுடைய குழந்தைகள் யாவும் தன் ஆயுட்காலத்திற்குப் பின்னரும் உயிரோடு வாழ்வார்கள் என்று நம்பமுடியவில்லை. இவ்வாறு இறப்பு விகிதம் அதிகமாக இருக்கின்ற ஒரே காரணத்திற்காகப் பிறப்புவிகிதங்களும் அதிகரிக்கப்படுகின்றன. இந்தச் சமுதாயங்களில் பெண்கள் இருபது வயதைக் கடக்குமுன் பல குழந்தைகளுக்குத் தாயாகி விடுகின்றனர். பொருளாதார வளர்ச்சிக்கு உதவக்கூடிய ஆதாயமுள்ள பணிகளில் பெண்கள் ஈடுபடமுடியவில்லை. ஆகையால் பெண்களுக்குச் சம வாய்ப்பும், சம அந்தஸ்தும் கொடுக்கப்படவில்லை. குழந்தைகளைப் பராமரிப்பதும், பெற்று வளர்ப்பதும் பெண்களின் முக்கிய பணிகளாகக் கருதப்படுகின்றன.

மக்கட்பேறு போற்றப்படும் அளவிற்குக் குழந்தை வளர்ப்பு, கல்வி முதலியன போற்றப்படுவதில்லை. கல்விக்கு அதிக

முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. கல்விக்காக அதிகம் செலவிடுவதும் இல்லை. அதைத்தவிர ஏழ்மை நிலையில் உள்ள பெற்றோர்கள் தங்கள் குடும்பவருமானத்தை உயர்த்திக்கொள்ளச் சிறுவர்களின் உழைப்பை உபயோகிக்கின்றனர். விவசாய வேலைகள் தீவிரமாக இருக்கும் காலங்களில் சிறுவர்கள் வேலை செய்து குடும்ப வருமானத்தை உயர்த்துகின்றனர்.

குழந்தைகள் வேறொரு காரணத்திற்காகவும் விரும்பப் படுகின்றனர். தங்கள் முதுமைப்பருவத்திலும், நோயுற்ற காலங்களிலும் குழந்தைகள் பெரிதும் உதவியாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்கின்றனர். பாரதத்தின் சமூகப் பழக்கவழக்கங்கள் காரணமாகத் தங்களுடையஈமச்சடங்குகளைச்செய்வதற்கு (ஆண்) பிள்ளை வேண்டும் என்று விரும்புகின்றனர். பலவிதமான காரணங்களினால் பிறப்பு விகிதங்கள் அதிகமாக இருக்கின்றன.

இவ்வாறு விவசாய சமுதாயங்களில் பிறப்பு விகிதமும், இறப்பு விகிதமும் தனித்தனிக் காரணங்களால் மிக உயர்ந்தமட்டத்தில் இருக்கின்றன. இவை கிட்டத்தட்ட ஒன்றுக்கொன்று சமமாக இருந்தாலும் மக்கள்தொகை நிலையாக இருப்பதில்லை. தானியக் கிடைப்பருமையும், தொத்து நோய்களும் இறப்புவிகிதங்களை உயர்த்துவதன் மூலம் மக்கள்தொகை வளர்ச்சியைக் கட்டுப் படுத்துகின்றன. மக்கள்தொகை வளர்ச்சிப்போக்கு நிதானமாக இல்லை.

### இரண்டாம் நிலை

மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாட்டின் இரண்டாவது நிலையை விளக்குவோம். விவசாய நாட்டில் பொருளாதார வளர்ச்சி ஏற்படுவதாகக் கருதுவோம். இது பெரும்பாலும் தொழில் வளர்ச்சியாக இருக்கும். தொழில் வளர்ச்சியின் காரணமாக ஓரளவிற்குத் தலா வருமானம் உயர்ந்து செல்கிறது. தொழில் வளர்ச்சியின் கூறாகப் போக்குவரத்து வசதிகள் அதிகரிக்கின்றன. உற்பத்தித் திறனும் அதிகரிக்கின்றது. பொதுச் சுகாதாரம், மருத்துவ வசதிகள் முதலியனவும் அதிகரிக்கின்றன. தலாவருமானம் உயருவதால் நல்ல உணவும், சத்துணவும் நுகர முடிகிறது. இதைப்போன்ற சூழ்நிலை வளர்ச்சியால் இறப்பு விகிதம் குறையத் தொடங்குகிறது. தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்கள் முறையான பழக்கவழக்கங்களை மேற்கொள்ளுகின்றனர். தொழில்துறையில் ஈடுபட்டவர்கள் ஆரோக்கியமாக இருப்பதற்கு உணவுப் பழக்கவழக்கங்கள் ஒரு முக்கிய காரணமாகும்.

பொருளாதார வளர்ச்சி ஏற்பட்ட பின்னர்தான் இறப்புவிகிதம் குறையும் என்று மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாடு கூறுகின்றது. இக்கோட்பாடு மேலைநாடுகளின் அனுபவங்களை விளக்குகிறது. ஆனால், தற்காலத்தில் மருத்துவ இயல் புரட்சிகரமான வேகத்தில் வளர்ந்துள்ளது. ஆகையால் அதிக செலவு இல்லாமல் தொத்து நோய்களைத் தடுக்க முடிகிறது. தொழில் வளர்ச்சி அடையாத நாடுகள், அதிக செலவின்றிக் கொள்ளை நோய்களை அகற்றி விடுகின்றன. நோய்களை ஒழிப்பதும், மருத்துவ வசதிகளை விரிவுபடுத்துவதும் 'சேமநல' அரசின் முக்கிய குறிக்கோள்களாக இருக்கின்றன. தற்காலத்தில் தொழில் வளர்ச்சி ஏற்படவில்லை என்றாலும் மருத்துவத் துறையின் வளர்ச்சியால் இறப்பு விகிதங்கள் கணிசமாகக் குறைக்கப்படுகின்றன.

இறப்பு விகிதங்கள் தொழில் வளர்ச்சி அல்லது மருத்துவ வளர்ச்சியால் கட்டுப்படுத்தப்படுகின்றன. இதில் ஏற்படும் மாற்றங்கள் பிறப்பு விகிதத்தை மாற்றுவதில்லை. இறப்பு விகிதத்தைக் குறைத்தல் தற்கால 'சேம நல' அரசின் குறிக்கோள்களுக்கு ஏற்றதாகவும், மரபான சமூக அமைப்பில் நிலவக்கூடிய கலாசார பழக்கவழக்கங்களுக்கு முரண்படாமலும் இருக்கின்றன. ஆகையால் இறப்புவிகிதக் குறைப்பைத் தடையின்றி வரவேற்கின்றனர்.

பிறப்புவிகிதம் மாறாமல் இருப்பதாலும், இறப்புவிகிதம் குறைந்து செல்வதாலும் மக்கள்தொகை பெருக்கம் அடைகிறது. மேலைநாடுகளின் வரலாற்றில் பொருளாதார வளர்ச்சியின் ஒரு கூறாக மக்கள்தொகை பெருகியது.

### மூன்றாம் நிலை

பொருளாதார வளர்ச்சி தொடர்ந்து ஏற்படுவதாகக் கருதுவோம். தொழில்கள் வளர்ச்சி அடைகின்றன. மக்கள் ஆதாயமுள்ள வேலை வாய்ப்புகளை நாடி இடம்பெயருகின்றனர். இவர்கள் பெரும்பாலும் நகரங்களை நோக்கிச் செல்கின்றனர். நகரங்களின் வளர்ச்சி அதிகரிக்கின்றது. நகர வாழ்க்கையும், கல்வி, பெண்களின் முன்னேற்றம் முதலியனவும் நாளடைவில் புதிய பழக்கவழக்கங்களை ஏற்படுத்திப் பிறப்புவிகிதத்தைக் குறைக்கின்றன.

தொழில்கள், நகர வாழ்க்கை ஆகிய இரண்டும் அடிப்படையான சமூகப் பழக்கவழக்கங்களை எங்ஙனம் மாற்றுகின்றன

என்பதும், அவை பிறப்புவிகிதத்தை எவ்வாறு குறைக்க உதவியாக இருக்கின்றன என்பதும் மூன்றும் நிலையில் விளக்கப் படுகின்றன.

நகரங்களுக்குக் குடியேறிய மக்கள் ஒரு தலைமுறைக்குள் தங்கள் வருமான வாய்ப்புகளை உயர்த்திக் கொள்வதில் நாட்டம் கொள்ளுகின்றனர். சமூகத்தில் குடும்பத்தின் நிலையை உயர்த்திக் கொள்ளுதல் இவர்களின் நோக்கமாகும். இதற்குச் சிறிய குடும்பம் உதவியாக உள்ளது. இக்கருத்தை ஒரு எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம். ஒரு புறம் மூடிய குழாயைத் திரவத்தில் குப்புற அமுக்கவும். காற்று மண்டலத்தின் அழுத்தம் காரணமாக வெளிப் புற மட்டத்தை விடத் திரவத்தின் உள்புற மட்டம் உயர்ந்து இருக்கும். திரவமட்டம் குழாயில் எந்த அளவுக்கு உயரும் என்பது மேற்படி குழாயின் குறுக்குப் வெட்டு பரப்பு அளவைச் சார்ந்து இருக்கும். அதாவது குழாயின் விட்டம் சிறியதாக இருந்தால் திரவமட்டம் அதிகமாகவும், குழாயின் விட்டம் பெரியதாக இருந்தால் திரவமட்டம் குறைவாகவும் உயரக்கூடும். இதைப்போலவே ஒரு சமுதாயத்திலும் (ஒரு குடும்பத்தினர்) தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ள வேண்டுமானால் குடும்பத்தின் அளவு சிறியதாக இருக்க வேண்டியது அவசியம். பெரிய குடும்பங்களைவிடச் சிறிய குடும்பங்கள் சமூகப்படி அமைப்பில் எளிதாக முன்னேற்றம் அடையமுடியும்.[3]

மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாட்டின் முதல் நிலையில் விவசாய சமுதாயங்களில் இறப்பு விகிதங்கள் அதிமாக இருக் கின்றன என்றும், அதை ஈடு செய்யும் அளவிற்குப் பிறப்பு விகிதங்களை அதிகரிக்க வேண்டியது அவசியமாகியுள்ளது என்றும் கூறினோம். தொழில், நகர வளர்ச்சியாலும், மருத்துவ வசதிகளாலும் இரண்டாம் நிலையில் இறப்புவிகிதங்கள் குறைந்துள்ளன. இறப்புவிகிதம் குறைந்ததை உணருவதற்கு ஒரு தலைமுறை ஆகலாம். இறப்புவிகிதம் குறைந்துள்ள நிலையில் உயர்ந்தமட்ட பிறப்புவிகிதங்கள் அவசியமாக இல்லை. இனநலன் களைப் பாதுகாத்துக் கொள்வதற்குக் குறைந்த பிறப்புவிகிதங் கள் போதுமானதாக இருக்கின்றன.

விவசாய சமுதாயத்தில் குழந்தைகளைப் பராமரிப்பதிலும், வளர்ப்பதிலும் அதிக கவனம் செலுத்தப்படவில்லை. குழந்தை களின் கல்விக்காக அதிக முயற்சியோ, செலவோ செய்யப் படுவதில்லை. விவசாய சமூகத்தினரைப்போலத் தொழில் துறை

[3] இக்கருத்தை ஆங்கிலத்தில் 'Social Capillarity thesis' என்பர்.

களில் ஈடுபட்ட நகர மக்களால் இருக்க முடிவதில்லை. இவர்கள் தங்களுடைய திறன்களைக் கொண்டு வருமானம் ஈட்டுகின்றனர். எனவே, குழந்தைகளுக்குக் கல்வி அளிக்கவும், திறன்களை அதிகரிக்கவும், பயிற்சி அளிக்கவும் அதிகம் செலவிடுகின்றனர். குழந்தைகளை வளர்ப்பதில் அதிக செலவு ஏற்படுகின்றது.

தொழில்வளர்ச்சியாலும், சேமநல அரசின் கொள்கைகளாலும் வயது முதிர்ந்த பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் உதவியை எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விடுகின்றன அல்லது பிள்ளைகள் வேலை செய்யும் இடத்தில் பெற்றோர்களைப் பராமரிக்க இயலாமல் போய்விடுகிறது. முதலில் கூறப்பட்டதற்கு ஓய்வுகாலநிதி, ஓய்வுகால உதவிச் சம்பளம், விபத்துகள், மற்றும் நோய் ஈட்டுறுதி முதலியன காரணமாக இருக்கின்றன. இரண்டாவதற்குத் தொழிலாளர்கள் வேலைதேடி இடம் பெயருதல் காரணமாக இருக்கும்.

விவசாய சமுதாயங்களில் சிறுவர்களை வருமானம் ஈட்டும் பணிகளில் அமர்த்திக் குடும்ப வருமானத்தை அதிகரிக்க முடியும். ஆனால், தொழில் வளர்ந்துள்ள நகரங்களில் சிறுவர்களை வேலைக்கு அமர்த்துவதைச் சட்டம் தடை செய்துள்ளது. எனவே, குடும்பவருமானத்தை அதிகரிக்கச் சிறுவர்கள் உதவி செய்வதில்லை. ஆனால், பெண்களை அதற்குப் பயன்படுத்தலாம். எனவே, பெண் தொழிலாளர்கள் அதிகம் வேலைதேடி வருகின்றனர். பெண்களின் கல்வியும், பெண்களின் வேலையும் குடும்பக்கட்டுப்பாட்டை அவசியமாக்குகின்றன.

இவ்வாறாக நகர வாழ்க்கை, கிராம வாழ்க்கையிலிருந்து வேறுபடுகின்றது. விவசாயத்தை மையமாகக் கொண்ட பழக்கவழக்கங்கள் தொழில் துறையை மையமாகக் கொண்ட பழக்கவழக்கங்களிலிருந்து முற்றிலும் வேறுபடுகின்றன. சமூகத்தின் பழக்கவழக்கங்கள், மரபுகள் மாறியிருப்பதை எடுத்துக்காட்டும் வகையில் பிறப்புவிகிதம் குறைகிறது. சிறிய குடும்பம் பொருளாதார முன்னேற்றத்தை ஊக்குவிக்கின்றது. குழந்தைகளின் உதவியைப் பெற்றோர்கள் எதிர்பார்க்க வேண்டியதில்லை. அதே சமயம் குழந்தைகளின் பராமரிப்புச் செலவுகள் அதிகமாக இருக்கின்றன. பெண்கள் வேலை பார்ப்பது அவசியமாகி விடுகிறது. இவை யாவும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றுகின்றன. எனவே, புதிய மாறுபட்ட சூழலில் பிறப்பு விகிதத்தைக் குறைப்பது கட்டாயமாகி விடுகிறது.

இறப்புவிகிதம் குறைவதற்குத் தனி ஒரு குடும்பத்தினர் எவ்வித முயற்சியும் எடுக்கவில்லை. சமூகத்தின் சூழ்நிலை மாற்றங்கள், பொது சுகாதாரம், பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர், நோய்த்தடுப்பு இயக்கம் முதலியன காரணமாக இருக்கின்றன. ஆனால், பிறப்புவிகிதம் குறைய வேண்டுமானால் ஒவ்வொரு குடும்பத்தினரும் விரும்பி முயற்சி செய்யவேண்டும். இது மருத்துவ வளர்ச்சியை மட்டும் சார்ந்து இருக்கவில்லை. சிறிய குடும்பம் போதும் என்றும், எனவே குடும்பக் கட்டுப்பாடு அவசியம் என்றும் ஒவ்வொரு குடும்பத்தினரும் விரும்பி முயற்சி செய்தாலன்றிப் பிறப்புவிகிதத்தைக் குறைக்க முடியாது. மருத்துவத்துறையில் மலிவாகவும், நம்பகரமாகவும் சாதனங்கள் கிடைத்தாலும் அதைப் பயன்படுத்த வேண்டும் என்று தீர்மானிப்பதை ஒரு பொருளாதாரத் தீர்மானமாகவே கருத வேண்டும்.

மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாட்டின் மூன்றும் நிலையில் பிறப்புவிகிதம் குறையத் தொடங்குகிறது என்று கூறினோம். பிறப்புவிகிதம் முன்பு இருந்த உயர்ந்த விகிதத்தி லிருந்து வீழ்ச்சி அடைவதால் மக்கள்தொகைப் பெருக்கம் கட்டுப் படுத்தப்படும் அல்லது குறையும் என்று எதிர்பார்க்கக்கூடாது. மக்களின் வருமானத்திலும், சுற்றுச் சூழலிலும் பொருளாதார வளர்ச்சியால் தோன்றிய மாறுதல்கள் இறப்புவிகிதத்தை மேலும் குறைத்து விடுகின்றன. இவ்வாறு இறப்புவிகிதத்தில் ஏற்படும் மாற்றங்களை ஈடு செய்யும் அளவிற்குப் பிறப்புவிகிதம் குறைக்கப் படுவதில்லை. எனவே, மக்கள்தொகை தொடர்ந்து பெருக்கம் அடைகிறது.

இக்கோட்பாட்டில் கூறப்பட்ட கருத்துகள் பெரும்பாலும் மேலைநாடுகளின் வரலாற்று அனுபவங்களை மையமாகக் கொண்டுள்ளன. அதன்படி இரண்டாம் நிலைக்கும்—மூன்றும் நிலைக்கும்—அதாவது இறப்பு விகிதம் குறைக்கப்படுவதற்கும், பிறப்பு விகிதம் குறைக்கப்படுவதற்கும்—சுமார் ஒரு தலைமுறை காலதாமதம் ஏற்படும் என்று கூறப்பட்டது. அடுத்து, தொழில் வளர்ச்சி, நகரங்களின் வளர்ச்சி ஆகியவை இரண்டாவது, மூன்றுவது நிலைகளைத் தோற்றுவிக்க முன் நிபந்தனைகளாக இருக்கவேண்டும் என்று கூறப்படுகிறது. மக்கள்தொகை நிலை மாற்றக் கோட்பாட்டில் கூறப்பட்ட இவ்விரு கருத்துகளும் தற் காலத்தில் வளரும் நாடுகளுக்குப் பொருந்தவில்லை. இந்த நாடு களில் தொழில் வளர்ச்சி ஏற்படும் முன்னரே, மருத்துவத்துறை யின் புரட்சிகரமான விரிவாக்கத்தால் இறப்புவிகிதம் குறைக்கப்

பட்டுள்ளது. ஆகையால் தொழில் வளர்ச்சி கணிசமான அளவிற்கு ஏற்படும் முன்னதாகவே மக்கள்தொகை பெருக்கத்தில் அதிக வேகம் காணப்படுகிறது. தொழில்கள் வளரும் முன்னதாக (பொருளாதார வளர்ச்சி ஏற்படும் முன்னதாக) மக்கள் தொகைப் பெருக்கம் ஏற்படுகிறது.

மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாட்டில் பொருளாதார வளர்ச்சியின் முதல்கட்டத்தில் இறப்புவிகிதம் குறையும் என்றும், அடுத்த கட்டத்தில் பிறப்புவிகிதம் குறையும் என்றும் கூறப்பட்டது. இன்றையதினம் பாரதம், இலங்கை போன்ற நாடுகளில் பொருளாதார வளர்ச்சி துரிதமாக ஏற்படும் முன்னதாகவே, மருத்துவ வசதிகளின் விரிவாக்கத்தால் இறப்புவிகிதம் குறைக்கப்பட்டு மக்கள்தொகை மிக அதிக வேகத்தில் பெருக்கம் அடைந்துள்ளது. பொருளாதார வளர்ச்சிக்கு முன்னதாக இறப்புவிகிதம் குறைந்து விட்டதால் ஏற்படும் பிரச்சினைகளைச் சமாளிக்க, பிறப்புவிகிதத்தைக் குறைத்துக்கொள்ள முயலுகின்றனர். மக்கள்தொகைப் பெருக்கத்தின் காரணமாக (இவர்கள்) தங்கள் தலா வருமானம் குறைந்து விடாமல் பார்த்துக்கொள்ள வதற்காகப் பொருளாதார வளர்ச்சியை அதிகரிக்க முயலுகின்றனர். பொருளாதார வளர்ச்சியால் மக்கள்தொகைப் பெருக்கம் தூண்டப்படுவதற்குப் பதிலாக, தனித்து இயங்கும் புறக்காரணியால் மக்கள்தொகை பெருக்கம் அடைவதும், அதன் விளைவாகப் பொருளாதார வளர்ச்சி உந்தப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

### பாரத மக்கள் தொகை

உலக மக்கள்தொகை, 1969–இல், **3,552,000** மில்லியன் என்று ஐ. நா. அறிக்கை ஒன்று கூறுகிறது. சீனர்கள் **740** மில்லியன் என்றும், பாரத மக்கள் 537 மில்லியன் (1969) என்றும் கூறப்படுகிறது. உலகில் சீனாவிற்கு அடுத்த மிகப்பெரிய நாடாகப் பாரதம் விளங்குகிறது. உலக நிலப்பரப்பில் 2·4%மும், உலக மக்கள்தொகையில் 14%மும், உலக வருமானத்தில் 1.5%மும், பாரதத்தின் பங்காக உள்ளன என்று பேராசிரியர் சந்திரசேகரன்[4] கூறுகின்றார். மக்கள்தொகைக் கணிப்பிற்கு முன்னர் அவர் எழுதிய கட்டுரையில் சில வியப்பூட்டும் தகவல்களைக் கொடுத்துள்ளார். பாரதத்தில் ஒன்றரை விநாடிக்கு ஒரு குழந்தை பிறக்கிறது. ஆண்டு ஒன்றுக்கு 21 மில்லியன் குழந்தைகள் பிறக்கின்றன. பாரத மக்கள்தொகையில் இதை

[4] The Hindu, Weekly Magazine-24-1-'71.

விகிதப்படுத்திஞல் ஆயிரத்திற்கு 39 ஆக இருக்கும். ஆண்டு தோறும் 8 மில்லியன் மக்கள் (பல வயதுகளில்) மடிகின்றனர். ஒரு வயது நிரம்பாத குழந்தைகள் ஒவ்வொரு ஆண்டிலும் 2 மில்லியன் மடிகின்றனர். இறப்புவிகிதம் ஆயிரத்திற்கு 14 ஆக உள்ளது. ஆண்டுதோறும் 13 மில்லியன் விதம் மக்கள்தொகை உயர்ந்து வருகின்றது. இது ஆஸ்திரேலியா அல்லது ஹாலந்து நாட்டின் மொத்த மக்கள்தொகைக்குச் சமமாக உள்ளது. ஆண்டு தோறும் அதிகரிக்கும் மக்கள்தொகை பாரதத்தின் மக்கள் தொகையில் 2·5% ஆக உள்ளது. இதே விகிதத்தில் பாரத மக்கள்தொகை உயர்ந்து செல்லுமாஞல் இந்த நூற்றாண்டு முடிவு பெறும் முன்னர் **1000** மில்லியன் மக்கள் பாரதத்தில் இருப்பார்கள்.

### மக்கள்தொகை வளர்ச்சி

1901இல் பாரத மக்கள்தொகை 238 மில்லியஞக இருந்தது. 1971இல் இது **547** மில்லியஞக உயர்ந்துள்ளது.[5] 70 ஆண்டு களில் 130% மக்கள்தொகை பெருகியுள்ளது. இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் இருந்ததைப்போல $2\frac{1}{4}$ மடங்கிற்கும் அதிகமாக விரிவடைந்துள்ளது. இந்த வளர்ச்சி வேகம் ஆரம்பம் முதல் ஒரு சீராக இல்லை. இதில் இரு முக்கிய திருப்புமையங்கள் உள்ளன. முதல் திருப்புமையம் 1921-லும், இரண்டாவது திருப்புமையம் 1951-லும் ஏற்பட்டன. பாரத மக்கள்தொகை வளர்ச்சியில் மூன்று கட்டங்கள் உள்ளன. முதல் கட்டத்தில், 1901 முதல் 1921 வரை உள்ள இருபது ஆண்டுகளில் மக்கள் தொகை 5·42% அதிகரித்தது. இரண்டாவது கட்டத்தில் 1921 முதல் 1951 வரை, (30 ஆண்டுகளில்) 40·63% அதிகரித் துள்ளது. மூன்ருவது கட்டம் 1951-லிருந்து ஆரம்பமாகிறது. 1951-71 ஆண்டுகளில் மக்கள்தொகை **51·5%** உயர்ந்துள்ளது. மக்கள்தொகை வளர்ச்சி வேகம் ஒவ்வொரு கட்டத்திலும் மேல் நோக்கி உயர்ந்து செல்கிறது. இரண்டாவது கட்டத்தில் உள்ள முப்பது ஆண்டுகளில் உயர்ந்ததைவிட, மூன்ருவது கட்டத்தில் 20 ஆண்டுகளில் அதிக வேகமாக மக்கள்தொகை உயர்ந் துள்ளதைக் குறிப்பிட வேண்டும்.

உலக மக்கள்தொகை, பாரத மக்கள்தொகை ஆகிய இரண்டின் வளர்ச்சியிலும் 1921 ஒரு முறிவுச் சமனில ஆண்டாக உள்ளது. 1921-க்கு முன்னர் பாரதத்தைவிட உலக மக்கள்தொகை அதிக வேகமாக அதிகரித்தது. 1921-க்குப்

[5] பார்க்கவும்: அட்டவணை, 4.1

அட்டவணை 4·1

## இருபதாம் நூற்றாண்டில் மக்கள்தொகை வளர்ச்சி[6]

| ஆண்டு | மக்கள் தொகை. | பத்தாண்டுகளில் அதிகரித்த சதவீதம் |
|---|---|---|
| 1901 | 238, 396, 327 | — |
| 1911 | 252, 093, 390 | + 5.75 |
| 1921 | 251, 321, 213 | — 0.31 |
| 1931 | 278, 977, 238 | + 11.00 |
| 1941 | 318, 660, 580 | + 14.22 |
| 1951 | 361, 088, 090 | + 13.31 |
| 1961 | 439, 234, 771 | + 21.51 |
| 1971 | 546, 955, 945+ | + 24.57 |

பின்னர் உலக மக்கள்தொகை வளர்ச்சி வேகத்தைவிடப் பாரதத்தில் அதிக வேகமாக மக்கள்தொகை வளர்ந்துள்ளது. உலக மக்கள்தொகை 1921-51இல் 33%லும், பாரத மக்கள் தொகை 43·63%-திலும் உயர்ந்துள்ளன.

### பத்தொன்பதாவது நூற்றாண்டு வரை

இந்தியாவின் மக்கள்தொகை 16-வது நூற்றாண்டின் இறுதியில் 100 மில்லியனாக இருந்தது.[7] அதன்பின் 1872 வரை மக்கள்தொகை பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. மேற்படி

[6] Source : The Gazetteer of India, P. 325. (1965).

+ தற்காலிகமானது (அதிகாரபூர்வமானது அல்ல).
Source : The Hindu, Dt. 12. Apr. 1971 & 9. May. 1971.

[7] Vera Anstey-ibid, P. 38.

ஆண்டில்தான் முதல் முறையாக மக்கள்தொகை கணிக்கப் பட்டது. சுமார் ¾ நூற்றாண்டில் மக்கள்தொகை இருமடங்குகள் (அதைவிடச் சற்று அதிகமாக) உயர்ந்துள்ளது. இந்த மக்கள் தொகை வளர்ச்சியில் பெரும்பகுதி பத்தொன்பதாம் நூற்றாண்டில் தான் ஏற்பட்டுள்ளது (1800 முதல் 1872 வரை). இதுபற்றி நேரிடையான விவரங்கள் ஏதும் கிடைக்கவில்லை என்றாலும், மறைமுகமான ஆதாரங்களைக் கொண்டு மக்கள்தொகை வளர்ச்சியை அறிய முடியும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் மக்கள்தொகை வளர்ச்சியுற்றதால் நில-ஆள் விகிதம் பாதகம் அடைந்தது. இக்காலத்தில் நிலத்தின் மதிப்பு உயர்ந்துள்ளது. பிரிட்டிஷ் ஆட்சியின் பயனாகச் சட்ட ஒழுங்கு நிலை சீர்பட்டதும் குறிப்பிடத்தக்கது. இது மக்கள்தொகை வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தது.

சென்ற நூற்றாண்டில் மக்கள்தொகை வளர்ச்சியில் நிலையற்ற போக்கு காணப்பட்டது. பஞ்சங்களும், கொள்ளைநோய்களும் கூடுதலான இறப்பு விகிதத்திற்குக் காரணமாக இருந்தன. ஒவ்வொரு முறை பஞ்சம் ஏற்படும் போதும் அதைத் தொடர்ந்து கொள்ளைநோய்கள் ஏற்பட்டன. 1896இல் பம்பாயில் 'ப்யூபோனிக் பிளேக்கு' ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து நாடெங்கிலும் 'மலேரியா' என்ற முறைக்காய்ச்சல், கருங் காய்ச்சல் (Kela-azar), கழிச்சல் ('காலரா') முதலியன ஏற்பட்டன. இதைப்போன்ற கொடிய நோய்கள் சென்ற நூற் றாண்டில் அதிகம் இருந்ததால் மக்கள்தொகைப் போக்கில் நிலை யற்ற தன்மை காணப்பட்டது. இது இருபதாம் நூற்றாண்டில் முதல் இருபது ஆண்டுகள் வரை நீடித்தது. 1901-11 ஆண்டு களில் மக்கள்தொகை 5.75% அதிகரித்தது. ஆனால் 1911-21 ஆண்டுகளில் 0.31% குறைந்தது. மக்கள்தொகை குறைந்ததற்கு இரு முக்கிய காரணங்களைக் கூறலாம். 1918—1919இல் இந்தியாவில் பஞ்சம் ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து 'இன்ஃபுளுயன்ஸா' காய்ச்சல் கொள்ளைநோயாகப் பரவியது. 1918-லும், 1919-லும் 125 மில்லியன் மக்களுக்கு 'இன்ஃபுளு யன்ஸா' காய்ச்சல் ஏற்பட்டது. இதில் குறைந்தது **13** மில்லியன் மக்கள் இறந்தனர்.[8] 1896-லிருந்து 1921-க்குள் பிளேக்கு நோயால் **33.6** மில்லியன் மக்கள் இறந்துள்ளனர்.[9]

1901-10 ஆண்டுகளில் பிளேக்கு நோய், அதுவரை கண்டிராத அளவுக்கு ஏற்பட்டது. இதனால் **5·12** மில்லியன்

[8] V. B. Sirgh, (Ed). ibid. P. 105.

[9] Vera, Anstey ibid. P. 39. footnote 4.

மக்கள் இறந்தனர். இந்த ஆண்டில் பெரியம்மையும், கழிச்சலும் முறையே 0.93, 3.74 மில்லியன் மக்களைப் பலிவாங்கின.

இந்தக் கொள்ளைநோய்கள் மக்களிடையே பீதியை ஏற்படுத்துகின்றன. ஆகையால் மக்களின் கவனத்தை அதிகம் கவருகின்றன. இவற்றால் மடிந்த மக்கள்தொகை நாம் பீதி அடையும் அளவிற்கு அதிகமாக இல்லை. மொத்தச் சாக்காடுகளில் ஐந்து முதல் பத்து சதவீதம் வரை இந்தக் கொள்ளைநோய்களினால் ஏற்படுகின்றன. இதைவிட அதிகக் கொடுமைகளை முறைக் காய்ச்சல் ஏற்படுத்தியுள்ள போதிலும் மக்கள் அதை அறியவில்லை. இந்தியாவில் இறந்தவர்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் முறைக்காய்ச்சலால் இறந்துள்ளனர் (கியான்சந்த்). ஆண்டு ஒன்றுக்கு ஆயிரத்திற்கு ஐந்து பேர் முறைக்காய்ச்சலால் மடிகின்றனர் என்று கிங்ஸ்லே டேவிஸ் கூறியுள்ளார். பிளேக், பெரியம்மை, கழிச்சல் ஆகிய மூன்று நோய்களாலும் ஏற்பட்ட சாக்காட்டைப் போல மூன்று மடங்கு பேர் முறைக்காய்ச்சலால் மட்டும் இறந்துள்ளனர். பாரத மக்கள்தொகையை ஆராய்ந்த கோல், ஹூவர் ஆகிய இருவரும், 1951 வரை ஏற்பட்டுள்ள 10 அல்லது 11 மில்லியன் சாக்காடுகளில் சுமார் 2 மில்லியன் சாக்காடுகள் முறைக்காய்ச்சலால் ஏற்பட்டிருக்கலாம் என்று கண்டுபிடித்துள்ளனர். இலங்கையில் முறைக்காய்ச்சலால் இறந்தவர்கள் தொகையைக்கொண்டு பாரதத்தில் இந்நோயால் மடிந்தவர்களைக் கண்டுபிடித்துள்ளனர். இங்ஙனம் முறைக் காய்ச்சலால் இறந்தவர்களைவிட அதிகமானவர்கள் இந்நோயால் பீடிக்கப்பட்டனர். இந்நோய் பீடிக்கப்பட்டவர்களின் உடல் வலிமை, உழைக்கும் ஆற்றல் முதலியன பெரிதும் பாதிக்கப் படுகின்றன. இவர்கள் சாதாரண மக்களைப்போல மீண்டும் ஆரோக்கியத்தை அடைவதில்லை. இதனால் ஒரு முறை 'மலேரியா'வினால் பீடிக்கப்பட்டவர்களின் உற்பத்தித் திறன் மிகவும் குறைந்து காணப்படுகிறது.

1921 வரை உள்ள மக்கள்தொகை வளர்ச்சி, நிலைமாற்றக் கோட்பாட்டின் முதல் பகுதியாக உள்ளது. இக்காலத்தில் மக்கள்தொகையில் நிலையற்ற தன்மை காணப்பட்டது. பஞ்சங்கள், கொள்ளைநோய்கள் இறப்புவிகிதத்தை அதிகரித்தன.

1921-க்குப் பின்னர் பெரிய பஞ்சங்கள் ஏற்படவில்லை. இதற்கு விதிவிலக்காக 1943 பஞ்சத்தைக் கூறவேண்டும். இரண்டாவது உலகப்போரில் அரசாங்கம் முழுமையாக ஈடுபட்ட சமயத்தில், வெளிநாடுகளிலிருந்து தானியத்தை—முக்கியமாகப்

பர்மாவின் வீழ்ச்சியால் அங்கிருந்து—இறக்குமதி செய்ய முடியவில்லை. வங்காளப் பஞ்சத்தில் இறந்தவர்கள் தொகை குறைந்தது 1.5 மில்லியன் என்றும், அதிக அளவு 3 மில்லியன் என்றும் கருதுகின்றனர்.

1921-க்குப் பின்னர் மக்கள்தொகையின் ஆண்டு ஒன்றிற்கான சராசரி வளர்ச்சி வேகம் (1951 வரை) குறைந்தது 1.1% ஆகவும், அதிக அளவு 1.4% ஆகவும் இருந்தது. இந்த முப்பது ஆண்டுகளில் சராசரியாக இறப்புவிகிதம் 1000-க்கு 30-க்கு மேலும், பிறப்புவிகிதம் 1000-க்கு 50-க்கு அதிகமாகவும் இருந்துள்ளன.

1951-க்குப் பின் மக்கள்தொகை வளர்ச்சி வேகம் மேலும் அதிகரித்தது விடுதலைக்குப் பின்னர் பொருளாதாரத் திட்டங்கள் உருவாக்கப்பட்ட காலத்திலிருந்து மக்கள்தொகையும் சராசரியாக **2.3** வீதத்தில் (கடந்த 20 ஆண்டு காலமாக) அதிகரித்து வருகின்றது. இதற்கு முன்னர் இருந்ததைவிட வளர்ச்சி வேகம் இரட்டிப்பாக உயர்ந்தது என்று சொல்ல வேண்டும். பிறப்புவிகிதம் கிட்டத்தட்ட அதே மட்டத்திற்கு இருந்தாலும், இறப்புவிகிதம் குறைந்து செல்வதால் மக்கள் தொகை அதிகரித்துச் செல்கிறது. இதில் முக்கியமாக 'டி.டி.டி.' (D.D.T.) மருந்தும், நச்சுக்கொல்லி மருந்தும் குறிப்பிடத்தக்கவை. 1951-க்குப் பின்னர் மக்கள்தொகைக் கோட்பாட்டின் இரண்டாம் நிலை ஒரு குறிப்பிட்ட வேறுபாட்டுடன் காணப் பட்டது. பாரதத்தில் தொழில் வளர்ச்சி குறிப்பிடத்தக்க அளவுக்கு ஏற்படவில்லை. தொத்துநோய்த் தடுப்பு மட்டுமே தீவிரமாகச் செயல்படுத்தப்பட்டது. ஆகையால் மக்கள்தொகை வளர்ந்து சென்றது.

1941 ஆம் ஆண்டில் தயாரிக்கப்பட்ட இந்திய முறைக் காய்ச்சல் படம் (இந்தியாவில் 'மலேரியா' அடிக்கடி பிடிக்கும் பகுதிகளைக் காட்டும் படம்) ஒன்று தயாரிக்கப்பட்டது. கிட்டத்தட்ட வடஇந்தியா முழுவதும், மத்திய இந்தியா, தென்இந்தியப் பீடபூமியின் நடுப்பகுதியிலிருந்து தென்புறம் திருச்சி மாவட்டம் வரை முறைக்காய்ச்சல் அடிக்கடி பீடித்துள்ள பகுதிகள் ஆகும். இவ்வாறு முறைக்காய்ச்சலால் பீடிக்கப்பட்ட பகுதிகளில்தான் 1831-லிருந்து 1931 வரை பஞ்சங்கள் அடிக்கடி ஏற்பட்டுள்ளன. 1951-க்குப்பின் மேற்படி பகுதிகளில் பஞ்சங்கள் ஏற்படாமல் இருந்தன. இங்கு முறைக்காய்ச்சலும் கட்டுப் படுத்தப்பட்டது. இதற்கு 'டி. டி. டி.' (D. D. T.) பெரிதும்

உதவியது. பெரிய நிலப்பரப்பிலிருந்து பஞ்சமும் கொள்ளை நோயும் அகற்றப்பட்டதால் 1951-க்குப் பின்னர் மக்கள் தொகைப்பெருக்கம் (இப்பகுதிகளில்) 2%-திற்கும் அதிகமாக (ஆண்டுதோறும்) பெருகியுள்ளது.

குறைந்த வருமானம் உள்ள பாரதம் போன்ற நாடுகளில் மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாடு முழுமையாகப் பொருந்த வில்லை என்று கூறியுள்ளோம். பாரதத்தில் தொழில்கள் வளர்ந்து வருகின்றன. இக்காலத்தில் மக்கள்தொகை வளரும் வேகம்—இறப்புவிகிதக் கட்டுப்பாட்டால்—அதிகரித்தது. இக்கட்டம் 1951-லிருந்து ஆரம்பமாகியது. சிறந்த நிபுணர்கள் பலர் எதிர்பார்த்ததைவிட அதிக வேகத்தில் மக்கள்தொகை அதிகரித்தது. இவ்வாறு வளரும் மக்கள்தொகை, திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியின் பலனை அரித்துவிடும் என்று நினைத்தார்கள்.[10] இந்த நோக்கத்தோடு குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் தீவிரமாகச் செயல்படுத்தப்பட்டது. இது எதிர்பார்த்த அளவிற்குப் பலன்களை நல்க ஆரம்பித்துள்ளது. காட்டாக, 1971இல் மக்கள்தொகை 560-க்கு அதிகமாகஇருக்கும் என்று மதிப்பிட்டார்கள். உண்மையில் மக்கள்தொகை 547 மில்லியனாக மட்டுமே இருந்தது. எதிர்பார்த்ததைவிட 13 மில்லியன் குறைவாக இருப்பதற்குக் குடும்பக் கட்டுப்பாடு ஒரு முக்கிய காரணமாக இருக்கும் என்று ஊகிக்கின்றனர். இது உறுதிப் படுமானால் 1961-லிருந்து நிலைமாற்றக்கோட்பாட்டின் மூன்றாவது நிலை பாரதத்தில் தோன்றிவிட்டதாக நினைக்க லாம். இறப்புவிகிதம் அதிக வேகத்துடனும், பிறப்புவிகிதம் குறைவான வேகத்திலும் குறைந்துள்ளன. எனவே மக்கள் தொகை பெருகும் வேகம் மேலும் அதிகரித்துள்ளது எனலாம்.

பாரத மக்கள் பொருளாதார வளர்ச்சி முழுமையாக ஏற்படும் வரை சமூகப் பழக்கவழக்கங்களை மாற்றாமல் இருக்க விரும்ப வில்லை. பொருளாதார வளர்ச்சியின் ஒரு கூறாகச் சமூகப் பழக்க வழக்கங்களையும் மாற்றிக்கொள்ள முயலுகின்றனர். அதன் ஒரு குறியீடாகக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் உள்ளது. திட்ட

[10] மக்கள்தொகை 13 மில்லியன் விதம் ஆண்டுதோறும் அதிகரிப்பதால் ஏற்படும் விளைவுகளை டாக்டர் சந்திரசேகரன் விவரித்துள்ளார். கூடுதல் அடையும் மக்கள் தொகையால் ஆண்டுதோறும் அதிகப்படியாக 126,500 பள்ளிக்கூடங்களும், 372,500 ஆசிரியர்களும், 2,509,500 வீடுகளும், 188,774,000 மீட்டர் துணியும், 12,040 குவிண்டால் உணவு தானியங்களும், 4,000,000 புதிய வேலை வாய்ப்புகளும் தேவைப் படும். 1950-70 வரை உள்ள இருபது ஆண்டுகால முன்னேற்றத்தைப்போல ஒவ்வொரு 30 நாட்களிலும் உற்பத்தியை அதிகரித்தாலன்றி மேற்படி அதிகரிக்கும் மக்களுக்கு வசதியான வாழ்க்கையை அளிக்கமுடியாது. முன் கூறியபடி The Hindu, நாள்: 24-1-'71.

மிட்ட குடும்பம் ஓரளவிற்கு வெற்றியடைந்தாலும் அது வெற்றி தான். மக்களின் மனப்பான்மையிலும் சமூகப் பழக்கவழக்கங்களிலும் ஏற்பட்ட அடிப்படையான மாற்றங்களாக இதைக் கருதவேண்டும்.

பாரதத்தின் இறப்புவிகிதத்தில் மற்றொரு முக்கியமான கூறு குழந்தை மரணம் ஆகும். மக்கட்பேறு சமயத்திலோ, ஓராண்டு பூர்த்தியடையும் முன்னதாகவோ அதிகக் குழந்தைகள் இறந்து விடுகின்றன. இறப்புவிகிதத்தில் நான்கில் ஒருபகுதி (25%) ஒரு வயது பூர்த்தியாகும் முன் ஏற்படும் குழந்தை மரணமாக உள்ளது என்று சந்திரசேகரன் குறிப்பிட்டுள்ளார். 1941-50 ஆண்டுகளுக்குப் பாரதம் முழுவதற்குமான பிறப்பு - இறப்பு விகிதங்களையும், ஆயுள் அட்டவணையையும் எஸ். பி. ஜெயின் கணித்துள்ளார். குழந்தைகள் மரணம் குறைந்தபட்சம் 155 ஆகவும், அதிகபட்சம் 240ஆகவும் இருக்கும் என்று கூறுகிறர். இதில் 185-ஐச் சராசரி எண்ணைக் கருதுவோமானல், பாரதம் முழுவதற்கும் குழந்தை இறப்புவிகிதம் 185 ஆக இருக்கும். கோல், ஹூவர் ஆகிய இரு ஆசிரியர்களும் குழந்தைகள் மரணம் குறைந்தது 200ஆகவும், அதிக அளவு 250 ஆகவும் இருக்கலாம் என்றும், இதன் சராசரி 225-ஐக் குழந்தை இறப்பு விகிதமாகக் கருதலாம் என்றும் கூறியுள்ளனர்.

குழந்தைப்பருவத்தின் துவக்கத்திலும், அதன் இறுதியிலும் இறப்புவிகிதம் அதிகம் என்றுதெரிகிறது. 20 வயது நிறையும் முன்னர் இறந்துள்ளவர்களின் விகிதங்கள் பின்வரும் அட்டவணையில் **(4.2)** கொடுக்கப்பட்டுள்ளன. 1881-91இல் மேற்படி வயது வரம்பிற்கு உட்பட்டவர்களில் 53% குழந்தைகள், சிறுவர்கள் இறந்து விடுகின்றனர்.

இந்த விகிதம் 1941-51-இல் 40% ஆகக் குறைந்துள்ளது.

குழந்தைகள், சிறுவர்கள் ஆகியோரின் இறப்பு மிக அதிகமாக இருந்துவருகிறது. 1921இல் இருந்ததைவிட இப்போது குறைந்துள்ளது என்றாலும், மேலைநாடுகளுடன் ஒப்பிடக்கூடிய அளவிற்குக் குறையவில்லை. இது சமுதாயத்திற்கு ஒரு பெரும் சுமையாக உள்ளது. குழந்தைகளை வளர்ப்பதற்குச் செலவிடும் நேரம், சக்தி, அதற்காக உபயோகப்படும் வருமானம், சாதனங்கள் முதலியன பாழாகிவிடுகின்றன.

### மாநிலங்கள் வாரியாக

மாநிலவாரியாக 1971 வருடத்திற்கான மக்கள்தொகை அடுத்துள்ள அட்டவணையில் [4.3] கொடுக்கப்பட்டுள்ளது.

அட்டவணை 4.2

| ஆண்டு | 20 வயதுக்கு உட்பட்ட வர்களில் இறப்பு விகிதம்[11] (%) |
|---|---|
| 1881-91 | 53 |
| 1891-1901 | 55 |
| 1901-11 | 56 |
| 1911-21 | 62 |
| 1921-31 | 49 |
| 1931-41 | 44 |
| 1941-51 | 40 |

மொத்த மக்கள்தொகையில் சுமார் ஆறில் ஒரு பகுதியினர் உத்தரப்பிரதேசத்தில் மட்டும் வசிக்கின்றனர்.[12] மிக அதிக அளவிற்கு மக்கள்தொகை இந்த மாநிலத்தில்தான் காணப் படுகிறது. மக்கள்தொகை வரிசையில் உ. பி. முதலிடம் வகித்தாலும், நிலப்பரப்பில் இது 4-வது இடத்தைப் பெற்றுள்ளது (பார்க்கவும்: அட்டவணை 4.4). நிலப்பரப்பு வரிசையில் மத்தியப்பிரதேசம் முதலிடம் வகிக்கின்றது. இந்த மாநிலம் தமிழ்நாட்டுடன் மக்கள்தொகையில் போட்டியிடுகிறது. 1961இல் மக்கள்தொகை வரிசையில் 7-வது இடத்தைப் பெற்றிருந்த மத்தியப்பிரதேசம் 1971இல் 6-வது இடத்தை அடைந்தது. இதே காலத்தில் (1961இல்) 6-வது இடத்தைப் பெற்றிருந்த தமிழ்நாடு (1971இல்) 7-வது இடத்திற்குத் தள்ளப்பட்டது. நிலப்பரப்பில் தமிழ்நாட்டிற்கு 11-வது இடம் கிடைத்துள்ளது.

11 V. B. Singh (Ed) ibid, P. 108.

12 உத்தரப்பிரதேசம் ஒரு தனி நாடாக ஐக்கிய நாடுகளின் அமைப்பில் சேர்த்துக் கொள்ளப்படுமானால் உலகில் மிகப்பெரிய (மக்கள்தொகை அடிப்படையில்) நாடுகளின் வரிசையில் 7-வது இடத்தை அது பெற்றிருக்கும்—சந்திரசேகரன்-The Hindu, 31-1-71.

அட்டவணை 4·3

## 1971இல் மாநிலங்களின் மக்கள்தொகை [13]

| | 1971-இல் மக்கள் தொகை வரிசைப்படி மாநிலங்கள் | 1961-ம் ஆண்டின் வரிசை (எண்) | 1971மக்கள் தொகை | மொத்த மக்கள் தொகையின் % |
|---|---|---|---|---|
| 1 | உத்தரப்பிரதேசம் | (1) | 88,299,453 | 16·14 |
| 2 | பீகார் | (2) | 56,387,296 | 10·31 |
| 3 | மகாராஷ்டிரம் | (3) | 50,295,081 | 9·20 |
| 4 | மேற்கு வங்காளம் | (4) | 44,440,095 | 8·12 |
| 5 | ஆந்திரப்பிரதேசம் | (5) | 43,394,951 | 7·93 |
| 6 | மத்தியப்பிரதேசம் | (6) | 41,449,729 | 7·58 |
| 7 | தமிழ்நாடு | (7) | 41,103,125 | 7·51 |
| 8 | மைசூர் | (8) | 29,224,046 | 5·34 |
| 9 | குஜராத் | (9) | 26,660,929 | 4·87 |
| 10 | இராஜஸ்தானம் | (10) | 25,724,142 | 4·70 |
| 11 | ஒரிஸ்ஸா | (11) | 21,934,827 | 4·01 |
| 12 | கேரளா | (12) | 21,280,397 | 3·89 |
| 13 | அஸ்ஸாம் | (13) | 14,857,314 | 2·72 |
| 14 | பஞ்சாப் | (14) | 13,472,972 | 2·46 |
| 15 | ஹரியாணு | (15) | 9,971,165 | 1·82 |
| 16 | ஜம்மு, காஷ்மீர் | (16) | 4,615,176 | 0·84 |
| 17 | டெல்லி | (17) | 4,044,338 | 0·74 |
| 18 | இமாசலப்பிரதேசம் | (18) | 3,424,332 | 0·63 |
| 19 | திரிபுரா | (19) | 1,556,822 | 0·29 |
| 20 | மணிப்பூர் | (20) | 1,069,555 | 0·20 |
| 21 | மேகாலயா | (21) | 983,336 | 0·18 |
| 22 | கோவா, டாமன், டையூ | (22) | 857,180 | 0·16 |
| 23 | நாகாலாந்து | (23) | 515,561 | 0·10 |
| 24 | பாண்டிச்சேரி | (24) | 471,347 | 0·09 |
| 25 | வடகிழக்கு எல்லைப்பிரதேசம் [NEFA] | (25) | 444,744 | 0·08 |
| 26 | சந்திரிகார் | (26) | 256,979 | 0·03 |
| 27 | அந்தமான், நிக்கோபர் தீவுகள் | (27) | 115,090 | 0·02 |
| 28 | தாதிரா, நாகர்ஹவெலி | (28) | 74,165 | 0·01 |
| 29 | இலக்ஷத்தீவுகள், மினிக்காய் முதலியன | (29) | 31,798 | 0·01 |
| | மொத்த மக்கள்தொகை | → | 546,955,945 | 100·00 |

[13] தற்காலிகமானவை. The hin_u, dt. 14. Apr. 1971.

அட்டவணை 4·4

## மக்கள்தொகை, நிலப்பரப்பு வாரியாக மாநிலங்களும், யூனியன் பிரதேசங்களும் 1961.[14]

| 1961-ல் மக்கள் தொகை வரிசை | மாநிலங்கள் | மக்கள் தொகை விகிதம் % | நிலப்பரப்பு சதவீதம் % | நிலப்பரப் பின் வரிசை |
|---|---|---|---|---|
| 1 | உத்தரப்பிரதேசம் | 16·79 | 9·27 | 4 |
| 2 | பீகார் | 10·58 | 5·45 | 8 |
| 3 | மகாராஷ்டிரம் | 9·00 | 9·63 | 3 |
| 4 | ஆந்திரப்பிரதேசம் | 8·19 | 8·63 | 5 |
| 5 | மேற்கு வங்காளம் | 7·95 | 2·78 | 14 |
| 6 | தமிழ்நாடு | 7·67 | 4·08 | 11 |
| 7 | மத்தியப்பிரதேசம் | 7·37 | 13·76 | 1 |
| 8 | மைசூர் | 5·37 | 6·01 | 6 |
| 9 | குஜராத் | 4·70 | 5·78 | 7 |
| 10 | பஞ்சாப் | 4·62 | 3·85 | 12 |
| 11 | இராஜஸ்தான் | 4·59 | 10·74 | 2 |
| 12 | ஒரிஸ்ஸா | 4·00 | 4·90 | 9 |
| 13 | கேரளா | 3·85 | 1·22 | 16 |
| 14 | அஸ்ஸாம் | 2·70 | 3·85 | 13 |
| 15 | ஜம்மு, காஷ்மீர் | 0·81 | 4·37 | 10 |
| | யூனியன் பிரதேசங்கள் | | | |
| 16 | டெல்லி | 0·61 | 0·05 | 24 |
| 17 | இமாசலப்பிரதேசம் | 0·31 | 0·87 | 17 |
| 18 | திரிபுரா | 0·26 | 0·34 | 20 |
| 19 | மணிப்பூர் | 0·18 | 0·70 | 18 |
| 20 | கோவா, டாமன், டையூ | 0·14 | 0·12 | 23 |
| 21 | நாகாலாந்து | 0·08 | 0·52 | 19 |
| 22 | பாண்டிச்சேரி | 0·08 | 0·01 | 26 |
| 23 | வடகிழக்கு எல்லைப்பிரதேசம் (NEFA) | 0·08 | 2·56 | 15 |
| 24 | அந்தமான், நிகோபார் தீவுகள் | 0·01 | 0·26 | 21 |
| 25 | இலக்ஷத்தீவுகள், மினிகாய் முதலியன | 0·01 | 0·001 | 27 |
| 26 | சிக்கிம் | 0·04 | 0·23 | 22 |

[14] The Gazetteer of India, p. 349-350

ஒவ்வொரு மாநிலத்தின் பிறப்பு இறப்பு விகிதங்களை ஒப்பிட்டுப் பார்ப்போமானால் அவை மக்கள்தொகை நிலைமாற்றக் கோட்பாட்டில் எந்த நிலையில் இருக்கின்றன என்பதைக் கண்டு அறியலாம். அடுத்து வரும் அட்டவணையில் (4.5) மாநில வாரியாகப் பிறப்பு இறப்பு விகிதங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

மைசூர் மாநிலத்தின் பிறப்புவிகிதமும், இறப்புவிகிதமும் உயர்ந்து செல்கின்றன. பிறப்புவிகிதம் 36.9-லிருந்து 41.6 ஆகவும், இறப்புவிகிதம் 18.9-லிருந்து 22.2 ஆகவும் உயர்ந்துள்ளன. இந்த மாநிலம் முதல் நிலையில் இருப்பதாகக் கூறலாம். பிறப்பு-இறப்பு விகிதங்களை மட்டும் கருதாமல் மக்கள் தொகை வளர்ச்சி வேகத்தையும், குடும்ப அளவையும் ஒப்பிட்டுப் பார்ப்போமானால் மற்ற மாநிலங்களைப்போலவே மைசூரும் இருப்பதாகத் தெரியும். குடும்ப அளவும், வளர்ச்சி வேகமும் பாரதத்தின் சராசரி எண்களைவிடக் குறைவாக இருக்கின்றன. ஆகையால் மைசூர் மாநிலம் முதல் நிலையில் இருப்பதாகக் கூற முடியாது.

இரண்டாவதாகப் பஞ்சாப், இராஜஸ்தானம், கேரளா, மேற்குவங்காளம், அஸ்ஸாம், குஜராத், மகாராஷ்டிரம், ஒரிஸ்ஸா, பீகார், உத்தரப்பிரதேசம் ஆகிய பத்து மாநிலங்களிலும் பிறப்புவிகிதம் உயர்ந்தும், இறப்புவிகிதம் குறைந்தும் காணப்படுகின்றன. இந்தப் பத்து மாநிலங்களில் கேரளாவைத் தவிர அனைத்திலும் பிறப்புவிகிதம் 40-க்கும் அதிகமாக இருக்கிறது. பஞ்சாப், அஸ்ஸாம், குஜராத் ஆகிய மூன்று மாநிலங்களின் சராசரிக் குடும்ப அளவு 6-ஐ விட அதிகமாக உள்ளன. மேற்கு வங்காளம், அஸ்ஸாம் ஆகிய இரு மாநிலங்களின் வளர்ச்சி வேகம் 32%விட அதிகமாக உள்ளன. ஒரிஸ்ஸா, பீகார், உத்தரப்பிரதேசம் ஆகிய மூன்று மாநிலங்களின் வளர்ச்சி வேகம் 20%விடக் குறைவாக உள்ளன.

மூன்றாவது பிரிவில் மத்தியப்பிரதேசம், ஆந்திரா, தமிழ்நாடு ஆகியவை உள்ளன. இம்மூன்று மாநிலங்களின் பிறப்புவிகிதங்களும், இறப்புவிகிதங்களும் குறைந்துள்ளன. இதில தமிழ்நாட்டின் வளர்ச்சி வேகம் (11.9) பாரதத்தின் வளர்ச்சி வேகத்தில் பாதி(50%)யாக இருப்பது குறிப்பிடத்தக்கது. இது பாரதத்தில் மிகவும் குறைந்த வளர்ச்சி வேகம். மற்ற மாநிலங்களைவிடத் தமிழ்நாட்டின பிறப்புவிகிதமும், குடும்ப அளவும், வளர்ச்சி வேகமும் (1961இல்) குறைவாக இருந்தன.

அட்டவணை 4·5

### மாநிலங்களின் மக்கள்தொகை வளர்ச்சி விகிதங்கள் [15]

| | பிறப்பு விகிதம் | | இறப்பு விகிதம் | | குடும்ப அளவு | வளர்ச்சி வேகம் | |
|---|---|---|---|---|---|---|---|
| மாநிலம் | 1941-50 | 1951-60 | 1941-50 | 1951-60 | | 1921-30 | 1951-60 |
| மைசூர் | 36·9 | 41·6 | 18·9 | 22·2 | 5·53 | 9·4 | 21·6 |
| பஞ்சாப் | 41·2 | 44·7 | 26·3 | 18·9 | 6·03 | 9·6 | 25·9 |
| இராஜஸ்தான் | 42·5 | 42·7 | 27·2 | 19·4 | 5·70 | 14·1 | 26·2 |
| கேரளா | 37.4 | 38·9 | 18·0 | 16·1 | 5·10 | 21·9 | 24·8 |
| மே. வங்கம் | 35·4 | 42·9 | 28·6 | 20·5 | 5·74 | 8·1 | 32·8 |
| அஸ்ஸாம் | 46·7 | 49·3 | 31·8 | 26·9 | 6·79 | 19·5 | 34·5 |
| குஜராத் | 42·2 | 45·7 | 24·9 | 23·5 | 6·17 | 12·9 | 26·9 |
| மஹாராஷ்டிரம் | 41·0 | 41·2 | 24·9 | 19·8 | 5·47 | 14·9 | 23·6 |
| ஒரிஸா | 37·2 | 40·4 | 29·9 | 22·9 | 5·35 | 11·9 | 19·8 |
| பீகார் | 39·0 | 43·4 | 26·6 | 26·1 | 5·82 | 11·5 | 19·8 |
| உ. பி. | 38·6 | 41·5 | 27·2 | 24·9 | 5·51 | 6·7 | 16·7 |
| ம. பி. | 46·1 | 43·2 | 38·5 | 23·2 | 5·78 | 11·4 | 24·2 |
| ஆந்திரா | 43·1 | 39·7 | 29·5 | 25·2 | 5·23 | 13·0 | 15·7 |
| தமிழ்நாடு | 35·7 | 34·9 | 22·8 | 22·5 | 4·57 | 8·5 | 11·9 |
| பாரதம் | 39·9 | 41·7 | 27·4 | 22·8 | 5·62 | 11·0 | 22·3 |

[15] Source : Ruddar Datt. K.P.M. Sundharam — Indian Economy, 6th Edition, P. 85.

பாரதம் முழுவதற்கும் வளர்ச்சி வேகம் 2.2% (ஆண்டு) ஆகவும், குடும்ப சராசரி அளவு 5.62 ஆகவும் உள்ளது. பிறப்பு விகிதம் உயர்ந்தும் இறப்புவிகிதம் குறைந்தும் செல்கின்றன.

1971-புள்ளி விவரங்களில் 1961-71-க்கான வளர்ச்சி வேக உயர்வு 13.6% ஆகும். இதில் கேரளாவின் வளர்ச்சி வேக உயர்வு 4.6% ஆகவும், தமிழ்நாட்டின் வளர்ச்சி வேக உயர்வு 85.7% ஆகவும் உள்ளன.

இறப்புவிகிதங்கள் குறைந்து செல்வதை மக்கள்தொகை நிலைமாற்றக்கோட்பாட்டின் இரண்டாம் நிலையாகவும், பிறப்பு விகிதம் குறையத் தொடங்குவதை மூன்றாவது நிலையாகவும் கருதவேண்டும். இந்த அடிப்படையில் மைசூர் முதல் நிலையில் இருப்பதாகக் கூறலாம். அடுத்துள்ள பத்து மாநிலங்களும் இரண்டாம் நிலையில் உள்ளன. மூன்றாவதாக உள்ள மூன்று மாநிலங்களும் மூன்றாவது நிலையை அடைந்துள்ளன என்றும் கூறலாம். இவ்வாறு பாரதத்தின் பெரும்பகுதிகள் இரண்டாவது நிலையில் உள்ளன. மத்திய பாரதமும், தக்காணத்தில் மேற்குப் பகுதி நீங்கலாக உள்ள பிரதேசங்களும் மூன்றாவது நிலைக்கு வந்துள்ளன. இந்த நிலை தொடர்ந்து 1971-கணிப்பிலும் காணப்படுமானால் ஓர் உண்மையைத் தெரிந்து கொள்ளமுடியும்.

மேலைநாடுகளில் மக்கள் தாங்களாக விரும்பிக் குடும்ப அளவைக் குறைக்கவும், பிறப்புவிகிதத்தைக் குறைக்கவும் முயற்சி செய்துள்ளனர். பாரதத்தில் குடும்பக்கட்டுப்பாடு என்பது அரசின் கொள்கையாக உள்ளது. பாரதத்தில் தொழில் வளர்ச்சி தோன்றும் முன்னரே இரண்டாம் நிலை ஆரம்பமாகியது. இதன் பலனை 1951-61 மக்கள்தொகை வளரும் வேகம் உந்தப் பட்டது. 1971இல் பிறப்புவிகிதம் குறைந்திருக்குமேயானால், பாரதம் 1961-லிருந்து மூன்றாவது நிலையில் புகுந்து விட்டதாகக் கருதலாம்.

**ஆண் பெண் விகிதம்**

பாரத மக்கள்தொகையில் ஆண் பெண் விகிதம் பின் வருமாறு :—

| | |
|---|---|
| ஆண்கள் | 283,055,987 |
| பெண்கள் | 263,899,958 |
| (1971) மொத்தம் | 546,955,945 |

ஆண் : பெண் விகிதம் = 932 : 1000.

சராசரியாக ஆயிரம் ஆண்களுக்கு 932 பெண்கள் இருக்கின்றனர். இந்த விகிதம் 1961இல் 941 ஆக இருந்தது (பார்க்கவும் : அட்டவணை. 4·6).

அட்டவணை 4·6.

பால் வாரியாக மக்கள் அமைப்பு :

| ஆண்டு | சராசரியாக ஒவ்வொரு 1000 ஆண்களுக்கும் பெண்கள் |
|---|---|
| 1901 | 963 |
| 1911 | 954 |
| 1921 | 945 |
| 1931 | 941 |
| 1941 | 935 |
| 1951 | 947 |
| 1961 | 941 |
| 1971 | 932 |

பொதுவாகப் பாரத மக்கள்தொகையில் ஆண்கள் அதிகமாக இருக்கின்றனர். இந்த நூற்றுண்டின் ஆரம்பத்திலிருந்து பெண்கள் விகிதம் குறைந்து செல்கிறது. குறைந்து செல்லும் போக்கில் 1951 விதிவிலக்காக உள்ளது.

ஆண் பெண் விகிதம் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. இது கேரளாவில்(1971) 1019 ஆகவும், யூனியன் பிரதேசமான தாதிரா, நாகர் ஹவெலியில் 1007 ஆகவும் உள்ளது. பாரதம் முழுவதையும் எடுத்துக்கொள்வோமானுல் தென் தீபகற்பத்திலும், கிழக்குப்பகுதியிலும் இவ்விகிதம் சாதகமாக இருப்பதை அறியலாம். வடக்கிலும், வடமேற்கிலும் உள்ள உத்தரப்பிரதேசம், பஞ்சாப், ஹரியாஞ முதலிய மாநிலங்களிலும், மத்தியப் பிரதேசத்திலும், வடகிழக்கில் உள்ள வடகிழக்கு எல்லைப் பிரதேசத்திலும், அஸ்ஸாமிலும் பெண்கள் விகிதம் மிகவும் குறைந்துள்ளது.

பெண்கள் விகிதம் குறைந்து செல்வதற்குப் பலர் பல காரணங்களைக் கூறுகின்றனர். மக்கள்தொகை வளர்ச்சிப்போக்கில் 1921 வரை உள்ள ஆண்டுகளை முதல் கட்டமாகக் கருத

வேண்டும். இந்த ஆண்டுகளில் பஞ்சங்கள், கொள்ளைநோய்கள் அதிகம் இருந்தன. இவற்றினால் பெண்களைவிட அதிக ஆண்கள் பலியானார்கள். பெண்கள் தம் உடற்கூறுகள் காரணமாக எதிர் பாராதவாறு ஏற்படும் அதிர்ச்சிகளைத் தாங்கிக்கொள்ளவும், நோய்கள், பஞ்சங்கள் ஆகியவற்றைத் தாங்கிக்கொள்ளவும் அதிக ஆற்றல் அல்லது வலிமை உள்ளவர்களாக இருக்கின்றனர். இதனால் பஞ்சகாலத்தில் பெண்கள் அதிகம் மடியவில்லை. ஆனால், 1921-க்குப் பின்னர் பஞ்சங்களுடன் ஆண்களின் இறப்பு விகித மும் குறைந்தது. இவ்வாறு கூறப்படுவதை முழுமையான விளக்கமாகக் கருதமுடியாது. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில், அதாவது பஞ்சங்கள் மிக அதிகமாகத் தோன்றிய ஆண்டுகளில் கூடப் பெண்கள் விகிதம் குறைந்து காணப்பட்டது.

இரண்டாவதாக மக்கட்பேறு காலங்களில் மருத்துவ வசதிகள், மருத்துவக் கவனிப்பு மிகவும் குறைவு. தகுந்த நேரத் தில் சரியான ஆலோசனை கூறவும், உதவி செய்யவும் முடியாத காரணத்தாலும், கவனிப்பு இன்மையாலும் தாய்மை எய்திய நிலையில் பல பெண்கள் மடிகின்றனர். இதைத் திட்டவட்டமாக நிரூபிக்கக்கூடிய புள்ளி விவரங்கள் இல்லை என்றாலும், மறைமுக மான ஆதாரங்கள் பல உள்ளன. சமூகப் பழக்கவழக்கங்கள் இதற்குக் காரணமாக இருக்கின்றன. பெற்றோர்கள் ஆண் குழந்தைகளைப் பாராட்டுவதையும் விரும்பிக் கவனிப்பதையும் போலப் பெண் குழந்தைகளைக் கவனிப்பதில்லை. இதனால் பெண்கள் சிறு வயதில் சரிவரக் கவனிக்கப்படுவதில்லை. இது ஒரு விதமான தாழ்வு மனப்பான்மையைத் தோற்றுவிக்கிறது. ஊட்ட மில்லாத உணவு அவர்களின் வலிமையைக் குறைத்து விடுகிறது. முக்கியமாகக் கருவுற்றிருக்கும் பெண்கள் (நடுத்தரக் குடும்பங் களில்கூட) சரிவரக் கவனிக்கப்படுவதில்லை. இதைப்போன்ற காரணங்களினால் 15-34 வயதுகளில் அதிகப் பெண்கள் இறந்து விடுகின்றனர், அதன் பின்னரும், 35-54 வயதுகளிலும் ஆண்களை விட ஒப்புமையாக அதிகப் பெண் இறக்கின்றனர். [16]

### வயது அமைப்பு

மக்கள்தொகை ஆராய்ச்சியில் வயது அமைப்பு மிகவும் முக்கியமானதாகும். பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த புள்ளிவிவரங்கள் இதன் அடிப்படையில் தயாரிக்கப்படுகின்றன. வயது அடிப்படையிலும், பால் வாரியாகவும் 1901 முதல்

[16] The Gazetteer of India, ibid, p. 331.

அட்டவணை 4.7

## மக்கள்தொகையின் சதவீதப் பகிர்வு [17]

| வயதுப் பிரிவு | 1961 | | 1951 | | 1941 | | 1931 | | 1921 | | 1911 | | 1901 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 0–14 | 40·9 | 41·2 | 37·1 | 37·9 | 38·1 | 38·4 | 40·0 | 40·0 | 39·4 | 39·0 | 38·8 | 38·1 | 39·2 | 38·0 |
| 15–34 | 31·5 | 32·6 | 34·3 | 34·4 | 34·1 | 34·6 | 34·3 | 35·4 | 32·9 | 34·2 | 33·9 | 35·1 | 33·7 | 34·7 |
| 35–59 | 22·1 | 20·4 | 23·1 | 21·9 | 23·0 | 22·1 | 21·8 | 20·4 | 22·7 | 21·4 | 22·5 | 21·3 | 22·5 | 21·8 |
| 60-க்கு மேல் | 5·5 | 5·8 | 5·5 | 5·8 | 4·9 | 4·9 | 3·9 | 4·2 | 5·0 | 5·5 | 4·8 | 5·5 | 4·6 | 5·5 |
| | 100 | 100·0 | 100·0 | 100·0 | 100·1 | 100·0 | 100·0 | 100·0 | 100·0 | 100·1 | 100·0 | 100·0 | 100·0 | 100·0 |

17 The Gazetteer of India, 1965, Vol. I. P. 354. Appendix. V.

1961 வரை உள்ள அறுபது ஆண்டுகளில் மக்கள்தொகையைச் சதவிதப்படுத்தி அட்டவணை 4.7இல் கொடுக்கப்பட்டுள்ளது.

1901-1961 ஆண்டுகளில் 14 வயது முடிவு பெறுத ஆண்களும், பெண்களும் சுமார் 40% இருக்கின்றனர். 60 வயதிற்கு மேலானவர்கள் 5% அல்லது அதைவிடச் சற்று அதிகமாக உள்ளனர். இவ்விரு வகையிலும் உள்ளவர்களைச் சார்ந்துள்ள மக்கள் என்று கூறுவார்கள். 15 முதல் 59 வயது வரை உள்ளவர்கள் உழைக்கக்கூடிய மக்கள். இவர்களில் வேலையின்றி இருப்பவர்களையும் சார்ந்துள்ள மக்களில் ஒரு பகுதியாகக் கருத வேண்டும்.

1961 மக்கள்தொகையில் உழைப்பவர்கள் 43% ஆகவும், சார்ந்து இருப்பவர்கள் 57% ஆகவும் இருந்தனர். மொத்த ஆண்களில் 57.1%மும், மொத்தப் பெண்களில் 28.0%மும் உழைப்பவர்களாக உள்ளனர். பாரதத்தில் உழைக்கும் மக்களின் விகிதம் அனைத்து நாட்டு விகிதங்களுடன் ஒப்பிடக் கூடியதாக இருக்கிறது. சார்ந்துள்ள மக்களின் விகிதம் பாரதத்தில் அதிகமாக இருப்பதால் மக்கள் ஏழைகளாக இருக்கிறார்கள் என்று கூறமுடியாது. உழைக்கும் மக்களின் உற்பத்தித் திறன் குறைவாக இருப்பதே ஏழ்மைக்குக் காரணமாக உள்ளது. தொழிலாளர்களின் உற்பத்தித்திறனை மேலும் அதிகரிக்க முடியாத சூழ்நிலை அல்லது தொழிலாளர்களின் ஆற்றலை முழுமையாகப் பயன்படுத்த இயலாத நிலைமை இதற்கு முக்கியமாக இருக்கலாம்.

சார்ந்துள்ள பிரிவில் 15 வயதைவிடக் குறைவானவர்கள் மிகவும் முக்கியத்துவம் உடைய ஒரு குழுவினராகும். இவர்களின் விழுக்காடு 40% ஆக உள்ளது. இவர்கள் வளரும் பருவத்தினர். இவர்களுக்கு எந்த அளவுக்கு ஊட்டம் கொடுக்க முடியுமோ அந்த அளவிற்கு இவர்கள் பிற்காலத்தில் ஆரோக்கியமுடன் இருப்பார்கள். இவர்களுக்கு எந்த அளவிற்குச் சிறந்த கல்வியும், பயிற்சியும் அளிக்க முடியுமோ அந்த அளவிற்குத் திறன் உடைய தொழிலாளர்களாக இருப்பார்கள். இவர்களுக்கு உடனடியாக உணவு, உடை, கல்வி, பயிற்சி முதலியன அளிக்க வேண்டும். சிறுவர்கள் நிகழ்காலத்தில் சமூகத்தின் சுமையாக இருந்தாலும், எதிர்கால வளர்ச்சிக்கு இவர்களே சாதனமாக இருக்கின்றனர்.

சிறுவர்கள் மிகையாக இருப்பதால் தோன்றும் விளைவுகளைப் பின்வருமாறு விளக்கமுடியும். மக்கள்தொகையில் 8 வயது முதல் 15 வயது வரை உள்ளவர்கள் சுமார் 20% இருக்கக்கூடும்.

கடந்த 10 ஆண்டுகளில் (1961-71) குடும்பக்கட்டுப்பாட்டு இயக்கம் தீவிரமாக இருக்குமேயானல், அதன் காரணமாகப் பிறப்புவிகிதம் குறைந்து இருந்தால், 8-15 வயதில் உள்ள சிறுவர்களின் விழுக்காடு இன்னும் அதிகமாக இருக்கும். இவ் வயதினர் குறைந்தது **109·4** மில்லியன் ஆக இருப்பர். இவர் களுக்கு இன்னும் 10 அல்லது 15 ஆண்டுகளுக்குள் தகுந்த கல்வி அல்லது பயிற்சி அளிக்க வேண்டும் ; தகுந்த வேலை வாய்ப்பை அளிக்க வேண்டும். இவை யாவும் நாட்டின் கடமையாக உள்ளவை. திட்டமிட்ட வகையில் உற்பத்தி செய்யவேண்டு மானல் திட்டங்களின் முக்கிய துறைகளை நிர்ணயிக்க இவர் களின் விழுக்காடு உதவியாக இருக்கும். இதே அடிப்படையில் எதிர்கால மக்கள்தொகை வளர்ச்சியை மதிப்பிட முடியும். இவர்கள் (11 கோடி) 1986-க்குள் மணம் முடிப்பார்கள். இந்தத் தம்பதிகள் தங்களைப் பதிலமர்த்தும் விகிதத்தில்—அதாவது இரு குழந்தைகள் வீதம்—குழந்தை பெறுவார்களானல் மக்கள் தொகை 109 மில்லியன் அதிகரிக்கும். 1971இல் சுமார் 11 கோடியாக உள்ள இவ்வயதினர் 1986இல் தங்களைத் தாங்களே இரட்டித்துக் கொள்கின்றனர். சிறுவர்களின் விழுக்காடு எந்த அளவுக்கு அதிகமாக இருக்கின்றதோ அந்த அளவுக்கு மக்கள் தொகையின் கருவளம் (fertlity) அதிகமாக இருக்கும்.

## கருவள விகிதங்கள் (Fertlity Rate)

கருவள விகிதம் என்பது பிறப்பு விகிதத்தினின்றும் மாறு பட்டது. சராசரியாக ஆயிரம் மக்களுக்கு எத்தனை குழந்தைகள் பிறக்கின்றனவோ, அதைப் பிறப்புவிகிதம் என்று கூறுகின்றோம். ஆனல், கருவள விகிதம் என்பது மகப்பேறு எய்தக்கூடிய வயதில் உள்ள பெண்களில் சராசரியாக 1000 பேருக்கு எத்துணை குழந்தைகள் பிறக்கின்றன என்பதைக் கொண்டு அறியலாம்.

மேலை நாடுகளில் நகரங்களின் வளர்ச்சி விகிதமும் கருவள விகிதத்தின் வளர்ச்சியும் எதிர் விகிதங்களில் தொடர்பு கொண்டுள்ளன. அதாவது நகர வளர்ச்சியால் கருவள விகிதம் குறைந்து செல்லும். 1931இல் 5 இலட்சத்திற்கும் அதிகமான மக்கள்தொகை உடைய இந்திய நகரங்களில காணப்படும் கருவள விகிதம் கிராமங்களில் காணப்படும் கருவள விகிதத்தில் 68% ஆக உள்ளது என்று கிங்ஸ்லே டேவிஸ் கூறியுள்ளார். இந்த வேறுபாடு 1891-லிருந்து 1941 வரை தொடர்ந்து நீடித்து வந்துள்ளது. நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் உள்ள கருவள விகித வேறுபாடுகளும், பல்வேறு அளவுகளில் உள்ள நகரங் களுக்கு இடையே உள்ள கருவள வேறுபாடுகளும் இக்காலத்தில்

தொடர்ந்து நீடித்துள்ளன. 1951இல் இது ஓரளவிற்குக் குறைந்துள்ளது. கருவள விகிதம் நகரங்களின் வளர்ச்சியால் குறைந்து செல்லும் என்று கூறமுடியவில்லை. ஏனெனில் குழந்தைகள், சிறுவர்கள் ஆகியோரின் இறப்புவிகிதங்கள் அதிகமாக இருந்தன. சில பெரிய குடும்பங்களில் பெண்கள் கிராமங்களிலேயே தங்கி விடுகின்றனர். 1951இல் நடத்தப்பட்ட கருவள விகித சர்வேக்களும் இந்த முடிவை ஆதரிக்கின்றன. பாரதத்தில் கருவள விகிதங்கள் கிராமங்கள், நகரங்கள் என்ற அடிப்படையில் வேறுபடுவதாகத் தெரியவில்லை. ஆனால், இது வருமான நிலை வேறுபாடுகளால் மாற்றம் அடைகிறது. கருவள விகிதங்கள் குறிப்பிட்ட வருமானத்தினர் உபயோகிக்கும் கருத்தடைச் சாதனங்களுடன் தொடர்புகொண்டு உள்ளன. காட்டாக, ரூ. 500-க்கும் அதிகமாக வருமானம் உள்ள குடும்பங்களின் கருவளம், ரூ. 100 வருமானமாக உள்ள குடும்பங்களின் கருவளத்தைவிட 25% குறைவாகக் காணப்படுகிறது.[18] இதற்கு அவர்கள் பின்பற்றும் கருத்தடைச் சாதனங்கள் ஒரு முக்கிய காரணமாக இருக்கிறது. அதாவது மேல் வருமானம் ஈட்டும் குடும்பத்தினர் அதிகமாகவும், குறைந்த வருமானம் ஈட்டும் குடும்பத்தினர் (கல்கத்தாவில்) குறைவாகவும் கருத்தடைச் சாதனங்களை உபயோகிக்கின்றனர். இந்தக் கருவள விகிதங்கள் சாதி அல்லது சமய அடிப்படையில் வேறுபடவில்லை. வருமான அடிப்படையில் மட்டுமே வேறுபடுகின்றன.

### ஆயுள் அட்டவணை

பொதுவான இறப்புவிகிதம் குறைந்து செல்வதால் குழந்தை பிறக்கும் சமயத்தில் எதிர்பார்க்கப்படும் ஆயுட்காலம் உயர்ந்து வருகின்றது. 1881இல் இது **24·63** ஆக இருந்தது. இந்த ஆண்டில் ஆண் (குழந்தை) 23.67 ஆண்டுகள் என்றும், பெண் (குழந்தை) 25.58 ஆண்டுகள் என்றும் நிர்ணயிக்கப்பட்டன (பார்க்கவும்: அட்டவணை **4·8**). 1961இல் சுமார் 42ஆக இருந்த ஆயுட்காலம் 1971இல் 50-க்கும் அதிகமாக உயர்ந்து இருப்பதாகக் கூறுகிறார்கள்.

### மக்கள்தொகைச் செறிவு

மக்கள்தொகைச் செறிவு என்ற சொல் ஒரு சதுர கிலோ மீட்டருக்கு எத்தனை மக்கள் வசிக்கின்றனர் என்பதைக் காட்டுகிறது. பாரதத்தின் மொத்த மக்கள்தொகை 547 மில்லியனை

18 மேற்படி சர்வே லக்னோ, கான்பூர் ஆகிய நகரங்களில் ஜே. என். சின்ஹா என்பவரால் நடத்தப்பட்டது.

அட்டவணை 4·8

## ஆயுள் அட்டவணை [19]

| ஆண்டுகள் | எதிர்பார்க்கப்படும் ஆயுட்காலம் | |
|---|---|---|
| | ஆண் | பெண் |
| 1881 | 23·67 | 25·58 |
| 1891 | 24·59 | 25·54 |
| 1901 | 23·63 | 23·96 |
| 1911 | 22·59 | 23·31 |
| 1921 | 19·42 | 20·91 |
| 1931 | 26·91 | 26·56 |
| 1941 | 32·09 | 31·37 |
| 1951 | 32·45 | 31·66 |
| 1961 | 41·89 | 40·55 |

உள்ளது. மொத்த நிலப்பரப்பு **32,76,141** சதுர கிலோ மீட்டராக உள்ளது. கிட்டத்தட்ட ஒரு சதுர கிலோமீட்டருக்கு **182** பேர் வசிக்கின்றனர் (1971). 1961இல் மக்கள்தொகை 439 மில்லியனை இருந்தபோது இது **138** ஆக இருந்தது. மக்கள் செறிவு மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. கேரளாவில் சராசரியாக (1971இல்) 548 நபர்களும், நாகாலந்தில் 31 நபர் களும் வசிக்கின்றனர். பாரதம் ஒரு விவசாய நாடாக இருப்பதால் சாகுபடிக்கு ஏற்ற விளைநிலங்கள், பாசனவசதிகள் அதிகம் உள்ள பகுதிகளிலும், மழை திருப்தியாக உள்ள இடங் களிலும் மக்கள் செறிந்து காணப்படுகின்றனர். காட்டாக, சிந்து-கங்கைச் சமவெளி, மேற்கு வங்காளம் முதலிய பகுதிகளில்

[19] Source: The Gazetteer of India, Vol. I, 1965. p. 352. Appendix. III.

மக்கள் செறிவு அதிகம் காணப்படுகிறது. மலைப்பகுதிகளிலும், பாசனவசதி குறைவான பகுதிகளிலும் நெறிசல் குறைந்து காணப்படுகிறது. சாதாரணமாகச் சிந்து-கங்கைச் சமவெளிப் பிரதேசங்களில் சதுரகிலோமீட்டருக்கு 200-க்கும் அதிகமான மக்கள் (1961இல்) இருந்தனர் என்றும், நதியோரங்களில் செறிவு 400-க்கும் அதிகம் என்றும் கூறப்படுகிறது.

மக்கள்தொகையும், மக்கள் செறிவும் மாநிலங்கள் வாரியாகப் பின்வரும் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன. டெல்லி, கேரளா, மேற்குவங்காளம், பீகார், தமிழ்நாடு, உத்தரப்பிரதேசம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் பாரத சராசரி மக்கள் செறிவைவிட அதிகமாக இருக்கின்றன (பார்க்கவும்: அட்டவணை 4·9).

மக்கள் செறிவு என்பது பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த குறியீட்டு எண்ணாகும். இது ஒரு நாடு அல்லது ஒரு பகுதியின் நிலம்-ஆள் விகிதத்தைச் சுட்டுகிறது. நிலம் என்பது இயற்கை விளங்களைக் குறிக்கின்றது. இதைக்கொண்டு எந்த விதமான முடிவிற்கும் வர இயலாது. மக்கள் செறிந்துள்ள நாடு தொழில் வளர்ச்சி அடைந்துள்ள நாடு என்றோ, செறிவு குறைந்துள்ள நாடு விவசாய நாடு என்றோ கூற இயலாது. நிலம்-ஆள் விகிதம் குறைந்து இருப்பதால் வளர்ச்சி வாய்ப்புகள் குறைவு என்றோ, நிலம்-ஆள் விகிதம் சாதகமாக இருப்பதால் மேற்படி வாய்ப்புகள் அதிகம் என்றோ கூறமுடியாது (பார்க்கவும்: அட்டவணை **4.10**).

நிலப்பரப்பு இயற்கைவளங்களைக் குறிப்பிடுகிறது என்று கூறுகிறார்கள். ஒரு நாட்டில் எந்த அளவுக்கு இயற்கைவளங்கள் இருக்கின்றன என்பதைவிட, உற்பத்திக்குப் பயன்படக்கூடியவை யாவை, அவற்றை எந்த அளவுக்குப் பயன்படுத்த முடியும் என்பது முக்கியமாகும். காட்டாகக் கனிப்பொருள்கள், கச்சா எண்ணெய் முதலியன கண்ணுக்குத் தெரியாமல் நிலத்திற்கு அடியில் இருக்கின்றன. இதைப்போன்ற இயற்கைவளங்கள் கண்ணுக்குப் புலப்படாமல் இருப்பதைப்போலவே கருத்திற்கு எட்டாமலும் இருக்கக்கூடும். எனவே, இயற்கைவளம் என்பது அந்நாட்டின் நிலப்பரப்பைச் சார்ந்து இல்லாமல் அதை அறியக்கூடிய தொழில் நுட்ப, விஞ்ஞான அறிவைச் சார்ந்துள்ளன. நுட்பரீதியான அறிவு உற்பத்திக்குப் பயன்படும் சாதனங்களை நிர்ணயிக்கின்றன. உற்பத்திக்குப் பயன்படுத்த முடியாத சாதனங்கள், இயற்கை வளங்கள் பொருளாதார முக்கியத்துவம் இன்றி இருக்கின்றன.

அட்டவணை 4·9

## மாநில வாரியாக மக்கள்தொகையும், மக்கள் செறிவும் (1961) [20]

| யூனியன் பிரதேசம் மாநிலம் | மக்கள் + தொகை (1961) | செறிவு (1961) × |
|---|---|---|
| டெல்லி | 2·66 | 1793 |
| கேரளா | 16·90 | 435 |
| மே. வங்காளம் | 34·93 | 399 |
| பீகார் | 46·46 | 267 |
| தமிழ்நாடு | 33·69 | 259 |
| உத்தரப்பிரதேசம் | 73·75 | 251 |
| பஞ்சாப் | 20·31 | 166 |
| **பாரதம்** | **439·23** | **138** |
| ஆந்திரா | 35·98 | 131 |
| மகாராஷ்டிரம் | 39·55 | 130 |
| மைசூர் | 23·59 | 123 |
| ஒரிஸ்ஸா | 17·55 | 113 |
| குஜராத் | 20·63 | 110 |
| மத்தியப்பிரதேசம் | 32·37 | 73 |
| அஸ்ஸாம் | 12·21 | 60 |
| ராஜஸ்தானம் | 20·51 | 59 |
| ஜம்மு, காஷ்மீர் | 3·56 | 26 |

+ மில்லியன்

× சதுர கிலோமீட்டருக்கு

[20] Quoted by R. Dutt and K.P.M. Surdharam-ibid p. 90. from Fact Book on Manpower. p. 4.

அட்டவணை 4·10

### பிற நாடுகளில் மக்கள்தொகையும், மக்கள் செறிவும் (1960) [21]

| நாடுகள் | மக்கள் தொகை (மில்லியன்) | செறிவு (ஒரு சதுர கி.மீ.) |
|---|---|---|
| ஜப்பான் | 93 | 252 |
| இங்கிலாந்து (UK) | 53 | 215 |
| இத்தாலி | 49 | 164 |
| பாரதம் | 436 | 134 |
| பாக்கிஸ்தான் | 93 | 98 |
| பிரான்ஸ் | 46 | 83 |
| மக்கள் சீனா | 678 | 71 |
| இந்தோனேஷியா | 93 | 62 |
| அமெரிக்கா (USA) | 181 | 19 |
| சோவியத் யூனியன் | 214 | 10 |

#### நகரங்களின் வளர்ச்சி

1971இல் நகர : கிராம மக்கள் விகிதம், அதற்கு முன்பு கணிக்கப்பட்ட விகிதத்தைப் (1961) போல 1882 ஆக உள்ளது. 1971 ஆண்டிற்கான விழுக்காடு இன்னும் அதிகார பூர்வமாக அறிக்கப்படவில்லை என்றாலும், இவ்விகிதம் கிட்டத் தட்ட இதே அளவில் இருக்கும் என்று கூறப்படுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் 9 முதல் 10% வரை நகரங்களில் வாழ்ந்தனர். 1872இல் நகர மக்கள் 8·7% ஆகக் குறைந்தனர். சென்ற நூற்றாண்டின் இறுதியில்

[21] முன் கூறியபடி.

இங்கிலாந்து, வேல்ஸ் ஆகிய நாடுகளில் 21.3% மக்களும், ஸ்காட்லாந்தில் 17.0% மக்களும், பிரான்ஸில் 9.5%மும், பிரஷ்யாவில் 7.25%மும், ரஷ்யாவில் 3.7%மும், அமெரிக்காவில் 3.8%மும் நகரங்களில் வசித்தனர்.

இந்திய நகரங்களில் கல்கத்தா, சென்னை, பம்பாய் ஆகிய மூன்று துறைமுக நகரங்களும் முக்கியமானவை. இவற்றைத் தவிரக் கான்பூரும் குறிப்பிடத்தக்கது. இப்படி வளர்ந்த புதிய நகரங்கள் ஒருபுறம் இருக்கையில் பல புராதன நகரங்கள் முக்கியத்துவம் இழந்தன. காட்டாக, டாக்கா, மூர்ஷிதாபாத், லக்னோ, தஞ்சாவூர் முதலியன. மூர்ஷிதாபாத் நகரத்தைப்பற்றி கிளைவ் குறிப்பிட்டுள்ளார். இது லண்டன் நகரைவிடப் பெரியது என்று வர்ணித்துள்ளார்.

புதிய நகரங்கள் தோன்றவும், பழைய நகரங்கள் தேக்கமடையவும் பல காரணங்கள் உள்ளன. இருப்புப்பாதைகள், போக்குவரத்து வசதிகள், வாணிப வளர்ச்சி, தொழில் வளர்ச்சி, சமஸ்தானங்களின் தலைநகரம் முதலியன முக்கியமானவை. கிராமங்களிலிருந்து பஞ்சகாலங்களில் மக்கள் வேலைதேடியும், வருமானம் தேடியும் நகரங்களுக்குச் செல்கின்றனர். இவ்வாறு 1872-81-லும், 1891-1901-லும் பஞ்சங்கள் காரணமாகப் பெருவாரியான மக்கள் நகரங்களுக்கு இடம் பெயர்ந்தனர் (அட்டவணை 4.11).

பஞ்சங்களால் வெளியேற்றப்பட்டவர்கள், கடன் சுமையால் நில உரிமை இழந்தவர்கள், சாகுபடி உரிமையில்லாதவர்கள் ஆகியோர் நகரங்களுக்கு வந்தனர். நிலமுடைய பெரிய மிராசுதார்களும் நகரங்களில் குடியேறலாயினர். கிராமங்களிலிருந்து மக்கள் ஏன் வெளியேற்றப்படுகின்றனர் என்பதை இது விளக்கிக் கூறுகிறது. ஆனால், நகரங்கள் இவர்களை எந்த அளவிற்கு வரவேற்கின்றன என்பதை விளக்கிக் கூறவில்லை.

புராதன தொழில்கள், நெசவுத்தொழில்கள், கைவினைத் தொழில்கள் ஆகியவற்றை முற்றிலும் நம்பியிருந்த நகரங்கள் அழிந்தன. இருப்புப்பாதை ஏற்படும் முன்னர் கால்வாய்கள், நில மார்க்கம் ஆகியவற்றின் மூலம் வாணிபம் நடைபெற்றது. வாணிப மார்க்கத்தில் முன்பு சீருடன் விளங்கிய நகரங்கள், இருப்புப் பாதையின் வளர்ச்சியால் பாதிக்கப்பட்டன. அதே சமயம் இருப்புப்பாதைகளினால் புதிய வியாபார நகரங்கள் தோன்றின. பாரதத்தில் தொழில் வளர்ச்சி ஏற்படவில்லை. எனவே, நகர

அட்டவணை 4·11

**நகரங்களின் எழுச்சி (1872 - 1921)** [22]

| கணிப்பு ஆண்டு | 1872 | 1881 | 1891 | 1901 | 1911 | 1921 |
|---|---|---|---|---|---|---|
| மொத்த மக்கள் தொகை | 206,162,360 | 253,896,330 | 287,314,617 | 294,361,056 | 315,156,396 | 316,017,751 |
| நகர மக்கள் | 18,08?,484 | 23,935,332 | 27,254,611 | 29,183,528 | 29,748,228 | 32,418,776 |

நகர மக்கள் தொகை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1,00,000 விட அதிகம் உள்ள நகரங்களில் | 4,321,917 | 5,295,097 | 6,170,480 | 6,634,749 | 7,075,782 | 8,211,704 |
| 50,000—1,00,000 | 1,856,297 | 2,411,470 | 2,710,259 | 2,930,565 | 3,010,281 | 3,517,749 |
| 20,000—50,000 | 3,338,490 | 4,470,993 | 5,099,770 | 5,478,989 | 5,545,820 | 5,925,675 |
| 10,000—20,000 | 3 634,373 | 4,842,072 | 5,410,063 | 5,975,180 | 6,163,954 | 6,209,583 |
| 5,000—10,000 | 3,587,372 | 5,029,457 | 5,762,983 | 5,963 471 | 5,944,503 | 6 223,011 |
| 5,000 விடக் குறைவு | 1,344 033 | 1,886,291 | 2,101,054 | 2,173,574 | 2,007,888 | 2,331,054 |

[22] D.R. Gadgil. ibed -p. 158.

மக்களின் விரிவாக்கத்தைத் தொழில்துறையின் வளர்ச்சியைக் கொண்டு விளக்கிக் கூறமுடியாது. நகரங்களின் தேக்கமுற்ற விரிவாக்கம் தேக்கமுற்ற தொழில்துறையைப் பிரதிபலிக்கிறது எனலாம்.

சென்ற நூற்றூண்டில் தொழில் வளர்ச்சியில்லாமையால் கிராம மக்கள் அதிகம் இருந்தனர். இந்த நூற்றூண்டில், சிறப்பாக விடுதலைக்குப்பின்னர் நகர வளர்ச்சியைத் தூண்டக் கூடிய முதலீடுகள், தொழில் வளர்ச்சி போதுமான அளவில் இல்லை என்று கூறலாம். மக்கள்தொகை வளரும் வேகம் மிகவும் அதிகம். ஆகையால் நகரமக்களின் விகிதத்தை அதிகரிப்பது கடினமாக உள்ளது. அதைத் தவிர தற்காலத்தில் கிராம நலத் திட்டங்கள், பாசன வசதிகள், தீவிர சாகுபடித்திட்டம் முதலியன கிராமங்களில் வேலைவாய்ப்பை அதிகரித்துள்ளன. பசுமைப்புரட்சி நாடெங்கிலும் தோற்றுவிக்கப்படுமானல் கிராம மக்களின் வருமானம் மேலும் அதிகரிக்கக்கூடும்.

---

# 5. வணிகப்புரட்சியும் வர்த்தகப் பயிர்களும்

வணிகப்புரட்சிக்குப் பத்தொன்பதாம் நூற்றுண்டில் தோன்றிய புரட்சிகரமான போக்குவரத்து வளர்ச்சிகள் அடிப்படையாக இருந்தன. ஒரு நாட்டில் தோன்றும் நிகழ்ச்சிகள் ஏனைய நாடுகளுக்கும் பரவலாயின. அனைத்து நாடுகளும் ஒன்றேடு ஒன்று நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருந்த காரணத்தால் ஒரு நாட்டில் ஏற்படக்கூடிய தொழில் வளர்ச்சி அல்லது தேக்கம், அதன் எதிர் விளைவாகத் தோன்றும் பொருளாதார அதிர்வுகள் அனைத்து நாடுகளுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. புராதன அமைப்புகளையும், தொன்மையான நுட்ப முறைகளையும் கொண்ட நாடுகள் முக்கியமாகத் தாக்கப்பட்டன. விவசாய நாடுகள் தங்களுடைய அமைப்பு முறைகளையும், உற்பத்தி முறைகளையும், நுட்பங்களையும் கட்டாயமாக மாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று. இந்தியாவிலும் இதைப்போன்ற மாற்றங்கள் தோன்றின. ஆங்கிலேயர் ஆட்சியில் ஒவ்வொன்ருகத் தோன்றிய நிகழ்ச்சிகள் நாளடைவில் அடிப்படையான பொருளாதார சமூக மாற்றங்களைத் தோற்றுவித்தன. ஆனல், மேற்படி நிகழ்ச்சிகள் திடீர் என்று குறுகிய கால அளவில் ஏற்படாமல் ஒரு நூற்றுண்டிற்கும் மேற்பட்ட கால அளவில் பரவலாக ஏற்பட்டுள்ளன.

18-வது நூற்றுண்டின் இறுதியில் (இந்தியாவில்) சொத்துரிமைகளில் அடிப்படையான மாறுபாடுகள் ஏற்பட்டன. சொத்துரிமையில் தோன்றிய மாறுபாடுகள் வணிகப்புரட்சிக்குச் சாதகமாகவும், அதைத் துரிதப்படுத்தும் வகையிலும் இருந்தன. கிட்டத்தட்ட 1860இல் இந்நாட்டில் வர்த்தகப்புரட்சி ஒன்று

ஆரம்பமாகியது எனலாம். நிலப்போக்குவரத்தில்—முக்கியமாக இருப்புப்பாதைகள் விரைவாகப் போடப்பட்டதால்—புரட்சிகரமான வளர்ச்சி ஏற்பட்டது.

1857-இல் **288** மைல்களாக இருந்த இருப்புப்பாதைகள் 1861-இல் **1599**மைல்களாகவும், 1865-இல் **3373** மைல்களாகவும், 1871-இல் **5077** மைல்களாகவும், 1896-இல் **20209** மைல்களாகவும் விரிவடைந்தன. 1896-இல் திறக்கப்பட்ட சூயஸ் கால்வாய் காரணமாக இந்தியாவிற்கும் பிரிட்டனுக்கும் இடையில் உள்ள கடற்பிரயாண தூரம் சுமார் **3000** மைல்களுக்கும் அதிகமாகக் குறைக்கப்பட்டது. பிரயாண தூரத்துடன் கப்பல் கட்டணங்களும் குறைந்தன. மரக்கப்பல்கள் நீக்கப்பட்டு நீராவிக்கப்பல்கள் ஏற்பட்டன. இதனுல் கப்பற்பிரயாண வேகம் ஒரு புறம் அதிகரித்தது: பெருமளவு சரக்குகளை எடுத்துச்செல்லக் கூடுமாகையால் சரக்குக் கட்டணங்கள் குறையலாயின. இவ்வாறு சூயஸ் கால்வாய் திறக்கப்பட்ட 12 ஆண்டுகளுக்குள்ளாகக் கட்டண விகிதங்கள் 50%-திற்கும் அதிகமாகக் குறைந்தன. கல்கத்தாவிலிருந்து லிவர்பூருக்குத் தானியங்களை எடுத்துச் செல்வதற்கான கட்டணங்கள் **55** ஷில்லிங்கிலிருந்து **27** ஷில்லிங் ஆகக் குறைந்தது. இவ்வாறு ஏற்பட்ட புரட்சிகரமான போக்குவரத்து வளர்ச்சிகள் காரணமாக, வாணிபம் பன்மடங்கு பெருகலாயிற்று. முக்கியமாக விவசாய நாடான இந்தியாவில் உற்பத்திசெய்த பொருள்கள்—சிறப்பாக விவசாயப் பொருள்கள்—அதிக அளவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. வாணிபத்தின் வளர்ச்சியால் விவசாயப் பொருள்களின் சாகுபடியிலும் அடிப்படையான மாற்றங்கள் ஏற்பட்டன.

நெடுங்காலமாகத் தன்னிறைவு பெற்றிருந்த கிராம சமுதாயங்கள் அங்காடி சக்தியின் ஆதிக்கதிற்குள் ஈர்க்கப்பட்டன. போக்குவரத்து சாதனங்களின் வளர்ச்சியால் கிராம மக்களின் தேவைக்காக விவசாயிகள் உற்பத்தி செய்து வந்த நிலைமை மாறி உலக அங்காடியின் தேவைக்காக உற்பத்தி செய்யும் நிலைமை ஏற்பட்டது. உணவு தானியங்களைவிட வர்த்தகப் பயிர்களைச் சாகுபடி செய்வது இலாபகரமாக இருந்தது.

இந்தியாவில் வர்த்தகப்பயிர்களின் சாகுபடி கிழக்கு இந்தியக்கம்பெனியின் பதிலாளி நிலையங்களால் (Agency Houses) முதன் முதலில் ஆரம்பிக்கப்பட்டன. இந்தியாவிலிருந்து அவுரியை இறக்குமதி செய்வதால் அதிகம் இலாபம் அடைந்தனர். இந்தியாவில் பரந்த நிலப்பரப்பில் இதைச் சாகுபடி செய்ய

வும், விவசாயிகளிடம் இதை வாங்கி ஏற்றுமதி செய்யப் பதிலாளி நிலையங்கள் ஏற்பட்டன. இந்த நிலையத்தினர் இந்திய விவசாயி களுக்கு முன்பணம், கடன் முதலியன வழங்கினர்கள். இக் காலத்தில் ஆங்கிலேயர்களால் ஏற்படுத்தப்பட்ட வணிகப் பாங்கு கள் அவுரி, தோட்டப்பயிர்கள் முதலியவற்றிற்கு அதிக அளவு கடன் கொடுத்தன. இந்தியாவில் உற்பத்தியான பொருள்களை வாங்கவும், அவற்றை ஏற்றுமதி செய்யவும் மேற்படி பாங்குகள் உதவி செய்தன. கிழக்கு இந்தியக் கம்பெனியில் பணியாற்றிய பல ஊழியர்கள் அவுரி வியாபாரத்திலும், தோட்டப்பயிர்களிலும் அதிக இலாபம் இருப்பதைக் கண்டு தங்கள் கம்பெனி ஊழி யத்தை விடுத்து மேற்படி வர்த்தகப் பயிர்களின் உற்பத்தியிலும், வாணிபத்திலும் ஈடுபட்டார்கள்.

இந்தியாவில் பருத்தி நெடுங்காலமாகச் சாகுபடி செய்யப் பட்டது என்றாலும், பத்தொன்பதாவது நூற்றாண்டில்தான் பஞ்சு ஏற்றுமதி கணிசமாக உயர்ந்தது. நெடுங்காலமாக இந்தியா ஏற்றுமதி செய்த துணிவகைகள் நின்றவுடன், பஞ்சு ஏற்றுமதி அதிகரிக்கலாயிற்று. 1813-இல் முடிவடைந்த ஐந்து ஆண்டு களில் சராசரியாக ஆண்டுதோறும் **9,368,000** இராத்தல் பஞ்சு ஏற்றுமதி செய்யப்பட்டது. 1838-இல் இது **48,329,660** (பவுண்டு) இராத்தலாக உயர்ந்தது. [1]

பிரிட்டனின் தொழில் தேவைக்கான பஞ்சு அமெரிக்காவிட மிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. பிற நாடுகளிலிருந்து கச்சாப் பொருள்களைத் தருவிப்பதற்குப் பதிலாகத் தன்னுடைய ஏகாதிபத்தியத்தின் ஒரு பகுதியான இந்தியாவிலிருந்து பஞ்சைத் தருவிக்க வேண்டும் என்று கருதியது. இந்த நோக்கத்துடன் 1848-இல் ஜான் பிரைட் என்பவர் தலைமையில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. பிரிட்டனின் தொழில் தேவை களைக் கருத்தில் கொண்டு, இந்தியாவில் எந்த அளவிற்குப் பருத்தி சாகுபடியை விரிவுபடுத்தலாம், இதில் தோன்றும் பிரச்சினைகள் யாவை, இவற்றை எவ்வாறு தீர்க்கலாம் என்ற விவரங்களை ஆராய்ந்து கூறவேண்டும். இந்தியாவில் நிலப் போக்குவரத்து வசதிகள் அப்போது (1848 49) குறைவாக இருந்தன. நிலத்தீர்வை விகிதங்கள் அதிகமாக இருந்தன. சாகுபடியாளர்களிடம் போதிய மூலதனம் இல்லை. நீண்ட இழைப்பருத்தியை இந்தியாவில் சாகுபடி செய்ய முடியவில்லை. ஆகையால், இந்தியாவினல் இங்கிலாந்தின் பஞ்சுத்தேவையைப்

[1] R. C. Dutt, Economic History Of India Victorian Age, London, 1955, P. 1010

பூர்த்தி செய்ய முடியாது என்று கரிட்டி தன் அறிக்கையில் கூறியது. இந்தியாவின் இயலாமையை அறிந்த பின்னர் அமெரிக்கப் பஞ்சை இறக்குமதி செய்வதைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை. அமெரிக்காவில் அடிமைகளைப் பயன்படுத்திப் பெரும் அளவு பருத்தி சாகுபடி செய்தார்கள். போக்குவரத்து வளர்ச்சியால் இதைக் குறைந்த விலையில் விற்க முடிந்தது. ஆனால், இந்த நிலைமை தொடர்ந்து நீடிக்கவில்லை.

அமெரிக்காவில் தோன்றிய உள்நாட்டுப் போர் இந்தியாவிலும் வர்த்தகப் புரட்சியை ஏற்படுத்தியது என்று கூறலாம். உள்நாட்டுப் போர் காரணமாக அமெரிக்காவால் தொடர்ந்து பஞ்சு ஏற்றுமதி செய்யமுடியவில்லை. தங்களுக்குத் தேவையான பஞ்சை அமெரிக்காவிலிருந்து தருவிப்பதற்குப் பதிலாக இந்தியாவிலிருந்து வாங்கிக் கொள்ளலாம் என்று பிரிட்டிஷார் தீர்மானித்தார்கள். ஆங்கிலேயர்கள் இந்தியப் பஞ்சின்மேல் நாட்டம் கொண்டதால் இந்தியாவில் பஞ்சு உற்பத்தியும், அதன் விலையும், ஏற்றுமதியும் அதிகரித்தன. 1859-60-இல் பஞ்சு ஏற்றுமதியின் மதிப்பு ரூ **5.6** கோடியாக இருந்தது. 1864-65-இல் இது ரூ **37.5** கோடியாக உயர்ந்தது.

இந்தியாவில் பஞ்சு உற்பத்தியை அதிகரிக்கப் பம்பாயிலும் மத்திய மாநிலத்திலும் பஞ்சு ஆணையாளர்கள் நியமிக்கப் பட்டனர். புதிய சாலைகள் அமைக்கவும், இருப்புப்பாதைகள் போடவும் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அரசாங்கத்தின் முயற்சிகளை விட அங்காடி சக்திகளின் ஆதிக்கம் வலிமை உடையதாக இருந்தது. பஞ்சு கிடைப்பருமை காரணமாகப் பஞ்சின் விலை விரைவாக உயர்ந்து சென்றது. அமெரிக்க உள்நாட்டுப்போர் தொடங்கும் முன்னர், அதாவது 1859-இல் நிலவிய விலையைப்போல 4 மடங்கிற்கும் அதிகமான அளவு 1864-இல் பஞ்சு விலை உயர்ந்து சென்றது. (பார்க்கவும்: அட்டவணை 5.1.)

பஞ்சின் விலை உயர்வால் கூடுதலான நிலப்பரப்பில் பருத்தி சாகுபடி செய்யப்பட்டது. இந்தியாவில் ஒவ்வொரு மாநிலத்திலும் பருத்தி சாகுபடி அதிகரித்தது. காட்டாக, மத்திய மாநிலங்களில் பருத்தி சாகுபடி நிலப்பரப்பு அதிகரித்துள்ளதைக் காணலாம். (பார்க்கவும்: அட்டவணை 5.2)

மத்திய மாநிலத்தைப் போலவே சென்னை மாநிலத்திலும் பருத்தி சாகுபடி அதிகரித்தது. பெல்லாரி மாவட்டத்தில் மட்டும், அமெரிக்க உள்நாட்டுப் போர் நடைபெற்ற காலத்தில், சுமார்

அட்டவணை 5·1

**பஞ்சின் விலை[2] (இராத்தல் ஒன்றின் விலை)**

| ஆண்டுகள் | விலை (ரூ. ந. பை.) |
|---|---|
| 1859 | 0=16 |
| 1860 | 0=22 |
| 1861 | 0=26 |
| 1862 | 0=40 |
| 1863 | 0=65 |
| 1864 | 0=71 |
| 1865 | 0=44 |
| 1866 | 0=39 |

அட்டவணை 5·2

**மத்திய மாநிலத்தில்**
**பருத்தி சாகுபடி செய்யப்பட்ட ஏக்கர்கள்[3]**

| ஆண்டுகள் | ஏக்கர்கள் |
|---|---|
| 1861-62 | 3,75,623 |
| 1862-63 | 4,27,111 |
| 1863-64 | 4,88,436 |
| 1864-65 | 6,91,198 |
| 1865-66 | 5,87,398 |
| 1866-67 | 5,98,801 |
| 1867-68 | 7,30,633 } * |
| 1868-69 | 7,50,875 } * |

* ஜமீன்தாரி பகுதிகளில் உள்ள 1,00,000 ஏக்கர்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

[2] ஆதாரம் D. R. Galgil, The Industrial Evolution Of India, O. X. P. 4th Edition, P. 16.

[3] முன் கூறியபடி பக். 17.

மூன்ருண்டுகளில் 15 லட்சம் ஸ்டர்லிங் மதிப்புள்ள பஞ்சு ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளது.

உலக நாடுகளிடையே ஏற்படும் பொருளாதார நிகழ்ச்சிகள் இந்திய உற்பத்தியையும், வாணிபத்தையும் எந்த அளவிற்குப் பாதித்து இருக்கின்றன என்பதை அமெரிக்க உள்நாட்டுப் போரும், அதைத் தொடர்ந்து இந்தியப் பஞ்சு உற்பத்தியிலும், ஏற்றுமதியிலும் ஏற்பட்ட பூரிப்பான வளர்ச்சிகளும் அறிவுறுத்துகின்றன. தக்காணத்தில் பருத்தி சாகுபடி செய்யும் பகுதிகளில் பணப்புழக்கம் பெருகவும், வாங்கும் சக்தி உயரவும் செய்தன. அச்சமயம் மழையின்மையால் தோன்றிய வறட்சியில் உற்பத்தி அளவு பெரிதும் குறைந்தது. இருந்தபோதிலும் பஞ்சின் விலை உயர்வால் மக்களிடம் போதிய வாங்கும் சக்தி இருந்தது. எனவே கஞ்சத்தில் தோன்றிய பஞ்சத்தால் மக்கள் அதிகம் அவதிப்படவில்லை.

அமெரிக்க உள்நாட்டுப்போரினுல் இந்தியா பஞ்சு உற்பத்தியிலும், ஏற்றுமதியிலும் பூரிப்பான வளர்ச்சி ஏற்பட்டதைப்போலவே, உள்நாட்டுப்போர் முடிவுற்றதும் இந்தியப் பஞ்சு உற்பத்தியாளர்களும், ஏற்றுமதியாளர்களும் பெரும் இழப்பிற்கு உள்ளாஞர்கள். முக்கியமாக ஊக வாணிபத்தில் ஈடுபட்டவர்கள் அதிக இழப்பிற்கு உள்ளாஞர்கள். வணிகர்களும், உற்பத்தியாளர்களும் பெரும் அளவிற்கு இழப்புற்றதால் பம்பாய் மாநில பாங்கு மூடப்பட்டது.[4]

அமெரிக்கா மீண்டும் பஞ்சு ஏற்றுமதி செய்யத்தொடங்கியது. அமெரிக்கப் பஞ்சுடன் தரத்திலும், விலையிலும் (இந்தியப் பஞ்சினுல்) போட்டியிட முடியவில்லை. இதனுல் இந்தியப்பஞ்சின் விலை வீழ்ச்சி அடைந்ததுடன், ஏற்றுமதி அளவும், மதிப்பும் வீழ்ச்சி அடைந்தன. (பார்க்கவும் : அட்டவணை 5.3)

1865-இல் பஞ்சு ஏற்றுமதி உச்ச அளவாக இருந்தது. அந்த ஆண்டில் **37.57** மில்லியன் ஸ்டர்லிங் மதிப்புள்ள பஞ்சு ஏற்றுமதி செய்யப்பட்டது. அதன் பின்னர் பஞ்சு ஏற்றுமதியின் மதிப்பு படிப்படியாகக் குறைந்து சென்றது.

[4] முதலில் தோற்றுவித்த பம்பாய் மாநில பாங்கு மூடப்பட்டது. பின்னர் அதே பெயரில், அதே ஆண்டில் வேறொரு (பம்பாய் மாநில) பாங்கு தோற்றுவிக்கப்பட்டது. இந்தப் பாங்கும், கல்கத்தா, சென்னை மாநில பாங்குகளும் 1921-இல் ஒருங்கு இணைக்கப் பட்டதால் இம்பீரியல் பாங்கு தோன்றியது.

அட்டவணை 53

## இந்தியப் பஞ்சு ஏற்றுமதி [5]

| ஆண்டுகள் | பஞ்சு ஏற்றுமதி £ மில்லியன் | ஆண்டுகள் | பஞ்சு ஏற்றுமதி £ மில்லியன் |
|---|---|---|---|
| 1859 | 4·09 | 1869 | 20·15 |
| 1860 | 5·64 | 1870 | 19·08 |
| 1861 | 7·34 | 1871 | 19·46 |
| 1862 | 10·20 | 1872 | 21·27 |
| 1863 | 18·78 | 1873 | 14·02 |
| 1864 | 35·86 | 1874 | 13·21 |
| 1865 | 37·57 | 1875 | 15·26 |
| 1866 | 35·59 | 1876 | 13·28 |
| 1867 | 16·46 | 1877 | 11·75 |
| 1868 | 20·09 | | |

[5] R. C. Dutt. முன் கூறியபடி பக். 347.

சூயஸ் கால்வாய் திறக்கப்பட்டதால் இந்தியாவின் ஏற்றுமதிப்பொருள்கள் பெரும் அளவிற்கு உயர்ந்துள்ளன. (பார்க்கவும் .: அட்டவணை 5·4) அவுரி, உரிவை, தோல் முதலியன, சணல், தேயிலை முதலிய பொருள்களின் ஏற்றுமதி 1869-க்குப் பின்னர் வெகுவாக அதிகரித்துள்ளன.

பஞ்சு அங்காடியில் ஏற்பட்ட விலை வீழ்ச்சி இந்தியா முழுவதும் உள்ள விவசாயிகளைப் பாதித்தது. அதிலும் சிறப்பாக இரயத்துவாரிப் பகுதிகளில்—தக்காணத்தில்—உள்ள விவசாயிகளை அதிகம் பாதித்தது. பஞ்சு உற்பத்தியிலும், ஏற்றுமதியிலும் தற்காலிகமாக ஏற்பட்ட பூரிப்பான நிலைமையை இயல்பான வளர்ச்சியாகக் கருதி நிலவரி விகிதங்களை உயர்த்தினார்கள். சில ஆண்டுகளில் பஞ்சு பூரிப்பு மறைந்தது. ஆனால், அதன் விளைவாக உயர்த்தப்பட்ட நிலவரி விகிதங்கள் விவசாயிகளை வறியவராக்கின. தங்கள் நிலத்தில் விளையும் பொருள்களின் மதிப்பு வீழ்ச்சி அடைந்தமையால் கூடுதலான வரி விகிதங்களைச் செலுத்த இயலாமல் கடன் வாங்கினார்கள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தன்னிறைவு அடிப்படையில் கிராம சமுதாய அமைப்புகள் இயங்கிவந்தன. விவசாயத்துறையின் வளர்ச்சியும், உற்பத்திக்கட்டமைப்பும் இவற்றைப் பிரதிபலித்தன. கிராம மக்களின் நுகர்விற்கான தானியங்களில் பெரும்பகுதி கிராமத்திலேயே உற்பத்தி செய்யப் பட்டன. எண்ணெய் விதைகளும் இதர பயிர்களும் இதே அடிப்படையில்தான் சாகுபடி செய்யப்பட்டன. இருந்த போதிலும் சில பகுதிகளில் இயற்கை வளங்கள் காரணமாகப் பருத்தியும், கரும்பும் சிறப்பாகச் சாகுபடி செய்யப்பட்டன. மேலே கூறிய பகுதிகளில் உற்பத்தியான பொருள்கள் இதர பகுதிகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. மத்திய இந்தியாவிலிருந்து வங்காளத்திற்குப் பஞ்சு எடுத்துச் செல்லப்பட்டது. வங்காளத்தில் மிகவும் உயர்ந்த ரகப் பருத்தி சாகுபடி செய்யப் பட்டது. இதிலிருந்து நேர்த்தியான நூலிழைகள் நூற்கப் பட்டன என்றும், இதைக் கொண்டுதான் டாக்கா மஸ்லின் நெய்யப்பட்டது என்றும் கூறுகிறார்கள். வணிகப்புரட்சிக்கு முன்னதாக ஓரளவிற்கு வாணிபம் நடைபெற்றதை இது எடுத்துக்காட்டுகிறது.

வணிகப்புரட்சியின் காரணமாக இந்தியாவின் பொருளாதார அமைப்பில் அடிப்படையான மாற்றங்கள் ஏற்பட்டன. சிறப்பாக மரபு அடிப்படையில் இயங்கிய விவசாயத் துறையில்

அட்டவணை 5·4

## இந்தியாவின் ஏற்றுமதிப் பொருள்கள்[6]

(மில்லியன் ஸ்டர்லிங்குகளில்)

(மில்லியன் பவுன் ஸ்டர்லிங்குகளில்)

| ஆண்டுகள் | அவுரி | தானியங்கள் | உரிவை, தோல் | சணல் + | அபின் | விதைகள் | தேயிலை |
|---|---|---|---|---|---|---|---|
| 1859 | 2·12 | 2·80 | 0·54 | [illegible] | 10·83 | 2·06 | 0·06 |
| 1860 | 2·02 | 3·59 | 0·44 | [illegible] | 9·05 | 1·55 | 0·13 |
| 1861 | 1·89 | 3·85 | 0·66 | 0·77 | 10·18 | 1·79 | 0·15 |
| 1862 | 1·65 | 4·04 | 0·79 | 0·72 | 10·55 | 1·21 | 0·19 |
| 1863 | 2·13 | 3·73 | 0·90 | 0·83 | 12·49 | 1·83 | 0·22 |
| 1864 | 1·76 | 4·33 | 0·97 | 1·02 | 10·76 | 2·03 | 0·27 |
| 1865 | 1·86 | 5·96 | 0·73 | 1·41 | 9·91 | 1·91 | 0·30 |
| 1866 | 1·86 | 5·25 | 0·61 | 1·08 | 11·12 | 1·75 | 0·31 |
| 1867 | 1·80 | 3·65 | 0·66 | 1·04 | 10·43 | 1·79 | 0·38 |
| 1868 | 1·82 | 3·96 | 0·99 | 1·81 | 12·33 | 2·16 | 0·73 |
| 1869 | 2·89 | 4·57 | 1·25 | 1·89 | 0·70 | 1·99 | 0·98 |
| 1870 | 3·18 | 3·22 | 1·69 | 1·98 | 11·69 | 2·31 | 1·08 |
| 1871 | 3·19 | 4·47 | 2·02 | 2·58 | 10·78 | 3·52 | 1·14 |
| 1872 | 3·71 | 4·87 | 2·53 | [illegible] | 13·37 | 2·73 | 1·48 |
| 1873 | 3·43 | 6·07 | 2·72 | 4·14 | 11·43 | 1·51 | 1·59 |
| 1874 | 3·56 | 6·55 | 2·62 | 3·44 | 11·34 | 2·36 | 1·75 |
| 1875 | 2·58 | 5·49 | 2·68 | 3·25 | 11·96 | 3·24 | 1·96 |
| 1876 | 2·88 | 6·42 | 2·94 | 2·81 | 11·15 | 5·46 | 2·18 |
| 1877 | 2·96 | 7·99 | 3·00 | 2·64 | 12·40 | 5·32 | 2·62 |

\+ 1859 முதல் 1867வரை சணலுடை, சணல் உற்பத்தியும் சேர்க்கப்பட்டுள்ளன. அதன் பின்னர் உள்ள ஆண்டுகளில் சணல் ஏற்றுமதி மட்டுமே குறிக்கப்பட்டுள்ளன.

6 ஆதாரம் முற் கூறியபடி பக். 347.

குறிப்பிடத்தக்க அளவுக்கு மாற்றங்கள் தோன்றின. வாணிபத்தின் வளர்ச்சியால் கிராமங்களும், வட்டாரங்களும் உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்றிருக்க வேண்டிய அவசியம் குறைந்தது. உணவு தானியங்களை உற்பத்தி செய்யும் வட்டாரங்களை விட வர்த்தகப்பயிர்களைச் சாகுபடி செய்யும் மக்கள் அதிக அளவு வாங்கும் சக்தி உடையவர்களாக இருந்தனர். இவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவு தானியம் போன்ற அத்தியாவசியமான பொருள்களை நாட்டின் இதர பகுதிகளிலிருந்து வாங்கிக்கொண்டார்கள். தானிய உற்பத்தி உபரியாக இருக்கும் காலங்களில் அவற்றை அங்காடியில் விற்பனை செய்வதைப் போலவே, தானியம் கிடைப்பருமையான காலங்களிலும் அங்காடியில் அதை விலை கொடுத்து வாங்கிக் கொள்ளலாம் என்று எண்ணினார்கள். எனவே, தானியங்களைக் களஞ்சியங்களில் சேமிக்க வேண்டியது அவசியமில்லாமல் போய் விட்டது. கிராமம் தனித்து இருந்த நிலையும், தன்னிறைவு பெற்று இருந்த நிலையும் முற்றிலும் மாறிவிட்டன. வணிக சக்திகளின் ஆதிக்கத்தில் விவசாய உற்பத்தி கொண்டு வரப்பட்டது. இதனால் புதியதொரு நிலையற்ற தன்மை ஏற்பட்டது. இதற்கு முன்னர் இயற்கைக்காரணிகளால் மட்டுமே விளைச்சலில் ஏற்ற இறக்கங்கள் ஏற்பட்டன. ஆனால், வணிகப் புரட்சிக்குப் பின்னர் உலக சந்தைகளில் தோன்றக்கூடிய ஏற்ற இறக்கங்கள், அளிப்பு தேவை ஆகியவற்றில் ஏற்படக்கூடிய சமனற்ற தன்மை ஆகியவை விவசாயிகளின் வருமானத்தில் (விலையின் வாயிலாக)புதியதொரு நிலையற்றதன்மையைத்தோற்றுவித்தன. இருந்த போதிலும் அங்காடி சக்தியினால் பலன் அடைந்தவர்கள் அதனால் ஏற்படும் இடர்களை ஏற்க முன்வந்தார்கள். எனவே, கிராம மக்களின் தேவையைவிட அங்காடி விலையை முக்கியமாகக் கருதினார்கள். இலாபநோக்கத்தோடு சாகுபடி செய்த விவசாயிகள் உணவு தானியத்தைவிட வர்த்தகப்பயிர்களை அதிகம் விரும்பினார்கள்.

விவசாயப் பொருள்களின் வணிக வளர்ச்சியால் உணவுப் பயிர்களைச் சாகுபடி செய்வதற்குப் பதிலாக வர்த்தகப்பயிர்களைச் சாகுபடி செய்தார்கள். இது முற்றிலும் விரும்பத்தக்க ஒரு நிகழ்ச்சியாக இல்லை. உணவுதானிய உற்பத்தி பெரும் அளவிற்குப் பாதிக்கப்பட்டது. வங்காளத்தில் 1866–இல் தோன்றிய பஞ்சத்திற்கான காரணத்தை ஒருவர் பின்வருமாறு கூறியுள்ளார் :

> ‘‘மாங்கீர் மாவட்டத்தில் உள்ள வளம் பொருந்திய நிலங்களில் அவுரி சாகுபடி செய்யப்படுகிறது. கடந்த

ஐந்து ஆண்டுகளில் அவுரி உற்பத்தி அதிகரித்துள்ளது; நெல் சாகுபடியாகும் நிலப்பரப்பு குறைந்துள்ளது; இதுவே தற்சமயம் ஏற்பட்ட இன்னல்களுக்கெல்லாம் மூல காரணம்'' என்று கூறியுள்ளார். இக்கருத்தை மேலும் பலர் வலியுறுத்தியுள்ளனர். உணவு தானியங்கள் சாகுபடி செய்யப்பட்ட பகுதிகளில் அவுரி சாகுபடி செய்யப்பட்டது. ஆண்டுதோறும் அவுரி சாகுபடியாகும் நிலப்பரப்பு விரிவடைந்து வருவதால் தானியக்கிடைப்பருமை ஏற்பட்டுள்ளது. வடமேற்கு எல்லை மாநிலத்தில் சோளம், கம்பு, பருப்புவகைகள் முதலியவற்றுக்குப் பதிலாக அதிக அளவிற்குப் பருத்தியும், குறைந்த அளவிற்குக் கோதுமையும் சாகுபடி செய்யப்பட்டன என்று வருவாய் வாரியத்துறை அதிகாரி ஒருவர் கருத்துத் தெரிவித்துள்ளார். இராஜபுதனத்தில் உணவு தானியம் பயிரிடப்பட்ட பகுதிகளில் கசகசாச் செடிகள் பயிரிடப்படுகின்றன (1870-இல்) என்று ஒருவர் கூறியுள்ளார். [7]

பத்தொன்பதாம் நூற்றுண்டு முடிவு பெறும் தறுவாயில் இரு மிகப்பெரிய பஞ்சங்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றின. இதனுல் உற்பத்தியும் வாணிபமும் அதிகம் பாதிக்கப்பட்டன. விவசாயிகள் நம்பிக்கை இழந்தவர்களாகவும், சாகுபடி வேலைக்குப் போதிய மூலதனம் இல்லாதவர்களாகவும் இருந்தனர். இதனுல் இரு போகம் விளையும் நிலப்பரப்பு பெரிதும் குறைந்தது. தானியக் கிடைப்பருமையால் ஏற்பட்ட விபரீத விளைவுகளை அறிந்த மக்கள் வர்த்தகப் பயிர்களுக்குப் பதிலாக உணவு தானியங்களை உற்பத்தி செய்யத் தலைப்பட்டனர். இதற்கு உணவு தானியங்களின் விலை உயர்வையும் ஒரு தூண்டு கோலாகக் கருத வேண்டும். ஆனுல், இந்தப் போக்கு தொடர்ந்து நீடிக்கவில்லை.

1880-க்கு முன்புவரை தனித்தனியாகப் பயிர்களின் சாகுபடி நிலப்பரப்பு குறித்த புள்ளி விவரங்கள் ஏதுமில்லை. அதன் பின்னர்தான் ஓரளவுக்கு புள்ளி விவரங்கள் உள்ளன. நீண்ட கால ரீதியில் காணக்கூடிய மாறுதல்களையும், போக்கு கோட்டையும் கருதுவோமானல் உணவு தானியங்களுக்குப் பதிலாக வர்த்தகப்பயிர்கள் சாகுபடி செய்யப்பட்டன என்பதை அறியலாம். ஜார்ஜ் பிளின் (George Blyn) அவர்கள் தயாரித்துள்ள அட்டவணையிலிருந்து அறியலாம்.

[பார்க்கவும்: அட்டவணை 5.5]

[7] பார்க்கவும்-(Ed) V. B. Singh - Economic History Of India 1857-1956, Allied, 1965, p. 125.

அட்டவணை 5·5

## 1893 — 94 முதல் 1945 — 40 வரை

## உணவு, வர்த்தகப்பயிர்களின் விளைச்சல் மதிப்பீடு[8]

| ஆண்டுகள் | பயிர் விளைச்சலின் வருடாந்திர சராசரிக் குறியீட்டு எண் | | | வர்த்தகப் பயிர் |
|---|---|---|---|---|
| | உணவுப் பயிர் | வர்த்தகப் பயிர் | மொத்தம் | உணவுப் பயிர் விகிதம் |
| 1893–94 முதல் 1895–96 வரை | 100 | 100 | 100 | 0·22 |
| 1896–97 முதல் 1905–06 வரை | 96 | 105 | 98 | 0·24 |
| 1906–07 முதல் 1915–16 வரை | 99 | 126 | 104 | 0·28 |
| 1916–17 முதல் 1925–26 வரை | 98 | 142 | 106 | 0·32 |
| 1926–27 முதல் 1935–36 வரை | 96 | 171 | 108 | 0·41 |
| 1936–37 முதல் 1945–46 வரை | 93 | 185 | 110 | 0·44 |

1895-96-லிருந்து 1945-46 வரையில் உள்ள அரை நூற்றுண்டு காலத்தில் வர்த்தகப்பயிர்களின் விளைச்சல் **85%** அதிகரித்துள்ளது. உணவுப்பயிர்களின் விளைச்சல் **7%** வீழ்ச்சி அடைந்துள்ளது. இவ்விருபயிர்களின் மொத்த விளைச்சல் 50 ஆண்டுகளில் **10%** உயர்ந்து காணப்படுகிறது. வர்த்தகப்பயிர்

[8] Quoted from ibid, p. 126.

களின் உற்பத்தியை உணவுப் பயிர்களின் (உற்பத்தியின்) விகித மாக்கிக் கூறலாம். இந்த விகிதம் ஐம்பது ஆண்டுகளில் இரட் டித்திருப்பதைக் காணலாம் (0.22-இலிருந்து 0.44 ஆக உயர்ந்துள்ளது). அதாவது வர்த்தகப்பயிர்களின் முக்கியத் துவம் இரு மடங்கு அதிகரித்துள்ளது.

வர்த்தகப் பயிர்களின் உற்பத்தி அதிகரித்து இருக்கிறது என்றாலும், இவற்றைப் பயிரிடுவதற்கான நிலப்பரப்பு இதே விகி தத்தில் அதிகரிக்கவில்லை. வர்த்தகப் பயிர்களின் சாகுபடிக்கு உயர்ந்த ரக நிலம் ஒதுக்கப்பட்டது. தவிரவும் நில உற்பத்தித் திறனும் அதிகரித்துள்ளது.

**பயிர்களும் நிலப்பரப்பும்**

உணவுப்பயிர்களும், வர்த்தகப்பயிர்களும் சாகுபடி செய்யப் பட்ட நிலப்பரப்புகளை இங்கே காண்போம். பயிரிடப்பட்ட நிகர நிலப்பரப்பு **196,601** ஏக்கரிலிருந்து (1894-95) **219,192** ஏக்கராக (1913-14-இல்) அதிகரித்துள்ளது. பாசன வசதி உடைய நிலப்பரப்பு கிட்டத்தட்ட இருமடங்காக உயர்ந்துள்ளது; 23825 ஏக்கரிலிருந்து **46,836** ஏக்கராக உயர்ந்துள்ளது. பாசனவசதிகளுடன் சாகுபடி செய்யப்பட்ட நிலப்பரப்பு இரு மடங்காக உயர்ந்துள்ள போதிலும் நிகர அளவில் பயிரிடப்பட்ட நிலப்பரப்பின் விகிதமாகக் கருதுவோமானால் 1913-14-இல் சுமார் **21%**-திற்கும் குறைவான பகுதிகளில் பாசன வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன. பாசன வசதிகளை அதிகரிப்பதன் மூலம் நிலத்தின் உற்பத்தித்திறனை மேலும் உயர்த்த முடியும் என்று கருதுவதற்கு இது இடமளிக்கிறது.

பலவகைப் பயிர்களின் சாகுபடி நிலப்பரப்பைப் தனித்தும் ஒப்புமையாகவும் கருதும்போது 1895-1900 ஆண்டுகளைக் கூடு மானவரை கணிப்பில் சேர்த்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது. இந்த ஆண்டுகளில் இரு பெரிய பஞ்சங்கள் ஏற்பட்டன. பஞ்சகாலம் என்பது அசாதாரண காலமாகும். இதைக் கொண்டு நீண்டகால ரீதியில் தோன்றிய மாறுதல்கள், திருப் பங்களை அறியமுடியாது.

1901-02-இல் சாகுபடி செய்த நிலப்பரப்பில் சுமார் **88%** நிலத்தில் உணவு தானியங்கள் பயிரிடப்பட்டன. அதன் பின்னர் சுமார் 13 ஆண்டுகளில் சாகுபடி செய்த நிலப்பரப்பு விரிவடைந்துள்ள போதிலும் உணவு தானியங்களின் நிலப் பரப்பு மாறாத விகிதத்தில் இருந்துள்ளது. சாகுபடி நிலப்பரப்பு

அதிகரித்துள்ள அதே விகிதத்தில் உணவு தானியங்களின் நிலப்பரப்பும் அதிகரித்துள்ளதைக் காணலாம். பார்க்கவும் அட்டவணை 5·6.

அட்டவணை 5.6

**இந்தியாவில் பயிர் வாரியாக நிலப்பரப்பு[9] (1894 – 1914)**

| | (ஆயிரம் ஏக்கர்களில்) | | | | |
|---|---|---|---|---|---|
| | 1894—95 | 1901—02 | 1906—07 | 1912—13 | 1913—14 |
| தரிசு நிலம் | 30,183 | 42,147 | 39,935 | 48,760 | 52,620 |
| நிகர சாகுபடி செய்யப்பட்ட நிலப்பரப்பு | 196,601 | 199,708 | 214,226 | 224,166 | 219,192 |
| பாசன வசதி உடையவை | 23,825 | 32,582 | 36,654 | 45,539 | 46,836 |
| நெல் | 69,280 | 70,067 | 73,541 | 78,752 | 76,908 |
| கோதுமை | 22,761 | 18,607 | 25,137 | 23,861 | 22,685 |
| சோளம் | 20,863 | 21,819 | 20,781 | 20,968 | 21,405 |
| கம்பு | 11,337 | 13,197 | 15,034 | 16,269 | 15,385 |
| மொத்த உணவு தானியங்கள் | 181,576 | 176,999 | 195,117 | ........+ | 191,573 |
| சர்க்கரை (கரும்பு) | 2,889 | 2,596 | 2,624 | 2,712 | 2,708 |
| எண்ணெய் விதைகள் | 13,930 | 11,965 | 13,965 | 14,936 | 14,658 |
| பருத்தி | 9,717 | 10,299 | 13,771 | 14,138 | 15,844 |
| சணல் | 2,275 | 2,278 | 3,523 | 3,324 | 3,136 |
| மாட்டுத்தீவனம் | 1,931 | 2,944 | 4,548 | 5,770 | 5,910 |
| அவுரி | 1,705 | 792 | 449 | 227 | 169 |
| தேயிலை | 414 | 495 | 505 | 558 | 572 |

[9] ஆதாரம்: D. R. Gadgil, ibid, p. 90.

+ 1912 — 13 ஆண்டில் 20,373 ஏக்கர்கள் உணவு தானியங்களின் மொத்த நிலப்பரப்பாகக் கூறப்பட்டுள்ளது. இது அச்சுப்பிழையாக இருக்கும்.

சாகுபடி செய்யப்படும் நிலப்பரப்பில் **88%** நிலம் உணவு தானியங்களுக்காக ஒதுக்கப்பட்ட போதிலும் இந்தியா உணவு தானியங்களில் உபரியாக இல்லை. உணவுதானியங்களை அதிக அளவில் ஏற்றுமதி செய்யவில்லை. பர்மா நீங்கலாக உள்ள இந்தியாவின் அரிசி உற்பத்தி ஏற்றுமதி செய்யக்கூடிய அளவிற்கு உபரியாக இல்லை. நெல்லிற்கு அடுத்தாற்போல் கோதுமை அதிகப் பரப்பளவில் சாகுபடி செய்யப்பட்டது. கோதுமை பயிரிடப்பட்ட நிலப்பகுதி ஆண்டுதோறும் மாறிக்கொண்டே வந்துள்ளது. நெல், கோதுமையைத் தவிர உள்ள இதர புன்செய்ப் பயிர்களின் சாகுபடி நிலப்பரப்பு அதிகரித்துள்ளது. மேற்படி புன்செய்த் தானியங்கள் உள்நாட்டிலேயே நுகரப்பட்டன. இது ஏற்றுமதி செய்யப்படவில்லை.

வர்த்தகப்பயிர்களில் எண்ணெய் வித்துகள் முக்கியமானவை. இவற்றின் நிலப்பரப்பு நிதானமாக உயர்ந்துள்ளது. பெரும்பாலான எண்ணெய் வித்துகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. நிலக்கடலையின் விழுக்காடு ஆரம்பத்தில் ஓரளவு குறைவாக இருந்தாலும், புதியரகப்பயிர் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்டதால் இதன் விழுக்காடு பின்னர் உயர்ந்துசென்றது. எண்ணெய் வித்துகளுக்கு அடுத்தாற்போல பருத்தி சாகுபடி அதிகரித்துள்ளது. பருத்தி பல மாநிலங்களிலும் பயிரிடப்படுகின்றது. இதன் சாகுபடியும் சுமார் 10 ஆண்டுகளில் விரிவடைந்துள்ளது. பருத்தியைப்போலச் சணல் நாடெங்கிலும் பயிரிடப்படவில்லை என்ருலும், 1901-02 முதல் 1913-14 வரை உள்ள ஆண்டுகளில் பருத்தி சாகுபடியைவிட சணல் சாகுபடி பரப்பு அளவு அதிக விகிதத்தில் உயர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது. அபின், அவுரி ஆகியவை சாகுபடி செய்யும் நிலப்பரப்பு குறைந்துவிட்டது. இந்திய அரசாங்கம் சீன அரசாங்கத்துடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் விளைவாக அபின் ஏற்றுமதியும், சாகுபடியும் குறைந்தன. வெளிநாடுகளில் செயற்கை முறையில் தயாரிக்கப்பட்ட அவுரியின் போட்டியால் அதன் சாகுபடி பெரிதும் குறைந்தது. கால்நடைத்தீவனங்களின் சாகுபடிப் பரப்பளவு விரிவடைந்துள்ளது. சுழல் முறையில் பயிர்களைச் சாகுபடி செய்வதற்கு இவை பெரிதும் பயன்பட்டன. கரும்பு சாகுபடி செய்த நிலப்பரப்பு 1890-1910 ஆண்டுகளில் சுமார் 25% வீழ்ச்சி அடைந்தது. ஆனுல், 1914-க்குள் இதன் சாகுபடி மீண்டும் அதிகரித்தது. கிடைத்துள்ள புள்ளி விவரங்களைக் கொண்டு பார்ப்போமானுல் இந்திய விவசாயத்தின் கட்டமைப்பில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படவில்லை என்று அறியலாம். இந்திய விவசாயத்தில் உணவுப்பயிர்களும், வர்த்தகப்

பயிர்களும் இரு முக்கிய பிரிவுகள். இதில் உணவுப்பயிர்களின் சாகுபடி பெரும்பான்மை முக்கியத்துவம் உடையதாக தொடர்ந்து நீடித்துள்ளது. இதன் சாகுபடி நிலப்பரப்பு விகிதம் அதே மட்டத்தில் மாறுதுள்ளது. வர்த்தகப்பயிர்களில் பருத்தி, சணல், எண்ணெய் வித்துகள் ஆகியவற்றின் நிலப்பரப்பு அதிகரித்து உள்ளன. அவுரி, அபின், கரும்பு ஆகியவற்றின் சாகுபடி பல்வேறு காரணங்களினுல் குறைந்துள்ளது.

1916-17 முதல் 1929-30 வரையில் சாகுபடி நிலப்பரப்பு விவரங்கள் அட்டவணை **5.7**-இல் கொடுக்கப்பட்டுள்ளன. மேற்படி ஆண்டுகளில் மொத்த சாகுபடி நிலப்பரப்பு குறிப்பிடத்தக்க அளவிற்கு உயரவில்லை. உணவு தானியங்கள் சாகுபடி செய்யப்பட்ட பகுதிகளின் விகிதம் கிட்டத்தட்ட அதே மட்டத்தில் இருந்துள்ளது. இருபதாம் நூற்றூண்டில் முதல் முப்பது ஆண்டுகளில் மேற்படி விகிதம் குறைந்தது 88% ஆகவும், அதிக அளவு 92% ஆகவும் உள்ளது. மொத்தச் சாகுபடி நிலப்பரப்பிலும் உணவு தானியங்களின் சாகுபடியிலும் அதிக வேறுபாடு இல்லை என்றுலும், இறுதி நிலையில் இவை குறைந்துள்ளன. ஆனுல், வர்த்தகப்பயிர்களின் சாகுபடி தொடர்ந்து உயர்ந்து சென்றுள்ளது. முக்கியமாக எண்ணெய் வித்துகள், பருத்தி, சணல் முதலியன குறிப்பிடத்தக்கவை.

எண்ணெய் வித்துகளில் பெரும் பகுதி ஏற்றுமதி செய்யப்பட்டன என்பதை பின்வரும் அட்டவணை **5·8**-லிருந்து தெரிந்து கொள்ளலாம்.

எண்ணெய் வித்துகளில் பெரும்பகுதி ஏற்றுமதி செய்யப்பட்டதால் வெளிநாடுகளில் தோன்றிய ஏற்ற இறக்கங்கள் அதன் உற்பத்தியை அதிகம் பாதித்தன. இவற்றின் விலையும், சாகுபடியும் இதைத் தொடர்ந்து வேறுபட்டன. முதல் உலகப்போர் எண்ணெய் வித்துகளின் வாணிபத்தைக் குறைத்தது. இவை பெரும்பாலும் ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. கப்பல் கட்டணங்கள் உயர்ந்தன. போரில் ஈடுபட்ட நாடுகள் இதைத் தொடர்ந்து இறக்குமதி செய்ய முடியவில்லை. போர் முடிவுற்ற பின்னரும் சில ஆண்டுகள் வரை எண்ணெய் வித்துகளின் ஏற்றுமதி அதிகரிக்கவில்லை. ஆளிவிதை மற்ற எண்ணெய் வித்துகளைப்போல் அல்லாமல் வெளிநாடுகளில் விற்பனை செய்யப்பட்டது. இதை அதிக அளவில் பிரிட்டன் இறக்குமதி செய்தது. ஆகையால் இதன் ஏற்றுமதி அளவு அதிகம் பாதிக்கப்படவில்லை. ஆனுல், ஐரோப்பிய நாடுகளுக்கு

அட்டவணை 5·7

## இந்தியாவில் பயிர் சாகுபடி பரப்பு[10] (1916 — 30)

| | ஆயிரம் ஏக்கர்களில் | | | | |
|---|---|---|---|---|---|
| | 1916—17 | 1919—20 | 1923—24 | 1926—27 | 1929—30 |
| தரிசு நிலம் | 45,493 | 52,135 | 49,620 | 49,698 | 49,714 |
| நிகர பயிரிடும் நிலப்பரப்பு | 229,620 | 222,825 | 222,485 | 226,012 | 228,161 |
| பாசன வசதி உடைய நிலம் | 48,004 | 48,963 | 44,926 | 47,785 | 51,010 |
| நெல் | 80,988 | 78,706 | 77,201 | 78,502 | 79,424 |
| கோதுமை | 25,044 | 23,530 | 24,294 | 24,181 | 24,731 |
| சோளம் | 21,892 | 22,488 | 21,138 | 21,121 | 23,241 |
| கம்பு | 15,228 | 14,582 | 13,675 | 13,801 | 13,291 |
| மொத்த உணவு தானியங்கள் | 208,773 | 199,667 | 197,000 | 197,219 | 200,018 |
| கரும்பு | 2,614 | 2,813 | 3,045 | 3,041 | 2,583 |
| எண்ணெய் வித்துகள் | 14,635 | 12,571 | 14,255 | 14,999 | 16,330 |
| பருத்தி | 13,837 | 15,318 | 15,382 | 15,687 | 16,141 |
| சணல் | 2,671 | 2,800 | 2,329 | 3,610 | 3,268 |
| தேயிலை | 603 | 702 | 713 | 738 | 766 |
| புகையிலை | 1,041 | 1,101 | 1,026 | 1,055 | 1,172 |
| தீவனங்கள் | 8,173 | 8,206 | 8,764 | 8,940 | 9,381 |

10 ஆதாரம்: முன் கூறியபடி பக். 209.

அட்டவணை 5·8

**எண்ணெய் வித்துகளின் உற்பத்தியில் ஏற்றுமதி செய்யப்பட்ட சதவீதம்[11]**

| | 1909—10 முதல் 1913—14 வரை ஐந்தாண்டின் சராசரி | 1925—26 | 1927—28 | 1930—31 | 1931—32 |
|---|---|---|---|---|---|
| ஆளிவிதை | 77 | 77 | 63 | 68 | 29 |
| கடுகு வகைகள் | 23 | 13 | 8 | 4 | 6 |
| எள் | 25 | 10 | 2 | 0·2 | 3 |
| நிலக்கடலை | 38 | 24 | 24 | 19 | 25 |

ஏற்றுமதி செய்த ஆளிவிதை பெரிதும் குறைந்தது. கடுகு, ஆளிவிதை இரண்டும் மேற்படி நாடுகளில் குறைந்த அளவிற்கே இறக்குமதி செய்யப்பட்டன. அந்நாடுகள் அதிக அளவில் நிலக்கடலையை இறக்குமதி செய்தன என்பது முக்கிய காரணமாக இருக்கக் கூடும்.

பன்னாட்டு அளவில் இந்தியாவைக் கருதுவோமானால் முதல், உலகப் போருக்குப் பின்னர் எண்ணெய் வித்துகளின் ஏற்றுமதி படிப்படியாகக் குறைந்துள்ளதை அறியலாம்.

**நிலமும் அதன் உபயோகமும் :**

1890-இல் பிரிட்டிஷ் இந்தியாவில் சாகுபடி செய்யக்கூடிய நிகர நிலப்பரப்பு சுமார் **188** மில்லியன் ஏக்கர்கள் என்று தெரிய வருகிறது. இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில், 1901-02-இல் மேற்படி நிலப்பரப்பு **199·71** மில்லியன் ஏக்கர் ஆக உள்ளது. (இதில் பர்மாவும் சேர்க்கப்பட்டுள்ளது). பர்மாவின் பிரிவினைக்குப் பின்னர் 1939-40 நிகர சாகுபடி நிலப்பரப்பு **209.96** மில்லியன் ஏக்கராக உயர்ந்துள்ளது. இந்தியாவி

[11] முன்கூறியபடி பக். 215.

லிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்பட்ட பின்னர் பாரதத்தின் நிகர சாகுபடி நிலப்பரப்பு 1958-59-இல் **324** மில்லியன் ஏக்கராக உயர்ந்தது. விடுதலைக்கு முன்னர் உள்ள புள்ளி விவரங்களில் சுதேச சமஸ்தானங்கள் சேர்க்கப்படவில்லை; விடுதலைக்குப் பின்னர் அவை சேர்க்கப்பட்டுள்ளன. அதைத் தவிர புதிய நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்டன. எனவே, 1949-50-இல் **283** மில்லியன் ஏக்கராக இருந்த நிகர சாகுபடி நிலப்பரப்பு 1958-59-இல் **324** மில்லியன் ஏக்கராக உயர்ந்து சென்றது. பார்க்கவும்: அட்டவணை **5·9**.

அட்டவணை **5·9**

பாரதத்தில் நில உபயோகம்[12]

(மில்லியன் ஏக்கர்களில்)

| நிலத்தை வகைப்படுத்தல் | 1958·59 | 1949·50 |
|---|---|---|
| மொத்த நிலப்பரப்பு | 806 | 810 |
| பதிவாகாதவை | 80 | 131 |
| பதிவு செய்யப்பட்டவை | 726 | 679 |
| நிகர சாகுபடி பரப்பு | 324 | 283 |
| தரிசு நிலம் | 30 | 58·8 |
| நடப்பு ஆண்டில் தரிசு நிலம் | 29 | |
| சாகுபடி செய்யாத நிலம் (தரிசு நீங்கலாக) | 97 | 115 |
| சாகுபடிக்குத் தகுதியில்லாத நிலம் | 114·7 | 121 |
| காடுகள் | 130 | 100·9 |
| இருபோக சாகுபடி நிலம் | 48·6 | 38·1 |
| மொத்த நிலப்பரப்பு | 372·7 | 321·3 |
| (நிகர) பாசன வசதியுடையவை | 73 | 49·8 |

12 Source : M. B. Nanavathi and J. J. Anjara. *ibid* p. 47.

விவசாய நாடுகளில் நிலம் எந்த அளவிற்கு ஒவ்வொரு உபயோகத்திற்கும் ஒதுக்கப்பட வேண்டும் என்று நிபுணர்கள் கூறியுள்ள கருத்துகளை இங்கே கூறுவோம். மொத்த நிலப் பரப்பை மூன்று பகுதிகளாகப் பிரித்துக்கொள்ள வேண்டும். இதில் ஒரு பகுதியைப் பயிர்களின் சாகுபடிக்காகவும், மற்றொரு பகுதியைக் காடுகளாகவும், மூன்றாவதாக உள்ள பகுதியைத் தரிசாகவும், புறம்போக்காகவும், கட்டடங்கள், சாலைகளுக்காகவும் பயன்படுத்தவேண்டும். இந்த அடிப்படையில் பாரதத்தின் நிலப் பகிர்வை நோக்குவோமானால் விவசாயத்திற்காக மிக அதிக நிலம் பயன்படுத்தப்படுவதை அறியலாம். அவ்வாறு மூன்றில் ஒரு பகுதியை விட அதிகமான நிலத்தைப் பயிர்களின் சாகுபடிக்காகப் பயன்படுத்திய போதிலும் நெடுங்காலமாக உணவு உற்பத்தியிலும், விவசாய உற்பத்தியிலும் தன்னிறைவு எய்தவில்லை. அதேசமயம் காடுகளுக்காக ஒதுக்கப்பட்ட நிலம் மிகவும் குறைவாக இருப்பதை அறியலாம். காடுகளின் பரப்பளவு குறைந்து இருப்பதால் மண் வளம் அரிக்கப்படும் அபாயம் அதிகம் உள்ளது. மண் வளத்தைப் பாதுகாக்கவும், ஆண்டு தோறும் மழைகள் சரிவரப் பெய்வதற்கும் காடுகள் அவசியமானவை.

அதிகாரபூர்வமான அறிக்கைகளில் பாரத நிலப்பரப்பை ஐவகைப்படுத்தி உள்ளார்கள். அவையாவன காடுகள், சாகுபடிக்குத் தகுதியற்ற பகுதிகள், சாகுபடி செய்யக்கூடிய ஆனால், செய்யப்படாத பகுதிகள், தரிசு நிலம், பயிரிடும் நிலப்பரப்பளவு முதலியன. காடுகள் அரசிற்குச் சொந்தமான காடுகள் என்றும், தனியாருக்குச் சொந்தமானவை என்றும் இருவகைப்படும். இரண்டாவதாகச் சாகுபடிக்குத் தகுதியற்ற பகுதிகள். இதை மேலும் இரு உட்பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று விவசாயம் நீங்கலான துறைகளில் உபயோகிக்கப்படும் நிலப்பகுதிகள். காட்டாக, கட்டடங்கள், சாலைகள், இருப்புப்பாதைகள் முதலியன. மற்றொன்று சாகுபடிக்குத் தகுதியற்றவை. பொட்டல் நிலம், பாலைவனம், மலைப்பகுதிகள் முதலியன. இவற்றைச் சாகுபடிக்குக் கொண்டுவரலாம் என்றாலும் அதற்கு அதிகம் செலவிட வேண்டியிருக்கலாம். மூன்றாவதாக உள்ளவை தற்சமயம் சாகுபடி செய்யாதவை. இதில் தரிசு நிலம் சேர்க்கப்படவில்லை. இதை மேலும் மூன்று உட்பிரிவுகளாகப் பிரித்துக் கொள்ளலாம். ஒன்று, நிரந்தரமான மேய்ச்சல் நிலம், புல்வெளிகள் முதலியன. இரண்டு விளைநிலம் என்ற தலைப்பில் சேர்க்கப்படாத தோப்புகள், தோட்டங்கள் முதலியன. சவுக்குத் தோப்புகள், இதைப்போன்ற எரிபொருள் மரங்கள், விழல், மூங்கில் புதர்கள்

முதலியன. இறுதியாகச் சாகுபடி செய்யாத பகுதிகள். இவை ஒருகாலத்தில் சாகுபடி செய்யப்பட்டவை. தற்சமயம் வீணே நிலமாகப் பயன்படுத்தாமையால் முட்செடிகளும், புதர்களும் மண்டிக் காடுகளாக இருக்கலாம்; தீர்வை விதிக்கப்படாமலும், வசூலிக்கப்படாமலும் இருக்கலாம்; கடந்த 5 ஆண்டுகளாகச் சாகுபடி செய்யாத நிலமும் இவ்வாறு வகைப்படுத்தப்படுகின்றன. நான்காவதாகத் தரிசு நிலங்கள். இவற்றையும் இரு வகைப்படுத்தலாம். ஒன்று நடப்பு ஆண்டில் மட்டும் தரிசாக உள்ளவை. மற்றொன்று ஓராண்டிற்கும் அதிகமாகவும், ஐந்து ஆண்டுகளைவிடக் குறைவாகவும் தரிசாகக் கிடக்கும் நிலங்கள். இதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். சாகுபடியாளர்கள் மூலதனம் இல்லாமல் நிலத்தைத் தரிசாகப் போட்டிருக்கலாம். நிலச்சச்சரவுகள் காரணமாக இருக்கலாம். பாசன வசதிகள், தண்ணீர் கிடைக்காமல் இவ்வாறு இருக்கலாம். கொடிய தொத்துநோய்கள் ஏற்பட்டிருக்கலாம். கால்வாய்கள், ஆறுகள் முதலியவற்றை ஆழப்படுத்துவதாலும், தூறு எடுப்பதாலும் தரிசாக விடப்பட்டிருக்கலாம்.

பாரதத்தின் மொத்த நிலப்பரப்பு **806** மில்லியன் ஏக்கர்கள் ஆகும். இதில் 1958-59-இல் 90% பகுதிகள் மட்டுமே பதிவாகியிருந்தன. சுமார் 80 மில்லியன் ஏக்கர் நிலம் வகைப்படுத்த இயலாமையால் பதிவு செய்யப்படவில்லை. இதில் மலைப்பகுதிகள், வனந்திரங்கள், பாலைவனம், மனிதர்கள் நுழையமுடியாத பகுதிகள், தகவல்கள் அனுப்பாமையாலும் கிடைக்காமையாலும் பதிவு செய்யப்படாத பகுதிகள், சர்வே செய்யப்பட்டும் பதிவு செய்யாத பகுதிகள் அடங்கியுள்ளன.

1958-59-இல் நிகர சாகுபடி நிலப்பரப்பு 324 மில்லியன் ஏக்கர் ஆகும். இது நாட்டின் மொத்த நிலப்பரப்பில் **40·2%** ஆகும். இருபோகம் அல்லது அதற்கும் அதிகமாகச் சாகுபடி செய்யப்படும் நிலப்பரப்பு **48·6** மில்லியன் ஏக்கர் ஆகும். இது நிகர சாகுபடி நிலப்பரப்பில் 15% ஆகும். நிகர சாகுபடி நிலத்தையும், இருபோக, முப்போக நிலத்தையும் கூட்டினுல் மொத்த சாகுபடி நிலப்பரப்புக் கிடைக்கும். இது மேற்படி ஆண்டில் 372.7 மில்லியன் ஏக்கராக உள்ளது. இருபோக சாகுபடி நிலப்பரப்பு மொத்தத்தில் மிகக் குறைவாக உள்ளது. இது பாசன வசதியின்மையை எடுத்துக்காட்டுகிறது என்று கூறலாம். ஓராண்டில் இரண்டொரு மாதங்களில் மட்டும் மழை பெய்வதும், அளவுக்கு அதிகமாகப் பெய்வதும்,—அதன் பின்னர் ஆண்டு முழுவதும் மழையின்றி இருப்பதும் முக்கிய பிரச்சினையாக உள்ளது.

பிற்சேர்க்கை அட்டவணை 5-10, 5-11.

அட்டவணை 5·10

**பிரிட்டிஷ் இந்தியாவில் நில உபயோகம்[13]**

(மில்லியன் ஏக்கர்களில்)

| | பர்மா உள்ளடக்கியது | | | | | | | | பர்மா நீங்கலாக | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1900–01 | 1913–14 | 1918–19 | 1921–22 | 1926–27 | 1926–27 %+ | 1931–32 | 1936–37 | 1936–37 | 1937–38 | 1938–39 | 1938–39 %+ |
| சர்வே செய்யப்பட்டது | 549 | 619 | 625 | 663 | 667 | — | 668 | 679 | 511 | 511 | 512 | — |
| நிகர சாகுபடி பரப்பு | 197 | 219 | 201 | 223 | 226 | 34% | 228 | 231 | 213 | 213 | 209 | 40% |
| பாசன வசதி உடையவை | 30 | 46 | 47 | 47 | 47 | 21% | 48 | 51 | 50 | 52 | 53 | 25% |
| காடுகள் | 66 | 82 | 87 | 85 | 87 | 12·9% | 88 | 89 | 67 | 68 | 68 | 13% |
| சாகுபடிக்குத்தகுதியில்லாதவை | 138 | 147 | 146 | 153 | 149 | 22% | 145 | 155 | 93 | 92 | 91 | 17% |
| சாகுபடி செய்யாதவை | 105 | 115 | 113 | 151 | 152 | 22% | 154 | 154 | 92 | 91 | 94 | 18% |
| தரிசு | 42 | 52 | 72 | 50 | 49 | 7% | 49 | 48 | 44 | 45 | 48 | 9% |

[13] Source Vera Anstey: The Economic Development Of India, Longman, Green and Co. (1957) p. 606. Table II.

+ இவ்விரு பத்திகளிலும் உள்ள இலக்கங்களின் கூடுதல் 100 விட அதிகமாக உள்ளன.

அட்டவணை 5·11

## முக்கியப் பயிர்களின் சாகுபடி நிலப்பரப்பு[14]

(மில்லியன் ஏக்கர்களில்)

| பயிர்கள் | பர்மா உள்பட | | | | | | | | பர்மா நீங்கலாக | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1900-01 | 1913-14 | 1918-19 | 1921-22 | 1926-27 | விளைச்சல் 1926-27 | 1931-32 | 1936-37 | 1936-37 | 1937-38 | 1938-39 | விளைச்சல் 1938-39 |
| சாகுபடி நிலப்பரப்பு | 176 | 191 | 177 | 205 | 197 | — | 205 | 204 | 189 | 186 | 186 | — |
| நெல் | 69 | 70 | 77 | 79 | 78 | +29·6 | 81 | 81 | 69 | 69 | 69 | +23·9 |
| கோதுமை | 20 | 18·6 | 19 | 22 | 24 | +8·9 | 25 | 25 | 25 | 26 | 26 | +9·9 |
| சோளம் | 22 | 22 | 20 | 24 | 21 | — | 21 | 24 | 23·4 | 20 | 20 | — |
| கம்பு | 15 | 13 | 11 | 15 | 13·8 | — | 13·9 | 11·4 | 11·4 | 12 | 12 | — |
| கேழ்வரகு | 7 | 4 | 4 | 4 | 3·8 | — | 3·8 | 3·5 | 3·5 | 3·4 | 3·4 | — |
| பார்லி | 4 | 6 | 6 | 7 | 6·3 | — | 6·5 | 6·5 | 6·5 | 6·3 | 6·1 | — |
| மக்காச்சோளம் | 6 | 6 | 6 | 6 | 5·5 | — | 6·1 | 5·9 | 5·7 | 5·6 | 5·7 | — |
| பருப்பு வகைகள் | 11 | 10 | 7 | 15 | 14·6 | — | 15·9 | 15·7 | 15·5 | 13·6 | 11·6 | — |
| சர்க்கரை (கரும்பு) | 2·6 | 2·5 | 3·0 | 2·5 | 3·0 | 3·2+ | 3·0 | 4·4 | 4·3 | 3·8 | 3·1 | — |
| எண்ணெய் வித்துகள் | 13 | 12 | 10 | 14 | 14·9 | — | 15·8 | 17·7 | 15·5 | 16·9 | 16·1 | — |
| பழம், காய்கறி, வாசனைப் பொருள்கள் | — | 8 | 8 | 8 | 7·5 | — | 8·3 | 8·1 | 7·0 | 6·7 | 6·7 | — |
| புகையிலை | 0·9 | 0·9 | 1·0 | 1·0 | 1·0 | — | 1·1 | 1·1 | 1·0 | 1·1 | 1·1 | — |
| கால்நடைத் தீவனம் | 3 | 3 | 8·6 | 8·6 | 8·9 | — | 9·6 | 10·7 | 10·5 | 10·4 | 10·3 | — |
| பருத்தி | 9·6 | 10·3 | 11·6 | 11·6 | 15·6 | +5·6 | 14·4 | 15·3 | 14·8 | 15·3 | 13·8 | +6·8 |
| சணல் | 2·2 | 2·2 | 1·5 | 1·5 | 3·6 | +12·1 | 1·8 | 2·5 | 2·5 | 2·8 | 3·1 | 9·6+ |

14 ஆதாரம் முன் கூறியபடி பக்கம் 607

குறிப்பு: இருபோக சாகுபடி நிலம் தனியாகப் பிரிக்காமையால் கூட்டுப்புள்ளியில் வித்தியாசம் ஏற்படும்.

+மில்லியன் டன்கள்  +மில்லியன் பேல்கள் (ஒரு பேல் 400 ராத்தல்)

# 6. இந்தியாவில் பஞ்சங்கள்

விவசாய நாடான இந்தியா பருவ மழையைப் பெரிதும் நம்பி இருப்பதால் தானிய உற்பத்தி நிலையற்று உள்ளது. இயற்கைக் காரணிகளால் உற்பத்தி பாதிக்கப்படுவதால் சில ஆண்டுகளில் மிகையான உற்பத்தியும், சில ஆண்டுகளில் தானியக் கிடைப்பருமையும் மாறி மாறி ஏற்படுகின்றன. விவசாயம் ஒரு நிலையற்ற தொழில் முயற்சியாக இருப்பதால் இந்தியாவில் விவசாயம் ஒரு சூதாட்டத்தைப் போன்றுள்ளது என்று கூறுகின்றனர். செய்பொருள்களின் உற்பத்தியை விட, விவசாய உற்பத்திக்கு மனிதன் இயற்கையின் ஒத்துழைப்பை அதிகமாக எதிர்நோக்கி இருக்கின்றான். இது அனைத்து நாடுகளுக்கும் ஏற்றமுடைய ஓர் உண்மையாக இருந்தபோதிலும் சென்ற நூற்றாண்டில் இந்தியர்கள் வளமுடன் வாழ்வதும், வறுமையில் அவதிப்படுவதும் மழையின் நிலையற்ற தன்மையால் நிர்ணயிக்கப்பட்டன என்றால் மிகையாகாது.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் உணவுப்பஞ்சம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், ஆங்கிலேயர்கள் ஆட்சி செய்த இந்தியாவில் வாழ்ந்த ஒவ்வொரு தலைமுறையினரும் கட்டாயம் தங்கள் ஆயுட் காலத்தில் ஒன்று அல்லது இரண்டு கொடிய பஞ்சங்களை நேரிடையாகக் கண்ணுற்றும், அவதிப்பட்டும் உள்ளனர். இந்தியாவில் பஞ்சம் என்ற சொல் தானியத்தின் கிடைப்பருமையை மட்டும் உணர்த்தவில்லை. அதைவிட, கிடைக்கக் கூடிய தானியத்தை விலை கொடுத்து வாங்க இயலாத ஏழ்மையைத்தான் அதிக அளவுக்குப் பிரதிபலித்தது. தானிய உற்பத்தி மக்களின் தொகு அளவு தேவைக்குப் போதுமானதாக இருந்தாலும், உற்பத்தி பாதிக்கப்பட்ட பகுதிகளில் வாழும் மக்களுக்குப் போதிய வருமானம் அல்லது வாங்கும் சக்தி இல்லாத காரணத்தால் அங்காடியில்

கிடைப்பருமையால் நிலவும் உயர்ந்த விலை மட்டத்தில் தானியத்தை வாங்க முடியவில்லை. தங்கள் அடிப்படையான பொருளாதார விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள இயலாத ஏழ்மை நிலையில் எண்ணிறந்த இந்தியர்கள் அவதிப்பட்டனர். இந்தியர்கள் ஏழ்மையின் கைப்பாவையாக இருந்தார்கள் என்பதை ரமேஷ் டட் விளக்கியுள்ளார். பத்தொன்பதாவது நூற்றுண்டின் கடைசி இருபத்தைந்து ஆண்டுகளில் இந்தியாவில் ஏற்பட்டதைப் போன்ற பஞ்சங்களும், சொல்லொணுத இன்னல்களும் இந்தியாவின் வரலாற்றிலும், வேறெந்த நாட்டின் வரலாற்றிலும் ஏற்பட்டதில்லை. 1877, 1878, 1889, 1892, 1897, 1900 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட கொடிய பஞ்சங்களின் விளைவாகக் குறைந்தது 150 இலட்சம் மக்கள் உயிரிழந்தனர். சுமார் 25 ஆண்டுகளில் இந்தியாவில் பஞ்சங்களினுல் மடிந்தவர்களின் தொகை, அன்றைய [1901-இல்] இங்கிலாந்தின் மக்கள்தொகையில் 50% ஆகும்.[1] ரமேஷ் டட்டின் மதிப்பீடு மிகவும் குறைந்தபட்ச மதிப்பீடாக உள்ளது. இதே ஆண்டுகளில் பஞ்சங்களினுல் மடிந்தவர்களின் தொகையை மணிலால் நானுவதியும், அஞ்சாரியாவும் 260 லட்சம் பேர்கள் என்று கணித்துள்ளார்கள்.

இந்தியாவில் 1800-லிருந்து பஞ்சங்கள் ஏற்பட்டுள்ளன என்றுலும், 1875-லிருந்து 1900 வரையிலும், பின்னர் இருபதாம் நூற்றுண்டின் முதல் இருபத்தைந்து ஆண்டுகளிலும் மிக அதிக அளவுக்குத் தீவிரமாகவும், அடிக்கடியும் பஞ்சங்கள் ஏற்பட்டுள்ளன. பஞ்சங்களின் தீவிரத்தன்மையை அவற்றின் காரணமாக மடிந்த மக்கள்தொகையைக் கொண்டு ஓரளவுக்குத் தெரிந்து கொள்ள முடியும். சென்ற நூற்றுண்டின் கடைசி இருபத்தைந்து ஆண்டுகளில் 260 லட்சம் மக்கள் இறந்துள்ளனர். உலகில் வேறெங்கிலும் காணமுடியாத அளவுக்கு, ஆண்டு ஒன்றுக்குச் சராசரியாக 10.4 இலட்சம் மக்கள் வீதம் சுமார் கால் நூற்றுண்டில் பஞ்சங்களினுல் இறந்துள்ளார்கள். இதை அடுத்துள்ள இருபத்தைந்து ஆண்டுகளிலும் கிட்டத்தட்ட இதைப் போன்ற அளவுக்கு அடிக்கடி பஞ்சங்கள் ஏற்பட்டன என்றுலும், அதன் கொடிய விளைவுகள் கட்டுப்படுத்தப்பட்டன. தகுந்த முன்னெச்சரிக்கை காரணமாகவும், நிவாரண வேலைகள் காரணமாகவும் மக்கள் இறப்பு கட்டுப்படுத்தப்பட்டது.

[1] R. C. Dutt. Economic History Of India, 1757-1857, Vol I, Publications Division, Govt. of India, p. XXIV

[2] Manilal B. Nanavathi and J. J. Anjaria—The Indian Rural Problem, Sixth Editions, 1965, p. 31.

அட்டவணை 6·1

## இந்தியாவில் பஞ்சங்களும், பஞ்சங்களால் இறந்தவர்களும் 1800–1950 [3]

| காலம் | பஞ்சங்கள் | இறந்தவர்களின் தொகை (மதிப்பீடு இலட்சங்களில்) |
|---|---|---|
| 1800—1825 | 5 | 10 |
| 1825—1850 | 2 | 4 |
| 1850—1875 | 6 | 50 |
| 1875—1900 | 18 | 260 |
| 1920—1925 | 17 | 40·8 |
| 1925—1950 | 13 | 15 |

### பஞ்சங்கள் ஏற்படக் காரணம் என்ன?

மழை பெய்யாத காரணத்தால் பயிர்களின் விளைச்சல் வீழ்ச்சி அடைந்துள்ளன என்றும், அதனால் பஞ்சங்கள் ஏற்படுகின்றன என்றும் கூறுவதை ரமேஷ் டட் ஆதரிக்கவில்லை. மிகவும் கொடிய பஞ்சங்கள் ஏற்பட்ட ஆண்டுகளில்கூட மொத்த தானிய உற்பத்தி மக்களின் நுகர்விற்குப் போதுமான அளவாக இருந்தது. எனவே, மொத்த தானிய உற்பத்தி அளவு நிகர அளவில் மொத்த தேவையைவிடக் குறைவாக இருந்ததால் பஞ்சங்கள் ஏற்படுகின்றன என்று கூற முடியாது. இக்கருத்தை 1880-ஆம் ஆண்டு பஞ்ச ஆணைக்குழுவும் ஏற்றுக்கொண்டுள்ளது. மொத்த உற்பத்தி போதுமானதாக இருந்தாலும் ஒவ்வொரு மாநிலத்திலும் உணவு தானியங்களுக்கான தேவையும், அளிப்பும் சமமாக இல்லை. மழையில்லாத காரணத்தால் ஒரு மாநிலத்தில் தானியம் கிடைப்பருமையாக இருக்கலாம். இதர மாநிலங்களில் மழை சரிவரப் பெய்வதால்

[3] முன்கூறியபடி - பக். 31.

தானிய உற்பத்தி உபரியாக இருக்கும். கிடைப்பருமையாக உள்ள மாநில மக்கள் அடுத்துள்ள மாநிலங்களில் உபயோகம் உள்ள தானியத்தை நுகர முடியுமேயானுல் மழையின்மை காரணமாகப் பட்டினிச் சாக்காடுகள் பெருமளவு ஏற்படுவதற்கில்லை.

விவசாயம் முக்கிய தொழிலாக இருக்கும் இந்தியாவில் மழையின்மையால் பயிர்கள் சாவியாகும் காலங்களில் மக்களின் வருமானமும் குறைந்து விடும். ஒருபுறம் வருமானம் குறைந்து இருப்பதும், மற்ளெருபுறம் கிடைப்பருமையால் தானியவிலை உயர்ந்து இருப்பதும் பஞ்ச காலங்களின் முக்கிய கூறுகளாக உள்ளன. தானியத்தை வாங்க இயலாதவர்கள் பஞ்சத்தின் கொடுமைக்கு இரையாகின்றனர். ஆகையால் தானிய உற்பத்தி அளவைவிட மக்களின் வாங்கும் சக்தி குறைவாக இருப்பதே பட்டினிச்சாக்காட்டிற்கான முக்கிய காரணமாகும்.

இந்தியாவில் பஞ்சம் என்பது வாங்கும் சக்தியின் பஞ்சத்தைத்தான் குறிப்பிடுகிறது. இதைப் பத்தொன்பதாவது நூற்ருண்டின் வளர்ச்சியைக் கொண்டு மேலும் தெளிவுபடுத்தலாம். மழையில்லாத பகுதிகளில் உற்பத்தி குறைந்துள்ள காரணத்தால் உணவு தானியங்கள் மிகையாக உள்ள பிற மாவட்டங்களுக்கும், மாநிலங்களுக்கும் மக்கள் இடம் பெயர்ந்து சென்றனர். அக்காலத்தில் போக்குவரத்து வசதிகள் குறைவு. இடம் பெயரும் மக்கள் கால்நடையாக நெடுந்தூரம் செல்ல வேண்டும். பிரயாணகாலத்தில் தங்குவதற்கு நிழலோ, உண்பதற்கு உணவோ, அருந்துவதற்கு நீரோ கிடைப்பதில்லை. கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சியில் பஞ்ச நிவாரண வேலைகள் எதுவும் மேற்கொள்ளப்படவில்லை. தானியங்கள் இருக்கும் இடம் நோக்கி மக்கள் நடந்து செல்வதால்தான் பட்டினிச் சாக்காடுகள் மலிந்துள்ளன என்றும், மக்கள் இடம் பெயருவதற்குப் பதிலாகத் தானியத்தை இடம் பெயர்த்த முடியுமேயானுல் பஞ்சங்களின் கொடுமையிலிருந்து மக்களைப் பாதுகாக்க முடியும் என்றும் நம்பினுர்கள். உணவு தானியத்தை விரைவாக நெடுந்தூரம் எடுத்துச் செல்வதற்கு இருப்புப்பாதைகள் அவசியம் என்று முடிவு செய்தார்கள். உலகின் முக்கியமான நாடுகளில் இருப்புப் பாதை போடப்பட்ட அதே காலத்தில் இந்தியாவிலும் இருப்புப் பாதைகள் போடப்பட்டன. 1853-இல் 20 மைல்களாக இருந்த இருப்புப்பாதைகளின் நீளம் சுமார் பத்து ஆண்டுகளில் 1863-இல் **2550** மைல்களாக விரிவடைந்தன. 1871-இல் 5077 மைல்

களாகவும், 1901-இல் 25,373 மைல்களாகவும் விரிவுபடுத்தப் பட்டன.

அட்டவணை 6.2

**இந்தியாவின் இருப்புப்பாதைகளின் வளர்ச்சி** [4]

| ஆண்டுகள் | இருப்புப் பாதையின் நீளம் (மைல்கள்) |
|---|---|
| 1853 | 20 |
| 1861 | 1588 |
| 1863 | 2550 |
| 1865 | 3373 |
| 1871 | 5077 |
| 1875 | 6518 |
| 1881 | 9891 |
| 1884_85 | 12,000 |
| 1890_91 | 16,977 |
| 1895 | 19,555 |
| 1901 | 25,373 |

உணவு தானியத்தை இடம் பெயர்த்துவது மட்டும் பிரச்சினை யாக இருந்திருக்குமேயானால் 1896_97-லும், 1899_லும் அடுத்து அடுத்து ஏற்பட்ட மிகப்பெரும் இரு பஞ்சங்களினால் இலட்சக்கணக்கான மக்கள் இறந்திருக்க வேண்டியதில்லை. பஞ்சங்களினால் மடிந்தவர்களின் தொகையை மதிப்பீடு செய்

[4] R. C. Dutt. Economic History Of India, Victorian Age, London, 1956, p. 548.

வதில் வீரா அன்ஸ்டேயின் கணிப்பைக் குறைந்த அளவு மதிப்பீடாகக் கருதுவார்கள். வீரா அன்ஸ்டேயின் கணக்குப்படி 1996-97-இல் 10 இலட்சம் மக்கள் இறந்தனர். 1889-இல் மொத்தம் **550** இலட்சம் மக்கள் பஞ்சத்தால் பாதிக்கப்பட்டனர். பஞ்சத்தாலும், அதைத் தொடர்ந்து ஏற்பட்ட தொத்துநோய்களினாலும் மொத்தம் 40 இலட்சம் மக்கள் மடிந்தனர்; பிரிட்டிஷ் இந்தியப் பகுதிகளில் 10 இலட்சம் மக்களும், சுதேச சமஸ்தானங்களில் 30 லட்சம் மக்களும் இறந்தனர்.[6]

1896-99 ஆகிய ஆண்டுகளில் இந்தியாவின் மொத்த இருப்புப்பாதைகளின் நீளம் **20,000** மைல்களுக்கும் அதிகமாக இருந்தன. இருப்புப்பாதை பெரும்பாலான மாநிலங்களில் போடப்பட்ட பின்னரும் பஞ்சங்களினால், (ஐந்தாண்டுகளுக்கும் குறைவான காலத்தில்) சுமார் 50 இலட்சம் மக்கள் இறந்துபோயினர். பஞ்சகாலத்தில் ஏற்பட்ட பட்டினிச் சாக்காட்டிற்குத் தானியத்தை இடம் பெயர்த்துதல் மட்டும் ஒரு முக்கிய காரணமாக (அல்லது பிரச்சினையாக) இருந்திருக்குமேயானால் இரயில்வேயின் வளர்ச்சி கணிசமாக ஏற்பட்ட பின்னர் பெருமளவுக்குப் பஞ்சம் ஏற்படுவதையும், பட்டினியால் மக்கள் மடிவதையும் விளக்கிக் கூற முடியவில்லை.

தானிய உற்பத்தி போதுமானதாக இருந்த போதிலும் மக்கள் வாங்கும் சக்தியற்றவர்களாக இருப்பதால்தான் பட்டினிச் சாக்காடுகள் ஏற்படுகின்றன. ஆகையால் பஞ்சகாலத்தில் வருமான வாய்ப்புகளை ஏற்படுத்தும் நிவாரண வேலைகள் பாதிக்கப்பட்ட பகுதிகளில் நிறுவப்பட வேண்டும் என்று (1880-ஆம் ஆண்டு) பஞ்ச ஆணைக்குழு பரிந்துரைத்தது.

இந்திய விவசாயிகள் சேமிக்கும் மனப்பான்மை இல்லாதவர்கள் என்றும், விளைச்சல் திருப்தியாக இருக்கும் ஆண்டுகளில் இவர்கள் ஊதாரியாகச் செலவிடுகிறார்கள் என்றும், ஆகையால்தான் மழையில்லாமல் உற்பத்தி குறைந்துள்ள ஆண்டுகளில் தங்களைப் பராமரித்துக்கொள்ளும் வசதியற்றவர்களாக இருக்கிறார்கள் என்றும் சிலர் கூறுகிறார்கள். இந்தக் குற்றச்சாட்டு தவறானது என்றும், ஆதாரமற்றது என்றும் ரமேஷ் டட் மறுத்துள்ளார். இந்திய விவசாயிகள் நிதானமாகவும், சிக்கனமாகவும் செலவிடும் மனப்பான்மை உடையவர்கள் என்பதைத் தன்னுடைய நேரிடையான அனுபவங்களின் வாயிலாக உணர்ந்

[6] Vera Anstey, The Economic Development Of India. p. 6.

துள்ளதாக டட் கூறியுள்ளார். ரமேஷ் டட் நிருவாக அலுவலராக (ICS)ப் பணியாற்றிய ஆரம்பகாலத்தில், 1877-இல் கிழக்கு வங்கத்தில் புயல் வீசியதாலும், கடல் பொங்கி வெள்ளம் ஏற்பட்டதாலும் அதிக சேதங்கள் ஏற்பட்டன. விவசாயிகளின் குடிசைகளும், விளை நிலங்களும் பெரும்பாலும் அழிக்கப்பட்டன. இவர்களுக்கு நிவாரணம் அளிக்கும் பொறுப்பு ரமேஷ் டட்டிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் நேரில் கண்டறிந்த உண்மைகளைக் கூறுகிறார்: ''இந்திய விவசாயிகள் நன்கு சேமிக்கக் கூடியவர்கள். முன்யோசனையும், சிக்கனமும் இவர்களின் இயல்பான சுபாவம் ஆகும். பாதிக்கப்பட்ட பகுதிகளில் விவசாயிகளிடம் சேமிப்புகள் இருந்தன. இதில் ஒருபகுதியைக்கொண்டு இறக்குமதி செய்யப்பட்ட தானியங்களை வாங்கிக்கொண்டார்கள். கிழக்கு வங்காளத்தில் இயற்கையின் கொடுமையால் பெருமளவுக்குச் சேதம் ஏற்பட்டாலும் இதன் விளைவாகப் பஞ்சம் தோன்றவில்லை. நிவாரண வேலைகளைப் பெரும் அளவிற்கு ஏற்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. விவசாயிகள் ஓரளவிற்கு வசதி உடையவர்களாக இருப்பார்களேயானால், எதிர்பாரதவகையில் ஏற்படும் இயற்கை உற்பாதங்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் திறன் உடையவர்களாக இருப்பார்கள்.'' கிழக்கு வங்க விவசாயிகளைப்போல இந்தியாவில் பிற மாநிலங்களில் உள்ள விவசாயிகள் வசதி உடையவர்களாக இல்லை. இதற்கு முக்கியமாக நிலவரி விகிதமும், நில உரிமைகளும் காரணமாக இருந்தன. பொதுவாக வங்காளத்தில் மட்டுமே நிலவரி விகிதங்கள் (அச்சமயத்தில்) மிதமாக இருந்தன. இதைப்போலப் பம்பாய், சென்னை ஆகிய மாநிலங்களில் நிலவரி விகிதங்கள் மிக அதிகமாக இருந்தன; இவை ஆண்டுதோறும் உயர்த்தப்பட்டன. விவசாயிகளிடம் இருக்க வேண்டிய சேமிப்பு யாவும் அரசாங்கத்திற்கு மாற்றப்பட்டது. சாசுவத நிலவரித்திட்டம் உள்ள பகுதிகளைவிட இரயத்துவாரிப் பகுதிகளில் முக்கியமாகத் தென் தீபகற்பத்தில் பஞ்சங்களின் கொடுமைகள் தீவிரமாகக் காணப்பட்டன. இப்பகுதிகளில் வாழும் விவசாயிகள் சாதாரண ஆண்டுகளில் கூட சேமிக்க இயலாதவர்களாக இருக்கிறார்கள். விவசாய உற்பத்தி ஓராண்டில் திடீரென்று குறையுமேயானால் தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ள இயலாதவர்களாக இருக்கிறார்கள். மக்களின் ஏழ்மை அதிகரிக்கும் அதே விகிதத்தில்தான் பஞ்சத்தின் கொடுமைகளும் தீவிரம் அடைகின்றன. இதற்குச் சுரண்டல் தன்மை உடைய நிலவரி விகிதங்கள் மட்டும் காரணமாக இல்லை. விவசாயிகள் கடன் வாங்க வேண்டிய சூழ்நிலையும், பணப்புழக்கம் பரவலாக ஏற்படாத பொருளாதார அமைப்பில் பணத்தின்

கிடைப்பருமையும், பணமாக நிலவரியைச் செலுத்த வேண்டிய கட்டாயமும், கிராமியத் தொழில்கள் ஆதரிப்பார் இல்லாமல் நசுக்கப்பட்டதும், மேற்கொண்டு உள்நாட்டில் தொழில் வளர விடாமல் செய்யும் இறக்குமதிக் கொள்கையும், இதற்குத் துணை புரியும் இரயில்வேயின் வளர்ச்சியும் முக்கியமான காரணிகள் ஆகும்.

மழையின் முக்கியத்தையும், மழையின்மையால் ஏற்படும் பாதக விளைவுகளையும் உணர்ந்த இந்திய மன்னர்கள் அனைவரும் பாசனத்திட்டங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தார்கள். ஆங்காங்கே நீர்த்தேக்கங்களை ஏற்படுத்தவும், கரைகளை உயர்த்தவும், அணைகளைக் கட்டவும், கால்வாய்களை வெட்டவும் ஏற்பாடு செய்தார்கள். இவை யாவும் விவசாய உற்பத்தியை நீண்டகால அடிப்படையில் நிலைபெறச் செய்வதற்கு இன்றியமையாத முன்னேற்பாடுகள் ஆகும்.

சென்ற நூற்றாண்டின் துவக்கத்தில் புச்சானன் என்ற ஆங்கிலேய அதிகாரி இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார். அவர் தன்னுடைய குறிப்பேடுகளில் பாசன வசதிகளின் அவசியத்தை அதிகம் வலியுறுத்தினர்.[6] இதைப்போலவே மாவட்ட ஆட்சியாளர்களும் பாசன வசதிகளை மேலும் அதிகரிக்க வேண்டும் என்று வற்புறுத்தியுள்ளனர். இருந்தபோதிலும் ஆங்கிலேயர் ஆட்சியில் குறிப்பிடத்தக்க அளவுக்குப் பாசனத்திட்டங்கள் எதையும் செயல்படுத்தவில்லை. நீர்ப்பாசனத் திட்டங்களை விட இரயில்வேயின் வளர்ச்சிக்கு ஆங்கிலேயர்கள் அதிக முக்கியத்துவம் கொடுத்தார்கள். சுரண்டல் தன்மை உடைய வாணிபக்கொள்கையின் பிரதிபலிப்பாக இரயில்வேயின் வளர்ச்சி அமைந்துள்ளது. ஆங்கிலேய ஆட்சியாளர்கள் மக்களின் நல்வாழ்க்கையைவிட வாணிபத்தினல் ஏற்படும் ஆதாயங்களை முக்கியமாக நினைத்தார்கள். ஆகையால்தான் பாசனத்திட்டங்களுக்குப் பதிலாக இரயில்வேக்கு முக்கிய இடம் அளித்துள்ளனர் என்று இந்திய தேசியக் கருத்தினர் சுட்டிக்காட்டுகின்றனர்.

6 புச்சானன் கொண்டாத்தூர் என்னும் இடத்தில் உள்ள மிகப்பெரிய ஏரியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதன் நீளம் சுமார் 7 மைல் முதல் 8மைல்கள் வரை இருக்கும்; இதன் அகலம் 3 மைல்கள் உள்ளன. இதில் தேக்கிய நீரைப் பாசனத்திற்கு எடுத்துச் செல்ல எண்ணிறந்த கால்வாய்கள் உள்ளன. மழை காலத்தில் சீர் நதியில் ஏற்படும் பெருக்கு இந்த ஏரியை நிரப்புகிறது. இந்த ஏரியில் உள்ள நீரைக் கொண்டு 32 கிராமங்களில் உள்ள நிலத்தை மழைபெய்யாத 18 மாதங்களுக்குச் சாகுபடி செய்யலாம். 'மழையின்மையால் பஞ்சங்கள் ஏற்படக்கூடிய நாட்டிற்கு இந்தத் தேக்கம் அளவிடற்கரிய முக்கியத்துவம் உடைய ஒன்ருகும்''—பார்க்கவும். R. C. Dutt. The Economic History Of India, under the Early British Rule Publications Division, Govt. of India, p, 1850.

**இந்தியப்பஞ்சங்களும் அவற்றின் இயல்புகளும்**

பஞ்ச காலங்களில் இரயில்வேயின் உதவியால் மக்கள் இடம் பெயருவதற்குப் பதிலாக தானியத்தை இடம் பெயர்த்தலாம் என்று நம்பினர்கள். உண்மையில் பஞ்சம் ஏற்பட்ட காலங்களில் போக்குவரத்து வசதிகள் போதுமானதாக இருந்தபோதிலும் மக்கள் பெருவாரியாக இடம் பெயருவதைத் தடுக்க முடியவில்லை. காட்டாக 1860–61-இல் வடமேற்கு மாநிலங்களில் போக்குவரத்து வசதிகள் திருப்திகரமாக இருந்த போதிலும் அதிக அளவிற்கு மக்கள் வெளியேறுவதைக் குறைக்க முடியவில்லை. அதன் பின்னர் 1868–69-இல் இராஜபுதனத்திலும் மிகப் பெரிய பஞ்சம் ஏற்பட்டது. இதில் எண்ணிறந்த மக்கள் மடிந்தனர். இப்பகுதிகளில் 1868-இல் கார் பயிர் முற்றிலும் தீய்ந்து விட்டது. அடுத்த பட்டத்தில் பூச்சிகளின் அரிப்பால் பயிர்கள் நாசமாயின. இராஜபுதனம் முழுவதும் பாதிக்கப்பட்டதுடன், வடமேற்கு எல்லை மாநிலத்தில் சில மாவட்டங்களும் பாதிக்கப்பட்டன. இராஜபுதனத்தில் போக்குவரத்து வசதிகள் குறைவு. ஆகையால் உணவு தானியங்களைப் பெரும் அளவிற்கு எடுத்துச் செல்ல முடியவில்லை. தானியங்களின் கிடைப்பருமையால் 19-வது நூற்றாண்டில் ஏற்பட்ட பஞ்சங்களில் இதுவே கடைசியானது என்று பேராசிரியர் காட்கில்[7] கூறுகிறர். பட்டினிச் சாக்காட்டிலிருந்து காப்பாற்ற முடிந்தவர்களின் தொகையை விடக் காப்பாற்ற முடியாமல் மடிந்தவர்களின் தொகை மிகவும் அதிகமாக இருக்கும் என்று மதிப்பிடுகிறர்கள்.

இராஜபுதன பஞ்சத்தில் மக்கள் வெளியேறியதற்கு இரு முக்கிய காரணங்கள் உண்டு. இவர்கள் தங்களுடைய உணவிற்காக மட்டுமல்லாமல் கால்நடைகளின் தீவனத்திற்காகவும் வெளியேறினர்கள். இந்தப் பஞ்சத்தில் மடிந்த மனிதர்களை விடக் கால்நடைகளின் எண்ணிக்கை கூடுதலாக இருக்கும். அந்த மாநிலத்தில் உள்ள பெரும்பாலான கால்நடைகள் பஞ்சத்தால் அழிக்கப்பட்டன.

மழை பெய்யாத காரணத்தால்தான் இந்தியாவில் பஞ்சங்கள் ஏற்படுகின்றன. மழையின்மையால் நீர்த்தேக்கங்கள், ஆறுகள், குளங்கள், கிணறுகள் யாவும் வற்றிப்போய் விடுகின்றன. சேர்ந்தாற்போல இரு ஆண்டுகளுக்குக் குறிப்பிட்ட பகுதிகளில் மழை பெய்யவில்லையானல் தண்ணீர்த் தட்டுப்பாடு மிகவும் அதிகமாகிவிடும். மனிதர்களுக்கும், கால்நடைகளுக்கும் தண்

[7] DR Gadhil. The Early Industrial Evolution p.94.

ணீர் கிடைப்பதில்லை. கால்நடைகள் விவசாயிகளின் முக்கியமான மூலதனமாகும். கால்நடைத் தீவனமும் கிடைப்பருமையாகிவிடுகின்றன. பஞ்சம் ஏற்படும் காலங்களில் மனிதர்களுக்கு மட்டுமே உணவுப்பொருள்கள் கொண்டு வரப்படுகின்றன. தண்ணீர்த்தட்டுப்பாட்டைச்சமாளிக்கவும், கால்நடைகளுக்குத் தீவனம் கிடைக்கும்படிசெய்யவும் போக்குவரத்துவசதிகள் பயன்படுவதில்லை. எனவே, பஞ்சங்கள் தீவிரம் அடையும் காலங்களில் பெருவாரியான மக்கள் இடம் பெயருகிறுர்கள். இக்கருத்தை 1878-இல் ஏற்பட்ட பஞ்சம் மேலும் உறுதிப்படுத்துகிறது.

பஞ்சத்தின் தீவிரத்தன்மையும், கொடிய விளைவுகளும் வாங்கும் சக்தியின் கிடைப்பருமையால் நிர்ணயிக்கப்படுகின்றன என்று முன்னர் கூறியுள்ளோம். இக்கருத்தை விளக்கும் வகையில் 1865-இல் கஞ்சம் பகுதியில் ஏற்பட்ட பஞ்சம் உள்ளது. சென்னை மாநிலத்தில் கொடை ஜில்லாக்கள் என்று அழைக்கப்பட்ட கடப்பை, கர்னூல், அனந்தப்பூர் ஆகிய மாவட்டங்களில் மக்கள் போதிய அளவு வாங்கும் சக்தி உடையவர்களாக இருந்தனர். எனவே, பஞ்சத்தின் கொடுமைகளை உணரவில்லை. இதற்கு இரு முக்கிய காரணங்கள் கூறப்படுகின்றன. இப்பகுதியில் உள்ள விவசாயிகள் உணவு தானியத்திற்குப் பதிலாகப் பருத்தி சாகுபடி செய்து வந்தார்கள். பருத்தி ஒரு வாணிபப் பயிராக இருப்பதால் இதை ரொக்கத்திற்கு விற்றுவிடமுடியும். இரண்டாவதாக 1865-க்கு முன்னர் உலக அங்காடியில் பஞ்சின் விலை உயர்ந்து சென்றது. இதற்கு அமெரிக்க உள்நாட்டுப்போர் ஏற்படும் முன்னர், அங்கு விளையும் பஞ்சு இங்கிலாந்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. உள்நாட்டுப்போர் நடைபெற்ற காலங்களில் அமெரிக்கப் பஞ்சு ஏற்றுமதி தடைப்பட்டது. (இங்கிலாந்தின் பஞ்சாலைகளுக்கு) அப்போது இந்தியப் பஞ்சு உயர்ந்த விலையில் ஏற்றுமதி செய்யப்பட்டது. இவ்வாறு வாணிபப் பயிர்களைச் சாகுபடி செய்ததாலும், உலக அங்காடியில் விலை உயர்ந்து சென்றதாலும், இப்பகுதி மக்களிடம் வாங்கும் சக்தி திருப்தி அளிப்பதாக இருந்தது. எனவே, உணவு தானியக்கிடைப்பருமை ஏற்பட்ட பஞ்ச காலத்தில் அதை விலை கொடுத்து வாங்கும் வசதி உடையவர்களாக இருந்தார்கள்.

1873-74-இல் வங்காளம், பீகார் ஆகிய மாநிலங்களில் பஞ்சம் ஏற்பட்டது. பஞ்ச நிவாரண வேலைகள் இங்குதான் முதன் முறையாக செயல்படுத்தப்பட்டன. 1868-இல் இராஜபுதன பஞ்சத்தையும், அதன் கொடுமைகளையும் அறிந்த அதிகாரிகள்

அதைப்போன்ற கசப்பான அனுபவம் மறுபடியும் ஏற்படாமல் இருக்கவேண்டும் என்று முடிவுசெய்து முழுமூச்சோடு நிவாரண வேலைகளில் ஈடுபட்டார்கள். முதலில் பஞ்சம் ஏற்பட்ட பகுதிகளிலிருந்து தானியம் வெளிமாநிலங்களுக்கு எடுத்துச் செல்லப்படுவதைத் தடைசெய்தார்கள். உபரியான மாநிலங்களிலிருந்து தானியங்கள் தருவிக்கப்பட்டன. ஒவ்வொரு மாவட்டத்திலும் நிவாரண அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. நிவாரண வேலைகளும் பெருவாரியான அளவில் இருந்தன. பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட மக்கள்தொகையில் 26% மக்கள் பஞ்ச நிவாரண வேலைகளினால் பலன் அடைந்தார்கள். பஞ்சத்தின் தீவிரம் கடுமையாக இருந்த ஊர்களில் **50%** -லிருந்து **70%** வரை நிவாரண வேலைகளை நம்பியிருந்தார்கள்.

1876–78 ஆண்டுகளில் இந்தியா முழுவதும் பஞ்சம் ஏற்பட்டது. இதர பகுதிகளைவிடத் தென்னிந்தியாவில் பஞ்சத்தின் கொடுமை மிகவும் அதிகமாக இருந்தது. பம்பாய், சென்னை முதலிய மாநிலங்களிலும், தெலிங்கானா, மைசூர் முதலிய பகுதிகளிலும் பஞ்சம் மிகவும் தீவிரமாக இருந்தது. வடஇந்தியாவில் வடமேற்கு எல்லை மாநிலத்திலும், அயோத்தியிலும் பஞ்சம் காணப்பட்டது என்றாலும், தென்னிந்தியாவில் ஏற்பட்டதைப் போலத் தீவிரமாக இல்லை.

சாதாரணமாக மழை முற்றிலும் பெய்யவில்லை என்றாலும், வழக்கமாகப் பெய்யக்கூடிய அளவைவிடக் குறைவாகப்பெய்தாலும் பஞ்சங்கள் ஏற்படக்கூடும். ஒரு பகுதியில் பஞ்சம் ஏற்படும் முன்னதாகத் தொடர்ந்து சில ஆண்டுகளாவது மழையில்லாது இருக்கவேண்டும். பஞ்சங்கள் திடீர் என்று ஏற்படுவதில்லை. பஞ்சம் தீவிரம் அடையும் முன்னர் அரசாங்கம் அதை முன்கூட்டியே அறிந்து கொள்ள முடியும். தகுந்த முன்னேற்பாடுகளுடன் நிவாரண வேலைகளை ஆரம்பிப்பதன் மூலம் கொடிய விளைவுகளை முற்றிலும் தவிர்க்கவோ, குறைக்கவோ முடியும்.

வடமேற்கு எல்லை மாநிலத்தில் பஞ்சம் தீவிரமாக இல்லை என்று கூறினோம். அப்பகுதிகளில் இதற்கு முன்னர் பல ஆண்டுகள் தொடர்ந்து மழை பெய்தது முக்கியமான ஒரு காரணமாகும். மக்கள் உபரியான தானியங்களைச் சேமித்து வைத்திருப்பார்களேயானால் பஞ்சம் ஏற்படாமல் தடுத்துவிடமுடியும். புதிய இருப்புப் பாதைகளைப் பயன்படுத்திக்கொண்டு உணவு தானியங்களை ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தார்கள். 1878இல் மழைபெய்யாமல் போனதால் தானியம் கிடைப்பருமையாகி

விட்டது. தானியமாகச் சேமித்து வைக்கவில்லை என்றாலும், மக்களிடம் வாங்கும் சக்தி இருந்த காரணத்தால் தானியக்கிடைப் பருமையை அதிக சிரமம் இல்லாமல் சமாளிக்க முடிந்தது.

1878-க்கு முன்பு தொடர்ந்து பல ஆண்டுகள் தென்னிந்தியாவில் மழை பெய்யவில்லை. ஆகையால், இங்கே பஞ்சம் தீவிரமாக இருந்தது. மழையின்மையால் மனிதனுக்கு உணவும், கால்நடைகளுக்குத் தீவனமும் கிடைப்பருமையாகிவிட்டன. இரயில்வேயின் உதவியால் மக்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களை மட்டுமே இடம்பெயர்த்த முடிந்தது. தண்ணீர், தீவனம் ஆகியவற்றின் கிடைப்பருமையைப் போக்க முடியவில்லை. விவசாயிகள் தங்கள் கால்நடைகளுடன் தீவனத்தைத் தேடிக்கொண்டு மேற்கு மலைத்தொடர்களுக்குச் சென்றனர். 1876-78இல் தென்னிந்தியாவில் ஏற்பட்ட இந்த மிகப்பெரும் பஞ்சத்திற்கு இணையாக இதற்கு முன்பு 1868இல் இராஜபுதனத்தில் ஏற்பட்ட பஞ்சத்தைக் கூறலாம். இராஜபுதன பஞ்சத்தில் மக்களும், அவர்களைவிட அதிக அளவில் கால்நடைகளும் மடிந்தன. ஆனால், 1868இல் மக்கள் தங்கள் உணவிற்காகவும், கால்நடைகளின் தீவனத்திற்காகவும் வெளியேறினர்கள். 1878இல் தென் இந்தியாவில் மக்கள் தங்கள் உணவிற்காக வெளியேறவில்லை. ஆனால், தங்கள் கால்நடைகளின் தீவனத்திற்காக வெளியேறினர்கள்.

பம்பாய், கர்நாடகம் ஆகிய பகுதிகளில் இரயில் போக்குவரத்து அதிகமாக வளர்ச்சி அடையவில்லை. ஆகையால், தானியத்தை இடம் பெயர்த்துவது சிரமமாக இருந்தது. பிரிட்டிஷ் ஆட்சியில் ஏற்பட்ட பஞ்சங்களில் 1878 பஞ்சத்தைப்போன்ற கொடிய பஞ்சத்தைக் காணமுடியாது என்று (1880) பஞ்ச ஆணைக்குழு கூறியுள்ளது. பஞ்சத்தின் தீவிரத்தன்மையை அரசாங்கம் உணராமல் இல்லை. கால்நடைகளுக்கான தீவனம் கிடைப்பருமையாக இருக்கின்றது என்பதை உணர்ந்து மேற்குத் தொடர்ச்சி மலைகளில் உள்ள பாதுகாக்கப்பட்ட காடுகள் அனைத்தையும் மேய்ச்சலுக்காக அனுமதித்தார்கள். பெரும் அளவிற்கு மக்கள் தங்கள் கால்நடைகளுடன் வருகிறார்கள் என்பதை அறிந்து மேற்குத் மலைத்தொடர்களை அணுகும் முக்கியமான பெருவழிகளில் எல்லாம் தீவனக்கிடங்குகள் அமைக்கப்பட்டன. இவ்வாறு மக்களும், அரசாங்கமும் எவ்வளவோ முயன்ற போதிலும் கால்நடைகளில் பெரும்பகுதி இறந்தன.

அதன் பின்னர் 1880-லிருந்து 1895 வரையிலும் பஞ்சங்கள் ஏதும் ஏற்படவில்லை எனலாம். விவசாய உற்பத்தி நாடெங்கி

லும் திருப்தி அளிப்பதாக இருந்தது. இந்த ஆண்டுகளில் பஞ்சங்கள் ஏற்படவில்லை என்றாலும் ஆங்காங்கே தானியக் கிடைப்பருமைகள் ஏற்பட்டுள்ளன. 1884-85இல் வங்காளத்திலும், 1886இல் சதிஷ்கர் பகுதியிலும் தானிய உற்பத்தி குறைவாக இருந்தது. 1889இல் ஒரிஸ்ஸாவில் நெல் உற்பத்தி அதிகமாகக் குறைந்தது. 1890-95 ஆண்டுகளில் சென்னை மாநிலத்திலும், மத்திய மாநிலத்திலும் மழை சரியாகப் பெய்யவில்லை. இதைப்போல மேற்படி பதினைந்து ஆண்டுகளில் வட்டார அளவில் கிடைப்பருமைகள் இருந்த போதிலும் பஞ்சம் என்று கருதும் அளவிற்கு நிலைமை உருவாக வில்லை. பொதுவாக இவ்வாண்டுகளில் விவசாயிகளின் வருமானமும், வாழ்க்கைத் தரமும் திருப்திகரமாக இருந்தன. பதினைந்து ஆண்டு அனுபவத்தைக்கொண்டு பஞ்சத்தின் பிடியிலிருந்து நாடு விடுபட்டதாகப் பலர் நினைத்தார்கள். பத்தொன்பதாவது நூற்றாண்டில் இனிமேல் பஞ்சங்கள் தோன்றாதென நம்பினார்கள். மக்களின் நம்பிக்கை வீண்போகாது இருந்திருக்குமேயானால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும்!

இந்திய வரலாற்றில் அதுவரை காணாத அளவிற்கு அதற்கு முன்பு 1878இல் ஏற்பட்டதைவிட அதிகப் பரப்பளவில் மேலும் தீவிரமாக அடுத்தடுத்து இரு பஞ்சங்கள் ஏற்பட்டன. 1896-97இல் ஏற்பட்ட பஞ்சம் தீவிரமாக இருந்தது. மக்களின் வாழ்க்கைத்தரம் நெடுங்காலமாகச் சுபிட்சமாக இருந்த காரணத்தால் பஞ்சத்தைத் தாங்கிக்கொள்ளும் சக்தி அதிகமாக இருந்தது. அதைத் தொடர்ந்து 1899-1900இல் ஏற்பட்ட பஞ்சம் இதற்கு முன்புள்ளதைப்போல அதிக தீவிரமாக இல்லை என்றாலும், இந்த முறை மக்களின் தாங்கிக் கொள்ளும் சக்தி மிகவும் குறைந்துள்ள காரணத்தால் அதிக மக்கள் மடிந்தார்கள்.

1896-97இல் சுமார் **3,00,000** சதுரமைல் பரப்புள்ள பகுதிகளில் பருவமழை பெய்யவில்லை. இப்பகுதிகளில் வாழ்ந்த சுமார் **630** லட்சம் மக்கள் பஞ்சத்தால் பாதிக்கப்பட்டார்கள். இந்த ஆண்டில் உணவு தானிய உற்பத்தி சாதாரண ஆண்டு உற்பத்தியைவிட 180 முதல் 190 லட்சம் டன்கள் வரை குறைந்து விட்டது. இந்தப் பஞ்சத்தினால் சுமார் 10 லட்சம் மக்கள் உயிரிழந்தனர்.[8]

இந்தியா முழுவதும் 1896-97இல் பஞ்சத்தால் பாதிக்கப்பட்டது. மற்ற பகுதிகளுடன் ஒப்பிடும்போது பர்மாவும், தீபகற்பத்

[8] Vera Ansty - Ibid - p. 6.

தின் தென்கோடியும் பஞ்சத்தால் அதிகம் பாதிக்கப்படவில்லை எனலாம். 1876–78இல் ஏற்பட்டதைவிட அதிகப் பரப்பளவில் பஞ்சம் ஏற்பட்டது. 1896–97 ஆண்டு பஞ்சத்தின் சிறப்புக் கூற்றை இங்கே குறிப்பிட வேண்டும். நெடுங்காலமாகப் பஞ்சத்தால் பாதிக்கப்படாத பகுதிகளிலும் பஞ்சம் இந்த ஆண்டில் ஏற்பட்டுள்ளது. காட்டாக, சுமார் 64 ஆண்டுகள் பஞ்சத்தால் பாதிக்கப்படாமல் இருந்த பேரார் பகுதியில் இந்த ஆண்டில்தான் பஞ்சம் ஏற்பட்டது. இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் எப்போதுமே பஞ்சம் ஏற்படாது என்று நம்பிவந்தார்கள். முற்றிலும் எதிர்பாராத சமயத்தில், எதிர்பாராத பகுதிகளில் பஞ்சம் ஏற்பட்டதால் உணவுத் தட்டுப்பாடும், பஞ்சத்தின் கொடுமையும் தீவிரமாக இருந்தன. முன்னெச்சரிக்கையுடன் செய்யவேண்டிய ஏற்பாடுகளை மக்களோ, அரசாங்கமோ செய்ய வில்லை. ஆகையால், பஞ்சத்தால் மக்கள் அதிகம் பாதிக்கப்பட்டார்கள்.

1896–97 ஆண்டில் பஞ்ச நிவாரண வேலைகள் திருப்தி அளிக்கும் வகையில் இருந்தன. இதற்குப் (1880) பஞ்ச ஆணைக் குழுவின் பரிந்துரைகளும், கண்டுபிடிப்புகளும் காரணமாக இருந்தன. பஞ்ச நிவாரண வேலைகளின் முக்கியத்தையும், அவை எந்த நோக்கத்திற்காகச் செயல்படவேண்டும் என்பதையும் இந்த ஆணைக்குழு தெளிவுபடுத்தியது. மாநிலங்கள் தோறும் விவசாய இலாகாக்கள் 1882இல் ஏற்படுத்தப்பட்டன. ஒவ்வொரு மாநிலத்திலும் விவசாயிகளின் பிரச்சினைகள் அனைத்தையும் அறியமுடிந்தது. ஆகையால், இதற்குத் தீர்வுகாண்பது எளிதாக்கப்பட்டது. பஞ்ச காலங்களில் நிவாரண வேலைகளின் தன்மை, அளவு ஆகியவற்றை நிர்ணயிப்பதும், நிவாரண வேலைகளின் நிர்வாகப் பொறுப்பை ஏற்பதும் இதன் முக்கியப் பணிகள் ஆகும். ஒவ்வொரு மாநிலத்திலும் நிவாரண வேலைகளின் தன்மையும், அளவும் வேறுபட்டன. பெரும்பாலும் பஞ்சப்பகுதிகளில் வரி வசூல் ரத்து செய்யப்பட்டது. நிவாரண வேலைகளுக்கு நிதி ஒதுக்குவதிலும், வரிச்சலுகைகள் வழங்குவதிலும் பம்பாய் மாநிலம் மிகவும் கஞ்சத்தனமாக நடந்துகொண்டது என்று (1898) பஞ்ச ஆணைக்குழு கூறியது.

மக்களின் வாழ்க்கைத்தரம் பற்றிய செய்திகளைப் பல ஆதாரங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பஞ்சங்கள் ஒவ்வொரு முறை ஏற்பட்டபோதும் அதைப்பற்றி ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்கும் நோக்கத்தோடு பஞ்ச ஆணைக்குழுக்கள் நியமிக்கப்பட்டுள்ளன. பஞ்சத்தின் தன்மை, பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகள், நிருவகிக்கப்பட்ட நிவாரண வேலைகள்,

அவற்றின் தன்மை, அளவு முதலிய விவரங்களை மேற்படி அறிக்கைகளிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

வாணிப வளர்ச்சியால் இந்திய விவசாயத்தில் ஏற்பட்ட மாறுதல்களை இங்கே தெரிவிப்பது அவசியம். போக்குவரத்து வசதிகளும், வெளிநாட்டு வாணிபமும் ஏற்படும் முன்னர் விவசாயிகள் தானியங்களைச் சேமித்து வைத்திருந்தார்கள். ''உண்மையில் விவசாயிகள் உணவு தானியத்தைச் சேமித்து வைப்பது சாதாரணமான ஒரு பழக்கமாக இருந்தது. அப்போதுள்ள புராதன நிலைமைகளில் பஞ்சங்களைச் சமாளிப்பதற்கு இது ஒன்றுதான் வழியாக உள்ளது.''[9] இப்படிச் சேமிக்கப்பட்ட தானியங்கள் பல ஆண்டுகளுக்குச் சேதம் இன்றி இருந்தன.

வாணிப வளர்ச்சியால் தானியத்தைக் களஞ்சியங்களில் சேமிக்க வேண்டும் என்ற எண்ணம் படிப்படியாகக் குறைந்தது. அங்காடியில் நிலவும் உயர்ந்த விலையால் ஆதாயம் அடைய எண்ணினர். ஆகையால், விவசாயிகளிடம் சேமிப்பாக இருக்க வேண்டிய தானியங்கள் வெளிநாட்டு அங்காடிகளில் விற்கப்பட்டன. வெளிநாட்டு வாணிபத்தால் ஏற்பட்ட ஆதாயத்தை உணர்ந்தவர்கள் உணவுப்பயிர்களுக்குப் பதிலாக வர்த்தகப் பயிர்களைப் பயிரிட விரும்பினார்கள். தானிய சேமிப்பு இல்லாத காரணத்தால் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டிய கட்டாய நிலை பஞ்சகாலங்களில் ஏற்பட்டது. உணவு தானியங்களை இறக்குமதி செய்யவும், அதைப் பஞ்சப்பகுதிகளுக்கு எடுத்துச் செல்லவும் தாமதம் ஆகுமானால் தானியக் கிடைப்பருமை மேலும் தீவிரமாகும்.

வாணிய வளர்ச்சியால் மற்றொரு குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்பட்டது. விவசாயத்துறை அங்காடி சக்திகளின் ஆளுகைக்குள் ஈர்க்கப்பட்டது. வெளிநாடுகளில் தானியம் கிடைப்பருமையாக இருந்தால் அவற்றின் விலை இந்தியாவிலும் உயரும். நில உடைமையாளர்களும், சாகுபடியாளர்களும் இலாபம் அடைந்தார்கள். இவ்வாறு வாணிபத்தின் வளர்ச்சியால் சமுதாய அமைப்பில் மேல்மட்டத்தில் உள்ளவர்களும், நடுத்தர வகுப்

9 பி. எம். பாத்தியா, 'வேளாண்மையும் கூட்டுறவும்' பார்க்கவும். இந்தியப் பொருளாதார வரலாறு - I (1857-1956) தொகுப்பாசிரியர் வி. பி. சிங், த. வெ. க. எண்: 185. பக். 168. மேலும் பின்குறிப்பு: Indian Wheat and Railways என்ற கட்டுரை Journal of Statistical Society ([illegible]) இல் வெளி வந்துள்ளது. அதில் Connal என்பவர் கூறுகிறார். பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்திற்கு முன்பு இந்தியாவின் பல பாகங்களில் உணவு தானியங்களைச் சேமிப்பதற்கான களஞ்சியங்கள் இருந்தன என்பதற்குத் தகுந்த ஆதாரங்கள் உள்ளன (பக். 247). அவ்வாறு சேமிக்கப்படுகின்ற உணவு தானியங்கள் 30 முதல் 40 ஆண்டுகள் வரை தரம் கெட்டுப்போகாமலும், அளவு குறையாமலும் இருந்ததாகக் கொன்னல் கூறியுள்ளார்.

பினர்களும் தங்கள் தங்கள் வாழ்க்கை வசதிகளை நிலைபெறச் செய்யவும், மேலும் உயர்த்திக் கொள்ளவும் முடிந்தன. அதே சமயம், சமுதாயத்தில் செல்வ வருமான ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுவதற்கும் இதுவே காரணமாக இருந்தது. கிராமங்களில் நிலையான சாகுபடி உரிமை இல்லாதவர்களும், நிலமற்ற விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் நாளடைவில் தனியாகவும், ஒப்புமையாகவும் பெருகலாயினர். கிராமங்களில் சிறு தொழில் செய்பவர்களின் நிலை மேலும் மோசமடைந்தது. அங்காடி சக்தியின் செல்வாக்கு அதிகரித்ததாலும், வாணிப வளர்ச்சியாலும் இவர்களின் வருமானமும், வாழ்க்கைத்தரமும் படிப்படியாக வீழ்ச்சி அடைந்தன. இவர்களால் சாதாரண ஆண்டுகளில்கூட தங்களுடைய அத்தியாவசியமான விருப்பங்களை நிறைவேற்றிக்கொள்ள இயலாது. பஞ்சங்கள் ஏற்படுமானால் இவர்களின் நிலைமையை விவரித்துச் சொல்லுதல் அரிது. கிடைப்பருமையால் அங்காடியில் உயர்ந்த விலையில் விற்கும் தானியத்தை இவர்களால் வாங்க முடியவில்லை. பஞ்சத்தின் கொடுமைகளுக்கு இவர்கள்தான் முதலில் இரையாகின்றனர்.

வாணிபம், அங்காடி ஆகியவற்றின் வளர்ச்சியால் கிராம மக்கள் இரு வகைகளில் பாதிக்கப்பட்டனர். மேல் மட்டத்தில் சொத்துரிமை, சாகுபடி உரிமை உடையவர்கள் தங்கள் நிலைமையை ஓரளவிற்கு மேலும் உயர்த்திக்கொள்ள முடிந்தது. அதே சமயம் சொத்துரிமைகள் ஏதும் இல்லாதவர்கள், விவசாயம் தவிர இதர கிராமத் தொழில்களில் ஈடுபட்டவர்கள் ஆகியோரின் வாழ்க்கைத்தரம் மேலும் வருந்தத்தக்க நிலைமைக்குக் குறைக்கப்பட்டது. இவர்களில் விவசாயிகளை முற்றிலும் நம்பியிருக்கும் கைத்தறி நெசவாளர்களை முக்கியமாகக் கூற வேண்டும். கைத்தறி நெசவாளர்கள் பஞ்சகாலத்தில் அதிகம் பாதிக்கப்பட்டனர். இவர்கள் தாங்கள் நெய்யும் ஆடைகளை விற்பதற்குச் சுற்றுப்புறப் பகுதிகளில் உள்ள விவசாயிகளை மட்டுமே நம்பி உள்ளனர். கிராமத்தில் பிற கைவினைஞர்களும் சுற்றுவட்டார மக்களின் சாதாரண தேவைகளை நம்பி உள்ளனர்.[10] குறிப்பிட்ட பகுதிகளில் பஞ்சம் ஏற்படும்போது இவர்களின் வருமான வாய்ப்புகள் பெரிதும் குறைந்துவிடுகின்றன.

பஞ்சமும், வெள்ளமும் பெருவாரியாகத் தோன்றுமானால், அவற்றைத் தொடர்ந்து பெரும் அளவில் தொற்று நோய்கள்

[10] Vera Anstey, ibid. P. 360. for. 2,

ஏற்படும். பஞ்சகாலத்தில் பொதுச் சுகாதாரம் பாதிக்கப்பட்டுத் தொற்று நோய்கள் பரவுகின்றன. பஞ்சத்தினுல் பாதிக்கப் பட்டவர்கள் போதிய சத்துணவு இல்லாமல் உடல் நலிவுற்று இருக்கும் நேரத்தில் இவை மேலும் விரைவாகப் பரவுகின்றன. நோய்களைத் தடுக்கும் இயல்பான சக்தி குறைந்து இருக்கிறது. ஆகையால், கொள்ளை நோய்கள் ஏற்படுவதால் எண்ணிறந்த மக்கள் மடிந்து விடுகின்றனர். 1896-97 பஞ்சத்தைத் தொடர்ந்து 'பிளேக்' நோய் ஏற்பட்டது. 1896-லிருந்து 1921 வரை பிளேக்கினுல் மடிந்தவர்கள் 336 லட்சம் மக்கள் ஆவர். 1899-1900 பஞ்சத்தைத் தொடர்ந்து 'காலரா' (கழிச்சல்) ஏற்பட்டது. 1918-19 பஞ்சத்தோடு 'இன்ஃப்ளூ-யன்ஸா' காய்ச்சல் பரவியது. இதனுல் மடிந்த மக்கள்தொகை குறைந்தது 120 இலட்சம் இருக்கும். உயர்ந்த அளவு 140 லட்சம் வரை இருக்கலாம். பஞ்சத்தினுல் ஏற்படும் பட்டினிச் சாக்காடு ஒருபுறம். அதைத் தொடர்ந்து அதைவிடப் பன்மடங்கு மக்கள் தொற்று நோய்களினுல் இறந்துவிடுகின்றனர். இவர்களும் பஞ்சத்தால் இறந்தவர்கள் என்றே கூறவேண்டும். பஞ்ச காலத்தைத் தொடர்ந்து இந்தியாவில் பிறப்பு விகிதங்களும் குறைந்து இருப்பதாக வீரா அன்ஸ்டே கூறுகிருர்.

இந்திய விவசாயிகளுக்கு 1896-97 பஞ்சம் பேரதிர்ச்சியாக இருந்தது. இதிலிருந்து விடுபடுவதற்கு முன்னர் 1899-1900 மீண்டும் பஞ்சம் ஏற்பட்டது. சுமார் **4** இலட்சம் சதுரமைல் பரப் பளவில் மழை பெய்யாத காரணத்தால் பஞ்சம் ஏற்பட்டது. இதனுல் சுமார் 550 இலட்சம் மக்கள் பாதிக்கப்பட்டனர். பிரிட்டிஷ் இந்தியப் பகுதியில் சுமார் **250** இலட்சம் மக்களும், சுதேச மன்னர்களின் ஆட்சியின்கீழ் உள்ள பகுதிகளில் சுமார் **300** இலட்சம் மக்களும் பஞ்சத்தால் பாதிக்கப்பட்டனர்.

இந்த ஆண்டில் இந்தியா முழுவதும் பஞ்சம் ஏற்பட்டது என்ருலும், பஞ்சத்தின் தீவிரம் மாநிலத்திற்கு மாநிலம் வேறு பட்டது. வங்காளம், பர்மா ஆகிய இரு மாநிலங்களிலும் நெல் உற்பத்தி திருப்தியாக இருந்தது. வடமேற்கு மாநிலம், அயோத்தி, பஞ்சாப் ஆகிய பகுதிகளில் உணவு தானியக் கிடைப்பருமை இருந்தது. இதைவிட அதிகமாகத் தமிழ்நாட்டில் பஞ்சம் தீவிரமாக இருந்தது என்ருலும் பம்பாய், மத்திய மாநிலங்கள், மற்றும் தெலிங்கானு (இதில் பெரும்பகுதிகள்) ஆகியவை பாதிக்கப்பட்ட அளவிற்குத் தமிழ்நாட்டில் தீவிரமாக இல்லை. இம்மாநிலங்களில் எல்லாம் இதற்கு முன்னர் ஒருமுறை பஞ்சம் ஏற்பட்டது. இரண்டு ஆண்டுகளுக்குள் மீண்டும் ஒருமுறை

பஞ்சம் ஏற்பட்டதால் இதன் கொடுமையை மக்களால் தாங்க முடியவில்லை. பஞ்சத்தின் தீவிரத் தன்மை மிகுதியாக இருந்தது என்று சொல்லுவதைவிட, அதை ஏற்கும் சக்தி மக்களிடம் மிகக் குறைவாக இருந்தது என்று கூறலாம். பெரும்பாலான மக்கள் பஞ்ச நிவாரண வேலைகளை நாடினர். இதற்காக அரசாங் கம் சுமார் ரூ. 15 கோடி செலவிட்டது. நிவாரண வேலைகள் நாடெங்கிலும் துவக்கப்பட்டன. அங்கே கொடுக்கப்படும் கூலி விகிதங்களும் திருப்தி அளிப்பதாக இருந்தன. சில மாவட்டங் களில் 40% மக்கள் நிவாரண வேலைகளில் ஈடுபட்டிருந் தார்கள். நிவாரண வேலைகளால் சுமார் **60** இலட்சம் மக்கள் பயன் அடைந்தனர்.

*1899-1900* பஞ்சம் மற்றொரு வகையிலும் அதிக தீவிரமாக இருந்தது. *1868*இல் இராஜபுதனத்திலும், *1878*இல் தென்னிந் தியாவிலும் ஏற்பட்ட பஞ்சங்களைப்போல *1899-1900*இல் கால் நடைகளின் தீவனத்திற்கும் பஞ்சம் ஏற்பட்டது. ஒவ்வொரு பெரிய பஞ்சத்தின்போதும் மனிதர்களுக்கும், கால்நடை களுக்கும் உணவு கிடைப்பருமையாகி விடுகின்றது. இந்தப் பஞ்சத்தினால் குஜராத் கால்நடைகள் அதிக அளவுக்கு இறந்தன. இந்தியாவின் இதர பகுதிகளில் உள்ள கால் நடைகளைவிட இம் மாநிலத்தில் உள்ளவை உயர்ந்த இனக் கால்நடைகளாகும். ஆகையால், குஜராத் கால்நடைகளின் இழப்பு இந்தியாவிற்கு ஏற்பட்ட ஈடுசெய்ய முடியாத பேரிழப் பாகும். அரசாங்கத்தின் பொறுப்பில் உள்ள பாதுகாக்கப்பட்ட காடுகள் மேய்ச்சலுக்காகத் திறந்து விடப்பட்டன. மத்தியப் பிரதேசக் காடுகளில் விளைந்த புற்களை அறுத்து, கட்டுகளாகக் கட்டி அவற்றை இரயில் மூலம் அனுப்பினார்கள். வேண்டிய அளவு இரயில் 'வாகன்'கள் கிடைக்காமையால் இந்த ஏற்பாடு திருப்தியாக இல்லை.

இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் பெரும் அளவு பஞ்சங்கள் ஏற்படவில்லை. இப்படிக் கூறுவதால் நாடெங்கிலும் மழை தவறாமல் பெய்தது என்றோ, பயிர்களின் விளைச்சல் திருப்தியாக இருந்தது என்றோ கூறுவதற்கில்லை. ஒவ்வொரு மாநிலத்திலும் தானியக் இடைப்பருமைகளும், மழையின்மை யும் ஏற்பட்டிரான. வங்காளம், பீகார் ஆகிய இரு மாநிலங்களிலும் முதல் ஏழு ஆண்டுகளில் விளைச்சல் சரியாக இல்லை. தமிழ்நாட்டில் இந்த நூற்றாண்டின் முதல் பத்து ஆண்டுகளில் இதைப் போன்ற நிலைமை நிலவியது. *1902-03*இல் மத்தியப்பிரதேசத்திலும், *1905-06*இல் ஐக்கிய

மாநிலத்திலும் (உத்தரப் பிரதேசம்), பஞ்சாபிலும் பஞ்சங்கள் ஏற்பட்டன. 1907—08இல் நிலைமை மேலும் மோசம் அடைந்தது. உத்தரப் பிரதேசத்தில் நிவாரண வேலைகள் பெருவாரியாக ஏற்பாடு செய்யப்பட்டன. இந்த ஆண்டில் பஞ்சாப், வங்காளம், மத்தியப் பிரதேசம், பம்பாய், பர்மாவின் மேல் பகுதி முதலிய இடங்களில் தானியக் கிடைப்பருமை அதிகமாக இருந்தது. நிவாரண வேலைகள் திருப்தி அளிக்கும் வகையில் செயல்பட்டன. இதனால் அதிக மக்கள் பஞ்சத்திற்கு இரையாகாமல் தடுக்க முடிந்தது. 1909இல் விலைச்சல் நாடெங் கிலும் உயர்ந்த அளவில் இருந்தது. இதைத் தொடர்ந்து 1914 வரை இதைப் போன்ற விளைச்சல்கள் இருந்தன. இக்காலத்தில் விவசாயம் பூரிப்பான நிலையில் இருந்தது.

முதல் உலகப் போர் நடைபெற்ற ஆண்டுகளில் மழையும், விளைச்சலும் திருப்தியாக இருந்தன. போர் முடிவுற்ற ஆண்டில் 1918—19இல் இந்தியா முழுவதும் விளைச்சல் குறைந்தது. அநேகமாக ஒவ்வொரு மாநிலத்திலும் வழக்கமான அளவைவிடக் குறைவாக மழை பெய்தது. சில மாநிலங்களில் மழை சுத்தமாகப் பெய்யவில்லை. பம்பாய், உத்தரப் பிரதேசம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் மழை மிகவும் குறைவாக இருந்தது. பீகார், மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா, மைசூர், ஹைதராபாத் ஆகிய மாநிலங்களில் தானியங்கள் கிடைப் பருமையாக இருந்தன. 1918—19இல் பஞ்சம் ஏற்படும் முன்னர் நெல், கோதுமை போன்ற நஞ்சைத் தானியங்களின் உற்பத்தி சாதாரணமாகவும், புஞ்சைத் தானியங்களின் உற்பத்தி மிகவும் குறைந்த அளவிலும் இருந்தன. புஞ்சைத் தானியங்கள் ஏழை மக்களின் முக்கிய உணவு தானியமாகும். பல ஆண்டு களாகப் புஞ்சைத் தானிய உற்பத்தி குறைந்த அளவில் இருந் துள்ளதால் மிகவும் அதிக அளவிற்கு ஏழைகள் பாதிக்கப் பட்டனர். பஞ்சம் ஏற்பட்ட ஆண்டில் நஞ்சைத் தானியமும், புஞ்சைத் தானியமும் குறைவாக இருந்தன. இதனால் பலர் பாதிக்கப்பட்டனர். பஞ்சத்தினால் நேரிடையாகவும், மறைமுக மாகவும் இறந்த மக்கள்தொகையைக் கணக்கிடுவது அரிது. ஆகையால், 1918—19 பஞ்சத்தை இந்தியாவில் ஏற்பட்ட மிகப் பெரிய பஞ்சங்களில் ஒன்றாகக் கருதவேண்டும். 1877—78-லும், 1899—1900-லும் தோன்றியதைப் போன்ற மிகப் பெரிய பஞ்சமாக இதைக் கூறலாம். முதன் முதலில் 1919இல்தான் இந்தியாவின் மொத்த உணவு தானிய உற்பத்தி மக்களின் தேவைக்குப் போதுமானதாக இருக்குமா என்ற சந்தேகம் ஏற்பட்டது.

தொடர்ந்து சரிவர மழையில்லாமையால் பஞ்சம் ஏற்படக் கூடும் என்று எதிர்பார்த்து அதற்கான முன்னெச்சரிக்கையுடன் இருந்தார்கள். தானிய ஏற்றுமதி முற்றிலும் தடை செய்யப்பட்டது. முதன் முதலில் மாநிலங்களில் உற்பத்தியாகும் உபரியான தானியங்களைக் கொள்முதல் செய்யும் முறை கொண்டு வரப்பட்டது. இந்தத் தானியங்கள் கிடைப் பருமையான பகுதிகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. இதைத் தவிர, பர்மாவிலிருந்து அரிசியும், ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமையும் இறக்குமதி செய்யப்பட்டன. உணவு தானியங்களின் இறக்குமதி (அன்று வரை இந்திய வரலாற்றின்) உச்ச அளவாக இருந்தது. நிவாரண வேலைகள் துரிதமாக நாடெங்கிலும் ஆரம்பிக்கப்பட்டன.

1900-லிருந்து 1918 வரையிலும் உள்ள ஆண்டுகளில் விவசாயம் பூரிப்பாக இருந்ததால் விவசாயிகளின் வருமானம் உயர்வாக இருந்தது. உலகப் போர் சமயத்தில் ஏற்பட்ட விலை உயர்வும் வருமானத்தை உயர்த்தியது எனலாம். இதனால் பஞ்சகாலத்தில் மக்கள் தங்களைப்பராமரித்துக்கொள்ளும் சக்தி உடையவர்களாக இருந்தனர். 1919இல் நாடெங்கிலும் நல்ல மழை பெய்தது. ஆகையால், உற்பத்தியும் அதிகரித்தது. 1920இல் மீண்டும் மழை பெய்யவில்லை. இதன் விளைவாக பம்பாய், மத்தியப் பிரதேசம், தமிழ்நாடு, ஹைதராபாத் ஆகிய மாநிலங்களில் தானியக் கிடைப்பருமை ஏற்பட்டது. 1921இல் பஞ்சாப்பில் கோதுமை உற்பத்தி சாதாரண ஆண்டில் விளையக்கூடியதில் முக்கால் பகுதியாக இருந்தது. எனவே, கோதுமை ஏற்றுமதி மீண்டும் தடை செய்யப்பட்டது. 1920–21 பஞ்சைத்தைவிட 1918–19 பஞ்சம் மிகவும் பரவலாகவும், தீவிரமாகவும் இருந்தபோதிலும், 1920–21இல் மக்களின் அவதி அதிகமாக இருந்தது. அடுத்தடுத்துத் தோன்றும் இரண்டு பஞ்சங்களில் இரண்டாவதாகத் தோன்றும் பஞ்சத்தின் கொடுமைகளைத் தாங்கும் சக்தி அற்றவர்களாக மக்கள் இருக்கின்றனர். 1921இல் தானிய இறக்குமதி உச்ச மட்டத்தை அடைந்தது. 1920இல் சுமார் ஒரு இலட்சம் மக்களுக்கு நிவாரணம் அளிக்கப்பட்டது. 1921இல் சுமார் 4½ லட்சம் மக்கள் நிவாரண உதவியைப் பெற்றனர்.

1931-க்குப் பின்னர் இந்தியாவின் தானிய உற்பத்தி தானியத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குப் போதுமானதாக இல்லை. இந்தியா நிகர அளவில் உணவு தானியத்தை இறக்குமதி செய்ய ஆரம்பித்தது.

அட்டவணை 6·3

**உணவு தானிய இறக்குமதியும், ஏற்றுமதியும்[11]**

| 5 ஆண்டு காலம் | இறக்குமதி (இலட்சம் டன்களில்) | ஏற்றுமதி (இலட்சம் டன்களில்) | நிகர இறக்குமதி |
|---|---|---|---|
| 1920-21 — 1924-5 | 11.4 | 9.8 | 1.6 |
| 1925-6 — 1929-30 | 15.9 | 8.3 | 7.6 |
| 1930-1 — 1934-5 | 18.4 | 5.7 | 12.7 |
| 1935-6 — 1939-40 | 20.7 | 6.9 | 13.8 |

இந்தியாவின் ஒரு மாநிலமாக இருந்த பர்மா 1137இல் தனி (காலனி) நாடாக மாறியது. பர்மாவில் தானிய உற்பத்தி மிகுதியாக இருப்பதால் அது எப்போதும் தானிய ஏற்றுமதி செய்யும் பகுதியாக இருந்துள்ளது. பர்மாவின் பிரிவினைக்கு முன்னதாகவே 1930—35 ஆண்டுகளில் 12.7 இலட்சம் டன்கள் உணவு தானியம் நிகர அளவில் இறக்குமதி செய்யப்பட்டது. இந்நிலையில் பர்மாவின் பிரிவினை இந்தியாவின் தானிய உற்பத்தியை மேலும் குறைத்துவிட்டது.

இரண்டாம் உலகப் போர் தொடங்கியதும் தானிய உற்பத்தி மேலும் கிடைப்பருமையாகியது. போர் காரணமாக இந்தியாவில் தங்கிய வெளிநாட்டு இராணுவ வீரர்களுக்கு உணவு அளிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இந்நிலையில் 1942இல் பர்மா ஜப்பான் ஆதிக்கத்தில் போய்விட்டது. கப்பல் போக்குவரத்து வசதிகள் குறைவாக இருந்ததும், பர்மாவின் இழப்பும் இந்தியாவின் உணவு நெருக்கடியை மேலும் தீவிரப்படுத்தின. உள்நாட்டில் விளையும் தானியங்கள் அங்காடியில் விற்கப்படுவதற்குப் பதிலாகப் பதுக்கப்பட்டன. இதனால் கட்டாயக் கொள்முதலும், தானியப் பங்கீடும் அவசியமாக இருந்தன. தானியங்கள் கறுப்பு அங்காடியில் விற்கப்பட்டன. இந்த நிலையில்தான் 1943இல் வங்காளத்தில்

[11] M. B. Nanavathi & J. J. Anjaria. *ibid*, p. 74

கடுமையான பஞ்சம் ஏற்பட்டது. இதனுல் சுமார் 15 லட்சம் மக்கள் உயிரிழந்தனர். தானியக் கிடைப்பருமையை உணர்த்துவதற்கு ஒரே ஒரு நிகழ்ச்சியை மட்டும் இங்கே கூறலாம். ஒரு வாரத்திற்கான உணவு தானியங்களைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாகத் தன் சொந்த நிலத்தை ஒருவர் பரிவர்த்தனை செய்ததாக மணிலால் நானுவதியும் அஞ்சாரியாவும் கூறுகிருர்கள்.[12]

வங்காளப் பஞ்சத்தை ஆராய்வதற்கு ஸர் ஜான் உட்ஹெட் (Sir John Wood head) என்பவரின் தலைமையில் ஓர் ஆணைக் குழு நியமிக்கப்பட்டது. இக்குழுவின் அறிக்கை 1945இல் வெளியிடப்பட்டது. வங்காளப் பஞ்சத்திற்கு அரசாங்கமும், சமுதாயமும் பொறுப்பு ஏற்க வேண்டும் என்றும், இப் பிரச்சினையை நீண்டகால நோக்கத்தோடு ஆராய்ந்து பார்க்க வேண்டும் என்றும் கூறியது. பஞ்சங்கள் ஏற்படும் வரை காத்திருந்து அதன் பின்னர் நிவாரண வேலைகள் ஆரம்பிக்கப் படுவதை இந்த அறிக்கை குறை கூறியது. பாதிக்கப்பட்டவர் களுக்கு உணவும், உதவியும் அளிக்க வேண்டியது அவசியம் என்ருலும், நிவாரண வேலைகளை ஏற்படுத்துவதுடன் அரசாங் கத்தின் கடமைகள் முடிந்துவிடவில்லை. இந்தியாவின் உணவு உற்பத்தி நிகர அளவில் துண்டு விழுந்துள்ள காரணத்தால் உற்பத்திப் பெருக்கத்திற்கான நடவடிக்கைகள் வலியுறுத்தப் படவேண்டும். 19-வது நூற்ருண்டிலிருந்து சாதாரண ஆண்டு களில் இந்தியாவின் தானிய உற்பத்தி நிகர அளவில் உபரியாக இருந்தது என்றும், பஞ்சகாலங்களில்கூட தானியத் துண்டு விழவில்லை என்றும் கூறி வந்தார்கள். 1945இல்தான் முதன் முறையாக தானிய உற்பத்தி போதுமானதாக இல்லை என்று அதிகாரபூர்வமாகக் கூறப்பட்டுள்ளது.

வங்காளப் பஞ்சத்தைப் பற்றிக் கூறுகையில், வங்க மாநில அரசும் இந்திய அரசும் தங்கள் கடமைகளைச் சரிவர செய்ய வில்லை என்றும், சமுதாயமும் சமுதாயத்தின் முக்கிய அமைப்பு களும் ஏழைகளையும் வலியற்றவர்களையும் பாதுகாக்கத் தவறி விட்டன என்றும் இவ்வறிக்கை கூறுகிறது.

[12] முன்கூறியபடி பக். 75.

# 7. நில உரிமைகள்

பெரும்பாலான மக்கள் வாழும் இடம் கிராமமாகவும், அவர்களின் முக்கியத் தொழில் விவசாயமாகவும் உள்ளது. இதர தொழில்களைப் போல விவசாயம் இலாபகரமாகச் செயல் படாமல் நெடுங்காலமாகப் பிழைப்புமட்ட வருமானத்தை நல்கும் தொழிலாக இருந்து வருகிறது. அனைத்து நாடுகளுடன் ஒப்பிடும்போது இந்திய விவசாயத் துறையின் உற்பத்தித் திறன் மிகவும் குறைவாக உள்ளது. உற்பத்தித் திறன் குறைவாக இருப்பதால் மக்கள் ஏழைகளாக இருக்கிறார்கள். உற்பத்தித் திறனுக்கும் வருமானத்திற்கும் இருவழித் தொடர்பு உண்டு. உற்பத்தித் திறன் குறைவாக இருப்பதால் மக்கள் ஏழைகளாக இருப்பதைப் போலவே, ஏழ்மைத் தளைகளிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள இயலாமையாலும் உற்பத்தித் திறன் குறைந்து காணப்படுகிறது. இது ஏழ்மை நிலையைத் தொடர்ந்து நீடிக்கச் செய்கிறது.

குறைந்த அளவு உற்பத்தித் திறன் ஏழ்மைக்குக் காரணமாக உள்ளது என்பதை எல்லோரும் ஏற்றுக் கொள்வார்கள். உற்பத்தி முறையில் நுட்பரீதியாக முன்னேற்றம் ஏற்படாமையால் — அதாவது பல தலைமுறைகளாக ஒரே உற்பத்தி முறையைப் பின்பற்றுவதால் உற்பத்தித்திறன் (ஒப்புமையாக) குறைவாக இருக்கலாம். இதனால் மக்களின் வருமானம் குறைவாக இருக்கும். இங்கு உற்பத்தித்திறன் காரணமாகவும், ஏழ்மை அதன் விளைவாகவும் கருதப்படுகின்றன. நுட்பரீதியான காரணிகளின் அடிப்படையில் ஏழ்மைக்கு விளக்கம் கூறப்படுகிறது. உற்பத்தி நுண்முறைகளின் வளர்ச்சி அல்லது முன்னேற்றம் மக்களின் வருமானத்தை உயர்த்தும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இரண்டாவதாக, உற்பத்தித் திறனை உயர்த்த முடியாமல் இருப்பதற்கு ஏழ்மையே காரணம் என்று கூறப்படுகிறது.

உற்பத்தியையும், உற்பத்தித் திறனையும் அதிகரிக்கக் கூடிய வழி முறைகளை மக்கள் அறிந்து இருந்தாலும் சமூக அமைப்பு காரணமாக அவற்றை நடைமுறையில் செயல்படுத்த முடிய வில்லை. **சொத்துரிமைகளை மையமாகக் கொண்ட பொருளாதார உறவுகளைச் சமூகக் கட்டமைப்பு** என்று கூறலாம். சொத் துரிமைகள் வருமான வாய்ப்புகளை நிர்ணயிக்கின்றன. மேற்படி சொத்துரிமைகள் குழு நலன்களை மையமாகக் கொண்டிருக்குமானால் தகுதி உடையவர்களுக்கும், பாடுபடு பவர்களுக்கும் வருமான வாய்ப்புகள் மறுக்கப்படும். எனவே, புதிய முயற்சிகளில் ஈடுபடுவதற்கு அவசியமான செயல் ஊக்க சக்தி வலுவிழந்து போய்விடும். செயல் ஊக்க சக்தியைத் தோற்றுவிக்க வேண்டுமானால் சொத்துரிமையை மையமாகக் கொண்ட சமூகக்கட்டமைப்பில் மாற்றங்களை ஏற்படுத்த வேண்டியது அவசியம். எனவே, ஏழ்மைக்குச் சமூகக் கட்டமைப்பே காரணம் என்றும், கட்டமைப்பு மாற்றங்களை ஏற்படுத்துவதால் உற்பத்தித் திறனையும் வருமானத்தையும் உயர்த்தலாம் என்றும் கூறுகிறார்கள்.

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியும் அதன் தேக்க நிலைமையும் (நீண்டகால ரீதியில்) நுட்பரீதியான காரணி களையும், கட்டமைப்புக் காரணிகளையும் சார்ந்து இருக்கும். நுட்பரீதியான காரணிகளைப் பொருளாதார அடிப்படையில் விளக்குவது கடினம். உற்பத்தி நுண்முறையில் எத்தகைய முன்னேற்றம் ஏற்படும் என்பதை முன்கூட்டியே கூறமுடியாது. ஆனால், அண்டை நாடுகளில் ஏற்பட்ட முன்னேற்றம் (உற்பத்தி முறைகளில்) நமது நாட்டில் ஏன் ஏற்படவில்லை என்று கருதுவோமானால் கட்டமைப்பு மாற்றங்களின் அவசி யத்தை உணரமுடியும்.

ஒவ்வொருவரும் செல்வம் திரட்டுவதைத் தங்கள் வாழ்க்கை யின் முக்கியக் குறிக்கோள்களில் ஒன்றாகக் கருதுகிறார்கள். செல்வத்தைத் திரட்டும் முயற்சிகளை இரு வகைப்படுத்தலாம். ஒருவகையான தொழில் முயற்சிகளில் தனிநபர் மட்டும் ஆதாயம் அடைகிறார். மற்றொரு வகையான தொழில் முயற்சி களில் தனிநபரைப் போலவே சமுதாயமும் பலன் அடைகிறது. இவ்விருவகைத் தொழில் முயற்சிகளையும் **ஆட்டக் கோட்பாடு களின்** (Game Theories) [1] அடிப்படையில் வேறுபடுத்தலாம்.

[1] William J. Baumol, Economic Theory and Operations Analysis, Printice-Hall of India, New Delhi, (1968) Ch. 2, also Linear Programming and Economic Analysis by R. Dorfman, P. Samuelson, and R. Solow, International Student Edition, (1958) chap. 15, pp. 417-445.

முதலில் தனிநபர் மட்டும் ஆதாயம் அடையும் தொழில் முயற்சிகளை எடுத்துக் கொள்வோம். இதை ஒரு எடுத்துக் காட்டின் வாயிலாக விளக்கிக் கூறமுடியும். சீட்டாட்டத்தில் வெற்றி-தோல்விக்குப் பந்தயம் கட்டி விளையாடுகிறார்கள் என்போம். இதில் ஒரு நபர் தொடர்ந்து வெற்றி அடைந்தால் இலாபம் அடைவார். ஆனால், சீட்டாட்டத்தில் கலந்துகொண்டவர்கள் அனைவரும் இலாபம் அடைய முடியாது. தனி ஒருவரின் இலாபம் ஏனையோருடைய இழப்பாக இருக்கும். ஒருவருடைய நிகர இலாபம் மற்றவர்களின் நிகர இழப்பிற்குச் சமமாகும். சீட்டாட்டத்தில் ஈடுபட்ட அனைவரையும் ஒரு குழுவாகக் கருதினால் அனைவருக்கும் நிகர அளவில் ஆதாயம் ஏற்படுவதில்லை. எனவே, இதை பூஜ்ய - ஆதாய ஆட்டங்கள் (Zero sum Games) என்று அழைக்கலாம்.[2] இதைப் போல் சமுதாயத்தில் ஒருவர் செல்வம் திரட்டுவதால் மற்றவர்கள் வறியராக்கப்படுவார்களேயானால் அதை பூஜ்ய - ஆதாயத் தொழில் முயற்சியாகக் கருத வேண்டும். காட்டாக மிக அதிக அளவிற்கு வாரம் வசூலிப்பதால் சாகுபடியாளர்கள் வறியராக்கப்படலாம். இந்தியாவில் விதிக்கப்படும் நிலவரி வாரத்தன்மை உடையது என்று சிலர் கருதுகிறார்கள்.[3] கிழக்கு இந்தியக் கம்பெனியின் ஆட்சியில் நிலவரி மிக அதிக அளவுக்கு—மொத்த உற்பத்தியில் 50% வரை — இருந்தது. இதனால் இந்தியர்கள் ஏழைகளாக்கப் பட்டனர் என்று திரு. டட் (R. C. Dutt) கூறுகிறார். கடும் வட்டி, பட்டினிக் கூலிக்கு வேலை பார்க்கும் தொழிலாளர்கள் (Sweated Labour), உற்பத்தித் திறனை உயர்த்தக் கூடிய முன்னேற்றங்களைத் தடுக்கும் வேலை நிறுத்தங்கள் ஆகியவை பூஜ்ய - ஆதாயத் தொழில் முயற்சிகளாகும். சுருக்கமாகச் சுரண்டல் தன்மையை அடிப்படையாகக் கொண்ட தொழில் முயற்சிகளை பூஜ்ய - ஆதாயத் தொழில் முயற்சிகள் எனலாம்.

முதலாளித்துவ பொருளாதார அமைப்பில் தொழில் முயற்சிகள் யாவும் சுரண்டல் தன்மை உடையன என்று கார்ல் மார்க்ஸ் தனது உபரி மதிப்புக் கோட்பாட்டின் வாயிலாக விளக்கியுள்ளார். உண்மையில் முதலாளித்துவத் தொழில் முயற்சிகள் அனைத்தும் சுரண்டல் தன்மை உடைய பூஜ்ய-ஆதாயத் தொழில் முயற்சிகளாக இல்லை. சில வகைத் தொழில் முயற்சிகள் நிகர அளவில் அனைவருக்கும் நன்மை பயக்

[2] Harvey Leibenstein — Economic Backwardness and Economic Growth, Science Edition, (1963) p. 112—119. இந்நூலில் மேலும் சில எடுத்துக்காட்டுகளையும் காணலாம்.

[3] P. A. Wadia and K. J. Merchant — Our Economic Problems, VORA, 1959, pp. 280.

கின்றன. புதிய பொருள்களைக் கண்டுபிடித்தல், புதிய முறையில் உற்பத்தி செய்தல், புதிய அங்காடிகளை ஏற்படுத்துதல், புதிய கச்சாப் பொருள்களைக் கண்டுபிடித்தல், பயன்படுத்துதல் முதலியன தொழிலில் முயல்வோருக்கும், சமுதாயத்திற்கும் நன்மை அளிக்கின்றன.

மேற்படி தொழில் முயற்சிகளை நிகர - ஆதாயத் தொழில் முயற்சிகள் எனலாம். இதை நிகர - ஆதாய ஆட்டக் கோட்பாடுகள் (Non - Zero Sum Games or Positive - sum Games) விளக்குகின்றன. நிகர ஆதாயத் தொழில் முயற்சிகள் மக்களின் வருமானத்தையும், வாழ்க்கை வசதிகளையும் அதிகரிக்கின்றன.

பொருளாதார வளர்ச்சிக்கு மூல காரணமாக உள்ள நிகர ஆதாய முயற்சிகள் புதுமை புகுத்தல்களை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். ஒரு சமுதாயத்தில் புதுமை புகுத்தல்கள் ஏற்படவில்லை என்றாலும், அல்லது புதுமை புகுத்தும் சக்திகள் பலவீனப்பட்டாலும் நிகர ஆதாயத் தொழில் முயற்சிகள் தோன்றுவதில்லை. பொருளாதார வளர்ச்சி வாய்ப்புகள் குன்றிய தேக்கமுற்ற சமுதாய அமைப்புகளில் சர்வாதீனத் தன்மை உடைய குழு நலன்களின் ஆதிக்கம் மேலோங்குகின்றது. எந்த அளவுக்கு வளர்ச்சி வாய்ப்புகள் குறைந்துள்ளனவோ அந்த அளவுக்குச் சுரண்டல் சக்திகளின் ஆதிக்கம் அதிகரித்து இருக்கும். சுரண்டல் சக்திகள் பூஜ்ய ஆதாய சக்திகளாக உள்ளன. பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்த வேண்டுமானால் சுரண்டல் தன்மை உடைய பூஜ்ய - ஆதாய சக்திகளை ஒடுக்கவும், நிகர - ஆதாய சக்திகளைத் தோற்றுவிக்கவும், வலுப்படுத்தவும் வேண்டும். இதற்குக் கட்டமைப்பு மாற்றங்கள் இன்றியமையாதவை.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் பொருளாதார வளர்ச்சி வாய்ப்புகள் தேக்கமுற்றவுடன் இந்தியாவில் சுரண்டல் தன்மை உடைய சமூக சக்திகள் தலை தூக்கின. இந்தியாவின் தொழில் வளர்ச்சியும், வாணிப வளர்ச்சியும் பிரிட்டிஷாரின் ஏகாதிபத்தியக் கொள்கையால் கட்டுப்படுத்தப்பட்டன. இந்தியப் பொருளாதார அமைப்பில் தொழில் துறை என்னும் கால் முடமாக்கப்பட்டது. எனவே, விவசாயத் துறை என்னும் ஒற்றைக் காலில் நிற்க வேண்டியதாயிற்று. விவசாயத் துறையிலும் வரிச்சுமை அதிகமாக இருந்தது. சேமிப்பிற்கும், முதலீட்டிற்கும் வாய்ப்பு இல்லாத காரணத்தால் தேக்கநிலை ஏற்பட்டது.

அடுத்து, சுரண்டல் சக்திகள் எவ்வாறு தோன்றின என்பதைக் காண்போம். இந்தியாவில் சொத்துரிமைகள் வரையறுக்கப்பட்டு இருந்தன. இதைச் சமூக சக்திகள் கட்டுப் படுத்தின. பிரிட்டனில் அளிக்கப்பட்டதைப் போல முழுமை யான சொத்துரிமைகள் தனிநபர்களுக்கு இந்தியாவில் கொடுக்கப் படவில்லை. ஆங்கிலேயர்களின் ஆட்சியில் தனிநபர்களுக்கு முழுமையான சொத்துரிமைகள் கொடுக்கப்பட்டதால் சமுதாய அமைப்பில் பெரும் புரட்சி ஏற்பட்டது. இதைத் தவிர நிலம் ஒரு கிடைப்பருமையான காரணியாக மாறியது. நிலத்தை ஒரு சொத்தாகவும், விற்பனைக்குரிய பொருளாகவும் கருதினார் கள். இதை வருமானம் நல்கும் முதலீடாக நினைத்தனர். சொத்துரிமை உடையவர்களுக்கு வருமான வாய்ப்புகள் அதிகரித்த அதே சமயத்தில் நிலத்தில் வியர்வை சிந்திப் பாடுபடும் குடியானவர்கள், சாகுபடியாளர்கள் ஆகியோரின் வருமான வாய்ப்புகள் குறைந்து போயின. சொத்துரிமை என்னும் அனுமதிச் சீட்டை வைத்திருப்பவர்கள் சுகபோகங்களை அனுபவிக்கும் நிலை ஏற்பட்டது. புதிய முயற்சிகள், புதுமை புகுத்தல்கள் தோன்றவில்லை. எனவே, பிறர் உழைப்பில் தான் வாழலாம் என்ற மனப்பான்மையும் வாய்ப்புகளும் பெருகின.

சொத்துரிமையுடன் இது நின்றுவிடவில்லை. வேலை வாய்ப்பை ஏற்படுத்தக் கூடிய எந்த உரிமையும் புல்லுருவித் தன்மைக்குத் தாயகமாக விளங்கியது. நிலவுரிமையைக் கொண்டு மிராசுதார்கள் சாகுபடியாளர்களைச் சுரண்டினார்கள் என்றால், முக்கிய சாகுபடியாளர்கள் உட்குத்தகைக்கு நிலத்தை விட்டுப் பயிரிடும் குடியானவனின் உழைப்பைச் சுரண்டினார்கள். பணம் என்னும் மூலதனத்தை உடைய பண வணிகர்கள் விவசாயிகளையும், ஏழை எளியவர்களையும் கடும் வட்டியால் சுரண்டலாயினர். ஆனால், இவற்றை எல்லாம் கடுமெனச் செய்யும் வகையில் பிரிட்டிஷ் ஆட்சியின் சுரண்டல் தன்மை இருந்தது. வாணிபத்தால் சாதிக்க முடியாததை வரிக் கொள்கையால் நிறைவேற்றிக்கொண்டார்கள்.[4]

### இந்தியாவில் நில உரிமைகள்: வரலாறு

ஒவ்வொரு நாட்டிலும், நில உரிமைகள் சமூக அரசியல் பொருளாதார நடவடிக்கைகளை அடிப்படையாகக் கொண்

[4] வரி விதிப்புகள் யாவும் சுரண்டல் தன்மை உடையன அல்ல. வசூலித்த வரித்தொகையை இந்தியாவிலேயே செலவிட்டு இருப்பார்களேயானால் சுரண்டல் குற்றச்சாட்டிலிருந்து ஓரளவு விடுபட்டு இருக்கலாம்.

டுள்ளன. எனவே, நில உரிமைகளை மாற்றுவதற்கு முன்னோடியாக இவற்றில் மாற்றங்கள் ஏற்பட வேண்டும். பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த நில உரிமைகள் நாட்டிற்கு நாடு, சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபடுவதால் அதற்குப் பின்னணியாகத் திகழும் அரசியல் சமூக காரணிகளை அறிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

இந்தியாவின் பொருளாதார வரலாற்றில் கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சியின் போதும், பிரிட்டிஷ் முடியாட்சியின் போதும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அரசியல் மாற்றங்கள் தனித்து ஏற்படவில்லை. அதைத் தொடர்ந்து சொத்துரிமைகளிலும், சமூகக் கட்டமைப்பிலும் மாறுதல்கள் ஏற்பட்டன. காட்டாக, பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படும் முன்னர் இந்தியாவில் நிலம் ஒருபோதும் விற்பனைக்குரிய சொத்தாக (இருந்தது) இல்லை. நிலம் ஒரு உற்பத்தி சாதனமாக மட்டுமே இருந்தது. முற்காலத்தில் இதை விற்பதோ வாங்குவதோ வரலாறு கண்டறியாத நிகழ்ச்சியாகும்.[5]

கிட்டத்தட்ட 18-வது நூற்றாண்டுவரை நிலப்பரப்பு அதிகமாகவும், மக்கள்தொகை குறைவாகவும் இருந்தது. சாகுபடி நிலத்தின் பரப்பு உழைப்பின் கிடைப்பருமையால் நிர்ணயிக்கப்பட்டது. விரும்பிக் கேட்பவர்களுக்கெல்லாம் கிராம சமுதாயத்தால் நிலம் ஒதுக்கப்பட்டது. அக்காலத்தில் நிலம் கிராம சமுதாயத்தின் உடைமையாக இருந்தது. விவசாயிகளுக்கு நிலத்தைச் சாகுபடி செய்யும் உரிமை மட்டுமே இருந்தது. இந்த உரிமை பாரம்பரியமானது. இவர்கள் அரசருக்கு வரி செலுத்த வேண்டும். ஒருவர் வரி செலுத்தும் வரை அவரிடமிருந்து சாகுபடி உரிமை பறிக்க முடியாது. நிலவரியை மக்கள் நேரிடையாகச் செலுத்துவது கிடையாது. அரசரின் சார்பில் கிராம சமுதாயம் இதை வசூலிக்கும். பெரும்பாலும் உற்பத்தியில் ஆறில் ஒரு பகுதி வரியாகச் செலுத்தப்பட்டது.

நில உரிமைகள் முழுமைபெற்றதாக இல்லை. தனி நபர்களுக்கு நில உரிமைகள் நேரிடையாக அளிக்கப்படவில்லை. குடும்பம், கிராம சமுதாயம், அரசர் ஆகியோருக்கு நிலத்தில் உரிமைகள் உண்டு. இவர்களுடைய உரிமைகள் வரையறுக்கப்பட்டிருந்தன. ஏகக் குடும்பத்தின் தலைவர்[6] அல்லது கர்த்தா

[5] Baden - Fowell - Quoted by - V. B. Singh, ibid, chap. 4.

[6] ஏகக்குடும்ப அமைப்புகள் இந்துக்களிடத்திலும் மகமதியர்களிடத்திலும் 19-வது நூற்றாண்டில் காணப்பட்டன. ஏகக்குடும்பம் என்பது சமயத்தின் கூறுக் இல்லாமல் சமுதாயத்தின் கூறுகவே இருந்தது.

உறுப்பினர்களின் சார்பில் நிலத்தைப் பராமரித்து வந்தார். குடும்பத்தின் சார்பில் நில உரிமைகளை ஏற்றும் நிருவகித்தும் வந்தார்.

கிராம சமுதாயத்தின் உடைமையாக நிலம் இருந்தது. எனவே, சாகுபடிக்கு நிலத்தை ஒதுக்கவும், வரி வசூலிக்கவும், அதை அரசருக்குச் செலுத்தவும் கிராம சமுதாயம் பொறுப்பு ஏற்றுக்கொண்டது. கிராம சமுதாயத்தின் அனுமதி அல்லது இணக்கம் இல்லாமல் சாகுபடி உரிமைகளை மாற்ற முடியாது. அரசருக்கு நிலவரியை வசூலிக்கும் உரிமை மட்டுமே உண்டு. பொதுவான காரியங்களுக்கும், அறப்பணிகளுக்கும் உதவ வேண்டுமானால் அரசர் குறிப்பிட்ட நிலப்பகுதிகளை இறையிலி நிலமாக அறிவிப்பார்.

சொத்துரிமைகளைப் பொறுத்தவரை தனி நபர்களைவிடக் குடும்ப அமைப்புகள் முக்கியமாக இருந்தன. பாகப் பிரிவினையால் பங்காளிகள் சாகுபடி உரிமையைப் பகிர்ந்து கொண்டார்கள். உழைப்பு கிடைப்பருமையாக இருந்த காரணத்தால் நிலத்தை விற்கவும், வாங்கவும், பராதீனம் செய்யவும், அடமானம் வைக்கவும் அவசியமில்லை.

தனிநபர்களுக்கு முழுமையான சொத்துரிமைகள் பிரிட்டிஷ் ஆட்சியில்தான் முதன் முதலில் ஏற்பட்டன. நிலத்தை வருமானம் நல்கும் சொத்தாகக் கருதி அதைப் பணத்திற்கு விற்கவும் வாங்கவும் உரிமை அளிக்கப்பட்டது. இதற்கு இதர அடிப்படையான காரணிகள் ஏதுவாக இருந்தன. 19-வது நூற்றுண்டில் நிலம் கிடைப்பருமையான காரணியாக மாறியது. நிலத்தின் உற்பத்தித் திறன் அதிகரிக்கவில்லை என்றுலும், நில உரிமை வருமானம் நல்கும் சொத்தாக மாறியது. அக்காலத்தில் தொழில் துறைக்கு ஏற்பட்ட சீர்ழிவே இதற்குக் காரணமாகும்.

பிரிட்டிஷ் ஆட்சியில் சொத்துரிமையை அடிப்படையாகக் கொண்ட கட்டமைப்பு மாற்றங்கள் ஏற்பட்டன என்றும், அந்த காலத்தில் நிலம் கிடைப்பருமையாக மாறியது என்றும் கூறினும். மக்கள் அவதியை அதிகப்படுத்தும் மற்றொரு காரணியையும் இங்கே குறிப்பிட வேண்டும். மொகலாய ஆட்சியில் வரித்தொகையைப் பணமாகச் செலுத்த வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது. அப்போது அதிக அளவு நிலவரி மூன்றில் ஒரு பகுதியாக இருந்தது. ஆனால், மொகலாய ஆட்சியில் விதிக்கப்பட்ட வரித்தொகை முழுவதும் வசூலிக்கப்

படவில்லை. இதனால் வரித்தொகையின் பளுவை முழுமையாக மக்கள் உணரவில்லை. ஆனால், ஆங்கிலயே ஆட்சியில் வரித் தொகை மிகவும் அதிகமாக இருந்ததுடன், விதிக்கப்பட்ட தொகை முழுவதும் வசூலிக்கப்பட்டது. வரித்தொகையைப் பணமாகச் செலுத்த வேண்டியிருந்ததால் இதன் சுமையை அதிகம் உணர்ந்தார்கள். கிட்டத்தட்டத் தன்னிறைவு பெற்ற கிராம சமுதாய அமைப்பில் பணப்புழக்கத்திற்கே வாய்ப்பில்லை. மரபு அடிப்படையில் செயல்படும் சமுதாயங்களில் பரிவர்த்தனை பேரங்கள் யாவும் பண்டமாற்று பேரங்களாகவே இருக்கும். வெளிநாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டுள்ள பகுதிகளில் மட்டுமே பணப்புழக்கம் அதிகமாக இருக்கமுடியும். உணவு தானியங்களைப் பணத்திற்கு விற்கவேண்டிய கட்டாய நிலை வரியைப் பணமாகச் செலுத்த வேண்டியிருப்பதால் ஏற்பட்டது. விவசாயிகள் ஆண்டில் இரு முறைகள் அரசாங்கத்திற்கு வரி செலுத்தினார்கள். தானிய உற்பத்தி திருப்தியாக இருந்தாலும், தானியத்தைப் பணமாக்க வேண்டிய கட்டாய நிலை காரணமாகவும், பணத்தொகையைப் பெறுவதில் உள்ள இடர்ப்பாடுகள் காரணமாகவும் விவசாயிகள் மேலும் வறியவர்களாக்கப்பட்டனர்.

விவசாயிகள் நிலவரியைச் செலுத்துவதற்கு மிகவும் அவதிப்பட்டார்கள் என்ற செய்தியை கல்னல் சைக்ஸ் (Colonel Sykes) எடுத்துக் கூறுகிறார்:

> 'கிராம மக்கள் தங்கள் (அத்தியாவசிய) விருப்பங்களை நிறைவேற்ற இயலாத அளவுக்கு ஏழைகளாக இருக்கிறார்கள் என்று கூறமுடியாது. அவர்கள் பணத் தொகையைச் சம்பாதிப்பதற்காக அதிகம் கஷ்டப் பட்டார்கள். இதனால் கடன் கொடுத்தவர்களுக்கும், அரசாங்கத்திற்கும் சேர வேண்டிய தொகையைச் சரிவரச் செலுத்த முடியவில்லை. தங்களிடம் உபரியாக இருந்த தானியத்தைப் பணமாக மாற்றுவதில் உள்ள இன்னல்கள்தான் இதற்குக் காரணம்.'[7]

விவசாயத்தில் ஈடுபட்டவர்கள் வறியராக்கப்படுவதற்கு ஆதாரமாக இருந்த சில சக்திகளை இதுவரை விளக்கிக் கூறினோம். இத்தகைய பின்னணியில்தான் நில உரிமைகளை ஆராயவேண்டும். இந்தியா முழுவதும் நில உரிமைகள் ஒரே

[7] Quoted by S. J. Patel — Essays On Economic Transition — Asia 1965, p. 12.

மாதிரியாக இல்லை. இடத்திற்கு இடம் வேறுபட்டுள்ளதால் நில உரிமைகளின் வரலாற்றை அறுதியிட்டுக் கூற முடியவில்லை. இருந்தபோதிலும் கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சியின் துவக்கத்தில் காணப்பட்ட நில உரிமைகளில் சிலவற்றைக் காண்போம்.

பொதுவாக நிலத்தில் மூவகை உரிமைகள் அங்கீகரிக்கப் பட்டன. அரசர் மேல் வாரத்தையும், மிராசுதாரர் துண்டு வாரத்தையும், சாகுபடியாளர் குடிவாரத்தையும் பெற்றுவந்தார் கள். பொதுவாக நஞ்சை நிலங்கள் வாரத்திற்கும், புஞ்சை நிலங்கள் தீர்வைக்கும் சாகுபடி செய்யப்பட்டன. (குறிப்பிட்ட தொகை அல்லது தானியத்தைச் சாகுபடியாளர் கொடுக்க வேண்டும்).

பத்தொன்பதாவது நூற்றண்டின் துவக்கத்தில் கூட்டுக் கிராமங்கள் என்று அழைக்கப்படும் சமுதாய கிராமங்கள் இருந்தன. தமிழ்நாட்டில் இக்கிராமங்களைச் 'சமுதாயம்'[8] என்று அழைத்தார்கள். தஞ்சை மாவட்டத்தில் உள்ள 5783 கிராமங்களில் 1774 கிராமங்கள் 'சமுதாய' கிராமங்களாக இருந்தன.[9] 'சமுதாய' கிராமங்கள் அனைத்தும் ஓரினத் தன்மையுடன் விளங்கவில்லை. சில வகைச் சமுதாய கிராமங் களில் பொது உரிமைகள் அதிகம் வலியுறுத்தப்பட்டன. காட்டாக, 'பசுங்கரை' கிராமங்களில் நிலம் முழுவதும் கிராமத்தின் பொதுஉடைமையாக இருக்கும். இங்கே சாகு படியும் பொதுவாக இருக்கும். அரசாங்கம், கிராம ஊழியர்கள், சாகுபடியாளர்கள் ஆகியோருக்குச் சேரவேண்டியதுபோக எஞ்சியுள்ளதை மிராசுதாரர்கள் தங்களுக்குள் பகிர்ந்து கொள்ளு வார்கள்.

'சமுதாய' கிராமங்களில் இரண்டாவது பிரிவைச் சேர்ந்த 'கரையீடு' கிராமங்களில் நிலவுரிமை பொதுவாக இருந்த போதிலும், சாகுபடிக்காக நிலத்தைத் தனித்தனியாகப் பிரித்துக் கொண்டார்கள். ஒருவர் பயிரிடும் நிலப்பகுதியை ஆண்டு தோறும் திருவுளச்சீட்டின் மூலமாக நிர்ணயிப்பார்கள். இந்த

[8] Sarada Raju--ibid, p. 30.

[9] B. M. Bhatia,--Discistegration of Village Communities in India -- Printed in the Readings in the Economic History. Ed. B. N. Gangule. (1964) p. 91. -- Copy Right Delhi School of Economics.

உரிமைகள் ஆந்திர தேசத்தில் உள்ள 'வீசபுடி'[10] கிராமங்களைப் போல இருக்கின்றன.

'அருடிக்கரை'க் கிராமங்களில் விளைநிலம் மிராசுதாரர்களிடையே நிரந்தரமாகப் பகிர்ந்து அளிக்கப்பட்டிருக்கும். இருந்தபோதிலும் புறம்போக்கு, குளம், கால்வாய், மீன் பிடித்தல், மாடு மேய்த்தல் முதலிய உரிமைகள் எல்லோருக்கும் பொதுவானவை.

சமுதாய கிராமங்களில் **காணியாட்சிக்காரர்**[11] என்று அழைக்கப்படும் **மிராசுதார்கள்** பரம்பரை பரம்பரையாக நில உரிமை உடையவர்கள். மிராசு நில உரிமை தமிழ்நாடு, தெலிங்காளு, மகாராஷ்டிரம்[12] ஆகிய பகுதிகளில் மகமதியப் படையெடுப்புக்கு முன்னதாகவே நிலவியுள்ளது. மிராசுதாருக்குக் கிராமம் முழுவதும் சொந்தமாக இருக்குமானால், இதை **ஏகபோக** கிராமம் அல்லது **எஜமானர்** கிராமம் என்று அழைப்பார்கள். மலையாளத்தில் மிராசு உரிமையை **ஜன்மி** உரிமை என்றும், மிராசுதாரை **ஜன்மக்கார்** என்றும் அழைப்பார்கள். இதைப்போன்ற உரிமைகள் கர்னடகத்திலும் காணப்பட்டன. அங்கு மிராசுதாரை மூலி (Mulee) என்று அழைத்தார்கள்.

சமுதாய கிராமங்களின் சீரழிவுடன் மிராசு உரிமைகளும் மறைந்துபோயின. மிரர்சுதாரர்கள் கூட்டாகச் செயல்படுவதற்குப் பதிலாகத் தனித்தனியாகப் பிரிந்துநின்று செயல்பட விரும்பினர்கள். நில உரிமைகள் பாகப்பிரிவினையால் துண்டுபோடப்பட்டன. நில வரியைப் பணமாகச் செலுத்த வேண்டியதாலும், நில வரி மிக அதிகமாக இருந்ததாலும் மிராசுதார்களின் துண்டு வாரம் குறைந்தது. பின்னர் தோன்றிய இரயத்துவாரி முறை மிராசு உரிமைகளுக்கு முடிவு கட்டியது.[13]

காணி ஆட்சிக் கிராமங்களில் உள்ளூர் சாகுபடியாளர்களுக்கு (உட்குடி) சலுகைகளும், பாதுகாப்பும் அளிக்கப்பட்டன. வெளியூர்ச் சாகுபடியாளர்களிடமிருந்து (புறக்குடி) இவர்கள் பாதுகாக்கப்பட்டனர். மிராசு உரிமைகளுடன் உள்ளூர்ச் சாகுபடியாளர்களுக்குக் கொடுக்கப்பட்ட பாதுகாப்பும், ஆதரவும் மறைந்து போயின.

[10] Dr. Sarada Raju, ibid, Ch. III.
[11] ibid-P.31-35.
[12] Miuutes of thr Boeud 5-1-1878. Quoted G S. Raju, ibid.
[13] R. C. Durt - ibid, Vol. I. P. 268.

## மூவகை முக்கிய நில உரிமைகள்

நில உரிமைகள் சிக்கலானவை; பலதரப்பட்டவை. இவற்றை வகைப்படுத்துவதும் கடினம். எனவே, நிபுணர் களிடத்தும் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. திரு. காட்கில்[14] நில உரிமைகளை இரயத்துவாரி உரிமைகள் என்றும், மிராசு உரிமைகள் என்றும் இரு பிரிவுகளாகப் பிரித்து உள்ளார். மற்றும் சிலர் தனி நபர்களை (இரயத்துகளை) மையமாகக் கொண்ட முறை என்றும், சொத்து அல்லது 'எஸ்டேட்' (மகல்) களை மையமாகக்கொண்ட முறை என்றும் வகைப்படுத்துவார் கள். இதைத்தவிர, நிரந்தரமாகத் தீர்வைகள் நிர்ணயிக்கப் பட்ட பகுதிகள் என்றும், தற்காலிகமாக நிர்ணயிக்கப்பட்ட பகுதி கள் என்றும் பகுத்துக் கூறுகிறார்கள்.[15] நிலத்தை யார் வைத் திருக்கிறார்கள், இவர்களுக்கும் அரசாங்கத்திற்கும் நேரிடை யான தொடர்புகள் நிலவுகின்றனவா, இல்லையா என்ற அடிப் படையில் நில உரிமைகளை இரயத்துவாரி, ஜமீன்தாரி என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

சொத்துரிமைகளை மூன்று அடிப்படையில் பிரித்துக்கொண்டு இந்தப் பாடத்தில் மேற்கொண்டு அதைப்பற்றிய வரலாற்று உண்மைகளை ஆராயவேண்டும். தனி நபர்களை மையமாகக் கொண்ட இரயத்துவாரி முறையும், விவசாயிகளுக்கும் அரசிற்கும் இடையில் மேல் உரிமைகளைப்பெற்றுள்ள இடைநிலையாளர்களைக் குறிக்கும் ஜமீன்தாரி முறையையும், சொத்துகளை அல்லது 'எஸ் டேட்டு'களை மையமாக்கொண்ட 'மகல்' வாரி முறையும் மூன்று முக்கிய நில உரிமைகளைப் பிரதிபலிக்கின்றன. இந்த மூன்று தலைப்புகளில் பெரும்பாலான உரிமைகளை வகைப்படுத்தலாம் என்ற நோக்கத்தோடு இவ்வாறு எடுத்துக்கொள்ளுகிறோம்.

## இரயத்துவாரி முறை

விவசாயிகள் நிலத்தின் உடைமையாளர்களாக இருக்கும் உரிமையை இரயத்துவாரி முறை என்று கூறுவார்கள். 'இரயத்து' என்றால் விவசாயி என்று பொருள். கோட்பாட்டின் அடிப்படையில் விவசாயிகள் சொந்தமாகச் சாகுபடி செய்யக் கூடியவர்கள். இவர்கள் அரசாங்கத்துடன் நேரிடையாகத் தொடர்புகொண்டு இருக்கிறார்கள். வரிகளைத் தனித்தனியாகச்

[14] D. R. Gadgil - The Industrial Evolution in India, Oxford [1946] P. 63.

[15] P. A. Wadia and K. T. Merchant - Our Economic Problem, VORA [1959] P. 280-281.

செலுத்துவார்கள். அங்ஙனம் அரசாங்கத்திற்கு வரி செலுத்தும் வரை இவர்கள் நிலத்தைச் சாகுபடி செய்யும் உரிமை பெற்று இருப்பார்கள். இந்த உரிமை பாரம்பரியமானது; உடைமை மாற்றம் செய்யக்கூடியது. இதைப் பணத்திற்கு விற்பனை செய்யலாம்; பரிவர்த்தனை செய்யலாம்; அடமானம் வைக்கலாம். மற்றும் இதர வழிகளில் பராதீனம் வைக்கலாம். இந்த உரிமை முழுமையானது.

இரயத்துகள் வரியைச் செலுத்தவில்லை என்றும், வாரத்தைத் தான் செலுத்துகிறார்கள் என்றும் கருதுகிறார்கள்.[16] அரசாங்கம் வசூலிப்பதை வரியாக ஏற்றுக்கொண்டால் நில உரிமைகள் தனி நபர்களின் முழுமையான சொத்து உரிமைகளாகக் கருதப்படும்.

இரயத்துவாரி கிராமங்களில் புறம்போக்கு நிலம், குளம், வாய்க்கால் முதலியன அரசாங்கத்தின் உடைமையாகும். தனித்தனியாக ஒவ்வொரு விவசாயியும் எவ்வளவு வரி செலுத்தவேண்டும் என்பதை அரசாங்கம் நிர்ணயிக்கும்.

இரயத்துவாரி முறையில் நில உரிமைகள் பல நபர்களிடம் பிளவுபட்டு இருப்பதால் இரயத்துவாரி கிராமங்களைப் பன்மைக் கிராமங்கள் என்று கூறுவார்கள். இந்தக் கிராமங்கள் தமிழ்நாடு, மகாராஷ்டிரம், குஜராத், மத்தியப்பிரதேசம் முதலிய மாநிலங்களில் அதிக அளவில் காணப்படும். 1928-29இல் மொத்த நிலப் பரப்பில் 51% அல்லது **334-598** மில்லியன் ஏக்கர்கள் இரயத்துவாரி உரிமையில் உள்ள நிலப்பரப்பு ஆகும்.[17]

இரயத்துவாரி முறையின் தோற்றம் கிராம சமுதாய அமைப்பின் இறுதிக்கட்டம் ஆகும். ஆனல், பேடன்-பௌவல் வேறுவிதமாகக் கூறுகிறர். இரயத்துவாரி முறைதான், அதாவது பன்மைக் கிராமங்கள்தாம் இந்தியாவில் நெடுங்காலமாக நிலவிவந்துள்ளன என்று கூறுகிறர். இக் கூற்றை நாம் ஏற்பதற்கில்லை. நெடுங்காலமாக வந்த உரிமைகளை பிரிட்டிஷார் மீண்டும் ஏற்படுத்தினர்கள் என்றல், பழங்காலத்தில் கிராம சமுதாயங்கள் நிலவவில்லை என்று கூறவேண்டியிருக்கும்.

[16] நில வரியை வாரமாகக் கருதலாமா, வேண்டாமா என்ற ஆராய்ச்சியில் இப்போது ஈடுபடவேண்டிய தேவையில்லை. நிலவரியை வரியாகவே கருதலாம். பார்க்கவும்: G. B. Jathar and S. G. Beri, Indian Economics, Oxford, Vol. I (1949) Chapter XII, Section 30 P. P. 375-378.

[17] ஆதாரம்-முன்கூறியபடி பக். 359.

கிராம சமுதாயங்கள் புராதன அமைப்பில் முக்கிய இடம் பெற்று இருந்தன. கிராம சமுதாய அமைப்பில் அரசருக்கும் விவசாயிகளுக்கும் நேரிடையான தொடர்பு ஏதுமில்லை. நிலத்தின் பேரில் விவசாயிகளுக்கு முழுமையான உரிமைகள் கிடையாது. அரசருக்குச் சேரவேண்டிய வரித்தொகையைக் கிராம சமுதாயமே வசூலித்தது. ஆனால், இரயத்துவாரி முறையில் அரசர் அல்லது அரசாங்கம் விவசாயிகளிடம் நேரிடையாகத் தொடர்பு கொண்டதாலும், வரிகளை விவசாயிகள் நேரிடையாகச் செலுத்தியதாலும், நில உரிமைகள் முழுமையான சொத்து உரிமைகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டதாலும் கிராம சமுதாயங்கள் மறைந்து போயின.

அக்பரின் 'ஜப்தி' (Zapti) முறையை இன்றைய இரயத்து வாரி முறைக்கு முன்னோடியாகக் கூறலாம். சென்னை மாநிலத்தில் பாராமகல் என்று அழைக்கப்படும் தர்மபுரி மாவட்டம் கம்பெனிஆட்சியில் இணைக்கப்பட்டவுடன், 1792இல் காப்டன் ரீட், மற்றும் தாமஸ் மன்ரோ ஆகிய இருவரும் இரயத்துவாரி முறையை ஏற்படுத்தினர்கள். ஆங்கிலேய ஆட்சியில் இரயத்துவாரி முறையின் கர்த்தாவாக சர் தாமஸ் மன்ரோ + விளங்கினர் என்றால் மிகையாகாது. ஆனால், மன்ரோவின் கருத்துகள் முழுவதும் கம்பெனி ஆட்சியில் நிறைவேற்றப்படவில்லை.

நிலவரி விகிதங்கள் இரயத்துவாரி முறையில் நிரந்தர மாக்கப்பட வேண்டும் என்று மன்ரோ பரிந்து உரைத்தார். ஆனல், கடைசிவரை கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சியில் நில வரி விகிதங்கள் நிரந்தரமாக்கப்படவில்லை.

மொத்த விளைச்சலில் 50% ஆக இருந்த நிலவரியை மூன்றில் ஒரு பகுதியாகக் குறைக்கவேண்டும் என்று பரிந்துரைத்தார். அதைச் சிறிது கால தாமதத்துடன் கம்பெனி இயக்குநர்கள் ஆமோதித்தார்கள்.

இரயத்துவாரி முறையில் விவசாயிகளுக்கு முழுமையான சொத்துரிமைகள் உள்ளன. ஆனால், அதை அனுபவிப்பதற்கு முன் நிபந்தனையாக நில வரியை அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டும். அதாவது நில வரியைச் செலுத்தவில்லையானல் ஒருவரை நிலத்திலிருந்து சட்ட ரீதியாக வெளியேற்ற முடியும்.

சொத்துரிமைகள் வரி செலுத்துவதை அடிப்படையாகக் கொண்டு இருப்பதாலும், நில வரி விகிதங்கள் ஆண்டுதோறும்

+ Sir Thomas Munro

அதிகரிக்கப்படுவதாலும், மிக அதிகமாக இருப்பதாலும் விவசாயிகள் பலவகையான இன்னல்களுக்கு உள்ளாக்கப்படுவார்கள் என்று மன்ரோ கருதினார். முக்கியமாகக் குறைந்த ஊதியத்தில் பணியாற்றும் அரசாங்க ஊழியர்கள் விவசாயிகளைத் துன்புறுத்தக் கூடும் என்று எண்ணினார். இதைத்தவிர நில வரி விகிதங்கள் சாசுவதமாக்கப்பட்டால்தான் விவசாயத்தில் முதலீடு அதிகரிக்கும், மொத்த உற்பத்தியும் வருமானமும் உயரும் என்று நம்பினார். இதைத்தவிர நில வரியை நிர்ணயிப்பதற்பான அடிப்படை திட்டவட்டமாக எடுத்துரைக்கப்படவில்லை. இதனால், நிலத்தின் வளமை, விளைச்சல், பாசனவசதிகள் ஆகியவற்றிற்குப் பதிலாக அதிகாரிகளின் மனநிலையைச் சார்ந்து நில வரி விகிதங்கள் மாறுபட்டன.

நில வரிகளை அதிகாரிகள் ஏகதேசமாக நிர்ணயிப்பார்கள். இதை கோல்டு பின்ஞ் [Gold Finch] [18] என்ற அதிகாரியின் வாக்கு மூலத்தால் அறியலாம்:

> நிலத்தீர்வைகளை நிர்ணயிக்கும்போது விவசாயிகளை அரசாங்கம் கலந்து ஆலோசிப்பதில்லை. மாவட்ட ஆளுநர் (கலெக்டர்) விவசாயிகளை வரவழைத்து அரசாங்கம் நிர்ணயித்த தீர்வைகளை அறிவிப்பார். இதை ஏற்றுக் கொண்டவர்கள் நிலத்தைச் சாகுபடி செய்யலாம். இந்த நிபந்தனைகளை ஏற்க விரும்பாதவர்கள் இதை உதறிவிட்டுச் செல்லலாம்.

கோல்ட் பின்ஞ்சின் கோவையான வார்த்தைகள் பிரச்சினையின் தீவிரத் தன்மையை மழுப்புகின்றன. இதை மேலும் தெளிவாகக் கூறவேண்டும். ஒருதலைப்பட்சமாக நிர்ணயித்த வரி விகிதங்களை விவசாயிகள் செலுத்தவேண்டும் என்றும், அவ்வாறு செலுத்த மறுப்பவர்களின் பாரம்பரியமான நில உரிமைகள் பறிமுதல் செய்யப்படும் என்றும் அவர் கூறுகிறார். இங்கிலாந்தில் அக்காலத்தில் இருந்ததைப்போலத் தொழில், வாணிபம் ஆகிய துறைகள் இந்தியாவிலும் வளர்ச்சி அடைந்திருக்குமேயானால்—விவசாயத்தைத் தவிர இதர துறைகளில் வருமானத்தை ஈட்டுவதற்கான வாய்ப்புகள் இருந்திருக்குமேயானால்—கோல்டு பின்ஞ் கூறுவதைப்போல ஜமாபந்திகளில் சொத்துரிமைகளை உதறி எறிந்துவிட்டுச் சென்றிருப்பார்கள். ஆனால், (விவசாயத்தைத் தவிர) வேறு எந்தத்தொழிலும் வளராத அளவுக்குப் பொருளாதார

[18] Evidence of Gold finch before Commons Select Committee, 1853, P. 141, Quoted by R. C. Dutt. Vol. II. ibid, P. 53.

அமைப்பைத் தேக்கமுறச் செய்தமையால் தங்கள் பிழைப்புக்கு ஒரே ஆதாரமாக இருந்த சொத்துரிமையையும் இழக்கவிரும்பாத வர்களான விவசாயிகள் வேறு வழியில்லாமல் கலெக்டரின் நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டார்கள்.

மன்றோ கூறியதைப்போல இரயத்துவாரி பகுதிகளில் நில வரியை நிரந்தரமாக்கியிருப்பார்களேயானால் இத்தகைய கொடுமைகளிலிருந்து விவசாயிகள் ஓரளவுக்கு விடுபட்டிருப் பார்கள்.

இரயத்துவாரி முறையினால் ஏற்பட்ட அவதிகளைக் கண் ணுற்ற (ஆங்கிலேய) அதிகாரிகள் நெடுங்காலமாக இருந்த கிராம சமுதாய அமைப்புகளை மீண்டும் உயிர்ப்பித்து, நிலவரியை வசூலிக்கும் பொறுப்பைக் கிராம சமுதாயத்திடம் ஒப்படைக்க லாம் என்று (வரி வாரியம்) [19] பரிந்துரைத்தார்கள். ஆனால், கிழக்கு இந்தியக் கம்பெனியின் இயக்குநர் வாரியம் இதை ஏற்க மறுத்தது. நிலவரி விகிதத்தை நிரந்தரமாக்குவதால் கம்பெனி யின் வருமானம் தேக்கமடைந்து ஒரு உச்சநிலையை அடைந்துவிடும் என்று நினைத்தமையால் சாசுவத நிலவரி அமைப்பை விரிவு படுத்த விரும்பவில்லை. இரயத்துவாரி முறையில் அரசாங்கம் நேரிடையாக வரியை வசூலிப்பதால் அதிக அளவு வரி வருமானத்தைத் திரட்ட முடிகிறது. எனவே, அரசாங்கத்திற்கும், விவசாயிகளுக்கும் இடையே கிராம சமுதாயத்தை ஏற்படுத்த உடன்படவில்லை. இதனால் வரி வருமானம் குறைந்துவிடும் என்று அஞ்சினார்கள்.

விவசாயிகள் அரசாங்கத்துடன் நேரிடையாகத் தொடர்பு கொண்டிருப்பதால் இரயத்துவாரி முறை சிறந்த நில உரிமை முறை என்று நினைக்க இடம் இருக்கிறது. ஆனால், கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சியில் இரயத்துவாரி முறை அவ்வாறு இல்லை. விவசாயிகளுக்கு ஏற்பட்ட இன்னல்கள் இரயத்துவாரி முறையில் மட்டும் சிறப்பாகத் தோற்றுவிக்கப்பட்டன என்று கருதமுடியாது. நிலவரியை நிரந்தரமாக்காமல் இருந்ததே இதற்குக் காரணம். நிலவரியை ஆண்டுதோறும் உயர்த்தினர். விவசாயத்தில் ஒரு புதிய நிலையற்ற தன்மை ஏற்பட்டது. இயற்கைச் சக்திகளால் ஏற்படும் நிலையற்ற தன்மையுடன் நிலை யற்ற நிலவரியின் கொடுமைக்கும் இந்திய விவசாயிகள் உள்ளாக்கப்பட்டார்கள்.

[19] Porposal recommended by the Madras Board of Revenue in 1818 - See R. C. Dutt. Vol. I, ibid - p.p.

இரயத்துவாரி முறையில் விவசாயிகள் தனித்தனியாக அரசாங்கத்துடன் தொடர்பு கொண்டு இருந்தார்கள். இவர்களை ஒன்றாக இணைக்கவும், பொதுவான நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் வலிமை பொருந்திய அமைப்பு இல்லாமையால் எளிதில் ஏழ்மையில் வீழ்த்தப்பட்டார்கள்.

இயற்கைக் காரணிகளால் விவசாய உற்பத்தி நலிவுறும் காலங்களில் தங்களைப் பராமரித்துக்கொள்ளும் அளவிற்கு வசதி உடையவர்களாக விவசாயிகள் இருந்திருப்பார்களேயானால் பெரும்பாலான பட்டினிச் சாவுகளைத் தவிர்த்திருக்கமுடியும். விவசாயிகள் அந்த அளவுக்கு வசதியற்றவர்களாக இருந்தார்கள். இவர்களின் வருமானமும் வாழ்க்கை வசதிகளும் ஓரளவு அதிகரித்ததால் அதை ஈடு செய்யும் அளவிற்கு நிலவரியை உயர்த்தினார்கள். எனவே, விவசாயிகளால் சேமிக்க முடியவில்லை. உற்பத்தித்திறனை அதிகரிக்கக்கூடிய முதலீடுகளை மேற்கொள்ள முடியவில்லை. இதனால் எதிர்பாராதவகையில் தோன்றும் இயற்கை உற்பாதங்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் ஏற்பட்ட பெரும்பாலான பஞ்சங்கள் உணவு தானியங்களின் கிடைப்பருமையைவிட மக்களிடம் வாங்கும் சக்தி இல்லாத காரணத்தினால்தான் ஏற்பட்டது என்று கருத இடம் இருக்கிறது. விவசாயிகள் தாங்கள் உற்பத்தி செய்த தானியங்களைத் தங்களுடைய நுகர்விற்காக வைத்துக்கொள்ள முடியாமல், உற்பத்திஅனைத்தையும் நிலவரியைச் செலுத்துவதற்காக விற்றார்கள். விவசாயிகளிடம் வாங்கும் சக்தி குறைவாக இருந்தது. ஏதாவது ஒரு காரணத்தால் உற்பத்தி அளவு (இறுதி நிலையில்) குறைந்தாலும், விலை ஓரளவுக்குக் குறைந்தாலும் (பணத்தின் கிடைப்பருமையால்) நிலைமை மிகவும் மோசமடைந்து விடும். பஞ்சங்கள் அனைத்து இந்தியா முழுவதிலும் ஒரே சமயத்தில் ஏற்படவில்லை. அவை சாசுவத நிலவரித் திட்டம் அமுலாக்கப்பட்ட ஜமீன்தாரி பகுதிகளைவிட, இரயத்துவாரி பகுதிகளில் தீவிரமாகவும், அடிக்கடியும் ஏற்பட்டன என்று ரமேஷ் டட்[20] கூறுகிறார்.

[20] குண்டூர், மசூலிப்பட்டணம் ஆகிய பகுதிகளில் 1833இல் மிகவும் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. இதை நேரில் கண்ட காப்டன் வால்டேர் கேம்பெல் (Captain Waltair Cambell) கூறுகிறார்: 'பஞ்சத்தின் கொடுமையை விவரிக்க முடியவில்லை. இறந்த நாய்களையும், குதிரைகளையும் மக்கள் ஆர்வத்தோடு புசிக்கின்றனர்; ஒருநாள் கோட்டைக்குள்ளிருந்த கழுதை ஒன்று தவறிப்போய் வெளியே வந்துவிட்டது. ஓநாய்க் கூட்டத்தைப்போல (மக்கள்) அதன்மேல் பாய்ந்து அதன் கால்களைப் பிய்த்து அதே இடத்தில் விழுங்கி விட்டனர்.'

Quoted by R. C. Dutt, ibid, Vol-II-p. 69-70.

கம்பெனி ஆட்சி முடிந்து, பிரிட்டிஷ் ஆட்சியின் முடியாட்சி ஏற்பட்டவுடன் வரி விதிப்புக்கள் சீர்திருத்தப்படும் என்று நம்பினார்கள். 1860இல் ஏற்பட்ட பஞ்சத்தின் பின் நிலவரி விகிதங்களை நிரந்தரமாக்குவதற்கு முயற்சி செய்தார்கள். ஆனால், இறுதியில் இந்தத் திட்டம் நிறைவேற்றப்படாமல் கைவிடப்பட்டது. இருந்தபோதிலும் 1861லிருந்து 1871-வரை இரயத்துவாரி முறையில் சில முக்கிய திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. முதற்கண் நிலம் அனைத்தும் 'சர்வே' செய்யப்பட்டன. நிகர உற்பத்தியில் 50%-த்தை மட்டுமே வரியாக வசூலிக்க வேண்டும் என்று கூறினர்கள். விவசாயிகள் செலுத்த வேண்டிய வரித்தொகை முப்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை நிர்ணயிக்கப்படும். நிலவரி விகிதத்தைத் தகுந்த காரணங்களுக்காக மட்டுமே உயர்த்த வேண்டும். அவ்வாறு உயர்த்தப்பட்ட புதிய நிலவரி நிகர உற்பத்தியில் (அதிகபட்சம்) 50% ஆக இருக்க வேண்டும். மேற்படி சீர்திருத்தங்கள் ஓரளவு நிலைமையை மாற்றியிருக்கக்கூடும். இதனுல் ஏற்படும் நன்மைகளை முழுமையாக உணரும் முன்னர் 1877இல் பஞ்சங்கள் தோன்றின. இதைத்தவிர நிகர உற்பத்தியில் பாதியை மட்டுமே வரியாக வசூலிக்க வேண்டும் என்ற நியதி ஏட்டளவில் நின்றுவிட்டது. நடைமுறையில் 'ரெவின்யூ' அதிகாரிகளின் முடிவு இறுதியாக இருந்தது. இந்த முடிவை மறுபடியும் பரிசீலனை செய்யவோ (அல்லது அது) தவறு என்று வழக்காடவோ வழியில்லை. வரி விதிப்பு தொடர்ந்து ஒருதலைப்பட்சமாகவேஇருந்தது. நிலவரியை எவ்வாறு நிர்ணயிக்க வேண்டும் என்று கூறப்பட்டதேயல்லாமல் அதை எந்த அளவுக்கு நிறைவேற்றுகிறர்கள் என்பதை ஆராய்ந்து முடிவு செய்ய—மறு பரிசீலனை செய்ய—வழிவகை செய்யப்படவில்லை. நிலத்தீர்வையைத் தவிரச் சில சிறப்புத் தீர்வைகளும் (Special Cesses) விதிக்கப்பட்டன. இதனுல் எதிர்பார்த்த அளவுக்கு நன்மைகள் ஏற்படவில்லை.

### ஜமீன்தாரி

பல நூற்றுண்டுகளாக நிலவிய நிலவரி முறை பதினுன்காவது நூற்றுண்டுக்குப்பின்னர் பெருமளவுக்கு மாறியுள்ளது. அல்லாவுதீன் கில்ஜி, ஷெர்ஷாசூரி, அக்பர் முதலியோர் ஆட்சியில் வரிவிதிப்பில் புதியமுறைகள் புகுத்தப்பட்டன. நிலவரியை வசூலிப்பதற்கு மேல்உரிமை உள்ள இடைநிலையாளர்கள் முதன் முதலில் தோற்றுவிக்கப்பட்டார்கள். வலிமை பொருந்திய அரசர் ஆட்சி பீடத்தில் இருக்கும் வரை இவர்கள் வரி வசூலிக்கும் சாதாரண அரசாங்க ஊழியர்களாக ('ஜமீன்தார்') இருந்தார்கள். ஔரங்கசீப்பிற்குப் பின்னர் மொகலாய

மன்னர்களின் செல்வாக்குக் குன்றியது. அதுவரை சக்கரவர்த்திக்குக் கீழ்ப்படிந்து இருந்த 'ஜமீன்தார்'கள் சுயேச்சையாகச் செயல்படத் தொடங்கினர்கள்.

விவசாயிகள் தலைமுறை தலைமுறையாக மன்னருக்கு வரி செலுத்திப் பழகிப்போனர்கள். அரசரின் வலிமை குன்றிய காலத்திலும் பாமர விவசாயிகள் வரி செலுத்தத் தயாராக இருந்தார்கள். இவர்களிடம் பாரம்பரியமாக 'ஜமீன்தார்கள்' வரி வசூலித்து வந்தார்கள். 'ஜமீன்தார்'கள் விவசாயிகளிடம் வரியை வசூலித்தார்களே தவிர, அதை மன்னரிடம் சேர்ப்பிக்கவில்லை. வரித்தொகையைத் தாங்களே எடுத்துக்கொண்டதால் நிலத்தை ஆளும் உரிமையும் தங்களுக்கு உண்டு என்று கூறிக்கொண்டனர்.

'ஜமீன்தார்'கள் யாவரும் நிலவரியை வசூலிக்கும் அரசாங்க ஊழியர்களாக ஒருகாலத்தில் நியமிக்கப்பட்டவர்கள் அல்லர். அப்பகுதியை ஆண்டுவந்த மன்னர்கள் போரில் தோல்வியுற்றதாலும், பேரரசின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டதாலும் 'ஜமீன்தார்'களாக நியமிக்கப்பட்டார்கள். பெரும்பாலும் 'ஜமீன்தார்'கள் அப்பகுதி மக்களுடன் நெடுங்காலமாகத் தொடர்பு கொண்டவர்கள்; செல்வாக்குடையவர்கள்; ஒரு வகையில் நிருவாகப் பொறுப்பைப் பாரம்பரியமாகப் பெற்றுள்ளவர்கள்.

கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சி ஏற்பட்ட காலத்தில் இந்தியாவில் 'ஜமீன்தார்'கள் வேரூன்றியவர்களாக இருந்தார்கள். எண்ணிறந்த விவசாயிகளிடம் நேரிடையாகத் தொடர்பு கொள்வதும், அவர்களின் வாயிலாக நிலவரியை வசூலிப்பதும் எளிதாக இருந்தது. இவர்கள் மக்களிடம் செல்வாக்குடன் இருந்ததாலும், வரிவசூலிப்பதில் கைதேர்ந்தவர்களாக இருந்ததாலும் இவர்களைப் பயன்படுத்திக் கொள்ளக் கம்பெனி ஆட்சியாளர்கள் நினைத்தார்கள். நிலவரியை ஆண்டுதோறும் செலுத்துவதற்கு 'ஜமீன்தார்'கள் ஒப்புக்கொண்டார்கள். 1793இல் வங்காளத்தில் உள்ள ஜமீன்தார்களுக்கும் கிழக்கு இந்தியக் கம்பெனிக்கும் இடையே ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. இதைச் சாசுவத நிலவரித் திட்டம் என்று கூறுவார்கள். அப்போது காரன்வாலிஸ் பிரபு கவர்னர் ஆக இருந்தார். இந்த உடன்படிக்கையால் இருதரப்பினரும் இலாபம் அடைந்தார்கள். வரி வசூலிக்கும் விவசாயிகளாக இருந்த ஜமீன்தார்கள் சொந்தக்காரர்களாக மாற்றப்பட்டார்கள். ஜமீன்தார்கள் ஆண்டு

தோறும் குறிப்பிட்ட தொகையை நிலவரியாகச் செலுத்த வேண்டும். இதற்குப் பதிலாக வரிவசூலிக்கும் நிலங்களின் முழுமையான சொத்துரிமை இவர்களுக்கு அளிக்கப்பட்டது.

வங்காளத்தில் 'ஜமீன்தார்'களுக்கு வரையறுக்கப்பட்ட உரிமைகள், சாசுவத நிலவரித்திட்டம் ஏற்படும் முன்னதாக இருந்தன என்பது உண்மை. ஆனால், நிலத்தில் சாகுபடி செய்தவர்கள் அதன் உடைமையானவர்களாக இருந்தார்கள். மேற்படி உடன்படிக்கையின் காரணமாக வரையறுக்கப்பட்ட நில உரிமைகளை உடைய 'ஜமீன்தார்'களுக்கு நிலத்தின் முழுமையான உரிமை கொடுக்கப்பட்டதால், அதுவரை நிலத்தின் பரம்பரை உடைமையாளராக இருந்தவர்கள் சாகுபடியாளராக் மாறினார்கள்.

சாசுவத நிலவரித்திட்டம் வங்காளம், உத்தரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் மட்டுமே முதலில் அமுலாக்கப்பட்டது. பின்னர் சென்னை மாநிலத்தின் சில பகுதிகளுக்கும் விஸ்தரிக்கப் பட்டது.

'ஜமீன்தார்'கள் ஆண்டுதோறும் குறிப்பிட்ட தொகையை, குறிப்பிட்ட தேதிக்குள் செலுத்தவேண்டும் என்று வற்புறுத்தினார்கள். வரிசெலுத்த இயலாதவர்களின் 'ஜமீன்தாரி' உரிமை பறிமுதல் செய்யப்பட்டது. 'ஜமீன்தாரி' உரிமை ஏலத்திற்கு விடப்பட்டது. அதிகத் தொகை செலுத்துவதாக ஒப்புக் கொண்டவருக்கு இவ்வுரிமை அளிக்கப்பட்டது. விவசாயத்தில் சிறிதும் ஆர்வம் இல்லாத வியாபாரிகள், பண வணிகர்கள் ஆகியோர் நிலத்தின் உரிமையை வாங்க நினைத்தார்கள். இவர்கள் 'ஜமீன்தாரி' உரிமையை வருமானம் நல்கும் சொத்தாக நினைத்தார்கள்.

சாசுவத நிலவரித்திட்டத்தை ஏற்படுத்தும் முன்னர் நிலத்தின் உரிமை பற்றிய பத்திரங்கள், நிலப்பரப்பு முதலியவை பற்றிய ஆவணங்களைச் சரியாகக் கம்பெனி ஆட்சியாளர்கள் பரிசீலனை செய்யவில்லை. எனவே, நிலவரியைத் தோராயமாக நிர்ணயித்தார்கள். விவசாயிகளிடம் வசூலிக்கும் நிலவரியில் $\frac{10}{11}$ பகுதியை அரசாங்கத்திற்கு ஜமீன்தார்கள் செலுத்த வேண்டும். எஞ்சிய பகுதியை 'ஜமீன்தார்' நிருவாகச் செலவிற்காகவும், நில உரிமைக்கான சன்மானமாகவும் வைத்துக் கொள்ளலாம். அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டிய வரித் தொகை நிர்ணயிக்கப்பட்டதைப்போலச் சாகுபடியாளர்களிடமிருந்து வசூலிக்கும் குத்தகை அல்லது வாரத்தை நிர்ணயிக்க

வில்லை. நிலம் கிடைப்பருமையாக மாறியதாலும், வருமானம் ஈட்டக்கூடிய வாய்ப்புகள் குறைந்துள்ளதாலும் ஆண்டுதோறும் குத்தகை அல்லது வாரத்தை உயர்த்துவது எளிதாகியது. நிலத்தைச்சாகுபடி செய்வதற்கு அதிகப்போட்டி இருந்ததால், சொந்தமாகச் சாகுபடி செய்வதைவிட உட்குத்தகைக்கு விடுதல் இலாபமாகவும், இழப்பு இடர் இல்லாமலும் இருந்தது.

சாசுவத நிலவரித் திட்டத்தை அமுலாக்குவதால் வங்காள மக்களின் நல்வாழ்க்கைக்கு அடிகோலியதாகவே அப்போது கம்பெனி ஆட்சியாளர்கள் நினைத்தார்கள்; நில வரியை நிரந்தரமாக்குவதால் விவசாயிகளிடம் சேமிப்பை ஏற்படுத்தி, விவசாயத்துறையின் வளர்ச்சிக்கு உதவ முடியும் என்று கருதினர்கள்; பிரிட்டனில் உள்ளதைப்போல முழுமையான நில உரிமைகளை இந்தியாவில் புகுத்துவதன் மூலம் அங்கு உள்ளதைப் போன்ற முதலாளித்துவப் பண்ணையத்தை ஏற்படுத்த முடியும் என்று நம்பினர்கள்.

வங்காளத்தில் சாசுவத நிலவரித்திட்டம் அமுலாக்கப்பட்டதால் அரசாங்கமோ, சாகுபடியாளர்களோ பலன் அடையவில்லை என்பதைப்பின்வரும் புள்ளிவிவரங்கள் தெளிவுபடுத்துகின்றன.[21] வங்காளத்தில் 1764-65இல் நிலவரி **811,000** ஸ்டர்லிங் ஆக இருந்தது. 1765-66இல் இது 1·47 மில்லியன் ஸ்டர்லிங் ஆக உயர்ந்தது. 1793இல் 3 மில்லியன் ஸ்டர்லிங் ஆக மேலும் உயர்ந்தது. 1857-58இல் மொத்த நிலவரி (வங்காளத்தில்) 15·3 மில்லியன் ஸ்டர்லிங் ஆகவும், 1911-12இல் 20 மில்லியன் ஸ்டர்லிங் ஆகவும் இருந்தது. 1936-37இல் 23 மில்லியன் ஸ்டர்லிங் ஆக உயர்ந்தது. இவ்வாறு 1793-லிருந்து 1936-37 வரை உள்ள ஆண்டுகளில் நிலவரி சுமார் 7½ மடங்குகளுக்கும் அதிகமாக அதிகரித்துள்ளது. இப்போது ஜமீன்தார்களின் நிகர வருமானத்தைக் காண்போம். 1793இல் இது ரூ. 20/- இலட்சமாக இருந்தது. 1940இல் ரூ. 832/- இலட்சமாக உயர்ந்தது. அதாவது சுமார் **4160%** அதிகரித்து உள்ளது. அரசாங்கத்தின் (வங்காளத்தில்) நிலவரி வருமானத்தைவிட, இடைநிலையாளர்களின் நிகர வருமானம் ஐந்தரை மடங்குகளுக்கும் அதிகமாக உயர்ந்துள்ளது. சுமார் 150 ஆண்டுகளில் நிலக்கிழார்கள் சுமார் ரூ. 1800 கோடி நிகர வருமானத்தைப் பெற்றுள்ளனர் என்று இராதகமல் முகர்ஜி கூறியுள்ளார். உத்தரப் பிரதேசத்தில் 1793இல் அரசாங்கத்தின் நிலவரி 'வார'த்தில்

[21] P. A. Wadia, and K. T. Merchant - Our Economic Problem, Vora & Co, 1959, P. 288.

90% ஆக இருந்தது. இந்த விகிதம் 1946இல் 39% ஆகக் குறைந்தது. அதாவது வாரத்தில் பெரும் பகுதி இடைநிலை யாளர்களின் வருமானமாக மாறியுள்ளது. கூடுதலான வருமானத்தை இவர்கள் நிலத்தின் மேம்பாட்டிற்காகச் செலவிடவில்லை; இதனல் நிலத்தின் உற்பத்தித்திறனை அதிகரிக்க முடியவில்லை; விவசாயத்துறை தேக்கம் அடைந்தது.

ஜமீன்தாரி முறையினுல் விவசாயத்தின் உற்பத்தித்திறன் அதிகரிக்கவில்லை. நிலத்தின் மேம்பாட்டிற்கு முதலீடு செய்யவோ, புதிய முறைகளைப் பின்பற்றவோ, பாசன வசதிகளை விரிவுபடுத்தவோ, இதர வழிகளில் நிலத்தின் உற்பத்தித்திறனை அதிகரிக்கவோ நிலக்கிழார்கள் அக்கறை காட்டவில்லை. இவர்கள் சொந்தமாகச் சாகுபடி செய்ய விரும்பாமல் நிலத்தைக் குத்தகைக்கு விட்டார்கள். கிராமங்களில் வசிக்க விரும்பாமல் நகரங்களுக்குக் குடியேறினர். தலத்தில் இல்லாத நிலக்கிழாராக மாறினர். இவையாவும் விரும்பத்தகாத விளைவுகளை ஏற்படுத்தின.

### ஜாகிர்தாரி

'ஜமீன்தாரி'களைப்போன்ற மற்ருெரு வகையான இடைநிலையாளர்களை ஜாகிர்தார் என்று கூறுவார்கள். 'ஜாகிர்தாரி' முறை ஹைதராபாத், இராஜஸ்தான் ஆகிய பகுதிகளில் அதிகமாகக் காணப்பட்டது. ஜாகிர்தார்கள் பெரும்பாலும் மகமதிய மன்னர்களின் ஆட்சியில் நியமிக்கப்பட்டார்கள். 'ஜாகிர்தாரி' முறை கிட்டத்தட்ட படைமானிய முறையைப் போன்றது.

'ஜாகிர்தார்' என்பவர் நிலத்தின் உடைமையாளராக இல்லை. இவர் நிலத்தை நிருவகிப்பவர். மொகலாய ஆட்சியில் மாநில ஆட்சிப் பொறுப்பை ஏற்ற 'மன்சப்தார்கள்' பெரும்பாலும் 'ஜாகிர்தார்'களாக இருந்தார்கள். பேரரசருக்காக இவர்கள் படைதிரட்டி அதைப் பராமரித்து வந்தார்கள். படைகளின் பராமரிப்புச் செலவிற்காக 'ஜாகிர்' பகுதிகளிலிருந்து வசூலிக்கும் நிலவரியை இவர்கள் எடுத்துக்கொண்டார்கள்; அப்பகுதியின் ஆட்சிப் பொறுப்பையும் ஏற்ருர்கள்.

பெரும்பாலும் இராணுவத்திலும், நிருவாகத்திலும் சிறப்பாகப் பணியாற்றிய அரசவை உறுப்பினர்களுக்கும், பெருங்குடி மக்களுக்கும், மற்றும் தன்னிடம் விசுவாசமாகஇருந்தவர்களுக்கும் அரசர் 'ஜாகிர்' உரிமையை வழங்கினுர். இவர்கள் 'ஜாகிர்' பகுதியின் நிலவரியை வசூலிக்கவும், அதை நிருவகிக்கவும்உரிமை

உடையவர். இப்பகுதிகளில் நிலவரி மிகவும் அதிகமாக இருந்தது.

'ஜாகிர்தாரி' முறையில் நான்கு படி அமைப்புடைய நில உரிமைகளைக் காணலாம். முதலில் அரசரின் உரிமைகள். அரசர் ஜாகிர்தாருக்கு நில நிருவாக உரிமையை வழங்குகிறார். இரண்டாவது ஜாகிர்தாரின் உரிமைகள். இவர் நிலக்கிழாருக்கு நில உரிமையை வழங்கவும், நில வரியை வசூலிக்கவும் அதிகாரம் பெற்றுள்ளார். மூன்றாவதாக நிலக்கிழாரின் உரிமைகள். நிலக்கிழார்கள் நிலத்தைக் குத்தகைக்குவிடவும், குத்தகை வாரத்தை வசூலிக்கவும் உரிமை பெற்றுள்ளார். நான்காவதாக சாகுபடியாளர்களின் உரிமைகள். இவர்கள் குத்தகை அல்லது வாரத்தைத் தவறாமல் செலுத்துவதால் நிலத்தைச் சாகுபடி செய்யும் உரிமை உடையவர். நிலத்தை உட்குத்தகைக்கு விடுவார்களே யானால் சாகுபடியாளருக்கும், நிலக்கிழாருக்கும் இடையில் மேலும் பலர் தோன்றக்கூடும். குறைந்தபட்சம் 'ஜாகிர்தாரி' முறையில் நான்குபடி அமைப்புடைய நில உரிமைகளையும், இரு வகைச் செலுத்தல்களையும்–நிலவரி, குத்தகை–காணலாம்.

ஜாகிர்தார்கள் வரி வசூலிக்கும் அதிகாரத்தையும் நீதி, நிருவாகப் பொறுப்புகளையும் ஏற்றுக்கொண்டுள்ளார்கள். இவர்கள் தங்களுடைய சொந்த தாசில்தார்கள், முன்சீப்புகள் மற்றும் அலுவலர்களை நியமிப்பார்கள். பலர் சொந்த போலீஸ் படையை வைத்திருந்தார்கள். இன்னும் இராணுவத்தையும் வைத்திருந்தார்கள். சமூகப் பொதுப்பணிகள், சாலைகள், மருத்துவ வசதிகள், பள்ளிக்கூடங்கள் முதலியவற்றை நிருவகித்து வந்தார்கள். ஆனால், இவையாவும் பெயரளவுக்கே இருந்தன. ஜாகிர் பகுதியில் நிலவரி அதிகமாக இருந்தது. இங்குள்ள அதிகாரிகள், அலுவலர்கள் ஊழல் நிறைந்தவர்களாக இருந்தனர். ஜாகிர்தார்கள் பெரும்பாலும் ஆடம்பரச் செலவுகளில் ஈடுபட்டு இருந்தவர்கள். இவர்கள் தங்களுடைய வரி வசூலில் மிகச் சிறு பகுதியைத்தான் நிருவாகத்திற்காகச் செலவிட்டனர். பொதுவாக 'ஜாகிர்தாரி', 'ஜமீன்தாரி' ஆகிய இரு முறைகளிலும் நிலத்திலிருந்து கிடைக்கக்கூடிய உபரியான வருமானத்தை ஆடம்பரச் செலவுகளில் ஈடுபடுத்தக்கூடிய கூறுகள் உள்ளீடாக அமைந்துள்ளன. இதனால் சில நுண்கலைகளும், கைவினைத் தொழில்களும் வளர்ச்சி அடைந்தன. விவசாயம் புறக்கணிக்கப்பட்டது. விவசாயத்துறையில் போதிய முதலீடு செய்யப்படாத காரணத்தால் உற்பத்தித் திறன் குன்றியது. இவ்வாறு இடைநிலையாளர்களின் ஆதிக்கம்

பெருகிய பகுதிகளில் சேமிப்புக்களைத் திரட்டுவதற்கு வாய்ப்புகள் இருந்தபோதிலும், கிடைக்கக்கூடிய மூலதனத்தை ஆக்க வழிகளில் பயன்படுத்தாமல்,—உற்பத்தித்திறனை அதிகரிக்க உபயோகப்படுத்தாமல்,— ஆடம்பரமான செலவுகளில் அவை விரயம் செய்யப்படுவதை அறியலாம். சேமிப்பும் முதலீடும் குறைவாக இருப்பதால் மக்கள் ஏழ்மையில் உழலுகிறார்கள் என்ற வாதத்தை ஏற்க முடியவில்லை. கிடைக்கக்கூடிய சேமிப்புகளைச் சிறந்த முறையில் பயன்படுத்தாமல் போனதுதான் இன்றைய ஏழ்மைக்குக் காரணம் என்று அறியலாம்.

மகல்வாரி

'மகல்' என்ற சொல் 'எஸ்டேட்' அல்லது சொத்துகளைக் குறிக்கும். கிராமத்தில் உள்ள நிலம் முழுவதும் ஒரு எஸ்டேட் அல்லது பிரிவுபடாத சொத்தாக இருந்தால் ஒரு முழு கிராமத்தையும் இது குறிக்கும். 'மகல்வாரி' முறையில் நாம் புதியதொரு அடிப்படையில் நிலவரியை அணுகுகிறோம். சாகுபடியாளரிடம் அரசாங்கம் நேரிடையாகத் தொடர்பு கொண்டிருப்பதை 'இரயத்துவாரி' முறையும், சாகுபடியாளருக்கும் அரசாங்கத்திற்கும் இடையே மேல்உரிமை உடைய இடைநிலையாளர்களைக் குறிக்கும் வகையில் 'ஜமீன்தாரி' முறையையும் கண்டோம். சொத்துகளை மையமாகக்கொண்ட நிலவரி முறையை 'மகல்வாரி' முறை என்று கூறலாம். இந்த முறையில் சொத்துகள் ('எஸ்டேட்கள்') கூட்டு உடமையாக இருக்கின்றன. இங்கு தனி நபர்களின் உரிமையை மற்றவர்களின் உரிமையிலிருந்து வேறுபடுத்த முடியவில்லை. மகல்வாரிமுறை **ஆக்ரா, அயோத்தி, பஞ்சாப்** ஆகிய பகுதிகளில் காணப்பட்டன.

மகல்வாரி முறையின் தோற்றுவாய் பற்றிய சில விவரங்களைக் கூறுவோம். 1819இல் ஹோல்ட் மெக்கன்ஸி என்ற அலுவலர் வட இந்தியாவில் சில பகுதிகளில் கிராம சமுதாயங்கள் தொடர்ந்து நீடிப்பதாகக் கூறினர். புராதன சமூக அமைப்பான கிராம சமுதாயத்தை மீண்டும் உயிர்ப்பிக்க விரும்பினர். இதற்கு முன்னேற்பாடாக, ஆவணங்களை ஆராய்ந்து, நிலத்தைச் சர்வே செய்ய வேண்டும். நிலவரி குறித்துக் கிராம சமுதாயங்களுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளவேண்டும் என்று கூறினர். கிராமத்தில் உள்ள அனைவரும் நிலவரியைச் செலுத்துவதற்குப் பொறுப்பு ஏற்றுள்ளார்கள். இருந்தபோதிலும் கிராம சமுதாயத்தின் தலைவர் நிலவரியை வசூலிக்கவும், செலுத்தவும் சிறப்பான பொறுப்பு ஏற்டார். இவர்களை 'லம்பர்தார்' என்று கூறுவார்கள். 'லம்பர்தார்' என்றால் 'எண் உடையவர்' என்று பொருள்.

'கலெக்டருடைய' வரிப்பதிவு பேரேடுகளில் குறிக்கப்பட்ட எண் உடையவரை 'லம்பர்தார்' என்றனர். கிராம சமுதாயத்தை உயிர்ப்பிக்க எண்ணி ஏற்றுக்கொண்ட மகல்வாரி முறையில் கூட்டான சொத்துரிமையை அங்கீகரிக்காமல், தனி ஒருவருடைய மேலுரிமையை அரசாங்கம் (பிரிட்டிஷ் ஆட்சியில்) அங்கீகரித்தது. ஊன்றிய குழுநலன்கள் தோன்றுவதற்கு இது வழி வகுத்தது.

வில்லியம் பெண்டிங் காலத்தில் 1833இல் தொடங்கி, 1849இல் நிலத்தைச் சர்வே செய்யும் பணி முடிவுற்றது. இந்தப் பொறுப்பு தாம்ஸன் என்பவரிடம் ஒப்புவிக்கப்பட்டது. மகல்வாரி முறையில் நிலவரி சாசுவதமாக்கப்படவில்லை. நிகர உற்பத்தியில் 40%-லிருந்து 70% வரை வரியாக வசூலிக்கப்பட்டது. இடத்திற்கு இடம் நிலவரி விகிதங்கள் மாறின. நிலஉரிமைகளும் அவ்வாறே வேறுபட்டன. காட்டாக, ஆக்ரா பகுதிகளில் கிராமம் முழுவதும் நிலவரியைச் செலுத்தும் பொறுப்பை ஏற்றுள்ள போதிலும் தனி ஒருவர் விரும்பிக் கேட்பாரானால் தனிப்பட்ட முறையில் வரி செலுத்த அனுமதிக்கப்படுவார். பஞ்சாபில் நிலவிய மகல்வாரி முறை கிட்டத்தட்ட இரயத்துவாரி முறையைப் போல இருந்தது. இங்கு விவசாயிகள் தனித்தனியாக வரியைச் செலுத்தலாம். மத்திய மாகாணம் என்று அழைக்கப்பட்ட மத்தியப் பிரதேசத்தில் நிலவிய மகல்வாரி முறை இதனின்றும் ஓரளவு மாறுபட்டது. இந்த முறை ஆக்ராவில் உள்ளதைப்போன்று இருந்தாலும், மல்கூசார் (Malguzars) என்ற வரி வசூலிக்கும் விவசாயிகளின் உரிமையை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. 'மல்குசார்' என்பவர்கள் மராத்திய மன்னர்கள் ஆட்சியில் வரி வசூலிப்பதற்காக நியமிக்கப்பட்டார்கள். ஆங்கிலேயர் ஆட்சியில் மல்குசார்களைக் கிராமத்தின் தலைவர் என்று கருதி இவர்களுக்கு முழுமையான சொத்துரிமைகள் உண்டு என்று அங்கீகரித்தார்கள். மல்குசார்களின் மேல்உரிமையை ஏற்றதாலும், இவர்கள் இடைநிலையாளர்களாகச் செயல்பட்டதாலும் மத்தியப்பிரதேசத்தில் நிலவிய மகல்வாரி முறையை வங்காளத்தில் நிலவிய ஜமீன்தாரி முறையிலிருந்து வேறுபடுத்த முடியவில்லை. நிலத்தின் முழுமையான உரிமையை ஆங்கிலேய ஆட்சியின் பரிசாகப்பெற்ற மல்குசார்கள் தவறாமல் ஆண்டுதோறும் வரி வசூலித்துத்தருவார்கள் என்று நம்பினார்கள். இவர்களுக்கு அளிக்கப்பட்ட மேல்உரிமை ஓர் ஊக்க சக்தியாக செயல்படும் என்று கருதினார்கள். இங்கு நிகர உற்பத்தியில் 50% நிலவரியாக இருந்தது. நிலவரி விகிதங்கள் முப்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை நிர்ணயிக்கப்பட்டது.

நெடுங்காலமாக வந்துள்ள கிராம சமுதாய அமைப்பை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் மகல்வாரி நிலவரி முறை ஏற்படுத்தப்பட்டது. ஆனால், அதைச் செயல்படுத்திய விதம் காரணமாக இதன் நோக்கத்தை நிறைவேற்ற முடியவில்லை. கூட்டு உரிமையைப் பாதுகாப்பதற்குப் பதிலாகத் தனிநபர்கள் விரும்பிக் கேட்டால் சொத்துரிமையைப் பிரித்துக்கொள்ளவும், தனியாக வரிசெலுத்தவும் அனுமதிக்கப் பட்டார்கள். இதனுல் கூட்டு உரிமை அடிப்படையில் கிராம சமுதாயத்தை ஏற்படுத்த முடியவில்லை. மகல்வாரி முறைக்கு முற்றிலும் ஒவ்வாத வகையில் 'லம்பர்தார்' என்ற இடைநிலை யாளர்களை ஏற்படுத்திஞர்கள்; 'மல்டிசார்' என்ற மேலுரிமை யாளர்களை அங்கீகரித்தார்கள். இவையாவும் குழு நலன்களைத் தோற்றுவித்தன. இவ்வாறு மகல்வாரி முறையில் ஒருபகுதி இரயத்துவாரி முறையாகவும், மற்ருெருபகுதி ஜமீன்தாரி முறையாகவும் மாறியது. எனவே, நில உரிமைகளை வகைப்படுத்தும் நிபுணர்கள் மகல்வாரி முறையைத் தனிச் சிறப்புடைய நிலவரி முறையாக ஏற்றுக் கொள்ளுவதில்லை.

---

# 8. நிலச் சீர்திருத்தங்கள்

நிலம் கிடைப்பருமையான காரணியாக இருப்பதால் அதைச் சிறந்த முறையில் பயன்படுத்தவேண்டும். உணவும், கச்சாப் பொருள்களும் எப்போதும் கிடைப்பருமையான பொருள்களாக இருக்கின்றன. இவற்றின் உற்பத்தியை அதிகரிக்க நுட்ப ரீதியான முன்னேற்றங்கள் அவசியம். ஆனால், புதிய முயற்சிகளை மேற்கொள்ளுவதற்கு நில உரிமையும், கட்டமைப்பும் தடைகளாக இருக்கின்றன. விவசாயத்தை விட தொழில் மற்றும் வாணிபத்துறைகளில் புதுமை புகுத்தல் எளிதாக இருக்கும். பழைய தொழில் முயல்வோரையும், அவர்களிடம் உள்ள உற்பத்தி நிறுவனங்களையும் அகற்றாமல் புதிய நிறுவனங்களை ஏற்படுத்தலாம்: புதிய நுட்ப முறையைப் புகுத்தலாம்; புதுமை புகுத்தல் வெற்றி அடைந்தால் பழைய தொழில் நிறுவனங்களும், தொழில் முயல்வோரும் கட்டாயமாகப் புதிய முறைகளைப் பின்பற்றவேண்டியிருக்கும்; அல்லது அவர்கள் தங்கள் தொழில் முயற்சியில் இழப்பை அடைவார்கள். சொத்துரிமைகளும், நிறுவனக் கட்டமைப்பும் தொழில் துறையில் புதுமைப் புகுத்தலுக்கு இடையூறாக இல்லை. ஆனால், விவசாயத்தின் நிலை அவ்வாறு இல்லை. இங்கு ஒருவருக்கு நில உரிமை அல்லது சாகுபடி உரிமை கொடுக்கப்படவில்லையானால் அவர் புதிய கருத்துகள், நுண்முறைகள் முதலியவற்றை அறிந்திருந்த போதிலும் நடைமுறையில் அவற்றைச் செயல்படுத்த முடிவதில்லை. விவசாயத்தில் புதுமைகளைப் புகுத்த வேண்டுமானால்[1] அதற்கு முன்னோடியாக நில உரிமைகள், சாகுபடி உரிமைகள் முதலியவற்றைச் சீர்படுத்தவேண்டும்.

[1] W. W. Rostow (Ed.), The Economics of Take off into Sustained Growth, Macmillan, 1965, P. 206.

நிலச் சீர்திருத்தங்களின் நோக்கம் இதுதான். நிலம் உடையவர்கள் அனைவரும் விவசாயத்தைத்தங்கள் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டிருக்கவேண்டும். விவசாயத்தைத் தவிர வேறு துறைகளில் (அவர்கள்) ஈடுபட்டு இருந்தால் விவசாயம் ஒரு துணைத் தொழிலாக இருக்குமேயல்லாமல் முக்கியத் தொழிலாக இருப்பதில்லை. விவசாயத்தை முக்கியத் தொழிலாகக் கொண்டவர்கள் நிலத்தின் உற்பத்தித் திறனை அதிகரிக்கும் முயற்சிகளில் அக்கறை உடையவர்களாக இருப்பர். இவர்கள் சொந்தமாகச் சாகுபடி செய்யலாம் அல்லது விவசாயக் கூலிகளைக்கொண்டு பண்ணை முறையில் சாகுபடி செய்யலாம். விவசாயத்தில் நேரிடையாக ஈடுபடாதவர்களும், அதை முக்கியத் தொழிலாகக் கொள்ளாதவர்களும், நிலம் இருக்கும் ஊரில் குடியிருக்காதவர்களும் விவசாயத்தின் முன்னேற்றத்தைத் தடுக்கும் உள்ளீடான சக்தியாகச் செயல்படுகிறார்கள். இவர்களைப் பொதுவாக இடைநிலையாளர்கள் என்பர். இடைநிலையாளர்களின் நீக்கம் நிலச் சீர்திருத்தத்தின் முதல் நோக்கமாகும். சாகுபடியாளர்கள் அனைவரும் நிலத்தின் உடைமையாளராக இருக்கும் உன்னத நிலை அடைய முடியாத ஒரு குறிக்கோளாகவே உள்ளது. சாகுபடியாளர் விவசாயக் கூலிகளிலிருந்து மேலானவர். தங்கள் உழைப்பை மட்டும் நல்கிக் கூலியை மட்டும் பெறுவார்கள் விவசாயக் கூலிகள். உழைப்பைத் தவிர தங்கள் மூலதனத்தை ஈடுபடுத்தியிருப்பதாலும், சாகுபடியின் நிறுவாகப் பொறுப்பை ஏற்பதாலும், விளைச்சலில் தோன்றும் ஏற்ற இறக்கங்களால் இவர்களது வருமானம் பாதிக்கப்படுவதாலும் சாகுபடியாளர்கள் மொத்த உற்பத்தியில் ஒரு நிலையற்ற பகுதியை வருமானமாகப் பெறுகிறார்கள். இவர்கள் குத்தகை அல்லது வாரத்திற்குச் சாகுபடி செய்யலாம். எனவே, விவசாயத் துறையில் தொழில் முயல்வோராகச் சாகுபடியாளர்கள் செயல்படுகிறார்கள்.

சாகுபடி உரிமையை நில உடைமையிலிருந்து வேறுபடுத்துவதால் விவசாயத்தின் முன்னேற்றம் பாதிக்கப்படும் என்றோ, சுரண்டல் தன்மை உடைய வாரம் வசூலிக்கப்படும் என்றோ கூறுவதற்கு இயலவில்லை. 'மிராசு' உரிமையை அடிப்படையாகக்கொண்ட கிராம சமுதாய அமைப்பில் சாகுபடியாளர்கள் இருந்துள்ளார்கள். ஆனால், அக் காலத்தில் சுரண்டல் தன்மை உடைய வாரம் அல்லது குத்தகை வசூலிக்கப்படவில்லை. சாகுபடியாளர்களில் உள்ளூர்ச் சாகுபடியாளர்களுக்குச் சலுகையும் பாதுகாப்பும் கொடுக்கப்பட்டுள்ளன. இதற்குக் கிராம சமுதாய அமைப்பே பொறுப்பு ஏற்றது. கிராம சமுதாய அமைப்பின் அழிவிற்குப் பின்னர் சாகுபடியாளர்களின் உரிமைகள் பாது

காக்கப்படவில்லை. நிலத்தைச் சாகுபடி செய்யப் போட்டி ஏற்பட்டதாலும், இதர தொழில்கள் நலிவுற்றமையாலும் சுரண்டல் வாரம், உட்குத்தகை, சாகுபடியாளரை வெளியேற்றுதல் முதலியன ஏற்பட்டன. சாகுபடியாளர்களின் நலன்களைப் பாதுகாப்பதும், சாகுபடிஉரிமையைநிரந்தரமாக்குவதும், அவர்கள் செலுத்தும் வாரம் அல்லது குத்தகையை நிர்ணயிப்பதும், இயன்றவரை அவர்களை நில உடைமையாளர்களாக மாற்றுவதும் நிலச் சீர்திருத்தங்களின் இரண்டாவது முக்கிய நோக்கம் ஆகும்.

'சாகுபடியாளர்கள் அனைவரும் நிலத்தின் உடைமையாளராக இருக்கும் உன்னத நிலையை' ஏன் ஏற்படுத்த முடியவில்லை என்று காண்போம். மேலை நாடுகளில் உள்ளதைப் போல நில உடைமையாளர்கள் என்று ஒரு பிரிவும், நிலமற்றவர்கள் என்ற மற்றொரு பிரிவும் தனித்தனியே பாரதத்தில் காண முடியவில்லை. நிலத்தைக் குத்தகை சாகுபடிக்கு விடுபவர்கள் அனைவரும் தலத்தில் இல்லாத நிலக்கிழார்களாக இல்லை; நிலத்தைச் சாகுபடி செய்பவர்கள் அனைவரும் நில உடைமையற்றவர்களாகவும் இல்லை. மிகச் சிறு அளவில் நிலம் உடையவர்கள் தங்கள் நிலம் முழுவதும் ஒரு இடத்தில் இணைந்து இல்லாமையால் ஒரு பகுதியைச் சொந்தமாகச் சாகுபடி செய்கிறார்கள். தூரத்தில் உள்ள மற்றொரு பகுதியைக் குத்தகை சாகுபடிக்கு விடுகிறார்கள். இவர்களது சொந்த நிலம் பொருளாதார சாகுபடி உடைமையைவிடக் குறைவாக இருப்பதால் இதை அடுத்துள்ள பிறர் நிலத்தைக் குத்தகைக்குச் சாகுபடி செய்கிறார்கள். இவ்வாறு ஒருபுறம் சொந்த சாகுபடியாளராகவும், ஒருபுறம் தலத்தில் இல்லாத நிலக்கிழாராகவும், மற்றொருபுறம் குத்தகை சாகுபடியாளராகவும் ஒருவர் செயல்படுகிறார்.[2] நிலம் சிறு சிறு துண்டுகளாக இருப்பதாலும், அவை சிதறுண்டு இருப்பதாலும் நில உடைமையாளர்கள் அனைவரும் சொந்த சாகுபடியாளராக இருக்க முடியவில்லை; அதைப் போலவே சாகுபடியாளர் அனைவரையும் நில உடைமையாளராகச் செய்ய முடியவில்லை. இதைத் தவிர தன் முயற்சியால் வருமானம் ஈட்ட முடியாதவர்கள் பலர் நிலத்தைக் குத்தகை அல்லது வாரச் சாகுபடிக்கு விடுகிறார்கள். ஓய்வு பெற்ற அலுவலர்கள், இராணுவத்தில் சேவை செய்பவர்கள், கைம்பெண்கள், சிறு

[2] V. S Vyas-Land Reforms in India, Review of a Decade, printed in 'A Decade of Economic Development & Planning', (Ed) by M. R. Sinha (1962)

வர்கள், உடல் ஈனம் உடையவர்கள் முதலியோர் வேறு வழி இல்லாமையால் குத்தகைக்கு விடுகிறார்கள். எனவே, சாகுபடியாளர்கள் அனைவரையும் நில உடைமையாளர்களாக்க முடியவில்லை. இந்தச் சூழ்நிலையில் சாகுபடியாளர்களின் நலன்களையும், உரிமைகளையும் பாதுகாக்கவேண்டியது அவசியம். இந்த நோக்கத்தோடு அவ்வப்போது மாநில அரசுகள் சட்டங்கள் இயற்றி வருகின்றன.

விவசாயத்தில் அடிப்படையான கட்டமைப்பு மாற்றங்களைத் திட்டமிட்டு ஏற்படுத்துவதைத்தான் நிலச் சீர்திருத்தம் என்ற சொல் குறிப்பிடுகிறது. இந்தச் சீர்திருத்தங்களை மூவகைப் படுத்தலாம். ஒன்று நில உரிமைகளை அடிப்படையாகக் கொண்டது. நிலத்தில் மேலுரிமை உடைய ஜமின்தார், ஜாகீர்தார் போன்ற இடைநிலையாளர்களை அகற்றுதல். இரண்டாவதாக, சாகுபடியாளர்களின் நலன்களையும், உரிமைகளையும் பாதுகாக்கும் சீர்திருத்தங்கள். மூன்றுவதாக நில உடைமைகளை மையமாகக் கொண்ட சீர்திருத்தங்கள். இதை மேலும் சில பிரிவுகளாகப் பிரிக்கலாம்: (அ) நில உச்சவரம்பு; (ஆ) நில இணைப்பு.

### இடைநிலையாளர்களின் நீக்கம்

சாகுபடியாளர்களுக்கும் அரசாங்கத்திற்கும் நேரிடையான தொடர்பை ஏற்படுத்துவதற்காக இடைநிலையாளர்களை நீக்க வேண்டியது அவசியம். இவர்கள் ஜமீன்தார்கள், ஜாகீர்தார்கள் என இருவகைப்படுவர். மொகலாய ஆட்சியில் வரி வசூலிக்கும் பணியில் ஈடுபட்ட விவசாயிகள் கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சியில் முழுமையான நில உரிமை உடைய ஜமீன்தார்களாக மாறினார்கள். இவர்கள் வசூலிக்கும் தொகையில் ஒரு பகுதியை மட்டும் அரசாங்கத்திற்கு வரியாகச் செலுத்தினார்கள். எஞ்சிய பகுதியைத் தங்கள் வருமானமாக வைத்துக் கொண்டார்கள். இரண்டாவதாக ஜாகீர்தார்கள். இவர்கள் படைமானிய தத்துவத்தின் அடிப்படையில் தோற்றுவிக்கப் பட்டார்கள். இவர்களுக்கு நிருவாகப் பொறுப்புகள் உண்டு. பொதுவாக ஜமீன்தாரி முறையில் அமைந்துள்ள நிலப்பகுதிகளிலிருந்து கிடைக்கும் உபரியான வருவாய் ஆடம்பரச் செலவுகளுக்குப் பயன்பட்டன. இவர்கள் உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கும், சமூகத்தில் செல்வாக்கான நிலைமையை வெளிப்படுத்திக்கொள்ளவும் பகட்டான செலவுகளை மேற்கொண்டார்கள். இவர்கள் விவசாயத்திலிருந்து பெற்றுக்கொள்ளும் உபரியான வருமானம் நிலத்தைத் திருத்தவோ, நிலத்தின் உற்பத்தித் திறனை அதிகரிக்கவோ முதலீடுகளாக மாற்றப்பட

வில்லை. விவசாயத்திலிருந்து உறிஞ்சப்பட்ட நிகர வருமானம் திரும்பவும் அதன் மேம்பாட்டிற்காகச் செலவிடப்படவில்லை.

விவசாயத்திலிருந்து கிடைக்கும் உபரியான வருமானம் பின் தங்கிய நாட்டின் பொதுவான சேமிப்பிற்கும், மூலதன ஆக்கத் திற்கும் அடிப்படையாக இருக்கும். மேற்படி உபரி விரயமாக்கப் படுமானல் பொதுவான முதலீடும், உற்பத்தி வேகமாகவும் தேய்ந்துபோகும். கிழக்கு இந்தியக் கம்பெனி ஆட்சி முழுவதிலும் சுரண்டல்தன்மை உடைய நிலவரி விகிதங்கள் விவசாயத் துறையின் சேமிப்பை விரயமாக்கின. பிரிட்டிஷ் முடியாட்சி ஏற்பட்டதும் நில உரிமை அடிப்படையில் சுரண்டல் தன்மை உடைய குத்தகையும் 'வாரமும்' விவசாயத்தின் வளர்ச்சியை மேலும் கட்டுப்படுத்தின.

எனவே, நிலச் சீர்திருத்தத்தின் முதல் பகுதியாக இடை நிலையாளர்களான ஜமீன்தார், ஜாகிர்தார் ஆகியோரின் நீக்கம் அமைந்தது. இந்தியா விடுதலை அடையும் முன்னரே தேசிய வாதிகளின் கவனத்தை இப்பிரச்சினை ஈர்த்துள்ளது. எனவே, தேசியக் காங்கிரஸ் கட்சியின் பொருளாதாரக் குறிக்கோள்களில் முதன்மையானதாக இடைநிலையாளர்களின் நீக்கம் இடம் பெற்றது. விடுதலைக்குப்பின்னர் ஜமீன்தாரி ஒழிப்பு ஒரு தீவிர இயக்கமாக இருந்தது. 1950-லிருந்து 1960 வரை பெரும் பாலான மாநிலங்களில் ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டங்கள் இயற்றப் பட்டன. உத்தரப்பிரதேசத்தில் பண்டித கோவிந்த வல்லபந்த் அவர்கள் தலைமையில் ஜமீன்தாரி நீக்கக்குழு நியமிக்கப்பட்டது. இடைநிலையாளர்களின் நீக்கத்திற்கான முதல் முயற்சியாக இதைக் கருதலாம். இதர மாநிலங்களிலும் இதைப்போன்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. விடுதலை இயக்கத்தின் ஒரு கூறாக மக்கள் இதைக் கருதியதால் ஜனநாயக பாரதத்தின் புரட்சிகரமான முதல் சாதனையாக ஜமீன்தாரி ஒழிப்பு இருந்தது.

இடைநிலையாளரின் நீக்கத்தால் சாகுபடியாளர்களுக்கும், அரசாங்கத்திற்கும் நேரடியான தொடர்பு ஏற்பட்டது. ஜமீன்தார் களும், ஜாகிர்தார்களும் சொந்தமாகச் சாகுபடி செய்த நிலம் நீங்கலாக எஞ்சியுள்ள நிலப்பகுதிகளில் சாகுபடியாளர்கள் நிலத்தின் உடைமையாளர் ஆகலாம். இவர்கள் நில உடை மையைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு (நிலத்தின் கிரயத்தை) குறித்த தொகையைச் செலுத்தவேண்டும்.

ஜமீன்தாரி உரிமையும், ஜாகிர்தாரி உரிமையும் அகற்றப் பட்டதால் இவர்களுக்கு அரசாங்கம் இழப்பீடு வழங்கியது.

இழப்பு ஈட்டு விகிதங்கள், மாநிலத்திற்கு மாநிலம் வேறுபட்டன. இடைநிலையாளர்களின் நிகர வருமானத்தின் அடிப்படையில் இது நிர்ணயிக்கப்படும். காட்டாக பீகார் மாநிலத்தில் ஒரு இலட்சம் ரூபாய் அல்லது அதைவிட அதிகமாக நிகர வருமானத்தைப் பெறும் இடைநிலையாளருக்கு அதைப்போல மூன்று மடங்கு இழப்புஈடு கொடுக்கப்பட்டது. அதேசமயம் ஆண்டு நிகர வருமானம் ரூ. 500/- ஆக இருந்தால் அதைப் போல இருபது மடங்கு இழப்புஈடு தரப்பட்டது.[3] நிகர வருமானம் உயர உயர இழப்பீட்டுத் தொகையை நிர்ணயிக்கும் பெருக்க எண் குறையும்; நிகர வருமானம் குறையக்குறைய மேற்படி பெருக்க எண் உயரும். சில மாநிலங்களில் நிகர வருமானத்தைப்போல 30 மடங்குவரை இழப்பீட்டுத்தொகை கொடுக்கப்பட்டது.

இழப்பு ஈட்டுத் தொகை சுமார் ரூ. 400/- கோடியாக மதிப்பிடப்பட்டது. ஆனால், முழுத்தொகையும் ரொக்கமாகக் கொடுக்கவில்லை. இதில் சிறு பகுதி மட்டுமே பணமாகக் கொடுக்கப்பட்து; பெரும்பகுதி அரசுக் கடன்பத்திரங்களாகக் கொடுக்கப்பட்டன. வட்டி விகிதம் 3%-திற்கு உள்பட்டதாக இருந்தபோதிலும் இதற்கான வட்டித்தொகை ரூ. 150/- கோடியாக இருக்கும். இதைத்தவிர வெளியேற்றப்பட்ட சிறு நிலக்கிழார்களின் மறுவாழ்விற்காக மானியமாகக் கொடுக்கப் பட்ட தொகை ரூ. 100/- கோடியாகும். இவ்வாறு இடைநிலை யாளர்களின் நீக்கத்தால் தோன்றிய அரசாங்கத்தின் பொறுப்பு கள் ரூ. 650/- கோடியாக இருக்கும். மேற்படி பொறுப்புகள் அரசாங்கத்திற்கு ஒரு சுமையாக இருக்கும் என்று கூறுவதற் கில்லை. இந்தச் சீர்திருத்தத்தின் விளைவாக மாநில அரசாங்கங் களின் நிலவரி வருமானம் ஆண்டுதோறும் ரூ. **36.6** கோடி அதிகரித்துள்ளது.[4] அதேசமயம் அரசாங்கத்தின் நிருவாகச் செலவும் ஓரளவு அதிகரித்து இருக்கும்.

நீண்டகால ரீதியில் கருதுவோமானுல் இடைநிலையாளர் களுக்குக் கொடுக்கப்பட்ட இழப்புஈட்டுத்தொகையை அரசாங்கம் சாகுபடியாளர்களிடமிருந்து வசூலித்துவிடும். மேற்படி

[3] H. G. Lakhavi - Problems of Economic Development of India, Third Edition, - Published by New Literature Publishing Coy. Bombay. - pp. 124-125. 3rd Edition, 1968.

[4] V. S. Vyas Land Reforms in India - Review of a Decade Printed A Decade of Economic Development and Planning, (Ed.) by, M. R. Sinha, (1962) pp. 145.

தொகையைச் செலுத்தியதும் இவர்கள் நில உடைமையாளர்களாக ஏற்றுக்கொள்ளப் படுவார்கள். நிலக்கிரயத்தைச் சாகுபடியாளர்கள் செலுத்தும்வரை, இதற்கு முன்பு ஜமீன்தார்களுக்குச் செலுத்திய குத்தகையை அரசாங்கத்திற்குச் செலுத்துவார்கள். நிலவரியைவிட குத்தகை அதிகமாக இருப்பதால், அரசாங்கத்திற்குக் கூடுதலான வருமானம் கிடைக்கும். இதைக்கொண்டு இழப்பு ஈட்டுத் தொகையைச் செலுத்துவது எளிதாக இருக்கும்.

இடைநிலையாளர்களைச் சமூகத்தின் புல்லுருவிகள் என்று கூறுவது உண்மையாக இருந்தால் இவர்களின் நீக்கத்திற்கு அரசாங்கம் ஏன் இழப்புஈட்டை அளிக்கவேண்டும் என்று பலரும் நினைக்கக்கூடும். பாரதத்தின் அரசியல் சட்டத்தில் சொத்துரிமை ஒரு அடிப்படையான உரிமையாகக் கருதப்படுகிறது. எனவே, ஜமீன்தாரி ஒழிப்பு சட்டங்கள் இயற்றப்பட்டவுடன் இவர்கள் 'சுப்ரீம் கோர்ட்டில்' வழக்குத் தொடர்ந்தார்கள். இழப்புஈடு முழுமையாகக் கொடுக்கவேண்டியிருந்தது. இழப்பு ஈட்டுச் சுமையைக் குறைப்பதற்காக அரசியல் சட்டத்தின் 31 பிரிவு திருத்தப்பட்டது. திருத்தப்பட்ட அரசியல் சட்டம் செல்லாது என வழக்காடித் தோல்வி அடைந்தார்கள். இடைநிலையாளர்களின் மேலுரிமை சொத்துரிமையாகக் கருதப்படுவதால் இவர்களுக்கு இழப்புஈடு கொடுக்கவேண்டியிருந்தது.

இடைநிலையாளர்களின் நீக்கம் விவசாயத்துறையின் முன்னேற்றத்திற்கு அவசியமான முதல் முயற்சியாக இருந்ததேயல்லாமல், முன்னேற்றத்தைக் கட்டாயமாகத் தோற்றுவிக்கும் சக்தியாக இல்லை. இடைநிலையாளர்களின் நீக்கம் பொதுவாக வெற்றிகரமாக இருந்தது. ஆனால், ஜமீன்தார்களின் சொந்த சாகுபடி நிலம் சரிவரப் பரிசீலனை செய்யப்படவில்லை. இதை 'குத்கஷ்' (Khud kasht), 'ஸர்' (Sir), கார்கட் (Gharkhed), காஸ் (Khas) என்ற பல பெயர்களில் அழைத்தார்கள். இடைநிலையாளர்களை நீக்கும்போது மேற்படி நிலங்களைச் சொந்தமாக வைத்துக்கொள்ளுவதற்கு அனுமதிக்கப்பட்டார்கள். இந்த நிலத்தைக் குத்தகைக்கு விட்டார்களா அல்லது சொந்தமாகப் பண்ணையம் செய்தார்களா என்பதைத் தீர்க்கமாக விசாரிக்கவில்லை. சொந்தச் சாகுபடிக்கு எவ்வளவு நிலம் வைத்துக் கொள்ளலாம் என்று பெரும்பாலான மாநிலங்கள் திட்டவட்டமாகக் கூறவில்லை. அஸ்ஸாம், மேற்கு வங்காளம், இமாசலப் பிரதேசம், காஷ்மீர் முதலிய மாநிலங்களில் மட்டுமே சொந்தச் சாகுபடிக்காக வைத்துக் கொள்ளக்கூடிய நிலத்திற்கு உச்ச வரம்பு நிர்ணயிக்கப்பட்டது. இராஜஸ்தானத்தில் இது 500

ஏக்கராக இருந்தது.[5] இதைத் தவிர 'சொந்த சாகுபடி' என்ற சொல்லிற்கு விரிவான பொருள் கூறப்பட்டது. நிலத்தை உழுபவர்களைத் தவிர, அதை மேற்பார்வை செய்தவர்களும், உறவினர் மூலமாக மேற்பார்வை செய்தவர்களும், சாகுபடிக்கு மூலதனம் கொடுத்தவர்களும் சொந்தச் சாகுபடியாளர்களாகக் கருதப்பட்டனர். வேளாண்மையுடன் நேரடியாகவோ, மறைமுகமாகவோ தொடர்புகொண்டவர்கள் அனைவரும் சாகுபடியாளராகக் கருதப்பட்டனர். இந்த விரிவான சொல் விளக்கத்தைப் பயன்படுத்திக்கொண்டு பெரும்பாலான இடைநிலையாளர்கள் ஆதாயம் அடைந்தார்கள். ஜமீன்தாரி ஒழிப்பு அமுலாக்கப்பட்ட காலத்தில் நில உச்சவரம்பு ஏதும் கொண்டு வரவில்லை என்பதைக் குறிப்பிட வேண்டும்.

நெடுங்காலமாக இடைநிலையாளர்களாக இருந்தவர்கள் தங்களைச் சொந்த சாகுபடியாளர் என்று நிரூபிக்க விரும்பினார்கள். 'குத்கஷ்' நிலம் வார சாகுபடிக்கோ, குத்தகைச் சாகுபடிக்கோ விடவில்லை என்று நிரூபிப்பதற்காக இதுவரை சாகுபடி செய்தவர்களை வெளியேற்றினர். ஜமீன்தாரி ஒழிப்பின் விளைவாகச் சாகுபடியாளர் வெளியேற்றம் ஏற்பட்டது. நிலச் சீர்திருத்தத்தின் ஒரு களங்கமாக இதைக் கருத வேண்டும். அதேசமயம் இத்துடன் மற்றொரு விரும்பத் தகுந்த விளைவும் ஏற்பட்டது. இதுவரை தலத்தில் இல்லாத நிலக்கிழாராக இருந்த இடைநிலையாளர்கள் சொந்தச் சாகுபடி செய்யும் 'பூமிதாரி'களாக மாறினர்கள்.

தங்களைப் 'பூமிதாரி'களாக அழைக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு நிலத்தை நிருவகிக்கத் தொடங்கினர். இவர்கள் ஓரளவிற்கு வசதி உடையவர்கள். எனவே, நிலத்தில் முதலீடு செய்யலாயினர். இதன் விளைவாக முதலாளித்துவ சாகுபடி முறை ஏற்பட்டது. நவீன சாகுபடி முறைகளையும், கருவிகளையும் விவசாயத்தில் ஈடுபடுத்தினர்கள். இதனால் நிலத்தின் உற்பத்தியும், உற்பத்தித் திறனும் அதிகரித்துள்ளன. இவ்வாறு இடைநிலையாளர்களின் நீக்கம் ஓரளவிற்கு விரும்பத்தக்க விளைவுகளையும் ஓரளவு அருவருக்கத்தக்க விளைவுகளையும் தோற்றுவித்துள்ளன.

### சாகுபடி சீர்திருத்தங்கள்

நிலச் சீர்திருத்தங்களின் முக்கிய நோக்கம் கூடுமானவரை நிலமற்ற சாகுபடியாளர்களையும், சாகுபடி செய்யாத நிலக்கிழார்

[5] S. V. Vyas, முன்கூறியபடி. பக். 145

களையும் (விவசாயத்திலிருந்து) அகற்றுவதாகும். இதற்கு இடைநிலையாளர்களின் நீக்கம் ஒரு முன் முயற்சியே தவிர முழுமையான முயற்சியில்லை. சில தவிர்க்க முடியாத காரணங்களினால் சாகுபடி செய்யாத நிலக்கிழார்களை முற்றிலும் அகற்ற இயலவில்லை. (காட்டாக இராணுவத்தில் பணியாற்றுபவர்கள், கைம்பெண் முதலியோர்).

நிலச் சீர்திருத்தங்களின் இரண்டாவது முக்கிய நோக்கம் சாகுபடியாளர்கள் அனைவரையும் நிலக்கிழாராகச்செய்தல். இது இயலாதபோது, தற்சமயம் சாகுபடியாளர்களாக உள்ளவர்களின் உரிமைகளைப் பாதுகாப்பது முக்கியமாகும். இதற்காகப் பல சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. இதை இருவகைப்படுத்தலாம். விடுதலைக்கு முன்னர் பிரிட்டிஷ் ஆட்சியின்போது கொண்டுவந்த சீர்திருத்தங்கள் ; அடுத்து விடுதலைக்குப்பின்னர் கொண்டுவந்தவை.

பிரிட்டிஷ் முடியாட்சியின் துவக்கத்திலிருந்து ஜமீன்தாரி பகுதிகளில் சாகுபடியாளர்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் சட்டங்கள் இயற்றப்பட்டன. 1859இல் இத்தகைய சட்டம் முதன்முதலில் கொண்டு வரப்பட்டது. நிரந்தர சாகுபடியாளர்களை ஏற்படுத்தவும், அவர்கள் செலுத்தும் வாரத்தை நிலைபெறச் செய்யவும் கருதினார்கள். இருபது ஆண்டுகளாகத் தொடர்ந்து சாகுபடியாளர்கள் செலுத்திய வாரம் நிரந்தரமாக்கப்பட்டது. குறைந்தது பன்னிரண்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து சாகுபடி செய்பவர்கள் நிரந்தர சாகுபடியாளர்கள் என்று அறிவிக்கப்பட்டார்கள். ஜமீன்தார்கள் தங்களால் இயன்றவரை இந்தச் சட்டத்தைப் புறக்கணிக்க முயன்றார்கள். சாகுபடியாளர்கள் நிரந்தரமாகச்சாகுபடி செய்யவில்லை என்பதை நிரூபிக்கவேண்டி அவர்களை வெளியேற்றினார்கள்.[6] 1859ஆம் ஆண்டுச்சட்டம் ஏட்டளவில் இருந்ததே தவிர, நடைமுறையில் அதன் நோக்கம் நிறைவேற்றப்படவில்லை. சாகுபடியாளர்கள் தாங்கள் தொடர்ந்து 12 ஆண்டுகள் சாகுபடி செய்திருப்பதைச் சட்டரீதியாக நிரூபிக்க முடியவில்லை என்றால், அவர்கள் வெளியேற்றப்படலாம், அல்லது அதிக வாரத்தைச் செலுத்துமாறு கட்டாயப்படுத்தப்படலாம். 1859-க்குப் பிறகு சாகுபடியாளர்களின் நிலைமை மோசமடைந்தது என்பதை நிரூபிக்கும் வகையில் ஜமீன்தாரி பகுதிகளில் விவசாயிகளின் கிளர்ச்சி ஏற்பட்டது. எனவே, 1885இல் சாகுபடி உரிமைச் சட்டம் இயற்றப்பட்டது.

[6] J. J. Anjaria & M. B. Nanavathi, ibid, P. 196.

கூடுமானவரை நிரந்தர சாகுபடி உரிமையை விரிவுபடுத்துவது இதன் முக்கிய நோக்கம் ஆகும். இருந்தபோதிலும் இக்காலத்தில் தானிய விலை உயர்ந்ததால் 1885-லிருந்து 1928 வரை வாரமும் தொடர்ந்து உயர்த்தப்பட்டது. 1928இல் நிரந்தர சாகுபடி உரிமைப் பரிவர்த்தனை செய்யக்கூடிய சொத்துரிமையாக ஏற்கப்பட்டது. உரிமை மாற்ற சட்டத்திற்கு உட்பட்ட வகையில் இது அமைந்திருக்க வேண்டும். விடுதலைக்கு முன்னர் சுமார் நூறாண்டுகளாகக் கொண்டுவந்த சட்டங்கள் பிரச்சினையை முழுவதுமாகத் தீர்க்கவில்லை. சாகுபடியாளர்களின் நிலைமையில் எவ்வித மாறுபாடும் ஏற்படவில்லை என்பதை 1940இல் ஃபள(வ்)ட் ஆணைக்குழு (Floud Commission) குறிப்பிட்டுள்ளது. சாகுபடி சீர்திருத்தங்களின் நோக்கம் சாகுபடியாளர்கள் அனைவரையும் நில உடைமையாளர்களாக ஆக்கவேண்டும் என்பதுதான். ஆனால், பெரும்பாலானவர்கள் சாகுபடி உரிமை கூட இல்லாதவர்கள். இவர்கள் நிலத்தை உட்குத்தகைக்குச் சாகுபடி செய்தார்கள். இவர்கள் செலுத்தும் குத்தகை அல்லது வாரத்தை நிலைபெறச் செய்ய முடியவில்லை. இவர்களின் சாகுபடி உரிமையும் பாதுகாக்கப்படவில்லை. இவ்வாறு சட்ட ரீதியாகப் பாதுகாக்கப்பட்டவர்கள் சிறுபான்மையினராகவும், சட்டத்தின் பாதுகாப்பிற்கு உட்படாதவர்கள் பெரும்பான்மையினராகவும் இருந்தார்கள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்து சாகுபடிச் சட்டங்கள் இயற்றப்பட்டன என்றாலும் நிலக்கிழாரின் அதிகாரங்களையும், உரிமைகளையும் கட்டுப்படுத்த முடியவில்லை. இதனால் உட்குத்தகையும், வாரமும் ஆண்டிற்கு ஆண்டு அதிகரிக்கப்பட்டன. 1921-லிருந்து 1931-க்குள் வாரச் சாகுபடியாளர்கள் 62% அதிகரித்தனர்.[7] நிரந்தர சாகுபடியாளர்களின் எண்ணிக்கை குறைந்தது. நிலத்தில் எவ்வித உரிமையும் இல்லாத விவசாயத் தொழிலாளர்களின் எண்ணிக்கை வெகுவாக உயர்ந்தது. இந்த ஆண்டுகளில் இவர்கள் 49% அதிகரித்தனர். விவசாயத்தில் ஈடுபட்டவர்களில் விவசாயத் தொழிலாளர்கள் 29% ஆக இருந்தனர்.

சாகுபடியாளர்களின் உரிமைகளை நிரந்தரமாக்கும் சட்டங்கள் பம்பாய் (தற்சமயம் மகாராஷ்டிரம், குஜராத்), பஞ்சாப், இமாசல பிரதேசம், மத்தியப்பிரதேசம் முதலிய மாநிலங்களில் கொண்டு வரப்பட்டன. குத்தகைச் சாகுபடியாளர்கள் தவறாது குத்தகை செலுத்தும் வரை அவர்களை வெளியேற்றக்கூடாது என்று நிர்ணயிக்கும் சட்டங்கள் பஞ்சாப், ஹைதராபாத்,

[7] J. J. Anjaria & M. B. Nanavathi, ibid, P. 197.

இராஜஸ்தான் ஆகிய மா நிலங்களில் இயற்றப்பட்டன. சுரண்டல் தன்மைஉடைய வாரங்களிலிருந்து விவசாயிகளுக்குப்பாதுகாப்பு அளிப்பது இதன் நோக்கமாகும். சாகுபடியாளர்கள் நிலத்தின் உடைமையாளர்களாக ஆவதற்கு வழி செய்யும் சட்டங்கள் பம்பாய் (மகாராஷ்டிரம், குஜராத்), பஞ்சாப், டெல்லி, இராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், ஹைதராபாத் ஆகிய மாநிலங்களில் கொண்டு வரப்பட்டன. மேற்படி சட்டங்கள் பெரும்பாலும் 1935-க்குப் பின்னர், 1947-க்கு முன்னர் நிறைவேற்றப்பட்டன. சாகுபடியாளர்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் சட்டங்கள் விடுதலைக்குப் பின்னர்தான் வெற்றிகரமாகச் செயல்படுத்தப் பட்டன.

### விடுதலைக்குப் பின்னர்

நிலத்தை உட்குத்தகைக்கு விடுதல் ஜமீன்தாரி பகுதிகளில் மட்டும் காணப்படவில்லை. விடுதலைக்குப் பின்னர் இரயத்துவாரி பகுதிகளில் ஐந்தில் ஒரு பகுதி நிலப்பரப்பு, குத்தகைக்கு வெளிப் படையாக விடப்பட்டிருந்தது. [8] இதில் வார சாகுபடிக்கு விடப் பட்ட பகுதிகள் அடங்கவில்லை. உண்மையில் குத்தகை சாகு படியும், வாரச் சாகுபடியும் வேறுபடுத்த முடியாத சாகுபடி முறைகள் ஆக உள்ளன.

ஜமீன்தாரி, இரயத்துவாரி ஆகிய இரு பகுதிகளிலும் சாகுபடியாகும்மொத்த நிலப்பரப்பில் முக்கால் பகுதி குத்தகைச் சாகுபடியாளர்களின் பொறுப்பில் உள்ளது. [9] இவர்கள் அதிகக் குத்தகை அல்லது வாரம் செலுத்தினர்கள். குத்தகைச் சாகு படியைவிட வாரச்சாகுபடி பரவலாக நாடு முழுவதிலும் இருந்தது எனலாம். நிரந்தரமாக்கப்படாத நில உரிமைகள் நீண்டகால ரீதியில் ஆக்கத்தைத் தடைபடுத்தும் சக்திகளாகச் செயல்படும் என்பதை ஆர்தர் யங் கூறிய மூதுரையிலிருந்து அறியலாம். 'பாலைவனத்தை ஒருவனின் நிரந்தரமான உடைமையாக்குங்கள். அதை அவன் பூங்காவாக மாற்றுவான். ஆனல், ஒரு பூங்காவை 9 ஆண்டு காலத்திற்குக் குத்தகைக்கு (அவனிடம்) விடுவீர்களேயானல், கட்டாயமாக அதைப் பாலை வனமாக மாற்றிவிடுவான்.'

[8] A. M. Khusro—Land Reforms Since Independevce, printed in 'Economic History of India, 1857-1956. Ed. by V. B. Singh. Allied publishers, (1965). p. 183.

[9] M. B. Nanavathi & J. J. Anjaria, ibid, p, 198.

### சாகுபடி உரிமைகள்

தங்களுடைய சொந்த நிலம் மிகவும் குறைவாக இருந்ததால் சிலர் பிறருக்குச் சொந்தமான நிலத்தைச் சாகுபடி செய்து வந்தார்கள். இவர்களைச் சாகுபடியாளர்கள் என்று அழைக்கிறோம். சாகுபடியாளர்களை மூன்று பெரிய பிரிவுகளில் வகைப் படுத்தலாம். ஒன்று, நிரந்தர சாகுபடியாளர்கள்; இரண்டு, தற்காலிகமான சாகுபடியாளர்கள்; மூன்று, துணைச் சாகுபடி யாளர்கள். முதலில் உள்ள நிரந்தர சாகுபடியாளர் பரம்பரை பரம்பரையாக நிலத்தைச் சாகுபடி செய்யும் உரிமை உடையவர்கள். இவர்கள் செலுத்தும் வாரம் மாறாத அளவில் நிர்ணயிக்கப்படும். நிலத்தின் உற்பத்தித் திறனை அதிகரிக்கும் முதலீட்டுச் செலவுகளை நிலக்கிழாரிடமிருந்து இவர்கள் (பின்னர்) வசூலித்து விடுகின்றனர். சாகுபடி உரிமை நிரந்தரமாக இருப்பதாலும், வாரம் மாறாமல் இருப்பதாலும் இவர்கள் நடைமுறையில் சொந்தச் சாகுபடியாளர்களைப்போலவே இருக்கிறார்கள். நிரந்தரமான சாகுபடியாளர்களைச் சொந்தச் சாகுபடியாளர்களிடமிருந்து வேறுபடுத்த முடியவில்லை. முதல் பிரிவினர் வாரம் செலுத்துகின்றனர். இரண்டாவது பிரிவினர் நில வரியைச் செலுத்துகின்றனர்.

ஆனால், இரண்டாவது, மூன்றாவது வகைகளில் உள்ள சாகுபடியாளர்களின் நிலைமை மிகவும் பலவீனமானது. தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள முடியாத அளவிற்கு ஏழைகளாக இருக்கின்றனர். இவர்களுடைய எளிய நிலைமை காரணமாக இவர்கள் சுரண்டப்பட்டனர். இதற்குச் சாதகமாக ஒரு சூழ்நிலை நிலவியது. மக்கள்தொகையின் வளர்ச்சியால் உழைப்பவர்களின் அளிப்பு அதிகரித்த அளவிற்கு அவர்களின் தேவை உயரவில்லை. தொழில் துறைகள் தேக்கம் அடைந்தன. ஆகையால் இவர்கள் எளிதில் சுரண்டப்பட்டனர். இத்தகைய சுரண்டல்கள் பலவகையில் ஏற்பட்டன. அடிக்கடி வாரத்தை உயர்த்தினார்கள். ஏதாவது ஒரு காரணம் காட்டிச் சாகுபடியாளர்களை வெளியேற்றினார்கள். சாதாரணமாக 50%-லிருந்து சுமார் 70% வரை நிகர உற்பத்தியில் வாரத்தை வசூலித்தார்கள். துணைச் சாகுபடியாளர்கள் என்பவர்கள் உட்குத்தகைக்கு நிலத்தைச் சாகுபடி செய்பவர்கள் ஆவர்.

### சாகுபடி நிலப்பரப்பு

1953–54இல் தேசிய மாதிரி சர்வே எட்டாவது சுற்றின்படி பாரதம் முழுவதிலும் சுமார் 20% நிலப்பரப்பு குத்தகை முறையில்

சாகுபடி செய்யப்படுகிறது. ஒவ்வொரு மாநிலத்திலும் இந்த விகிதம் வெவ்வேறாக இருக்கிறது. குறைந்தது 11% ஆகவும், அதிக அளவு 26% ஆகவும் இருக்கக் காண்கிறோம். மொத்த நிலப்பரப்பில் சுமார் ஐந்தில் ஒரு பகுதி நிலம் சாகுபடியாளர்களால் பயிரிடப்படுகின்ற காரணத்தால் சாகுபடியாளர்களும், சாகுபடி முறையும் நிலச்சீர்திருத்த நடவடிக்கைகளில் இரண்டாவது முக்கியத்துவம் பெற்றுள்ளன. சொந்த நிலத்தில் குத்தகைக்கு விடப்பட்ட நிலப்பரப்பும் வேறுபடுகின்றது. இந்த விகிதம் பஞ்சாபில் 27% ஆகவும், மகாராஷ்டிரத்தில், 17% ஆகவும், இராஜஸ்தானத்தில் 17·4% ஆகவும், கேரளாவில் 11·0% ஆகவும், தமிழ்நாட்டில் 9·7% ஆகவும், ஆந்திராவில் 8·6% ஆகவும், மத்தியப் பிரதேசத்தில் 6·7% ஆகவும் உள்ளன.

1953–54 தேசிய மாதிரி சர்வேயில் நிரந்தர சாகுபடியாளர்கள் பயிரிடும் நிலப்பரப்பு சேர்க்கப்படவில்லை. இவர்கள் கிட்டத்தட்டச் சொந்தச் சாகுபடியாளர்களைப்போல உரிமை உடையவர்களாக இருப்பதால் மேற்படி நிலப்பரப்பு சேர்க்கப்படவில்லை. இரண்டாவதாக மேற்படி சர்வேயில் சாகுபடி நிலப்பரப்பு குறிப்பிடப்படுகிறதேயல்லாமல், சாகுபடியாளர்கள் எத்தனை பேர் உள்ளனர், இவர்களின் சராசரிச் சாகுபடி நிலப்பரப்பு என்ன என்பது தெளிவாகவில்லை. 1951 மக்கள்தொகைக் கணிப்பிலிருந்து தோராயமாக 8·8 மில்லியன் மக்கள், அதாவது 12·8% விவசாயிகள் சாகுபடியாளர்களாக இருக்கலாம் என்று தெரிகிறது. மேற்படி சர்வேயின் பின்னர் பல சாகுபடியாளர்கள் வெளியேற்றப்பட்டிருக்கலாம். சிலர் சொந்தச் சாகுபடியாளர்களாகவும் மாறியிருக்கலாம்.

### குத்தகை அல்லது வாரத்தை முறைப்படுத்துதல்

சாகுபடியாளர்கள் குறிப்பிட்ட அளவு தானியம் அல்லது பணத்தைச் செலுத்துவார்களேயானால் அதைக் குத்தகை என்றும், உற்பத்தியின் ஒரு விகிதமாகச் செலுத்துவாரேயானால் அதை வாரம் என்றும் கூறுவார்கள். விடுதலைக்கு முன்னர் வரை சாகுபடியாளர்களின் உரிமைகள் பாதிக்கப்படவில்லை. சாகுபடி உரிமையை வழங்கும் பத்திரங்கள் ஏதும் கிடையாது. ஆகையால் ஒருவரைக் குத்தகைச் சாகுபடியாளர் அல்லது வாரச் சாகுபடியாளர் என்று வேறுபடுத்துவது கடினமாக உள்ளது.

வாரமும் திட்டவட்டமாகப் பதிவு செய்யப்படவில்லை. இது ஆண்டுதோறும் மாறக்கூடும். அவ்வப்போது காணப்படும் அளிப்பு, தேவை ஆகியவற்றிற்கு இணங்க இது நிர்ணயிக்கப்

படும். சாகுபடியாளர்கள் தொடர்ந்து மேற்படி நிலத்தைச் சாகுபடி செய்யவேண்டும் என்று விழைவதால் நில உடைமையாளர் நிர்ணயிக்கும் நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு வாரத்தைச் செலுத்தினர். விளைச்சலில் 50% அல்லது அதற்கும் அதிகமாக வாரம் வசூலிக்கப்பட்டது. இதர துறைகளின் வருமான விகிதத்தைவிட நில உடைமையாளர்கள் அதிக வருமானம் ஈட்டினுர்கள். விடுதலைக்குப் பின்னர் வாரத்தை நிர்ணயிக்கும் முயற்சிகளில் மாநில அரசுகள் ஈடுபட்டன. மொத்த உற்பத்தியில் 20% முதல் 25% வரை வாரமாக நிர்ணயிக்க வேண்டும் என்று பரிந்துரைக்கப்பட்டது. மாநிலங்கள் வெவ்வேறு விகிதங்களை நிர்ணயித்தன. காட்டாக, குஜராத், மகாராஷ்டிரம், இராஜஸ்தானம் ஆகிய மாநிலங்களில் ஆறில் ஒரு பகுதி (மொத்த உற்பத்தியில்) வாரத்தின் உச்ச அளவாக நிர்ணயிக்கப்பட்டது. ஒரிஸ்ஸா, பீகார், அஸ்ஸாம், மணிப்பூர், மைசூர், திரிபுரா ஆகியவற்றில் இது 20%-லிருந்து 25% வரை இருந்தது. கேரளாவில் கால் பகுதியிலிருந்து பாதி வரை வாரமாக நிர்ணயிக்கப்பட்டது. பஞ்சாபில் மூன்றில் ஒரு பகுதியும், தமிழ்நாட்டில் மூன்றில் ஒரு பகுதியிலிருந்து 40% வரையிலும் நிர்ணயிக்கப்பட்டன. ஜம்மு-காஷ்மீர், ஆந்திரா, மேற்கு வங்காளம் ஆகியவற்றில் கிட்டத்தட்ட 50% வரை (உயர்ந்த அளவு) இருந்தது. மத்தியப்பிரதேசத்தில் நிலவரியைப் போல 2 முதல் 4 மடங்குகள் வரை வாரம் இருக்கும். இவ்வாறு மாநிலத்திற்கு மாநிலம் நிர்ணயிக்கப்பட்ட வாரம் வேறுபட்டது.

சாகுபடியாளர்களுக்குச் சட்டத்தின் வரம்புகள் தெரியாத காரணத்தாலும், அப்படித் தெரிந்திருந்தாலும் அதை நடைமுறையில் அமுலாக்க முடியாத காரணத்தாலும் மேற்படி நியதிகளால் அதிக நன்மைகள் ஏற்படவில்லை. இதை மூன்ருவது திட்டத்தில் பின்வருமாறு கூறியுள்ளனர்: ''வேறு வேலை வாய்ப்புகள் இல்லாத காரணத்தால் நிலத்தை நாடியிருப்பவர்கள் பலர். இவர்கள் சமூக மட்டத்திலும், பொருளாதார அடிப்படையிலும் சட்டத்தின் பாதுகாப்பைப் பெறமுடியாதவர்களாக இருக்கிருர்கள். சட்டரீதியான உரிமைகளைப் பெறுவதற்காக வழக்காடவோ, அதற்காகச் செலவு செய்யவோ முடியாதவர்களாகச் சாகுபடியாளர்கள் இருக்கின்றனர். ஆகையால் மாநிலங்களில் சாகுபடியாளர்களின் நலன்களைப் பாதுகாக்கும் சட்டங்கள் இயற்றப்பட்டபோதிலும் அவர்கள் தொடர்ந்து பாதகமான சூழலில் செயல்பட்டு வருகின்றனர்.''

தற்சமயம் 4-வது ஐந்தாண்டுத் திட்டத்தில் வாரத்தை உற்பத்தியில் நான்கில் ஒரு பகுதியாகக் குறைக்கவேண்டும்

என்றும், இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதில் ஆந்திரப் பிரதேசம், ஜம்மு, காஷ்மீரம், தமிழ்நாடு, பஞ்சாப், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்கள் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. தானியமாக வாரத்தைச் செலுத்துவதற்குப் பதிலாக, பணமாகச் செலுத்துவதை வற்புறுத்தவேண்டும் என்று கூறியுள்ளனர்.

சாகுபடி உரிமை நிரந்தரமாக்கப்படவில்லை என்றால் மற்ற நடவடிக்கைகளால் எதிர்பார்க்கும் பலன்களை அடையமுடியாது. நிரந்தரச் சாகுபடி உரிமையில்லை என்றால், நிலத்தை அபிவிருத்தி செய்யும் ஊக்க சக்தி இல்லாமல் போய்விடும். ஆகையால் சாகுபடியாளர்கள் நிலத்திலிருந்து வெளியேற்றப் படுவதைத் தடுக்கவேண்டும். நில உடைமையாளர்கள் சொந்தச் சாகுபடியை மேற்கொள்ளுவதற்காக மட்டுமே சாகுபடியாளர்களை வெளியேற்றலாம். சொந்தச் சாகுபடிக்காக நிலத்தை எடுத்துக்கொண்டாலும் சாகுபடியாளருக்கு ஒரு பகுதி நிலம் விட்டு வைக்கவேண்டும்.

சாகுபடியாளர் வெளியேற்றப்படுவதைத் தடுப்பது முதன்மையான நோக்கமாகும். நில உடைமையாளர்கள் தங்களுடைய சமூக அந்தஸ்தையும், மேம்பட்ட பொருளாதார நிலையையும் பயன்படுத்திச் சாகுபடியாளர்களை வெளியேற்றி விடுகின்றனர். ஆனால், தாங்கள் சாகுபடியாளர்களை வெளியேற்றியதாகக் கூறாமல் அவர்களே தன் விருப்ப அடிப்படையில் சாகுபடி உரிமைகளை விட்டுக்கொடுத்தனர் என்று கூறப்படுகிறது. இது உண்மையில் சாகுபடியாளர்களின் வெளியேற்றமாகஇருந்தபோதிலும்,சட்டத்தின் விளைவுகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக இவ்விதம் காரணம் கற்பித்துள்ளனர். ஆகையால் தன் விருப்ப அடிப்படையில் சாகுபடி உரிமையை விட்டுக் கொடுத்ததாகக் கூறுவனவற்றைச் சட்டரீதியாக ஏற்கக்கூடாது என்று திட்டக்குழு கூறியுள்ளது. சம்பந்தப்பட்ட 'ரெவின்யூ' அதிகாரிகளின் முன்னிலையில் சாகுபடியாளர்களின் தன் விருப்ப விலகல்கள் பதிவு செய்யப்படவேண்டும்.

### பதிவாகாத சாகுபடி உரிமைகள்

நிலத்தைச் சாகுபடிக்கு விட்டபோதிலும் அதைப் பதிவு செய்யாமல் இருப்பதை இது குறிக்கின்றது. நிலக்கிழாருக்குச் சேரவேண்டிய குத்தகை அல்லது வாரத்தைத் தான் ஒப்புக் கொண்டவாறு சாகுபடியாளர் செலுத்திவிடுகிறார். இதனால் இருவிதங்களில் சட்டங்கள் புறக்கணிக்கப்படுகின்றன. சாகுபடி

திருத்தச் சட்டங்களிலிருந்து தப்பித்துக்கொள்வதுடன், சாகுபடி யாளரின் உரிமைகளை மறுக்கவும் செய்யலாம். மேற்படி நிலச் சாகுபடி பதிவுசெய்யப்படாத காரணத்தால் சொந்தச் சாகுபடி என்று சொல்லிக் கொள்ளலாம். கிழக்கு உத்தரப்பிரதேசத்தில் நடத்திய சர்வே ஒன்றில் (சவான் என்பவரால் நடத்தப் பட்டது) 16·6% நில உடைமையாளருக்குச் சொந்தமான நிலம், (மொத்தச் சாகுபடி நிலப்பரப்பில் **288%** உள்ள நிலப் பரப்பு) பத்திரங்கள் ஏதும் இல்லாமல் உள்குத்தகைக்கு விடப் பட்டது.

### சாகுபடியாளர்கள் நில உடைமையாளராக ஆக்கப்படுதல்

நிலச் சீர்திருத்தங்களின் முக்கியமான குறிக்கோள் சாகுபடி யாளர்களை நிலத்தின் உடைமையாளராக மாற்றுதல். முதலில் சாகுபடியாளர்கள் விரும்பினால் அவர்களை நிலத்தின் உடைமை யாளராக மாற்றவேண்டும் என்று கருதினர்கள். ஆனல், இரண் டாவது திட்டத்தில் சொந்தமாகச் சாகுபடி செய்யாத பகுதிகள் யாவும் அரசின் வசம் ஒப்படைக்கவேண்டும் என்று கூறப் பட்டது. மூன்ருவது திட்டத்தில் சாகுபடியாளர்களைக் கட்டாய மாக நிலத்தின் உடைமையாளர் ஆக்கவேண்டும் என்றும், அவர்களின் விருப்பத்தின்படி தீர்மானிக்க விடக்கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது. இந்த நோக்கத்துடன் மேற்கு வங்காளத்தில் சட்டங்கள் இயற்றப்பட்டன. சாகுபடியாளர் களும், துணைச் சாகுபடியாளர்களும் அரசாங்கத்துடன் நேரிடை யாகத் தொடர்புகொண்டுள்ளனர். மேற்படி சாகுபடியாளர் களுக்கு நிலம் சொந்தமாக்கப்பட்டு உள்ளது. ஆனல், தமிழ் நாட்டில் சாகுபடியாளர்கள் பயிரிடும் நிலத்தை வாங்கிக் கொள்ளுவதற்கு உதவும் சட்டங்கள் இதுவரை இயற்றப்பட வில்லை. அஸ்ஸாம், பீகார், ஜம்மு-காஷ்மீர், தமிழ்நாடு ஆகிய மாநிலங்கள் தவிர, இதர மாநிலங்களில் சாகுபடியாளர்களின் விருப்பப்படி சாகுபடி நிலத்தை வாங்கும் உரிமை அளிக்கப் பட்டுள்ளது.

### திறனய்வு

பாரதத்தின் நிலச் சீர்திருத்தங்கள் சில அடிப்படையான நோக்கங்களைக் கொண்டுள்ளன. இதற்குச் சில அனுமானங் களாக உள்ள கருத்துகளை இங்கே தெளிவுபடுத்தவேண்டும். சாகுபடியாளர்களுக்குக்கொடுக்கப்படும் ஊக்கம் காரணமாகவும், சட்டம் அவர்களுக்குச் சாதகமாக இருப்பதாலும், தாங்கள் சாகு படி செய்யும் நிலத்தைச் சொந்த உடைமையாக்கிக் கொள்ளு வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதைப்போலவே

நிலக்கிழாருக்குக் கிடைக்கும் வாரத்தைக் குறைப்பதாலும், சட்டங்கள் அவர்களுக்குப் பாதகமாக இருப்பதாலும், அவர்கள் இரண்டில் ஒரு முடிவுக்குத் தாங்களாகவே வருவார்கள் என்று கருதப்படுகிறது. ஒன்று அவர்கள் நிலத்தைச் சொந்த சாகுபடிக்காக எடுத்துக் கொள்ள வேண்டும். அல்லது தன்னிடம் சாகுபடி செய்யும் குடியானவனுக்கே நிலத்தை விற்றுவிட வேண்டும். இவ்வாறு செய்யக்கூடும் என்று எதிர்பார்க்கிறார்கள். இதன் விளைவாகச் சொந்த நிலம் இல்லாத சாகுபடியாளர்களும், சொந்தச் சாகுபடி செய்யாத நிலக்கிழார்களும் எதிர்காலத்தில் இருக்கமாட்டார்கள் என்று நம்பப்படுகிறது.

அனைவருடைய கவனத்தையும் ஒரு நிகழ்ச்சி கவர்ந்துள்ளது. மேற்படி சீர்திருத்தங்கள் காரணமாக ஒவ்வொரு மாநிலத்திலும் எண்ணிறந்த வாரச் சாகுபடியாளர்களும் குத்தகைச் சாகுபடியாளர்களும் வெளியேற்றப்பட்டார்கள். இதற்கு முன்பும் நிலத்திலிருந்து எப்போதாவது சாகுபடியாளர்கள் வெளியேற்றப்படுவார்கள். மேற்படி சீர்திருத்தங்களின் விளைவாகச் சாகுபடியாளர்களின் வெளியேற்றம் மிக அதிகமாகி விட்டது. நிலக்கிழார்களுக்குச் சாகுபடியாளர்களிடம் தனிப்பட்ட முறையில் எவ்விதப் பகை உணர்ச்சியும் இல்லை. இருந்த போதிலும் சாகுபடியாளர்களுக்குச் சட்டம் துணை செய்கிறது என்ற நினைப்பும், சாகுபடியாளன் என்று அங்கீகரிக்கப்பட்டால், (முக்கியமாக நிரந்தரச் சாகுபடியாளனாக மாறிவிட்டால்) பின்னர் எக்காலத்திலும் அவர்களை வெளியேற்ற முடியாமல் போய்விடும் என்ற அச்சம் காரணமாகவும் சாகுபடியாளர்களை வெளியேற்றுவதில் தீவிரமாக இருந்தார்கள்.

சாகுபடி சீர்திருத்தங்களினால் மற்றொரு விரும்பத்தகாத விளைவு ஏற்பட்டது. இந்தச் சீர்திருத்தங்களில் சொந்தச் சாகுபடிக்குக் கொடுக்கப்பட்ட விளக்கம் இதற்குத் துணையாகஉள்ளது. நிலக்கிழார்கள் சாகுபடியாளர்களைப் பண்ணை ஊழியர்கள் என்று அழைக்கின்றனர். இவர்களை — சாகுபடியாளர்களைப் பண்ணை ஊழியர்களிலிருந்து— எவ்விதம் வேறுபடுத்த வேண்டும் என்பது தெளிவாக இல்லை. காட்டாக, கம்யூனிஸ நாடுகளில் பண்ணை ஊழியர்களைச் சாகுபடியாளர்களாகக் கருதுகின்றனர். இவர்களுக்கு வேலை கொடுக்கும் நிலக்கிழாரை முதலாளித்துவ விவசாயி என்றும் கருதுகின்றனர். அந்த நாடுகளில் சாதாரண விவசாயத் தொழிலாளர்களைச் சாகுபடியாளர்களாக உயர்த்துவதற்கு அவர்கள் கூறும் விளக்கம் இதுதான். பண்ணை ஊழியர்களின் ஊதியம் விளைச்சலின் ஒரு பகுதியாக —ஒரு விழுக்

காடாக— நிர்ணயிக்கப்படுகிறது. இவர்களின் வருமானத்தில் ஒரு நிலையற்ற கூறு அமைந்துள்ளதால் இவர்களைச் சாகுபடியாளர்கள் என்று கூற முற்படுகின்றனர். ஆனால், 'நிலையற்ற கூறு' என்ற சொல்லிற்கு வேறுவிதமாகப் பொருள் கூறவேண்டும். ஒருவர் தம்முடைய மூலதனத்தை முதலீடு செய்துள்ள காரணத்தால் அவருக்குக் கிடைக்கும் வருமானம் 'நிலையற்றதாக' இருக்கக்கூடும். இவை இரண்டும் முற்றிலும் வேறானவை.

மேலை நாடுகளில் எந்த அடிப்படையைக் கொண்டு சாகுபடியாளரை, விவசாயத் தொழிலாளரிடமிருந்து வேறுபடுத்தினாலும் அந்த அடிப்படை பாரதத்தில்உள்ள சூழ்நிலைக்குப்பொருத்தமாக இருக்குமா என்பதை யோசிக்கவேண்டும். ஊதியம் கொடுக்கப்படும் விதம் இதற்கு அடிப்படையாக இருந்தால் அது நமது நோக்கங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட முடிவுகளை ஏற்படுத்தக்கூடும். காட்டாக, உற்பத்தியின் சார்பாக — அதன் ஒரு விழுக்காடாக — ஒருவன் தன் உழைப்பிற்கு ஊதியம் பெறுகிறான் என்று வைத்துக் கொள்வோம். அவனுடைய வருமானத்தில் 'நிலையற்ற கூறு' காணப்படுவதால் அவனைச் சாகுபடியாளன் என்று வகைப்படுத்தலாம். ஆனால், பாரதத்தில் நிலக்கிழார்கள் சாகுபடியாளர்களை விவசாயத் தொழிலாளர்களின் நிலைமைக்குத் தள்ள நினைக்கின்றனர். எனவே, சாகுபடியாளர்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியத்தை உற்பத்தியின் ஒரு விழுக்காடாகக் கொடுப்பதற்குப் பதிலாக, குறிப்பிட்ட அளவு தானியம் அல்லது பணத்தொகையாகக் கொடுக்க முன்வரலாம். இவ்வாறு செய்வதன் மூலம் ஒரு சாகுபடியாளனை அவன் தகுதியிலிருந்து கீழே தள்ளிவிட முடியும்—அதாவது சாதாரண விவசாயத் தொழிலாளராக்கி விடமுடியும்.

ஊதியம் நிர்ணயிக்கப்படுகின்ற அடிப்படையில் சாகுபடியாளரைச் சாதாரண விவசாயத் தொழிலாளர்களிடமிருந்து வேறுபடுத்த இயலாது. மாறாக, பண்ணை வேலைகளில் இவர்கள் எந்த அளவிற்கு ஈடுபட்டுள்ளார்கள் என்ற அடிப்படையில்தான் வேறுபடுத்த வேண்டும். ஒருவன் தன் உழைப்பைத்தவிர வேறு எதையும் உற்பத்திக்காக நல்கவில்லையானால், அவன் ஒரு தொழிலாளனாகவே கருதப்படுவான். ஆலைத் தொழிலாளரைப் போல அவன் உழைப்பைத்தவிர வேறு எதையும் அளிக்காத காரணத்தால், அவன் கூலியைத்தவிர எதையும் பெறஇயலாது. மாறாக ஒருவன் பயிரிடும் தொழிலில் தன்னுடைய உழைப்பைத் தவிர நிலையான மூலதனம், நடப்பு மூலதனம் ஆகியவற்றை அளித்து இருப்பானேயானால், அதற்குப் பதிலாக உற்பத்தியின்

ஒரு பகுதியைப் பெறும் சாகுபடியாளனாக இருப்பான். இவனைச் சாதாரண விவசாயத் தொழிலாளியைவிட மேலான நிலையில் கருத வேண்டும்.

சாகுபடியாளர்களைப் பற்றி ஏ. எம். குஸ்ரோ அவர்கள் கூறிய சில அரிய கருத்துகளை மேலே கூறியுள்ளோம். அவர் சாகுபடியாளனை எவ்வாறு அடையாளம் கண்டு கொள்ள முடியும், எந்த அடிப்படையில் சாகுபடியாளரை, சாதாரண விவசாயத் தொழிலாளரிடமிருந்து வேறுபடுத்தலாம் என்பதை விளக்கியுள்ளார். சாகுபடியாளரை இனம் கண்டு கொள்ள முடியாத காரணத்தால் அவருக்குக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவம், வழங்க வேண்டிய சலுகைகள் கொடுக்காமல் இருப்பதாக அவர் கூறியுள்ளார். சாகுபடியாளன் என்ற சொல்லிற்குச் சரியாக இலக்கணம் கூறாத காரணத்தால் சில குழப்பங்கள் ஏற்பட்டன என்பது உண்மை. ஆனால், சட்ட ரீதியான சலுகைகள் வழங்கப்பட்ட பகுதிகளில்கூட அவர்களின் சமூக நிலை காரணமாக எவ்விதப் பலனையும் அனுபவிக்க முடியவில்லை.

திரு. குஸ்ரோவின் மற்றொரு கருத்து வரவேற்கத்தக்கது. இதுவரை நிலக்கிழாரை மையமாகக் கொண்டு சாகுபடிப் பிரச்சினைகளை ஆராய்ந்தோம். இதனால் சாகுபடியாளன் யார் என்று இனம் கண்டுகொள்ள முடியவில்லை. நிலக்கிழார் எந்த அளவுக்கு மூலதனத்தைக்கொடுத்துள்ளார் என்று கருதுவதற்குப் பதிலாகப் பண்ணைகளில் வேலை செய்யும் தொழிலாளி எந்த அளவுக்கு முதலீடு செய்கிறான் என்பதைஅடிப்படையாகக் கருதவேண்டும். ஒருவன் மூலதனத்தை முதலீடு செய்து இருந்தால் சாகுபடியாளன் என்றும், முதலீடு செய்யவில்லை என்றால் சாதாரண விவசாயத் தொழிலாளி என்றும் கருதமுடியும். சாகுபடியாளனைக் கண்டுபிடித்து அவன் உரிமைகளையும், சலுகைகளையும் பாதுகாக்க வேண்டும் என்று கூறுகிறார்.

### நில உச்சவரம்பு

நிலச் சீர்திருத்தங்களின் மூன்றாவது முக்கிய நோக்கம் நில உடைமைகளுக்கு உச்சவரம்பு நிர்ணயிப்பது ஆகும். ஆரம்பத்தில் இக்கருத்தைச் சில மாநிலங்கள் ஏற்கவில்லை. வெளிப்படையாகவே எதிர்ப்புகள் தோன்றின. நில உச்சவரம்பின் முக்கிய நோக்கம் நிலத்தை மறு பகிர்வு செய்வதாகும். பெரும்பான்மையான விவசாயிகள் மிகக் குறைந்த அளவு நிலம் உடையவர்களாகவும், சிறுபான்மையான மிராசுதாரர்கள் மிகப் பெரிய அளவிற்கு நிலப்பரப்பு உடையவர்களாகவும் இருக்கின்

றனர். நில உடைமைகளின் பகிர்வு நேரிய அடிப்படையில் அமையவில்லை. நில உச்சவரம்பை ஏற்படுத்துவதன் மூலம் பெரிய நிலக்கிழாரிடம் உள்ள உபரியான நிலப்பரப்பைப் பெற முடியும் என்றும், அதைப் பின் குறித்தவர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கவேண்டும் என்றும் கூறினார்கள். இறுதிநிலை எல்லைக் குட்பட்ட நிலம் உடைய நிலக்கிழார்கள் (மிகச் சிறு நிலக் கிழார்கள்), நிலம் இல்லாத விவசாயிகள், சாகுபடியாளர்கள் ஆகியோருக்குப் பகிர்ந்து கொடுக்க எண்ணினர். நிலம் கிடைப் பருமையாக இருப்பதாலும், அதன் தேவை பன்மடங்கு இருப்ப தாலும், அதை மறுபகிர்வு செய்யவேண்டியது அவசியமாக உள்ளது. நில உச்சவ்ரம்பின் காரணமாக நிலத்தைச் சிறந்த முறையில் பயன்படுத்தி அதன் உற்பத்தித் திறனை அதிகரிக்க முடியும்.

நில உச்சவரம்பிற்கான அவசியத்தைப் பேராசிரியர் காட்கில் பின்வருமாறு கூறியுள்ளார்: ‘‘உற்பத்திச் சாதனங்கள் அனைத்தி லும் நிலம் மிகவும் கிடைப்பருமையானதாகும். நிலம் குறைந்த அளவுக்கு இருந்தாலும் பலரும் அதை அடைய விரும்புகிறார்கள். எனவே, தனி நபர் மிகப் பரந்த நிலப்பரப்பை வைத்திருப்ப தால் மற்றவர்களின் உழைப்பைச் சுரண்டும் நிலை ஏற்படாது தவிர்க்கவேண்டும்.’’

நிலத்தின் உடைமையாளராக வேண்டும் என்ற விருப்பம் பலருக்கும் உள்ளது. மிகச் சிலர் பேரளவு நிலப்பரப்பை வைத்து இருப்பதால் தோன்றும் மனநிறைவைவிடப் பெரும் பாலான மக்கள் சிறு அளவு நிலம் வைத்திருப்பதால் ஏற்படும் நிறைவு அதிகமாகவும் இருக்கும். இது பொருளாதார அடிப் படையில் நியாயமான ஒன்றாகக் கருதப்படுகிறது.

மரபான கிராம அமைப்புகளில் நில உடைமை என்பது ஒரு சமூக அந்தஸ்தின் சின்னமாக விளங்குகிறது. போலியான கௌரவம், தவறான மதிப்பீடுகள் தோன்றுவதற்கு நில உடைமைகள் காரணமாக இருக்கின்றன. இதற்கு நில உடைமையாளர்கள் சிலராகவும், நிலமில்லாதவர்கள் பலராக வும் உள்ள சூழ்நிலைதான் காரணமாகும். இயன்றவரை நிலத் தைச் சமமாகப் பகிர்ந்து அளிக்கமுடியுமானால், நில உடைமை யின் அடிப்படையில் தோன்றக்கூடிய சில பத்தாம்பசலிக் கருத் துகள், போலி உணர்ச்சி முதலியன மறையக்கூடும்.

நிலத்தில் புதுமைப் புகுத்தங்கள் (innovation) தோற்றுவிக்க வேண்டுமானால், ஆர்வம் உடைய விவசாயிகளுக்கு நில உரிமை

வழங்கப்படவேண்டும். நில உடைமைக்கு உச்சவரம்பு விதிப்பதன் மூலம் இதுவரை நிலக்கிழாராக இருப்பவர்கள் மேலும் தீவிரமாகத் தங்கள் வருமானத்தை உயர்த்திக்கொள்ளும் முயற்சிகளில் ஈடுபடுவார்கள், புதிதாக நிலம் பெறும் சாகுபடியாளர்களும், தொழிலாளர்களும் புதுமைப் புகுத்தல்களின் வாயிலாக உற்பத்தித்திறனை உயர்த்துவார்கள் என்றும் எதிர்பார்க்கின்றோம்.

நில உடைமைக்கு உச்சவரம்பு விதிப்பதால், மூலதனச் செறிவுடைய சாகுபடி முறைகளைப் பின்பற்றுவது இயலாமல் போகும் என்றும், அதனால் நிலத்தின் உற்பத்தித்திறன் குறைக்கப்படும் என்றும் கருதுகிறார்கள். உண்மையில் நிலத்தின் உற்பத்தித்திறனுக்கும், உடைமை அளவிற்கும் நேரிடையான ஒருதலைப்பட்சமான தொடர்பு இருப்பதாகக் கூறமுடியாது. நில உடைமை பெரிதாக உள்ள பண்ணைகளில் பரந்த சாகுபடி முறையும்—மூலதனச் செறிவுடைய சாகுபடி முறையும்—சிறிய பண்ணைகளில் உழைப்புச் செறிவுடைய செறிந்த சாகுபடி முறையும் பின்பற்றப்படும். இவ்விரு வகையிலும் நிலத்தின் உற்பத்தித்திறன் அதிகமாகவே இருக்கும் என்றாலும், பரந்த சாகுபடி முறையைவிட, செறிந்த சாகுபடி முறையில் விளைச்சலும், உற்பத்தித்திறனும் அதிகமாக இருக்கின்றன. இக்கருத்தைப் பல ஆய்வுகள் நிரூபிக்கின்றன. ஜப்பானில் உள்ள சிறு பண்ணைகளின் உற்பத்தித்திறன், சோவியத் யூனியனில் உள்ள பெரிய பண்ணைகளைவிட அதிகமாக உள்ளது.

நில உச்சவரம்பிற்குச் சிலர் பின்வருமாறு எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். நகரங்களில் வசிப்பவர்களின் சொத்துகளுக்கும், விவசாயமல்லாத வருமானத்திற்கும் எவ்வித உச்சவரம்பும் விதிக்கப்படவில்லை. இதர சொத்துகளிலிருந்து நில உடைமையை மட்டும் ஏன் பேதப்படுத்தவேண்டும்? இவர்களின் கேள்விக்கு விடையளிக்கும் முன்னர் ஒரு செய்தியைத் தெளிவுபடுத்தவேண்டும். உச்சவரம்பு நிலத்தின் உடைமைக்கு மட்டும் விதிக்கப்பட்டதேயல்லாமல், நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கு அல்ல. இரண்டாவது, உச்சவரம்பு விதிக்கப்படும் முன்னர் நிலத்தின் உற்பத்தித்திறன் மற்ற நாடுகளின் உற்பத்தித்திறனைவிட — அதைப் போன்ற மண்வளத்தின் உற்பத்தித்திறனைவிட — மிகவும் குறைவாக இருந்தது. எனவே, நில உடைமையாளர்கள் தங்கள் நிலத்தைச் சரியாகப் பயன்படுத்தவில்லை என்பதை உணரலாம். மூன்றுவதாக, தொழில்துறையில் புதுமை புகுத்துவதிலும் விவசாயத்தில் புதுமை புகுத்

நிலத் தோற்றுவிப்பதிலும் அடிப்படையான வேறுபாடு உண்டு. தற்போதுள்ள விவசாயிகள் புதுமைப் புகுத்தலை ஏற்படுத்த வில்லை என்றாலும், அதற்குத் தயங்கினாலும் விவசாய உற்பத்தித் திறனை அதிகரிக்கமுடியாது. புதுமைப் புகுத்தலைச் செய்யக் கூடிய புதிய ஆர்வம், திறன் உடையவர்களுக்கு நில உரிமைகள் கொடுக்கப்படவேண்டும். தனி நபர்களின் சொத்துரிமைகளை விடச் சமுதாயத்தின் கிடைப்பருமையான இயற்கை வளங்களைச் சிறந்த முறையில் பயன்படுத்துவது முக்கியமானதாக இருப்பதால் சொத்துரிமைக்கு ஒரு வரையறை நிர்ணயிக்கப்படுகிறது. இறுதியாக, விவசாயத் துறையல்லாத பிற துறைகளிலும், அரசாங்கம் தலையிட்டு வருகிறது. நகர சொத்துகளுக்கும் ஓர் உச்சவரம்பு கொண்டு வரப்படும். 'சோஷலிச' தத்துவத்திற்குப் புறம்பான வகையிலும், சுரண்டல் தன்மையை ஆதரிக்கும் வகையிலும், சொத்துரிமை எங்கிருந்தாலும் அதைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியமாகும்.

நில உடைமைக்கான உச்சவரம்புகள் எதிர்கால நில உடைமைக்கான உச்சவரம்பு என்றும், நிகழ்கால நில உடைமைக்கான உச்சவரம்பு என்றும் இருவகைப்படும். எதிர்கால உச்சவரம்பு விதிக்கப்படுவதால் உடனடியான பிரச்சினைகள் ஏதும் ஏற்படவில்லை. தற்கால நில உரிமைகளைப் பரிசீலனை செய்யவேண்டிய அவசியமுமில்லை. ஆகையால் எல்லா மாநிலங்களிலும் எதிர்கால நில உடைமைகளுக்கு உச்சவரம்பு நிர்ணயிக்கும் சட்டங்கள் இயற்றப்பட்டன. ஆனால், தற்போதுள்ள நில உடைமைகளுக்கான உச்சவரம்பு சிக்கலானது. தற்போதைய நில முறையை மாற்றி அமைக்கவேண்டியது அவசியமாக உள்ளது. நில உரிமைகளை முழுமையாகப் பரிசீலனை செய்யவேண்டியது அவசியம்.

பின்வரும் அட்டவணையில் (8 : 1) பல மாநிலங்களுக்கான உச்ச வரம்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. தற்சமயம் தமிழ் நாட்டில் '15' திட்ட ஏக்கர் உச்சவரம்பாக உள்ளது. திட்ட ஏக்கர்கள் என்பது உண்மையான ஏக்கரிலிருந்து வேறுபட்டது.

உச்சவரம்பு மாநிலத்திற்கு மாநிலம் ஏன் வேறுபடுகின்றன என்பதை விளக்க வேண்டும். மண்ணின் அமைப்பைத் தவிரப் பயிர்களின் தன்மையும், அமைப்பும், விவசாயிகளின் திறனும், உற்பத்தி நுட்ப முறைகளும் வேறுபடுகின்றன. இதில் பாசன வசதிகளும், காலநிலையும் முக்கியமானவை. இவ்வாறு பல காரணிகள் வேறுபட்ட போதிலும் உச்சவரம்பு நிர்ணயிப்பதற்கான அடிப்படை எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியாக

அட்டவணை : 8·1

## மாநிலங்களில் நில உச்சவரம்பு +

| மாநிலம் | எதிர்கால வரம்பு | தற்போதைய வரம்பு |
|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | 18—260 ஏக்கர் | 27—234 ஏக்கர் |
| அஸ்ஸாம் | 50 ஏக்கர் | 50 ஏக்கர் |
| பீகார் | 20—60 ஏக்கர் | 20—60 ஏக்கர் |
| குஜராத் | 19—132 ஏக்கர் | 19—132 ஏக்கர் |
| ஜம்மு-காஷ்மீர் | 22·75 ஏக்கர் | 22·75 ஏக்கர் |
| கேரளா | 15—36 ஏக்கர் | 15—36 ஏக்கர் |
| மத்தியப்பிரதேசம் | 25—75 ஏக்கர் | 25—75 ஏக்கர் |
| தமிழ்நாடு | 24—120 ஏக்கர் | 24—120 ஏக்கர் |
| மகாராஷ்டிரம் | 18—126 ஏக்கர் | 18—126 ஏக்கர் |
| மைசூர் | 18—144 ஏக்கர் | 27—216 ஏக்கர் |
| ஒரிஸ்ஸா | 20—80 ஏக்கர் | 20—80 ஏக்கர் |
| பஞ்சாப் } ஹரியானா | 30 திட்ட ஏக்கர் | 30 திட்ட ஏக்கர் |
| இராஜஸ்தானம் | 22—336 ஏக்கர் | 22—336 ஏக்கர் |
| உத்தரப்பிரதேசம் | 12·5 ஏக்கர் | 40—80 ஏக்கர் |
| மே. வங்காளம் | 25 ஏக்கர் | 25 ஏக்கர் |

\+ *Quoted by :* R. Dutt & K. P. M. Sundharam, Indian Economy 1970 p. 371, from India, 1969.

இருக்கவேண்டும் என்று 'திட்டக் கமிஷன்' கூறியது. உச்ச வரம்பு 'குடும்ப உடைமை'யைப் போல மூன்று மடங்காக இருக்கலாம் என்று கூறியது. அப்போதுள்ள சாகுபடி நுட்பங்கள், விளை மட்டங்கள் ஆகியவற்றை அடிப்படையாக எடுத்துக் கொண்டு ஆண்டு ஒன்றுக்குச் சராசரியாக ரூ. 1200 நிகர வருவாயாக நல்கக்கூடிய நிலப்பரப்பு குடும்ப உடைமையாகக் கருதப்பட்டது. ஒரு குடும்பத்தில் 5 நபர்கள் இருப்பார்கள் என்ற அடிப்படையில் உச்சவரம்பு குடும்ப உடைமையைப் போல மூன்று மடங்காக இருக்கும். இது அதிக அளவு குடும்ப உடைமையைப்போல (குடும்ப உறுப்பினர்கள் 5 பேர்களைவிட அதிகமாக இருந்தால்) 6 மடங்கு வரை இருக்கலாம்.

### விதிவிலக்கு

உச்சவரம்பிலிருந்து பின்வரும் இனங்களுக்கு விலக்கு அளிக்கப்பட்டது:

1. காப்பி, தேயிலை, ரப்பர் தோட்டங்கள்.

2. கட்டுக்கோப்பான பழத்தோட்டங்கள்.

3. சில சிறப்புத் தேர்ச்சியுடைய பண்ணைகள். (காட்டாக, கால்நடை வளர்ப்பு, பால் பண்ணைகள், கம்பளம் தயாரித்தல் முதலியன.)

4. சர்க்கரை ஆலைகளுக்குச் சொந்தமான கரும்புத் தோட்டங்கள்.

5. மிகவும் சிறந்த முறையில் நிருவகிக்கப்படும் பண்ணைகள்–முதலாளித்துவ முறையில் நவீன நுட்பங்களை உபயோகிக்கும் பண்ணைகள்.

உச்ச வரம்புகளுக்கு விலக்கு அளிக்கப்படுவதில் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபாடுகள் ஏற்பட்டன. மகாராஷ்டிரத்தில் கரும்பு சாகுபடி (ஆலையின் நிருவாகத்தில் உள்ள) நிலப்பரப்பிற்கும் உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட்டது. இந்த விதிவிலக்குகளைப் பயன்படுத்திக்கொண்டு பலர் உச்சவரம்பு நியதிகளை ஏமாற்றினர். நெடுங்காலமாக நெல் சாகுபடி செய்து வந்த வயல்களில் கரும்பு சாகுபடி செய்தார்கள். உச்சவரம்பின் விளைவாகப் பல புதிய சர்க்கரை ஆலைகள் தோன்றின. புதிய அறக்கட்டளைகள் ஏற்பட்டன.

நிலஉடைமையிலிருந்து தப்பிக்கும் நோக்கத்தோடு உடைமை மாற்றங்கள் செய்யப்பட்டன. இவற்றை மூவகைப் படுத்தலாம். முதல் வகையில் நிலம் குடும்ப உறுப்பினர்களுக்கு இடையே உடைமை மாற்றம் செய்யப்பட்டது. இரண்டாவது போலி மாற்றங்கள். இவை பதிவு செய்யப்படவில்லை. நம்பிக் கைக்குரிய நபர்களுக்குச் சொத்துகள் பதிவாகாத பத்திரங்களில் எழுதி வைக்கப்பட்டன. மூன்றாவதாக, உண்மையாக நிலத்தை விற்றுள்ளார்கள். இவை சட்டரீதியாகப் பதிவு செய்யப்பட் டுள்ளன. நிலஉச்சவரம்பைத் தொடர்ந்து ஏற்பட்ட நில உடைமை மாற்றங்களில் முதல் இருவகைகளும் முக்கியமானவை அல்ல. ஏனெனில், குடும்ப முழுவதற்கும் உள்ள நிலவுடை மையைக் கருதுவதால் தனி நபர்களுக்கு மாற்றப்பட்ட நிலம் (இரண்டாவது வகை) செல்லுபடியாகாது.

உபரியான நிலம்

நில உச்சவரம்பின் முக்கிய நோக்கம் உபரியான நிலத்தை மற்றவர்களுக்குப் பகிர்ந்து அளிப்பது ஆகும். இதில் இரு பிரச் சினைகள் உள்ளன. ஒன்று உபரியான நிலத்தை நிலக்கிழார் களிடமிருந்து வாங்குவதற்காக இழப்பீடு கொடுக்கவேண்டும். இரண்டாவதாக நிலத்தை மறுபகிர்வு செய்பவர்களிடமிருந்து நிலத்தின் மதிப்பை வசூலிக்க வேண்டும்.

நில உச்சவரம்பை அமுலாக்கியதன் விளைவாக, சுமார் **2** மில்லியன் ஏக்கர் உபரியான நிலம் அரசாங்கத்திற்குக் கிடைத் துள்ளது என்று 4-வது திட்ட நகலில் குறிப்பிட்டுள்ளார்கள். மாநில வாரியாகக் கிடைத்துள்ள உபரியான நில விவரங்கள் அடுத்துள்ள அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

மொத்தம் சுமார் 328 மில்லியன் ஏக்கர் சாகுபடி செய்யப் படுகிறது. அதில் 2 மில்லியன் ஏக்கர் மட்டுமே உபரியாக அரசாங்கத்திற்குக் கிடைத்துள்ளது. இது அரசாங்கத்தின் மதிப் பீட்டைவிட மிகக் குறைவாகவுள்ளது.

பொதுவாக நில உச்சவரம்பை ஏற்படுத்துவதில் மாநிலங் கள் ஆரம்பத்திலிருந்தே அக்கறை காட்டவில்லை. நிலச் சீர்திருத்தங்களின் நோக்கம் நிறைவேற்றப்படவில்லை. சட்ட சபை நடவடிக்கைகள் ஆமை வேகத்தில் நடைபெற்றன. நில உச்சவரம்பு என்பது அரசாங்கத்தின் குறிக்கோளாக மட்டும் இல்லை. இதை ஒரு சாதனமாகவும், இதன் வாயிலாக உற்பத்தித் திறனை உயர்த்துவது அரசாங்கத்தின் நோக்கமாகவும் இருந்தன.

அட்டவணை 8·2

**உச்சவரம்பால் கிடைத்துள்ள உபரியான நிலம்** +

| மாநிலம் | உபரி ஏக்கர்கள் [ஆயிரம்] [000] | மாநிலம் | உபரி ஏக்கர் [000] |
|---|---|---|---|
| மேற்குவங்காளம் | 777 | மகாராஷ்டிரம் | 163 |
| ஜம்மு, காஷ்மீர் | 450 | மத்தியப்பிரதேசம் | 67 |
| பஞ்சாப் | 369 | குஜராத் | 39 |
| உத்தரப்பிரதேசம் | 223 | அஸ்ஸாம் | 34 |
| | | தமிழ்நாடு | 20 |

இதைச் செம்மையாகப் பயன்படுத்தவேண்டுமானால் நில உடைமை கணிப்பு அதற்கு முன்நிபந்தனையாக இருக்க வேண்டும். ஆனால், நில விவரங்கள், உரிமைப் பத்திரங்கள் பல மாநிலங்களில் முழுமையாக இல்லை. நிலஉடைமை கணிப்பு நில உச்ச வரம்பினால் கிடைக்கக்கூடிய உபரியான நிலத்தை வெளிப்படுத்தியிருக்கக்கூடும். ஆனால், மாநிலங்கள் அக்கறை காட்டவில்லை. அவை ஆர்வம் இன்றிச் செயல்பட்டன. இதைப் பற்றி டேனியல்த்ரோனர் கூறிய கருத்துகளை இங்கே கூறலாம். நிலச் சீர்திருத்தங்களைச் செயல்படுத்துவதில் அசாதாரண தாமதம் ஏற்பட்டது. நிலச் சீர்திருத்தங்கள்பற்றி முடிவு எடுக்கவும், முடிவு செய்தவற்றைச் சட்டமாக்கவும், நீண்ட காலதாமதம் ஏற்பட்டது. பொதுவான ஆர்வம் இன்மையும், குழு நலன்களின் ஆதிக்கமும் இதற்கு முக்கிய காரணங்களாக இருந்தன. சட்ட சபைகளிலும், நாடாளு மன்றத்திலும் உறுப்பினர்களாக உள்ளவர்கள் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ நிலக்கிழார்களின் பிரதிநிதிகளாக உள்ளனர். நிலச்சீர்திருத்தங்கள் சரிவர நிறை

+ ஆதாரம்: முன்கூறியபடி.

வேற்றப்படவேண்டுமானுல் அடிப்படையான அமைப்பு முறை மாற்றங்கள் தேவைப்படுகின்றன. மேற்படி மாறுதல்கள் நிலக் கிழாரின் நலன்களுக்குப் பாதகமாக உள்ளன. சட்டசபை உறுப் பினர்கள் இங்ஙனம் குழு நலன்களின் ஆதிக்கத்தைப் பிரதிபலிப்ப தால் முக்கியமான சீர்திருத்த முயற்சிகளைச் செயல்படுத்த முடிய வில்லை.

அதிக அளவில் ஏற்பட்ட காலதாமதம் காரணமாக வரப் போகும் நில உச்சவரம்புபற்றிய விவரங்களை யாவரும் அறிந்து கொண்டனர். நில உச்சவரம்பால் நிலத்தை இழக்கக்கூடும் என்று அஞ்சியவர்கள் தங்கள் நிலத்தின் ஒரு பகுதியை விற்ற னர்; பாகப்பிரிவினை செய்தனர்; நண்பர்களுக்கும் உறவினர் களுக்கும் நிலத்தை உடைமையாக்கினர் (பட்டாவை மாற்றி னர்). இவ்வாறு பல வழிகளில் உச்சவரம்பிலிருந்து தப்பித்துக் கொண்டனர். சுருக்கமாக நில உச்சவரம்பை நிர்ணயிப்பதி லும், உபரியான நிலத்தைப் பெறுவதிலும் ஓர் அரிய சந்தர்ப் பத்தை நாம் இழந்து விட்டோம்.

நில உச்சவரம்பை முடிந்துபோன ஒரு நிகழ்ச்சியாகக் கருதமுடியாது. ஆரம்பத்தில் தவறு, தெரிந்தோ தெரியாமலோ ஏற்பட்டது உண்மைதான். ஆனுல், இப் பிரச்சினையைத் தொடர்ந்து மறுபரிசீலனை செய்யவேண்டும். சட்டங்கள் இயற்றுவதிலும், அதை அமுலாக்குவதிலும் உள்ள குறைகளை அறிந்தவுடன் அதை அகற்ற முற்படவேண்டும். கடந்த மூன்று ஆண்டுகளாக நாடெங்கிலும் பசுமைப் புரட்சி பரவி வருகிறது. நிலத்தின் உற்பத்தித் திறன் வெகுவாக உயர்ந்துவிட்டது. பசுமைப் புரட்சி ஒரு நிலையான மாற்றத்தை ஏற்படுத்துமே யானுல், அதன் அடிப்படையில் 'குடும்ப உடைமை' என்ருல் என்ன என்பதை மறுபரிசீலனை செய்யலாம். நிகர வருமானம் ரூ. 1200 அளிக்கக்கூடிய நிலப்பரப்பு குடும்ப உடைமையாகக் கூறப்பட்டது. தற்காலத்தில் பொதுவான விலை மட்டங்கள் உயர்ந்துள்ள காரணத்தாலும், விவசாயிகளுக்கு மேலும் ஊக்கம் அளிக்கும் வகையிலும் நிகர வருமான அளவு மேலும் உயர்த்தப் படவேண்டும். அவ்வாறு உயர்த்தப்பட்ட வருமான அடிப்படை யில் குடும்ப உடைமையும், உச்சவரம்பும் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

**பூதானம்**

பூதானம் என்பது ஆச்சாரியா விநோபா பாவே அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட இயக்கம். இது 1951இல் ஆரம்பமாகியது.

அதிகாரபூர்வமான இயக்கமாக இதைக் கருத முடியாது. தன்னுடைய ஆளுமையின் காரணமாக மக்களின் பிரச்சினைகளைப் புரிந்துகொள்ளுவதுடன், அதற்கான வழிகளையும் இவர் காண முற்படுகிறார். கட்டாயப்படுத்திச் செய்யும் காரியங்கள் சட்டத்தின் வரம்புக்கு உட்பட்டதாக இருந்தாலும் எதிர்பார்க்கப்படும் விளைவுகளை அவை தோற்றுவிப்பதில்லை. (கிராமிய) நிலப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவேண்டுமானால் மனமாற்றம் அவசியம். பூதானம் என்று அழைக்கப்படும் பூமிதான இயக்கத்தின் வெற்றியைத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலப்பரப்பைக் கொண்டு அளந்து காட்டமுடியாது. மக்கள் தாங்கள் விருப்பப்பட்டுக் கொடுத்துள்ளனர். இது மக்களின் மனமாற்றத்தையும், அவர்கள் கிராமியப் பிரச்சினைகளை உணர்ந்துள்ளனர் என்பதையும் முக்கியமாக எடுத்துக்காட்டுகின்றது.

பூதான இயக்கம் என்பது நிலச் சீர்திருத்தங்களின் அவசியத்தை வலியுறுத்தியது. சட்ட ரீதியாகக் கொண்டு வரப்படும் சீர்திருத்தங்கள், முக்கியமாக உச்சவரம்பு, சாகுபடிச் சீர்திருத்தங்கள், இடைநிலையாளர் ஒழிப்பு முதலியன மனக் கசப்பையும், விரக்தியையும் ஏற்படுத்தும். இதைத் தவிர்ப்பதற்காகக் கிராமியப் பொருளாதாரப் பிரச்சினைகளையும் நிலப் பிரச்சினைகளையும் கிராமமக்கள் புரிந்துகொள்ளும்படி செய்து, அதற்குத் தீர்வு காணும் வகையில் நிலத்தைத் தானமாகக் கொடுக்கும்படி கேட்கிறார்.

1967வரை சுமார் 42·7 இலட்சம் ஏக்கர்கள் தானமாகக் கொடுக்கப்பட்டன. அதில் சுமார் 12 இலட்சம் ஏக்கர்கள் பகிர்ந்து கொடுக்கப்பட்டுள்ளன. பூதானத்தைத் தொடர்ந்து கிராம தானம் கொடுக்கும்படி கேட்டார். கிராம சமுதாயத்தின் அடிப்படையில் நிலம் அனைத்தும் பரிபாலனம் செய்யவேண்டிக் கிராம தானம் கேட்டார். 1967வரை சுமார் 39,672 கிராமங்கள் தானமாகக் கொடுக்கப்பட்டன.

திரு. விநோபா பாவே சுமார் 50 மில்லியன் ஏக்கர்களைத் தானமாக வாங்கவேண்டும் என்ற குறிக்கோள் உடையவர். இதில் அவர் தானமாகப் பெற்ற நிலம் 50 இலட்சம் ஏக்கர்கூட இல்லை. அவரது குறிக்கோள் அளவுக்கு நிலம் தானமாகக் கொடுக்கப்படவில்லை என்றாலும், தனி ஒருவரின் வேண்டுகோள்களுக்கு இணங்கி, அவரது கோரிக்கையை ஏற்று, பரம்பரை பரம்பரையாகச் சொந்தமாக இருந்த பூமியைத் தானமாகக் கொடுக்க

மக்கள் முன்வருகிறார்கள் என்றால், அது அவரது ஆளுமையின் காரணமாகத்தான் என்று கூறலாம்.

பூதான இயக்கத்தால் நிலப்பிரச்சினை தீர்ந்துவிடப் போவதில்லை. இருந்தபோதிலும் பிரச்சினையின் முக்கியத்துவத்தைப் பொதுமக்களுக்கு விளக்கிக் கூறியதன் மூலம் மக்கள் தங்கள் பிரச்சினைகளை நன்றாகத் தெரிந்துகொள்ளுகிறார்கள். இது ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துகிறது. கிராம மறுமலர்ச்சியின் ஒரு கூறாக இதைக் கருதவேண்டும்.

# 9. அரசின் வேளாண் கொள்கை

மக்கள் நெரிசல் அதிகரிக்காத ஒரு காலத்தில் மரபான பழக்கவழக்கங்களும், அனுபவ அறிவும் இந்திய விவசாயத்திற்குப் போதுமானவைகளாக இருந்தன. கிராம சமுதாயம் படி அமைப்பு உடையதாக இருந்தபோதிலும், கிராமமக்கள் அனைவருக்கும் இது பாதுகாப்பு அளித்தது. கிராம சமுதாய அமைப்பு இருவகைகளில் மக்களைக் காத்து வந்தது. பொருளாதார உற்பத்தியில் இயல்பாக ஏற்படும் ஏற்ற இறக்கங்களிலிருந்தும், அரசியல் மாறுதல்களிலிருந்தும் கிராமமக்களைக் காத்து வந்தது. இந்தப் பெருமிதமான நிலை தொடர்ந்து நீடிக்கவில்லை. ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆண்ட காலத்தில் உலக மக்கள் கண்டும், கேட்டும் இல்லாத அளவுக்கு மிகப் பெரிய பஞ்சங்கள் ஏற்பட்டன. பஞ்சங்களின் உறைவிடமாகப் பலரும் இந்தியாவை எண்ணினர். பஞ்சங்களின் கொடிய விளைவுகள் அனைவரின் கவனத்தையும் விவசாயத்துறையின் பக்கம் ஈர்த்தன. அரசாங்கமும் விவசாயத்துறையை மேம்படுத்த எண்ணியது. பொதுமக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துவதும் அவசியமாக இருந்தது. அரசாங்கத்தின் கொள்கைகளை உருவாக்கும் முயற்சிக்கு உதவியாகப் பஞ்ச ஆணைக் குழுக்களின் அறிக்கைகளும், பரிந்துரைகளும் இருந்தன. முக்கியமாக, 1880, 1898, 1901 ஆகிய ஆண்டுகளில் நியமிக்கப்பட்ட பஞ்ச ஆணைக் குழுக்களின் அறிக்கை குறிப்பிடத்தக்கவை. இவை தவிர, 1903 பாசன ஆணைக்குழுவும், 1915 கூட்டுறவுக் கமிட்டியும் சிறந்த கருத்துரைகளை வழங்கியுள்ளன.

விவசாயத்துறையில் 1778 முதல் அரசாங்கம் ஆர்வம் காட்டி வந்துள்ளது. கிழக்கு இந்தியக் கம்பெனியின் இயக்குநர் வாரியம் இந்தியாவில் பருத்தி சாகுபடியைப் பிரபலப்படுத்தவும், அதற்கு ஆதரவு அளிக்கவும் வேண்டும் என்று இந்திய அரசாங்

கத்தைக் கேட்டுக்கொண்டது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் இந்தியாவில் பருத்தி சாகுபடியைப் பொதுவாக அதிகரிக்கவும், புதிய வகைப் பருத்தியைப் பிரபலப்படுத்தவும் பல தனி நபர் சங்கங்கள் தோன்றின. இந்தச் சங்கங்களில் பல ஐரோப்பியர்கள் உறுப்பினர்களாக இருந்தனர். பின்னர் அமெரிக்க உள்நாட்டுப் போரின் காரணமாக இந்தியப் பஞ்சிற்கு அதிக தேவை ஏற்பட்டுப் பருத்தி சாகுபடி அதிகரித்தது. பருத்தி சாகுபடியை விரிவுபடுத்த இந்திய அரசாங்கம் ஆவன செய்தது. மத்திய மாநிலத்தில் பருத்தி ஆணையாளர் ஒருவர் நியமிக்கப்பட்டார். சில சோதனைப் பண்ணைகள் நிறுவப்பட்டன. வெளிநாடுகளிலிருந்து கொண்டு வந்த பல புதிய ரகப் பருத்திகளை இந்தியாவில் சாகுபடி செய்ய முடியுமா என்று சோதித்தார்கள். இந்தச் சோதனைகள் அதிக அளவு வெற்றி அளித்தன. பருத்தியைத் தவிர, உருளைக்கிழங்கு, சின்கோனு, தேயிலை முதலியன இந்தியாவில் புதிதாகப் பயிரிடப்பட்டன. புதிய் வர்த்தகப்பயிர்களின் வளர்ச்சி (முன்னேற்றம்) புராதன முறையில் சாகுபடியாகும் உணவுப் பயிர்களின் விளைச்சலை அதிகரிக்கவில்லை; விவசாயச் சாகுபடி முறைகளைச் சீர்திருத்தவும் உதவவில்லை.

வங்காளத்திலும், ஒரிஸ்ஸாவிலும் மிகப் பெரிய அளவில் பஞ்சம் ஏற்பட்டதை யடுத்து 1866இல் ஓர் ஆணைக்குழு நியமிக்கப்பட்டது. விவசாய இலாகாவை ஏற்படுத்தவேண்டும் என்று இந்த ஆணைக்குழு பரிந்துரைத்தது. விவசாய இலாகாவை ஆரம்பிக்கவேண்டும் என்று கருத்துத் தெரிவித்த முதல் ஆணைக்குழு இதுதான். ஆனுல், இக்கருத்தைச் செயல்படுத்துவதில் அரசாங்கம் அதிக ஆர்வம் காட்டவில்லை. 1869இல் லங்காஷயரில் உள்ள தொழில் அதிபர்கள் இந்தியாவில் பருத்தி சாகுபடியை ஊக்குவிக்க மீண்டும் முயற்சி செய்தனர்.[1] பருத்தி சாகுபடியை நாடெங்கிலும் விரிவுபடுத்துவதற்கு மாநிலங்கள் தோறும் விவசாய இலாகாக்களைத் தோற்றுவிக்கவேண்டும் என்று விரும்பினுர்கள். ஆனுல், இந்த வேண்டுகோள் எவ்விதப் பயனையும் தரவில்லை. இதற்குள் 1878இல் பெரிய பஞ்சம் நாடெங்கிலும் தோன்றியது.

[1] இந்தியாவில் பருத்தியைச் சாகுபடி செய்வதற்கான வாய்ப்புகளையும், வழிமுறைகளையும் ஆராய்ந்து கூறுவதற்காக 1848 ஜான் பிரைட் என்பவர் தலைமையில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது என்பதை இந்நூலின் வேருெரு பகுதியில் கூறியிருக்கிறேம். —பார்க்கவும்: அத்தி. 5.

1880இல் பஞ்ச ஆணைக்குழு நியமிக்கப்பட்டது. இந்தியாவில் பஞ்சங்கள் ஏற்படுவதற்கான காரணங்களை இந்த ஆணைக் குழு முழுமையாகப் பரிசீலனை செய்தது. விவசாயத்தைச் சிறப்புறச் செய்வதற்கான பரிந்துரைகளை வழங்கியது. பாசன வசதிகள், போக்குவரத்து வசதிகள் ஆகியவற்றை நாடெங்கிலும் ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியது. இந்தியாவில் தொழில் வளர்ச்சி ஏதும் இல்லாமல் பொருளாதார அமைப்பு தேக்கம் அடைந்துள்ள காரணத்தால் பெருகிவரும் மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கமுடியவில்லை. வருமானம் ஈட்டமுடியாத காரணத்தால் மக்கள் ஏழைகளாக இருக்கின்றனர். இந்தியப் பஞ்சங்களுக்குத் தானியக் கிடைப்பருமையை விட, வாங்கும் சக்தி இன்மைதான் முக்கிய காரணம். எனவே, தொழில் வளர்ச்சியை ஏற்படுத்துவதன் மூலம் வேலை வாய்ப்புகளையும், வருமானம் ஈட்டுவதற்கான சூழலையும் உருவாக்க முடியும்.

இந்த ஆணைக்குழு பல முக்கிய பரிந்துரைகளை வழங்கியது. இந்திய அரசாங்கமும், மாநில அரசாங்கமும் விவசாய இலாகாக்களைத் தோற்றுவிக்கவேண்டும். இவை சில பொறுப்புகளை ஏற்றுக்கொண்டு செயல்படவேண்டும். இந்தியாவில் தோன்றிய பஞ்சங்களையும், அதற்கான காரணங்களையும், அவற்றின் விளைவுகளையும் தொகுத்தல்வேண்டும். வரலாற்று அனுபவங்களைக்கொண்டு பஞ்சத் தடுப்பு வேலைகளையும், நிவாரண வேலைகளையும் சிறந்த முறையில் செயல்படுத்தலாம். புதிதாக ஏற்படுத்தப்படும் விவசாய இலாகாக்கள் பஞ்ச நிவாரண வேலைகளை ஏற்கவேண்டும். இந்திய அரசாங்க விவசாய இலாகாவைத் தவிர மாநிலங்கள் ஒவ்வொன்றிலும் விவசாய இயக்குநர் ஒருவரின் பொறுப்பில் தனியாக விவசாய இலாகாக்கள் ஏற்படுத்தவேண்டும். ஒவ்வொரு மாநிலத்தின் சிறப்பான பிரச்சினைகளை ஆராய்வதற்கு இது உதவும். அரசாங்கம் பஞ்ச காலங்களில் நில அடமானத்தின்பேரில் கடன் கொடுக்க வேண்டும். விவசாயிகளின் கடன் சுமையைக் குறைக்கச் சட்டங்கள் இயற்றவேண்டும். இதைச் செயல்படுத்த நீதிமன்றங்கள் இருக்கவேண்டும். விவசாயிகள் கொடுக்கும் வட்டி விகிதங்கள் நியாயமானதாக இருக்கவேண்டும். 1880 பஞ்ச ஆணைக்குழுவின் பரிந்துரைகளை அரசாங்கம் செயல்படுத்தவில்லை. மாநில விவசாய இலாகாக்கள் எந்த அடிப்படையில் செயல்படவேண்டும் என்பது குறித்துப் பத்து ஆண்டு காலத்திற்கு விவாதித்தார்களேயல்லாமல் அவ்வாறு விவசாய இலா

காக்களை ஏற்படுத்தவில்லை.[2] இந்திய அரசாங்கத்தின் மெத்தனமான போக்கை விவசாய அரச ஆணைக்குழு கண்டனம் செய்துள்ளது.

**டாக்டர் வோயல்கரின் அறிக்கை**

அக்காலத்தில் பிரிட்டனின் விவசாயப் புரட்சிக்கு விவசாய இரசாயனம்[3] பேருதவியாக இருந்தது. பிரிட்டனைப்போல இந்தியாவின் விவசாய வளர்ச்சிக்கும் விவசாய இரசாயனம் பயன்படும் என்று கருதினார்கள். இந்த நோக்கத்தோடு அரச விவசாய சங்கத்தின் ஆலோசகராகப் பணியாற்றிய டாக்டர் ஜே. ஏ. வோயல்கரை (Dr. J. A. Voelkar) 1889இல் இந்தியா மந்திரி அனுப்பி வைத்தார். இந்திய விவசாயத்தின் முன்னேற்றத்திற்கு விவசாய இரசாயனத்தைப் பயன்படுத்துவதற்கான சிறந்த வழிமுறைகளை ஆராய்ந்து கூறுமாறு வோயல்கர் கேட்டுக்கொள்ளப்பட்டார். இவர் இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்து 1891இல் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தார். அதன்பின் 20-வது நூற்றுண்டில் விவசாயத்தை ஆராய்ந்த அரச ஆணைக் குழு (1928) டாக்டர் வோயல்கரின் பரிந்துரைகளை முழுமையாக ஏற்றுக்கொண்டது.

இந்திய விவசாயம் பிற்போக்கான விவசாயம் அல்ல என்பதை வோயல்கர் தெளிவுபடுத்தினர். இருந்தபோதிலும் நாடெங்கிலும் விவசாய முறைகள், நுட்பங்கள் வேறுபடுகின்றன. இவ்வாறு விவசாய முறைகள் மாறுபடுவதற்குச் சூழ்நிலை, அமைப்பு முறை முதலியன முக்கிய காரணங்களாக இருக்கின்றன. மனிதர்கள், சூழ்நிலை, அறியாமை ஆகிய மூன்று அடிப்படையில் விவசாயத்தின் பிற்போக்கான நிலைமையை விளக்கிக் கூறமுடியும். இந்தியர்களில் சில வகுப்பினர் அல்லது சாதியினர் மற்றவர்களைக் காட்டிலும் சாகுபடி வேலையில் தேர்ச்சி உடையவர்களாக இருக்கின்றனர். இதனுல் சாகுபடி நிலை

[2] 1880 ஆணைக்குழுவின் பரிந்துரைகள் நீண்ட கால தாமதத்திற்குப் பின்னர் செயல்படுத்தப்பட்டன. விவசாய இலாகாக்களை ஏற்படுத்த அதிக ஆண்டுகள் சென்றன. அப்படி ஆரம்பித்த பின்னரும் துவக்கத்தில் சில ஆண்டுகளில் உள்ளூர்களில் நிலையத்தை அமைப்பதிலும், அதை விரிவுபடுத்துவதிலும் கவனம் செலுத்தினர். இந்த நிலையங்கள் விவசாயப் புள்ளி விவரங்களைச் சேகரித்தன; கிராமப் பத்திரங்களைத் தயாரித்தன. இவற்றைக் கவனிப்பதற்காக நியமிக்கப்பட்ட நிபுணர் விவசாய வளர்ச்சியிலும், ஆராய்ச்சியிலும் கவனம் செலுத்தாமல் வகைப்படுத்தும் வேலைகளில் ஈடுபட்டு இருந்தார்கள். தாவர நூல் வல்லுநர்கள் தாவர வர்க்கங்களைக் கண்டுபிடித்து அவற்றை வகைப்படுத்தினுர்கள். புவி அமைப்பு இயல் வல்லுநர்கள் மலைகளையும், படிவங்களையும் ஆராய்ந்தனர். இவ்வாருக, விஞ்ஞான ஆராய்ச்சி வகைப்படுத்தும் நிலையிலும், முறைப்படுத்தும் நிலையிலும் இருந்தது. பார்க்கவும்: வி. பி. சிங், இந்தியப் பொருளாதார வரலாறு—1857—1956. முதல் பகுதி, பக்கம்: 198 - 199. த. வெ. க. 185.

[3] இரசாயனத்தை வேதியியல் என்றும் கூறுவார்கள்.

மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. இரண்டாவதாக, சுற்றுச் சூழல் முக்கியமானது. காலநிலை, மண் வளம், பாசன வசதிகள், உரம், காடுகள், மேய்ச்சல் நிலம் முதலியன விவசாயத்திற்கு அடிப்படையான சூழ்நிலையை நிர்ணயிக்கின்றன. இதைத் தவிரச் சமூக அரசியல் சூழ்நிலைகளும் இடத்திற்கு இடம் வேறுபடுகின்றன. மூன்றாவதாக இந்திய விவசாயிகள் விஞ்ஞான அடிப்படையில் தங்கள் அனுபவத்தையும், அறிவையும் பகிர்ந்து கொள்ளுவதில்லை. செய்தித் தொடர்பு இல்லாத காரணத்தால் நாடெங்கிலும் விவசாயப் பழக்க வழக்கங்கள் வெவ்வேறாக இருக்கின்றன.

விவசாயத்தில் ஈடுபட்ட மக்களைப் பொதுவாக எடுத்துக் கொண்டால் இந்திய விவசாயிகள் ஐரோப்பிய விவசாயிகளைவிட எந்த விதத்திலும் சளைத்தவர்கள் அல்லர். இருந்தபோதிலும் அவர்களுடைய ஆற்றல்களையும், உழைப்பையும் தகுந்த முறையில் பயன்படுத்துவதற்கு ஏற்றதொரு அமைப்பு முறை இல்லாமையால் இந்திய விவசாயம் பின்தங்கிய நிலைமையில் இருக்கிறது. இந்திய விவசாயிகள் செயல்படுகின்ற அமைப்பு முறையை மாற்றுவது அவசியம்.

இந்தியா முழுவதும் நிலவிய வெவ்வேறு விவசாயப் பழக்க வழக்கங்கள், முறைகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு விவசாயத்தைச் சீர்படுத்துவதான வழிமுறைகளைப் பரிந்துரைத்தார். விவசாயத்தைச் சீர்திருத்துவதற்கு அரசாங்கமும், தனி நபர்களும் தகுந்த நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். வோயல்கர் தனது அறிக்கையில் மண் வளம், உரம், காடுகள், கால்நடைகள், சிறந்த விதை, கிராமக் கல்வி, ஆராய்ச்சி, புள்ளி விவரங்களைச் சேகரிக்கும் அமைப்பு முறை முதலிய தலைப்புகளில் அவற்றின் முன்னேற்றத்திற்கான பரிந்துரைகளை வழங்கியுள்ளார்.

இந்திய மண் வளம் மிக்கது. தகுந்த உரம் இடாமையால் இதன் உற்பத்தித் திறன் குன்றிவிட்டது. எண்ணெய் வித்துகள், பருத்தி, கோதுமை முதலியன பெருமளவுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதைச் சுட்டிக்காட்டியுள்ளார். பயிர்களின் சாகுபடியால் குறைந்துள்ள மண் வளத்தைத் திரும்பவும் ஈடு செய்ய வேண்டும். மண் வளத்தில் எந்தெந்த ஊட்டப்பொருள்கள் குறைந்து உள்ளன என்பதை அறிந்து அதை ஈடு செய்வதற்கு ஏற்ப உரமிடுதல்வேண்டும். எனவே, விவசாய உற்பத்தித்திறன் மண் வளத்தைச் சார்ந்துள்ளது.

இந்திய விவசாயிகள் மண் வளத்தைப் பாதுகாக்கும் உரத்தின் அவசியத்தை[4] உணராமல் இல்லை. மாட்டுச் சாணம் சிறந்த எரு என்பதை அறிந்துள்ளனர். இருந்தபோதிலும் அதைவிட மலிவான எரி பொருள்கள் கிடைக்காமையால் மாட்டுச் சாணத்தை எருவாகப் பயன்படுத்தாமல் எரி பொருளாகப் பயன்படுத்துகின்றனர். மலிவான எரி பொருள்கள் கிடைப்பதற்குத் தகுந்த நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்கவேண்டும் என்று வோயல்கர் வற்புறுத்தினர். எரி பொருள்களைப்பற்றிக் கூறியதுடன், காடுகளைப் பாதுகாக்க வேண்டியதன் அவசியத்தையும் கூறியுள்ளார். காடுகள் நேரிடையாகவும், மறைமுகமாகவும் அரசாங்கத்திற்கு வரி வருமானத்தைத் தருகின்றன. அரசாங்கத்தின் கான் வளக்கொள்கை வரி வருவாயை மட்டும் முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்கக்கூடாது. காடுகள், மண் வளத்தைப் பாதுகாப்பதன் மூலம் விவசாயத்திற்கு உதவியாக இருக்கின்றன. எரி பொருள்கள் காடுகளிலிருந்து கிடைக்குமானால் இது மேலும் பயன் உடையதாக இருக்கும். விவசாய உற்பத்தியை நிலைபெறச் செய்வதன் மூலம் காடுகள் அரசாங்க வருமானத்தையும் நிலைபெறச் செய்கின்றன.

விவசாயத்தின் உற்பத்தித்திறன் குறைந்து காணப்படுவதற்கு அமைப்பு நிலைகளும் காரணமாக இருக்கின்றன. நில உடைமைகள் சிறியதாக இருக்கின்றன. விவசாயிகளிடம் சேமிப்பு அல்லது மூலதனம் ஏதுமில்லை. இவர்கள் அதிகம் கடன்பட்டிருந்தனர். இவர்கள் கடன் வாங்குவதற்கான அமைப்புகள் ஏதுமில்லை. இவை யாவற்றையும்விட நில உரிமைகள், சாகுபடி உரிமைகள் குறைபாடு உடையனவாக இருந்தன. விவசாயிகள் செயல்படும் சுற்றுச் சூழலில் உள்ள குறைபாடுகள் இத்துறையின் உற்பத்தித் திறனைக் குறைத்துவிட்டன.

இந்தியாவில் ஒவ்வொரு பகுதிகளிலும் வெவ்வேறான விவசாயப் பழக்க வழக்கங்கள் காணப்படுகின்றன. இவற்றை முழுமையாக ஆராய்ந்து, (அவற்றை) அகற்றுவதற்கான வழிமுறைகளைக் காணவேண்டும். அவ்வாறு இல்லாமல் மேலை நாடுகளில் உள்ள விவசாய முறைகளையும், பழக்க வழக்கங்களையும் இந்தியாவில் புகுத்தவேண்டும் என்று நினைப்பதும், அவற்றைக் கொண்டு இந்திய விவசாயப் பிரச்சினைகள் அனைத்திற்கும் தீர்வு

[4] தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

ஏரினும் நன்றால் எருவிடுதல்; கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு.

—திருக்குறள், 1037, 1038.

காண நினைப்பதும் முற்றிலும் தவறானவை. இந்தியாவில் கல்வி வளர்ச்சிக்கு—சிறப்பாக விவசாயக் கல்வியின் வளர்ச்சிக்கு—அதிக முக்கியத்துவம் கொடுக்கவேண்டும்.

### 1905 வரை விவசாயக் கொள்கை

1905 வரையிலும் இந்திய அரசாங்கத்தின் கொள்கை வோயல்கரின் அறிக்கையை அடிப்படையாகக்கொண்டிருந்தது. விவசாய இலாகாக்கள் தோற்றுவிக்கப்பட்டன. அதை நிருவகிக்கும் பொறுப்பு தேர்ச்சி உடைய நிபுணர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. 1890இல் நடைபெற்ற விவசாய மாநாட்டின் ஆலோசனைக்கேற்ப, (மேற்படி மாநாட்டில் டாக்டர் வோயல்கர் பங்கு கொண்டார்) டாக்டர் லெதர் (Dr. J. W. Leather) என்பவர் இந்திய அரசாங்கத்தின் விவசாய இரசாயன ஆலோசகராக நியமிக்கப்பட்டார். அதன் பின்னர் மேலும் பல விவசாய நிபுணர்கள் நியமிக்கப்பட்டனர். இந்தச் சமயத்தில் சிகாகோவில் உள்ள ஹென்றி பிப்ஸ் (Henry Phipps) என்பவர் 30,000 பவுன் ஸ்டர்லிங் தொகையை வைஸ்ராய் கர்ஸன் பிரபுக்கு நன்கொடையாகக் கொடுத்தார். இத் தொகையை இந்தியாவில் விஞ்ஞான ஆராய்ச்சிக்காகப் பயன்படுத்துமாறு அவர் கேட்டுக்கொண்டார். இதைப் பயன்படுத்தி 1903இல் பூசாவில் விவசாய ஆராய்ச்சி நிலையம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது.

சென்ற நூற்றுண்டின் இறுதியில் இரு மிகப் பெரும் பஞ்சங்கள் ஏற்பட்டன. இதைப் போன்ற கொடிய பஞ்சம் கடந்த 200 ஆண்டு காலத்தில் ஏற்பட்டதில்லை என்று கருத்துத் தெரிவித்துள்ளனர். மேற்படி பஞ்சத்தை ஆராய்ந்த 1901 பஞ்ச ஆணைக்குழு விவசாய ஆராய்ச்சியின் அவசியத்தை வலியுறுத்தியது. சிறப்புத் தேர்ச்சிபெற்ற நிபுணர்களின் ஆராய்ச்சியைக் கொண்டுதான் இந்திய விவசாயப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியும் என்று கருத்துத் தெரிவித்தது. இந்த ஆணைக்குழு மூன்று முக்கிய பரிந்துரைகளை வழங்கியது. மாநில விவசாய இலாகாக்கள் சிறப்பாகச் செயல்படுவதற்கு அவசியமான நிபுணர்களை நியமித்தல். இரண்டாவதாக விவசாயிகளின் நிலம் விற்கப்படுவதைத் (முக்கியமாகக் கடன் கொடுத்தவர்களுக்கு உடைமைமாற்றம் செய்வதை) தடுக்கும் சட்டங்கள் இயற்ற வேண்டும். மூன்றுவதாக விவசாயிகள் கடன் வாங்குவதற்குக் கூட்டுறவு நாணய சங்கங்களை ஏற்படுத்துதல்.

இந்த நூற்றுண்டின் துவக்கத்தில் ரமேஷ். டட் உள்பட ஓய்வு பெற்ற 10 பிரிட்டிஷ் அலுவலர்கள் இந்தியா மந்திரியாக இருந்த

ஹாமில்டன் பிரபுவிடம் ஒரு மகஜர் சமர்ப்பித்தனர். அரசாங்கத்தின் விவசாயக் கொள்கையை இந்த மகஜர் குறை கூறியது. நில உரிமைகளையும், நிலவரி விகிதங்களையும் முழுமையாக மாற்றினாலன்றி இந்திய விவசாயத்தில் தோன்றும் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியாது என்று கூறப்பட்டது. மேற்படி மகஜருக்கு அதிகார பூர்வமாகப் பதிலளிக்கவில்லை. (அப்படிப் பதிலளிப்பதன் மூலம் மகஜரில் கூறிய குற்றச்சாட்டுகளை ஏற்றுக் கொண்டதாக இருக்கும்.) இருந்தபோதிலும் வைஸ்ராய் கர்ஸன் பிரபு இந்திய அரசாங்கத்தின் விவசாயக் கொள்கையை விளக்கும் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார். டட் குழுவினர் குறிப்பிட்ட குற்றச்சாட்டுகளைத் திட்டவட்டமாக மறுத்துள்ளார். அவ்வாறு மறுத்துரைத்த பின்னரே பல சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. காட்டாக 1904இல் கூட்டுறவு சங்கங்கள் சட்டம் இயற்றப்பட்டது. 1905இல் இந்திய (அரசாங்க) விவசாய இலாகாவும், மாநில விவசாய இலாகாகளும் விரிவுபடுத்தப்பட்டன. 1906இல் இந்திய விவசாயப் பணித்துறை (Indian Agricultural Service) ஆரம்பிக்கப்பட்டது. முதல் உலகப் போர் வரை உள்ள ஆண்டுகளில் பாசன வசதிகள் அதிகரிக்கப்பட்டன. இந் நிகழ்ச்சிகள் யாவும் அரசாங்கத்தின் கவனம் விவசாயத் துறையின் பக்கம் திரும்பியிருப்பதை எடுத்துக்காட்டுகின்றன. ஒரு காலத்தில் பஞ்சங்கள் ஏற்பட்ட பின்னர் நிவாரண வேலைகள் அளித்தால் போதும் என்று இருந்த அரசாங்கத்தின் கொள்கை முற்றிலும் மாறிவிட்டது. விவசாய வளர்ச்சியை ஊக்குவிக்கும் முயற்சிகள் பல எடுக்கப்படுவதை முக்கிய திருப்புமையமாகக் கருத வேண்டும்.

### முதல் உலகப் போர்

இருபதாம் நூற்றூண்டின் துவக்கத்திலிருந்து அதிர்ச்சியை ஏற்படுத்தக்கூடிய பஞ்சங்கள் தோன்றவில்லை. விவசாயம் பூரிப்பான நிலைமையில் இருந்தது. முதல் உலகப் போர் நடைபெற்ற ஆண்டுகளிலும், 1914-லிருந்து 1918 வரையிலும் நல்ல மகசூல் இருந்தது. ஆனால், 1918-19இல் நாடெங்கிலும் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. பஞ்சம் ஏற்பட்டதால் உணவுப்பொருள்கள் கட்டுப்படுத்தப்பட்டன. உணவு ஏற்றுமதி முற்றிலும் தடை செய்யப்பட்டது. வெளிநாடுகளிலிருந்து இவை இறக்குமதி செய்யப்பட்டன. உள்நாட்டில் உபரியான தானியங்களைச் சம அளவில் பகிர்ந்து கொள்ளும் நோக்கத்தோடு கொள்முதல் செய்யப்பட்டது. இந்த ஆண்டில் பஞ்ச நிவாரண வேலைகள் சிறந்த முறையில் செயல்படுத்தப்பட்டன. அரசாங்க அலுவலர்கள் சிறந்த பயிற்சி உடையவர்களாக இருந்தனர்.

1919இல் கொண்டு வந்த சீர்திருத்தங்கள் காரணமாக விவசாயம், கூட்டுறவு, தல சுய ஆட்சி, பொது சுகாதாரம் முதலிய பணிகள் மாநில அரசுகளுக்கு மாற்றப்பட்டன. இவ்வாறு மாற்றப்பட்ட துறைகளை மேற்பார்வையிடவும், கட்டுப்படுத்தவும் மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு. இருந்தபோதிலும் மாநிலங்களின் பொறுப்பில் உள்ள இலாகாக்களுக்கு மத்திய அரசாங்கம் செலவிடுதல் என்பது இயலாத காரியம். விவசாய ஆராய்ச்சி மத்திய அரசாங்கத்தின் பொறுப்பாக இருந்தது. ஆராய்ச்சி நிலையங்கள் பயிற்சி அளிக்கும் நிலையங்களாகவும் செயல்பட்டன. மாநில அரசாங்கத்தின் பொறுப்புகளும், பணிகளும் அதிகரித்த போதிலும் அவற்றின் நிதி வசதிகள் பெருகவில்லை. பாசனத் திட்டங்களைத் தவிர, விவசாயத் துறையில் எந்தவிதமான முன்னேற்றமும் ஏற்படவில்லை. மாநிலங்களுக்கு 1935இல்தான் நிதி உரிமைகள் கொடுக்கப்பட்டன. அதுவரை விவசாயத்துறை முன்னேற்றம் தேக்க மடைந்து இருந்தது.

## இந்திய விவசாய அரச ஆணைக்குழு (Royal Commission on Indian Agriculture)

இந்திய விவசாயத்தின் பல்வேறு பிரச்சினைகளையும் ஆராய்ந்து கூறுவதற்காக 1928இல் விவசாய அரச ஆணைக்குழு ஒன்று நியமிக்கப்பட்டது. இவ்வாணைக் குழுவின் அறிக்கை இந்திய விவசாயத் துறையின் வரலாற்றில் ஒரு திருப்புமைய மாக உள்ளது. இந்திய விவசாயம், கிராமியப் பொருளாதார அமைப்பு ஆகியவற்றை ஆராய்ந்து கூறுவதுடன், விவசாயிகள், பொதுமக்கள் ஆகியோரின் நல்வாழ்க்கையை மேம்படுத்தக் கூடிய பரிந்துரைகளை வழங்குமாறு அரச ஆணைக்குழு கேட்டுக் கொள்ளப்பட்டது.

விவசாய அரச ஆணைக்குழுவின் பரிசீலனைக்குச் சில முக்கிய பிரச்சினைகள் குறிப்பிடப்பட்டன. அவையாவன: விவசாய ஆராய்ச்சி, கால்நடை ஆராய்ச்சி, பரிசோதனைத் திட்டம், செயல் விளக்கம், கல்வி, விவசாயப் புள்ளி விவரங்கள், புதிய பயிர் வகைகள், சாகுபடி முறைகளைச் சீர்படுத்துதல், பால் பண்ணைகள், கால்நடை வளர்ப்பு முதலியன. விவசாயத் துறையின் நிலையமைப்பாக உள்ளவற்றில் சில அரச ஆணைக் குழுவின் கருத்தாய்விற்காக அனுமதிக்கப்பட்டன. போக்கு வரத்து வசதிகள், விற்பனை வசதிகள், கடன் வசதிகள், அவை பற்றிய விவரங்கள்; இவை தவிரக் கிராம மக்களையும், விவசாயி

களையும், இவர்களது நல்வாழ்க்கையையும் பாதிக்கக்கூடிய இதர சக்திகள்.

விவசாயப் பிரச்சினைகள் யாவும் விவசாயத் துறையில் ஏற்படும் நுட்ப ரீதியான பிரச்சினைகளை மட்டும் சார்ந்து இருக்க வில்லை. விவசாயத்தைத் தொழிலாக மேற்கொண்டவர்கள் செயல்படும் சூழ்நிலையும், இவர்களது உரிமைகளும், சலுகை களும், சமூக அரசியல் நிறுவன அமைப்புகளும் நேரிடை யாகவும் மறைமுகமாகவும் விவசாயத் துறையின் உற்பத்தித் திறனைக் கட்டுப்படுத்துகின்றன. விவசாயத் துறையைப் பாதிக் கும் நிலையமைப்புகளில், மிகவும் முக்கியமான அமைப்பு முறை சமூகக் கட்டமைப்பாகும். இது நில உரிமைகளை அடிப்படை யாகக் கொண்டுள்ளது. நில உரிமைகள், நிலவரி விகிதங்கள், நில உடைமைகள், அதன் பகிர்வு, சாகுபடி உரிமைகள் முதலியன ஆணைக் குழுவின் பரிசீலனைக்குக் கொண்டுவரப்பட வில்லை. ஆகையால், அரசாங்கம், நிலக்கிழார், சாகுபடியாளர் கள் ஆகியோரது பொருளாதாரத் தொடர்புகளை வரையறுக்க முடியவில்லை. இவ்வாறு விவசாயத்திற்கு ஆணிவேராக உள்ள சொத்துரிமைகளும், கட்டமைப்புப் பிரச்சினைகளும் ஆணைக்குழு வின் கவனத்திலிருந்து நீக்கப்பட்டதால் (இதன்) பரிந்துரை களின் முக்கியத்துவம் குன்றின.

அரச ஆணைக்குழு விவசாய ஆராய்ச்சி அமைப்புகளை முறைப்படுத்தும் நோக்கத்தோடு பல பரிந்துரைகளை வழங்கி யுள்ளது. விவசாய ஆராய்ச்சிகள் தனித்தனியாக நடைபெறு வதற்குப் பதிலாக ஒருமுகப்படுத்த வேண்டும். இந்திய விவசாய நிலையம் இந்தியாவின் பல பாகங்களில் நடைபெறும் ஆராய்ச்சி களுக்கு ஆதரவு அளிக்கவும், வழிகாட்டவும் வேண்டும். இந்த நிலையம் வெளிநாடுகளுடன் தொடர்பு கொண்டிருக்க வேண்டும். அங்கு ஏற்படக்கூடிய வளர்ச்சிகளைத் தெரிந்து கொள்ளவும், இந்தியாவில் நடைபெறும் ஆராய்ச்சிகளையும், அதன் கண்டு பிடிப்புகளையும் வெளிநாட்டு விவசாய ஆராய்ச்சி நிறுவனங் களுடன் கருத்துப் பரிவர்த்தனை செய்து கொள்ளவும் வேண்டும். அரச ஆணைக் குழுவின் பரிந்துரைக்கு இணங்க 1929இல் இம் பீரியல் விவசாய ஆராய்ச்சிக் கவுன்சில் ஆரம்பிக்கப்பட்டது. விடுதலைக்குப் பின்னர் பாரத விவசாய ஆராய்ச்சிக் கவுன்சில் என்ற பெயரில் இதை அழைக்கிறார்கள். மாநில விவசாய இலாகாக்கள் ஈடுபட்டுள்ள விவசாய ஆராய்ச்சிகளை ஒருமுகப் படுத்தும் பொறுப்பு இம்பீரியல் விவசாய ஆராய்ச்சி (கவுன் சிலுக்கு) கழகத்திற்குக் கொடுக்கப்பட்டது. இக்கழகம் பாரதத்தில்

உள்ள பல்வேறு பல்கலைக் கழகங்களுடன் தொடர்பு கொண்டிருக்கும். இவற்றின் ஒத்துழைப்புடன் விவசாய ஆராய்ச்சியை ஊக்குவிக்கும்.

விவசாய சீர்திருத்தங்களின் நோக்கம் விவசாயிகளின் வருமான வாய்ப்புகளை உயர்த்துவது ஆகும். வருமான வாய்ப்புகளுடன் விவசாயிகளின் மனப்பான்மையும் வேறுபடுகின்றன. விவசாயிகளின் மனநிலையும், சிந்தனையும் விரிவடைந்தால்தான் விவசாயத் துறையில் நிரந்தரமான முன்னேற்றம் ஏற்படக் கூடும்.

விவசாயத் துறையை மேம்படுத்துவதில் அரசாங்கத்தின் பொறுப்பை அரச ஆணைக்குழு தெளிவுபடுத்தியது. விவசாயிகளின் வாழ்க்கை வசதிகளை அதிகரிக்கவும், விவசாயத் துறையை மேம்படுத்தவும், அரசாங்கம் முக்கிய பொறுப்பு ஏற்க வேண்டும். முன்னேற்றக் கொள்கைகளை உருவாக்கவும் அதைச் செயல்படுத்தவும் அரசாங்கம் கடமைப்பட்டுள்ளது. கிராமப் பிரச்சினைகளைத் தனித்தனியாகப் பிரித்துப் பார்ப்பதால் அவற்றிற்குத் தீர்வு காண முடியாது. இவை யாவும் விவசாயி என்ற மனிதனை மையமாகக் கொண்டுள்ளன. ஆகையால் ஒன்றோடு ஒன்று தொடர்புகொண்டு உள்ளன. இவையாவும் ஒரே பிரச்சினையின் பல்வேறு கூறுகளாக உள்ளன. கிராமியப் பிரச்சினைகளை எந்த முறையில் அணுக வேண்டும் என்பதை இவ்வாணைக்குழு தெளிவுபடுத்தியுள்ளது. காட்டாக, கிராம மக்களுடன் தொடர்பு கொண்டுள்ள அரசாங்க இலாகாக்களின் நடவடிக்கைகளை ஒருமுகப்படுத்தலாம் என்று கூறியது. (சமுதாய !அபிவிருத்தித்திட்டங்கள் இந்த அடிப்படைக் கருத்துகளைக்கொண்டு உருவாக்கப்பட்டவை.) கிராமிய பிரச்சினைகள் அனைத்திற்கும் தீர்வு காண்பது நமது இலட்சியமாக இருக்க வேண்டும். முதன் முறையாக கிராமிய பிரச்சினைகளை முற்றிலும் புதியதொரு அடிப்படையில் இவ்வாணைக்குழு அணுகியது. இக்கருத்துகளைச் செயல்படுத்தும் முன்னதாக பல முக்கிய சம்பவங்கள் ஏற்பட்டன.

**மந்தம்**

வணிகச் சூழலின் ஒருகூறுகப் பொருளாதார மந்தம் ஏற்படுகிறது. 1959இல் அனைத்து நாடுகளும் உலக மந்தத்தினால் அவதிப்பட்டன.[5] இந்நாடுகளில் மக்கள் வேலை வாய்ப்பையும்

[5] 1928-33 மந்தத்தினால் அமெரிக்காவிற்கு ஏற்பட்ட இழப்பு இரண்டாவது உலகப் போரினால் ஏற்பட்ட இழப்பைவிட அதிகம் என்று பேராசிரியர் சாமுயல்சன் கூறியுள்ளார். P. A. Samuelson, Economics, 6th edition. Chap-18.

வருமானத்தையும் இழந்தனர். தொழில் நாடுகளைவிட விவசாய நாடுகளைத்தான் மந்தத்தின் கொடிய விளைவுகள் தீவிரமாகத் தாக்கியுள்ளன. விவசாய நாடுகள் பெரும்பாலும் முதல்நிலை (விவசாய)ப் பொருள்களை மட்டுமே ஏற்றுமதி செய்கின்றன. இவை பெரும்பாலும் தொழில் நாடுகளால் இறக்குமதி செய்யப் படுகின்றன. மேற்படி நாடுகளில் மந்தம் காரணமாக உற்பத்தி குறைந்து வாங்கும் சக்தி குன்றி விடுகின்றன. விவசாய நாடுகள் உற்பத்தி செய்யும் பொருள்களின் அளவு கிட்டத்தட்ட மாறுபட வில்லை என்றாலும், அவை வருமானமாக ஈட்டுகின்ற தொகை மிகவும் குறைந்து விடுகின்றன. விலை வீழ்ச்சியின் காரணமாக விவசாயப் பொருட்களை உற்பத்தி செய்யும் நாடு அதிக அளவிற்குப் பாதிக்கப்பட்டன. இந்த அளவிற்குத் தொழில் வளர்ச்சி அடைந்த நாடுகள் பாதிக்கப்படவில்லை.

### இந்தியாவும் மந்தமும்

இந்தியா ஒரு விவசாய நாடாக இருப்பதால் உலக மந்தத்தின் கொடுமைக்கு இரையாகியது. விவசாயப் பொருள் களின் விலை தனியாகவும், ஒப்புமையாகவும் வீழ்ச்சி அடைந்தன. 1929 செம்டம்பரிலிருந்து 1934 டிசம்பர் வரை உள்ள காலத் தில் அரிசியின் விலை **47%**-மும், கோதுமை விலை **45%**-மும் வீழ்ச்சி அடைந்தன. அதே காலத்தில் பஞ்சாலை, மற்றும் சணல் ஆலைப் பொருள்கள் ஆகியவற்றின் விலை 26%-,33%-மும் முறையே குறைந்தன. பொதுவான விலைமட்டம் 38%- வீழ்ந்தது.

விவசாய நாடுகள் இறக்குமதி செய்யும் பொருள்கள் செய் பொருள்களாக இருக்கும். இவை ஏற்றுமதி செய்யும் பொருள்கள் முதல்நிலைப் பொருள்களாக இருக்கும். மந்த காலத்தில் ஏற்று மதிப் பொருள்களின் மதிப்பு அதிகமாகக் குறைந்தும், இறக்கு மதிப் பொருள்களின் விலை சிறு அளவிற்குக் குறைந்தும் இருக்கும். இதனால் விவசாய நாடுகளின் செலுத்தல் நிலை பாதகம் அடைந்து, பொன் வெள்ளி போன்ற உலோகங்களை ஏற்றுமதி செய்ய வேண்டியிருக்கும். இந்தியாவும் பாதக செலுத்தல் நிலை காரணமாக மதிப்புமிக்க உலோகங்களை ஏற்றுமதி செய்துள்ளது.

இந்தியாவின் இறக்குமதி, ஏற்றுமதிப் புள்ளி விவரங்கள் பிரச்சினையைத் தெளிவுபடுத்தும் அளவிற்கு இல்லை. காட்டாக, 1928-29-லிருந்து 1933-34 வரை ஏற்றுமதிப் பொருள்களின் விலை அதிக அளவு 97.5%-மும், குறைந்த அளவு 53.5%-மும் வீழ்ச்சி அடைந்துள்ளன. இதே காலத்தில் இறக்குமதிப்

பொருள்களின் விலை அதிக அளவு 96·4%-மும், குறைந்த அளவு 63·5%-மும், வீழ்ச்சி அடைந்து உள்ளன.[6]

விலை மாற்றத்தை கொண்டு மந்தத்தின் விளைவுகளைத் தெளிவுபடுத்த முடியவில்லை. விவசாய நாடுகள் ஏற்றுமதி செய்யும் கச்சா பொருள்கள் மந்த காலத்தில் — ஆலைகள் மூடப்பட்ட காலத்தில் — தொழில் நாடுகளுக்கு அவசியமில்லாத பொருள்களாக இருக்கின்றன. அதே சமயம் தொழில் நாடுகளில் தயாரிக்கப்பட்ட செய்பொருள்கள் விவசாய நாடுகளுக்குத் தொடர்ந்து அவசியமாக இருக்கின்றன. இதனால் விவசாய நாடுகளின் செலுத்தல் நிலையும் (Balance of Payments) வாணிப (மாற்று) விகிதமும் (Terms of Trade) பாதகம் அடைகின்றன. இந்த நாடுகள் முன்னதாகவே தொழில் நாடுகளிடம் கடன் வாங்கியிருக்குமானல் மந்த காலத்தில் இவை மேலும் அவதிப் படக்கூடும்.

விவசாயப் பொருள்களின் விலை வீழ்ச்சி அடைந்ததால் 1929-30 முதல் 1933-34 வரை உள்ள ஐந்தாண்டுகளில் விவசாயத் துறையின் மொத்த வருமானம் சுமார் 50% குறைந்தது.

1928-29இல் சுமார் ரூ. **1021** கோடியாக இருந்த பயிர்களின் மதிப்பு 1933-34இல் ரூ. **474** கோடியாகக் குறைந்தது. அதாவது விவசாயிகளின் மொத்த வருமானம் **53·6%** வீழ்ச்சியுற்றது. அதே சமயம் விவசாயிகள் செலவிட வேண்டிய இனங்கள், செலவுத்தொகை (ஆக்கச் செலவு) முதலியன இந்த அளவுக்குக் குறையவில்லை. விவசாயிகள் குறிப்பிட்டதொகையை அரசாங்க வரியாகவும், (கடன் வாங்கியிருப்பதால்) வட்டியாகவும் கொடுக்க வேண்டும். அரசாங்கத்திற்குச் செலுத்தும் வரிப்பணம் விவசாயிகளின் வருமானத்தில் பெரும்பகுதியாக இருந்தது. மந்தம் தீவிரமடைந்த நிலையில் அநேக மாநிலங்கள் நிலவரிகளைக் குறைத்தும், முற்றிலும் தள்ளுபடி செய்தும் உள்ளன. இருந்தபோதிலும் விவசாயிகளின் வருமானத்தில் ஏற்பட்ட இழப்பை இது ஈடுசெய்யவில்லை. இக்காலத்தில் விவசாயிகள் பெருமளவுக்குக் கடன்பட்டார்கள். அவர்களின் வாழ்க்கைத்தரம் மேலும் மோசம் அடைந்தது.

### அரசு நடவடிக்கைகள்

உலக மந்தம் அனைத்து நாடுகளையும் பாதித்துள்ளது. ஒவ்வொரு அரசாங்கமும் பொருளாதார அமைப்பை மந்தத்

[6] Quoted M. R. Nanavathi and J. J. Anjaria, ibid. P. 173

திலிருந்து விடுவிப்பதற்காகப் பல நடவடிக்கைகளை எடுத்துள்ளன. ஆனால், இந்திய அரசாங்கம் தனது பத்தாம் பசலிக் கொள்கைகளை மாற்றிக் கொள்ளவில்லை. பொருளாதார மந்தம் உலக நாடுகள் அனைத்திலும் உள்ளது என்றும், அதைத் தனி ஒரு நாட்டின் முயற்சியால் தடுக்கமுடியாது என்றும் அரசாங்கம் கருதியது. மேலை நாடுகளின் பொருளாதார நடவடிக்கைகளை விரிவுபடுத்தும் பணிகளில் அந்நாட்டு அரசாங்கங்கள் ஈடுபட்டன. ஆனால், இந்திய அரசாங்கத்தின் கொள்கை தனது வரவுசெலவுத் திட்டத்தைச் சமன் செய்வதாக இருந்தது. ஏற்றுமதியை அதிகரிக்கவோ இறக்குமதியைக் குறைக்கவோ தகுந்த நடவடிக்கைகளை எடுக்கவில்லை. இந்திய அரசாங்கம் பின்பற்றிய கொள்கையால் வாட்டநிலை மேலும் தீவிரமாகியது. மந்தத்தின் ஆரம்பத்தில் வட்டி விகிதங்கள் உயர்ந்தன. அதன் பின்னர் பொன் ஏற்றுமதி அதிகரித்தது. வரவு செலவுகளைச் சமன் செய்ய நினைத்ததால் இந்திய அரசாங்கம் தனது செலவுத்தொகையைக் குறைத்துக்கொள்ள வேண்டிய தாயிற்று. இதனால் கல்வி, சுகாதாரம், வளர்ச்சிப் பணிகள் ஆகியவற்றிற்கான செலவுத் தொகையில் மூன்றில் ஒரு பகுதி குறைக்கப்பட்டது.

இந்திய அரசாங்கம் தானாக முயன்று பொருளாதார அமைப்பைப் பாதுகாக்கவில்லை. என்றாலும், உலக நாடுகள் அரங்கில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் இந்தியாவின் பொருளாதார நலன்களைக் காக்கும் தன்மை உடையனவாக இருந்தன. 1932இல் ஆட்டாவாவில் செய்துகொண்ட ஏகாதிபத்தியச் சலுகை ஒப்பந்தம் முக்கியமானதாகும். பிரிட்டன் தனது தொழில்களை உலக மந்தத்திலிருந்து காக்கத் தன் ஆட்சியின்கீழ் உள்ள நாடு களுடன் ஒப்பந்தம் செய்துகொண்டது. ஏகாதிபத்திய நாடுகள் வாணிபத்துறையில் பரஸ்பரம்சலுகைகளைப் பரிவர்த்தனைசெய்து கொண்டன. இதனால் இந்தியாவின் ஏற்றுமதி ஓரளவுக்கு நிலை பேறு உடையதாக மாறியது. இந்தியாவை விட பிரிட்டன் மேற்படி உடன்படிக்கையால் அதிக இலாபம் அடைந்தது என்பதை கூறத் தேவையில்லை. இதைப்போலவே மோடி-லீஸ் (Mody-Lees) ஒப்பந்தமும் லங்காஷயர் தொழிலதிபர்களுக்கு அதிக சலுகை வழங்கியது.

இரு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் செலாவணி அமைப்பில் மிகப் பெரிய மாறுதல்கள் தோன்றின. இந்திய ரூபாய் பொன் பிணைப்பிலிருந்து அகற்றப்பட்டது. இதனால் ரூபாயின் செலவாணி மதிப்பு தகுந்த அளவுக்கு மாற்றம்

அடையவில்லை. பொன்னிற்குப் பதிலாக ஸ்டர்லிங் செலாவணி யுடன் ரூபாய் இணைக்கப்பட்டது. ரூபாய்—ஸ்டர்லிங் விகிதம் முன்பு இருந்த அதே மட்டத்தில் தொடர்ந்து நீடித்தது. இது இந்தியா—பிரிட்டன் வாணிபத்தை வலிமைப்படுத்தியது.

உலக நாடுகள் அனைத்தும் தங்கள் உற்பத்தியைக் கட்டுப் படுத்தும் உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொண்டன. அதன் படி தேயிலை, ரப்பர் ஆகியவற்றின் உற்பத்தி கட்டுப்படுத்தப் பட்டது. இது ஓரளவு விவசாய நாடுகளின் ஏற்றுமதி வருமானத்தை நிலைபெறச் செய்ய உதவியது.

உள்நாட்டில் மாநிலத்திற்கு மாநிலம் அரசாங்க நடவடிக் கைகள் வேறுபட்டன. உத்தரப்பிரதேசத்தில் கரும்பிற்குக் குறைந்தபட்ச விலை நிர்ணயிக்கப்பட்டது. இதை விரும்பத் தகுந்த ஒரு முயற்சியாகக் கருதலாம். இன்னும் சில மாநிலங்கள் கடன் சுமையைக் குறைக்கும் முயற்சிகளில் ஈடுபட்டன. இவ்வாறு அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுக்கப்பட்ட நட வடிக்கைகளைத் தவிர விவசாய வருமானத்தை உயர்த்தவோ, அதை நிலைபெறச் செய்யவோ எவ்விதத் திட்டமும் உருவாக்கப் படவில்லை.

## உலகப்போர்

பேரளவில் போர் புரியும் இக்காலத்தில் போருக்கான ஆயத்த முயற்சிகள் இராணுவத்துடன் நில்லாமல் மக்களின் பொருளாதார வாழ்க்கையை மிகவும் முக்கியமாக பாதிக் கின்றன. நாட்டில் உள்ள உற்பத்தி சாதனங்கள், அளவைத் திறன்கள் யாவற்றையும் போருக்காக உபயோகிக்கவும், போர்ச் சாதனங்களின் உற்பத்திக்கும், இடப்பெயர்ச்சிக்கும் முன் னுரிமை வழங்கவும் வேண்டும். போரில் ஈடுபட்ட எந்த நாடும் ஆரம்பம் முதல் உற்பத்தி, போக்குவரத்து, வாணிபம் ஆகிய வற்றை முறைப்படுத்த வேண்டும். இவை திட்டத்தட்ட நெருக்கடி காலங்களில் நிறைவேற்றப்படும் திட்டங்களாக இருக்கும். இரண்டாவது உலகப்போரில் இந்தியா ஈடுபட்டதே யல்லாமல் பொருளாதார நடவடிக்கைகளை முறைப்படுத்தவில்லை. எந்த அடிப்படையில் இவற்றை முறைப்படுத்தவும் கட்டுப் படுத்தவும் வேண்டும் என்பதற்குத் தகுந்த கொள்கையைக் கூட அரசாங்கம் உருவாக்கவில்லை. இவை யாவும் ஐரோப்பிய அரசு களின் முன்யோசனை, திட்டம், செயல்படும்விதம் ஆகியவற்றி னின்று முற்றிலும் மாறுபட்டுள்ளன. இந்திய அரசாங்கத்தினிடம் தெளிவான கொள்கை ஏதும் இல்லாமையால் அவ்வப்போது

தோன்றிய சந்தர்ப்பங்களையும் சூழ்நிலையையும் அடிப்படையாகக்கொண்டு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இந்திய அரசாங்கம் திட்டமிட்ட வகையில் ஆரம்பகாலம் முதல் இரண்டாவது போரில் ஈடுபட்டிருக்குமேயானால் வங்காளத்தில் 1943இல் நேர்ந்த கொடிய பஞ்சத்தை முற்றிலும் தவிர்க்காது போனாலும் அதன் கொடுமையை—இலட்சக்கணக்கான மக்கள் மடிவதைக்—குறைத்து இருக்கலாம்.

உலகப்போர் ஏற்படும்வரை வணிகப்பயிர்கள் இலாபகரமாக இருந்தன. போர்க் காலத்திலும் இவை அதிக இலாபமுள்ள சாகுபடித் தொழிலாக இருக்கும் என்று நம்பிய விவசாயிகள் வணிகப்பயிர்களைப் பரந்த நிலப்பரப்பில் பயிரிட்டார்கள். ஆனால், எதிர்பாராத விதமாக இவற்றை எடுத்துச் செல்வதற்கான கப்பல் வசதிகள் இல்லாமையாலும், வர்த்தகப்பயிர்ப் பொருள்களை இறக்குமதி செய்யும் நாடுகளில் போர் பரவியதாலும் இவற்றின் ஏற்றுமதியில் தேக்கம் ஏற்பட்டது. காட்டாக, 1938–39 முதல் 1940–41 வரையில் உள்ள ஆண்டுகளில் சணல், நிலக்கடலை, பஞ்சு ஆகியவற்றின் ஏற்றுமதி முறையே 64%, 62%, 18% வீழ்ச்சி அடைந்தன.

வணிகப்பயிர்களின் தேவை போர் காரணமாகக் குறைந்ததைப் போலவே, உணவுப்பொருள்களுக்கான தேவை (இக்காரணத்தினால்) உயர்ந்து சென்றது. நேசநாடுகளின் துருப்புகள் இந்தியாவில் தங்கின. இதனால் இந்தியாவின் உணவுத் தேவை உயர்ந்தது. கிழக்கு ஆசியப்பகுதிகளில் போர் பரவியதால் அங்குள்ள படைகளுக்கு உணவுப் பொருள்களை ஏற்றுமதி செய்யும்பொறுப்பு இந்தியாவிற்குக்கொடுக்கப்பட்டது. போர் தீவிரம் அடைந்த சமயத்தில் கிழக்கு ஆசிய நாடுகள் ஒவ்வொன்றும் ஜப்பானின் ஆதிக்கத்தில் வந்தன. இவ்வகையில் பர்மாவும் ஜப்பானியர் வசமாகியது. மரபாக உணவுதானியத்தை ஏற்றுமதி செய்யக்கூடிய பர்மாவை இழந்ததால் உணவு நெருக்கடி நிலைமை மேலும் அதிகரித்தது. இத்தருணத்தில்தான் மிகப் பெரிய பஞ்சம் வங்காளத்தில் தோன்றியது.

### பயிர் கட்டமைப்பு

வர்த்தகப்பயிர்ப் பொருள்களின் தேவை குறைந்தும், உணவுப் பொருள்களின் தேவை உயர்ந்தும் சென்றன. இதனால் வர்த்தகப் பயிர்களுக்குப் பதிலாக உணவுப்பயிர்களைச் சாகுபடி செய்தனர். அரசாங்கத்தின் தலையீடு காரணமாகவும் உணவுப் பயிர் சாகுபடி அதிகரித்தது. 1938–39இல் முடிந்த மூன்றாண்டு காலத்தில் உணவுப்பயிர்களை சாகுபடி செய்த நிலப்பரப்பு 913

மில்லியன் ஏக்கராக இருந்தது. 1944-45இல் உணவுப்பயிர்கள் சுமார் **226** மில்லியன் ஏக்கர்களில் பயிரிடப்பட்டன. சுமார் 17% கூடுதலான நிலப்பரப்பில் உணவுப்பயிர்கள் பயிரிடப் பட்டன. உணவு தானியங்களில் கோதுமை சாகுபடிப் பரப்பு கிட்டத்தட்ட மாறவில்லை. நெல் சாகுபடி பரப்பு **10·1** மில்லியன் ஏக்கர் அல்லது **1·37%** உயர்ந்துள்ளது. நன்செய்ப் பயிர்களை விடப் புன்செய்ப் பயிர்கள் — சோளம், கம்பு, மக்காச்சோளம், பார்லி, கேழ்வரகு முதலியன — சாகுபடி செய்த நிலப்பரப்பு **19·6** மில்லியன் ஏக்கர்கள் அல்லது 28·1% அதிகரித்துள்ளன. பருப்பு வகைகள் சாகுபடி செய்த நிலம் 2 மில்லியன் ஏக்கர்கள் அதிகரித்துள்ளன. இவ்வாறு உணவு தானியப்பயிர்களின் சாகுபடி விரிவடைந்துள்ளது.

வர்த்தகப்பயிர்களின் சாகுபடியில் இருவித போக்குகள் காணப்படுகின்றன. பருத்தி, சணல் ஆகியவை சாகுபடி செய்த நிலப்பரப்பு முறையே **9·8, 0·9** மில்லியன் ஏக்கர்கள் குறைந்துள்ளன. இது கிட்டத்தட்ட 40%, 28% குறைப்பாக (முறையே) உள்ளன. வர்த்தகப் பயிர்களில் நிலக்கடலை, கரும்பு ஆகியவை சாகுபடி செய்த நிலப்பரப்பு அதிகரித்துள்ளன. கிழக்கிந்தியத் தீவுகள் ஜப்பானின் வசம் வந்த பின்னர் இந்திய நிலக்கடலைக்கு அதிகத் தேவை ஏற்பட்டது. உள்நாட்டு சர்க்கரைத் தேவை உயர்ந்துள்ளதால் கரும்பு சாகுபடி அதிகரித்துள்ளது.

சாகுபடி நிலப்பரப்புடன் ஒவ்வொரு பயிரின் விளைச்சலையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இக்காலத்தில் உணவுப் பொருள்கள் 9% உயர்ந்தும், பஞ்சு, சணல் ஆகியவை முறையே 37%, 26% குறைந்தும் உள்ளன. இவ்வாண்டுகளில் விவசாய உற்பத்தி குறிப்பிடத்தக்க அளவிற்கு உயரவில்லை. அரசாங்கம் அதிகாரபூர்வமாக வெளியிட்ட அறிக்கையை இங்கே கூறுவோம். 1934-35-லிருந்து 1938-39 வரை உள்ள ஐந்தாண்டு சராசரி உற்பத்தியை **100** ஆகக் கருதுவோமானால், பத்தொன்பது முக்கிய விவசாயப் பயிர்களின் உற்பத்தி, 1945-46இல் **92.58** ஆகக் குறைந்துள்ளன. எண் வகை முக்கிய உணவு தானியங்களின் உற்பத்திக் குறியீட்டு எண் இக்காலத்தில் **92.49** ஆகக் குறைந்தது.

**விலைப்போக்குகள்**

இரண்டாவது உலகப்போர் நடைபெற்ற காலத்தில் பல முக்கியப் பயிர்களின் விலைப்போக்கை அட்டவணை **9·1** சித்திரிக்கிறது. போர் தொடங்கிய ஆண்டையும், முடிந்த ஆண்டையும்

அட்டவணை 9·1

**2-வது உலகப்போர்க் காலத்திற்கான**
**மொத்த விலைக் குறியீட்டு எண் +7**

[அடிப்படை ஆண்டு 1939_100]

| | 1939-40 | 1640-41 | 1941-42 | 1942-43 | 1943-44 | 1944-45 | 1945-46 |
|---|---|---|---|---|---|---|---|
| அரிசி | 114 | 130 | 164 | 232 | 703 | 334 | 329 |
| கோதுமை | 137 | 140 | 181 | 241 | 350 | 383 | 400 |
| பஞ்சு | 132 | 125 | 144 | 162 | 223 | 172 | 168 |
| சணல் | 197 | 113 | 137 | 151 | 200 | 274 | 199 |
| நிலக்கடலை | 109 | 87 | 115 | 187 | 284 | 229 | 239 |

நோக்குவோமானால், வர்த்தகப்பயிர்ப் பொருள்களைவிட, உணவுப் பொருள்களின் விலை அதிகம் உயர்ந்துள்ளதை அறியலாம். ஒவ்வொரு ஆண்டிற்கான விலை மாற்றத்தை ஒப்பிடுவோமானால் நிதானமான போக்கு ஏதுமில்லை என்று அறியலாம். விலை விகிதங்கள் ஒப்புமையாக மாறியதால் எந்த அளவிற்குச் சாகுபடிப் பரப்பு அளவு மாறியிருக்கின்றன என்பதை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். ஆனால், அங்ஙனம் ஒப்பிட இயலாதவாறு பொதுவான விலைமட்ட உயர்வு தடை செய்கிறது. அரசாங்கத்தின் கட்டுப்பாட்டு நடவடிக்கைகளும் இதற்குக் குறுக்கே நிற்கின்றன.

ஒப்புமையான விலை விகித மாற்றங்களினால் விவசாயத்திற்குச் சாதகமாக வாணிப விகிதம் மாறியுள்ளது. விவசாயப் பொருள்கள், (ஆலை) செய் பொருள்கள் ஆகியவற்றின் விலை உயர்வுகள் சமவிகிதத்தில் இருக்குமேயானால் இவ்விரு துறைகளின் வாணிப விகிதங்களும் மாறாது இருக்கின்றன எனலாம்.

from Agricultrual Situation in India, Vol, III No 10. Janavry 1949 p. 54.

7 Quoted by M. B. Nanavathi & J. J. Anjaria, ibid, P 176.

உலகப்போரின் விளைவாகப் போதுமான விலைமட்டம் உயர்ந்தது என்றாலும்விவசாயப் பொருள்களின் விலை அதி வேகமாக உயர்ந்து சென்றது. எனவே, விவசாயிகளின் வருமானமும், வாங்கும் சக்தியும் ஒப்புமையாக அதிகரித்துள்ளன. விவசாயத் துறை யின் வாணிப விகிதம் சாதகம் அடைந்துள்ளது. உலகப்போர் முடிந்தபோது பொதுவான விலைக் குறியீட்டு எண் 250 ஆக இருந்தது. அப்போது விவசாயப் பொருள்களின் விலைக்குறியீட்டு எண் **270** ஆகவும், செய்பொருள்களின் குறியீட்டு எண் **240** ஆகவும் இருந்தன. அதன் பின்னர் தோன்றிய விலை மாற்றங்கள் தொழில்துறைக்குச் சாதகமாக இருந்தன.

சாதகமான விலைஉயர்வு விவசாயத்துறைக்கு ஏற்பட்ட புதிய அனுபவம் ஆகும். அதற்கு முன்னர் சுமார் **10** ஆண்டு காலத்தில் (1929-39) நிலவிய சூழ்நிலைக்கு இது முற்றிலும் மாறுபட்டு உள்ளது. உலக மந்தத்தைத் தொடர்ந்து விவசாயத் துறையின் வருமானம் 50% குறைந்தது என்று கூறியுள்ளோம். விவசாயத்துறைக்கு முன்னர் ஏற்பட்ட இழப்புகளை ஈடுசெய்யும் ஒரு நிகழ்ச்சியாக இதைக் கருதவேண்டும்.

விலை உயர்வால் இருவகையான விளைவுகள் ஏற்பட்டன. ஒன்று கிராம சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள் அதிகரித்தன. விவசாயப் பொருள்களின் விலைஉயர்வால் கிராம மக்கள் எல்லோரும் சம அளவிற்குப் பலன் அடையவில்லை. வசதி உடை யவர்கள், பெருநிலக்கிழார்கள் அதிக ஆதாயம் அடைந்தார்கள். சிறு உடைமையாளரும், சாகுபடியாளர்களும் தங்கள் வருமானம் ஒப்புமையாக வீழ்ச்சியடையாமல் பாதுகாத்துக் கொண்டனர். விவசாயத் தொழிலாளர்கள் இதனால் மேலும் வறியராக்கப்பட் டனர். விலை உயர்வால் ஏற்பட்ட ஆதாயம் கிராம மக்களின் சொத்துரிமை, நில உரிமைகளை அடிப்படையாகக் கொண் டிருந்தது.

விலை உயர்வால் ஏற்பட்ட இரண்டாவது விளைவு விரும்பத் தக்க விளைவாகும். விவசாயிகள் நெடுங்காலமாகக் கடன் சுமை யால் அதிகம் பாதிக்கப்பட்டிருந்தனர். விலை உயர்வால் ரூபாயின் மதிப்பு அல்லது வாங்கும் சக்தி குறைந்தது. அதே சமயத்தில் விவசாயிகளின் கடன்சுமையும், வரிச்சுமையும் குறைந்து சென்றன.

விலை உயர்வால் விவசாயிகளின் பணவருமானம் உயர்ந் துள்ளது உண்மைதான். இதனால் விவசாயிகள் கடன் வாங்காமல் இருப்பார்கள் என்றோ, கடன் வாங்க வேண்டிய

அவசியம் குறைத்து விட்டது என்றே கூற முடியாது. நில அபிவிருத்திக்காகப் பேரளவு முதலீடு அவசியமாக இருக்கிறது. எனவே, நிலத்தின் உற்பத்தித் திறனைத் அதிகரிப்பதற்காகக் கடன்வாங்க வேண்டியது அவசியமாக இருக்கும். புதிய சாகுபடி முறைகளில் உள்ளீடு பொருள்கள் பல அவசியமாக இருக்கின்றன. ஆகையால் விவசாயிகள் கடன் வாங்குவதற்கான அவசியம் இருந்துகொண்டேயிருக்கும். ஆனால், விலைஉயர்வின் காரணமாக விவசாயிகளின் கடன் மீட்புத்திறன் ஓங்கியுள்ளது. அதாவது வாங்கிய கடன் தொகையைத் திருப்பித் தரும் ஆற்றல் விவசாயி களிடையே அதிகரித்தது. இது முற்றிலும் விரும்பத்தகுந்த வரவேற்கக் கூடிய ஒரு விளைவாகும்.

கிராமியப் பொருளாதாரம் பூரிப்பு அடைவதற்கு விவசாயப் பொருள்களின் விலை உயர்வு மட்டும் போதுமானதாக இல்லை. விலை உயர்வால் மேல் மட்டத்தில் உள்ளவர்கள் மட்டுமே இலாபம் அடைந்தார்கள். அடித்தளத்தில் உள்ள பாமரர்கள் தொடர்ந்து வறியவர்களாகவே இருந்தனர். கிராம மக்கள் அனைவரும் சிறந்த வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவும், அடிப்படை யான பொருளாதார விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் வேண்டுமானால் உணவு தானியங்கள் விவசாயப் பொருள்கள் யாவும் அதிக அளவில் உற்பத்தி செய்யப்பட வேண்டும். அதாவது நிலம், தனி நபர் ஆகிய இரு அடிப்படையிலும் உற்பத்தித் திறன் அதிகரிக்க வேண்டும். உற்பத்தித் திறன் உயர்ந்துள்ள நிலைமையில் ஏற்படும் பூரிப்புதான் கிராம மக்களின் நல்வாழ்க்கைக்கு உறுதியளிக்கும்.

உலகப் போருக்குப் பின்னர் பாரதம், பாகிஸ்தான் ஆகிய வற்றின் விடுதலையும் பிரிவினையும் முக்கியத்துவம் உடைய நிகழ்ச்சிகளாகும். உணவுப் பயிர்கள், வர்த்தகப்பயிர்கள் ஆகிய வற்றின் அளிப்பிலும், தேவையிலும் சமனற்ற தன்மை தொடர்ந்து அதிகரித்தது. பாரதம் நிகர அளவில் உணவுப் பொருள்களையும், கச்சாப் பொருள்களையும் இறக்குமதி செய்யும் நாடாக மாறியது. பொருளாதார பிரச்சினைகளை மேலும் சிக்கல் உடையதாகச் செய்யும் அளவிற்கு நாடு விட்டு இடம்பெயர்ந்த அகதிகள் பிரச்சினை தோன்றியது.

### ஐந்நாண்டுத் திட்டங்கள்

பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் ஒரு சாதனமே ஐந்தாண்டுத்திட்டங்கள். பொருளாதாரப் பிரச்சினைகளைத் தனித் தனியாக அணுகுவதற்குப் பதிலாக அவை அனைத்தும் ஒன்றோடு

ஒன்று தொடர்புடைய காரணத்தால் அவற்றை ஒரே அடிப்படையில் வைத்து எண்ணவும், தீர்வு காணவும் வேண்டும்.

வளர்ச்சி அடைந்த பொருளாதார அமைப்புகளில் பல்வகைத் தொழில்கள் பல்வகைப் பொருள்களை உற்பத்தி செய்கின்றன. புதிய பொருள்களைப் புதிய முறைகளில் உற்பத்தி செய்தல், புதிய உற்பத்தித் துறைகளை ஊக்குவித்தல் முதலியன பொருளாதார முன்னேற்றத்தின் ஒருகூறாக இருக்கும். இருந்த போதிலும் பொருளாதார வளர்ச்சி என்பது தொழில் வளர்ச்சியுடன் நின்று விடுவதில்லை. புதிய தொழில்கள் தோன்றவும், வளரவும் விவசாயத்துறை அடிப்படையாக இருக்கிறது. பாரதம் போன்ற நாடுகளில் விவசாயம் மிகப் பெரிய ஒரு வாழ்க்கைத் தொழிலாக உள்ளது. ஆகையால், வளர்ச்சி என்ற சொல்லிற்கு விளக்கமாக விவசாயத்தின் உற்பத்தித் திறன் அதிகரிப்பதைக் கருதலாம். இத்துறையிலிருந்து ஏற்படக்கூடிய சேமிப்புத்தான் நாட்டின் மூலதன ஆக்கத்தை நிர்ணயிக்கின்றன. ஒவ்வொரு நாட்டின் தொழில் வளர்ச்சிக்கும், அந்நாட்டின் விவசாயம் தான் மூலதனத்தை நேரிடையாகவோ, மறைமுகமாகவோ நல்கியிருக்கிறது. தொழில் துறைக்குத் தேவையான கச்சாப் பொருள்கள் இங்கு உற்பத்தியாகின்றன. தொழில் வளர்ச்சிக்கு அந்நிய மூலதனம், கச்சாப் பொருள்கள், தொழில் நுட்பம் முதலியன இறக்குமதி செய்தல் வேண்டும். இதற்குத் தேவையான அந்நிய செலாவணிகளை விவசாயப் பொருட்களின் ஏற்றமதியிலிருந்துதான் திரட்ட வேண்டும். தொழில் துறையில் ஈடுபட்டவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் கிராமங்களிலிருந்துதான் உற்பத்தியாக வேண்டும். இவை தவிர கிராம மக்கள், முக்கியமாக விவசாயிகள் செய்பொருளுக்குப் பரந்த அங்காடியாகச் செயல்படுகின்றனர். விவசாயிகளின் வருமானம் குன்றுமானால் தொழிற்சாலைகளில் தயாரித்தப் பொருள்களை விற்க முடியாத தேக்கநிலை ஏற்படும். (காட்டாக 1966–67 பின்னிறக்கத்தைக் கூறலாம்) விவசாயத்துறை தொழில் துறையின் அங்காடியாகச் செயல்படுகிறது.

தொழில் துறையின் வளர்ச்சிக்கு விவசாயம் அவசியமாக இருப்பதைப் போலவே, விவசாயத் துறையின் வளர்ச்சிக்கும் தொழில்துறை இன்றியமையாதவையாகச் செயல்படுகின்றது. விவசாயத்தின் உற்பத்தித்திறனை அதிகரிக்கக்கூடிய இரசாயன உரம், பூச்சிமருந்துகள், விவசாயக்கருவிகள், பம்புசெட்டுகள், மோட்டார்கள் முதலியன தொழில் துறையினின்று கிடைக்கின்றன. போக்குவரத்து வசதிகள் விவசாயிகளின் ஆதாயத்தை

அதிகரிக்கின்றன. போக்குவரத்து சாதனங்கள், மின்சக்தி முதலியன தொழில்துறையின் வளர்ச்சியைப் பிரதிபலிக்கின்றன. தொழில்துறையில் தயாரிக்கப்படும் நீடித்துழைக்கும் பொருள்கள் விவசாயிகளின் இலட்சிய நுகர்வுப் பொருள்களாக உள்ளன. இவற்றை வாங்குவதற்காக விவசாயிகள் கடினமாக உழைக்கின்றனர். தொழில்துறைப் பொருள்கள் விவசாயிகளை ஊக்குவிக்கும் சாதனங்களாக இருக்கின்றன. தொழில் அமைப்பு முறைகள் விவசாய வளர்ச்சிக்கு முன் மாதிரியாக இருக்கின்றன. தொழில் நுட்ப வளர்ச்சியடைந்துள்ள நாடுகள் விவசாயத்துறையிலும் அதிக உற்பத்தித்திறன் உடைய நாடுகளாக இருக்கின்றன. பயிர் வளம், மண் வளம், கான் வளம் ஆகியவற்றின் பாதுகாப்பிற்கும் தொழில், விவசாயத் துறைகளின் வளர்ச்சிக்கும் அடிப்படையாக அறிவியல் நுண்இயல் ஆராய்ச்சி முதலியன அமைந்துள்ளன.

இவ்வாறு தொழில் துறையும், விவசாயத்துறையும் பல வழிகளில் ஒன்றை ஒன்று சார்ந்துள்ளன. பொருளாதார வளர்ச்சியில் ஒருதுறையின் முன்னேற்றம் மட்டும் தனித்து ஏற்படுவதில்லை. ஒருதுறையின் வளர்ச்சி இதர துறைகளின் முன்னேற்றத்துடன் இணைக்கப்பட்டுள்ளன. எல்லாத் துறைகளும் ஏககாலத்தில் வளரவேண்டும் என்பது முக்கியமான குறிக்கோளாக இருந்தபோதிலும், அதை ஏற்படுத்தக்கூடிய சாதனங்கள், திறன்கள், அமைப்புகள் வேண்டிய அளவுக்குக் கிடைக்காமையால் குறிப்பிட்ட கால அளவில் ஓரிரு துறைகளின் வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டியது அவசியமாகிறது. இவ்வாறு ஏனைய துறைகளைவிட ஒரு துறைக்குக் கூடுதலான சலுகைகள் அல்லது முக்கியத்துவம் வழங்குவதன் மூலம் பொருளாதார வளர்ச்சி வேகத்தைத் துரிதப்படுத்த முடியும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயத்துறைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. நீர்ப்பாசனமும், மின்சக்தி, போக்குவரத்து முதலிய துறைகள் பொருளாதார வளர்ச்சிக்கு அடிக்கல்லாக (அஸ்திவாரமாக) உள்ளன. இதனால் இவற்றிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டன. ஐந்தாண்டுத்திட்டம் ஏற்படும் முன்னர் பல மாநில அரசுகள் பாசன வசதிகளை விரிவுபடுத்துவதற்காகப் பல திட்டங்களை மேற்கொண்டிருந்தன. இதைத் தவிர பாரத, பாகிஸ்தான் பிரிவினையால் பாரதத்தின் உணவு உற்பத்தியும் கச்சாப் பொருள்கள் உற்பத்தியும் தேவையைப் பூர்த்தி செய்யப் போதுமானதாக இல்லை. எனவே, விவசாயத்துறைக்கு முதலிடம் கொடுக்கப்பட்டது.

முதல் திட்டத்தில் ரூ. **2356** கோடி செலவிடத் திட்டமிட்டார்கள். இதில் 15.1% விவசாயம், சமுதாய நலத்திட்டங்களுக்காகச் செலவிடப்படும். 28·1% தொகை நீர்ப்பாசனத் திட்டங்களுக்காகவும், மின்சக்திக்காகவும் ஒதுக்கப்பட்டன. (பாசனத் திட்டங்களுக்கு 16·3%-மும், மின்சக்திக்கு 11·1%-மும் ஒதுக்கப்பட்டன.) முதல்திட்டத்தில் ஒதுக்கப்பட்ட தொகையும், அதன் முக்கியத்துவமும் கீழே உள்ள அட்டவணையில் (9·2) கொடுக்கப்பட்டுள்ளன.

அட்டவணை 9·2

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில்
பொதுத்துறைச் செலவுகள் [8]

| வரிசை எண் | விவரம் | ரூ. கோடி | சதவீதம் |
|---|---|---|---|
| 1. | விவசாயமும் சமுதாய வளர்ச்சியும் | 372 | 16 |
| 2. | நீர்ப்பாசனம், வெள்ளக் கட்டுப்பாடு | 395 | 17 |
| 3. | மின்சக்தி | 266 | 11 |
| 4. | தொழில்கள், தாதுப்பொருள்கள் | 179 | 7 |
| 5. | போக்குவரத்து, செய்தித் தொடர்பு | 556 | 24 |
| 6. | சமூகப் பணிகள், வீட்டு வசதி, மறுவாழ்வு முதலியன | 547 | 23 |
| 7. | இதர வகைகள் | 41 | 2 |
| | மொத்தம் | 2356 | 100 |

[8] Source: V. T. Krishnamachari, Planning Of India, Orient Longmans, 1961, p. 7

முதல் திட்டத்தில் கனரகத் தொழில்களுக்குப் பொதுத் துறையில் முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. போக்கு வரத்து, மின்சக்தி ஆகியவற்றிற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டன. அதையடுத்து நீர்ப்பாசனத்திற்கும், விவ சாயத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டன.

முதல் திட்டத்தில் உணவுதானிய உற்பத்தி திட்டக் குறி யளவைவிட அதிகமாக இருந்தது. பாசனவசதிகளால் சாகுபடி விரிவடைந்தது. அதைத் தவிர சேர்ந்தாற்போலச் சாதகமான பருவமழைகள் பெய்தன. இயற்கையின் ஒத்துழைப்பால் முதல் திட்டம் அமோகமாக வெற்றி அடைந்தது. திட்ட ஆரம் பத்தில் 55 மில்லியன் டன்களாக இருந்த உணவுதானிய உற்பத்தி திட்ட இறுதியில் 65 மில்லியன் டன்களாக உயர்ந்தது. (திட்டக்குறியளவு 61·6 மில்லியன் டன்கள் ஆகும்.) மிகையான விளைச்சல் காரணமாக விலைவாசி சரிந்தது. முதல் திட்டத்தின் சாதனை தன்னம்பிக்கையை ஏற்படுத்தியதுடன், உணவு கிடைப் பருமை என்னும் இடரைத் தாண்டிவிட்டதாக நினைக்கத் தூண்டியது.

இரண்டாவது திட்டத்தில் தொழில் வளர்ச்சியை விரிவு படுத்தவும், துரிதப்படுத்தவும் கவனம் செலுத்தினர்கள். இதில் கனரகத் தொழில்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டன. இதற்குப் பெருமளவிற்கு முதலீடு அவசியம். பெருந்தொகையைச் செலவிடுவதால் வருமானம் பன்மடங்கு உயரும். வருமானத் தின் சார்பாக நுகர்வுத் தேவை உயரும். சிறப்பாக உணவுப் பொருள்களின் தேவை அதிவேகமாக உயரும். பிழைப்பு மட்ட வருமானம் உடைய பாரதத்தில் உணவுப் பொருள்களுக்கான தேவை வருமான நெகிழ்ச்சி மிக்கதாக இருக்கும். அதாவது வருமானம் உயரும் வேகத்தைவிட அதிவேகமாக உணவுப் பொருள்களின் தேவை உயர்ந்து செல்லும். இரண்டாவது திட்டத்தில் வீக்கத்தைத் தோற்றுவிக்கக் கூடிய சக்தி இயல்பாக அமைந்துள்ளது என்று கூறினர்கள். முதல்திட்ட சாதனை களைக் கருத்தில்கொண்டு பாரதத்தின் உணவு உற்பத்திப் பெருக்கம் வீக்கம் ஏற்படாமல் காக்கும் என்று நம்பினர்கள். இந்த நம்பிக்கையில் விவசாயத்திற்கு அதிக (ஒப்புமையான) முக்கியத்துவம் கொடுக்கவில்லை. விவசாயத்திற்காக இரண் டாவது திட்டத்தில் ஒதுக்கிய தொகை முதல்திட்டத்தில் ஒதுக் கியதைப்போல சுமார் $1\frac{1}{2}$ மடங்கு அதிகம். (பார்க்கவும் அட்டவணை 9·3)

அட்டவணை 9·3

**இரண்டாவது திட்டத்தில் பொதுத்துறைச் செலவு**[9]

| வரிசை எண் | விவரம் | ரூ. கோடி. | % |
|---|---|---|---|
| 1. | விவசாயம், சமுதாய வளர்ச்சி | 530 | 11 |
| 2. | நீர்ப்பாசனம், வெள்ளக் கட்டுப் பாடு | 420 | 9 |
| 3. | மின்சக்தி | 445 | 10 |
| 4. | தொழில்கள், தாதுப்பொருள்கள் | 1075 | 24 |
| 5. | போக்குவரத்து, செய்தித் தொடர்பு | 1300 | 28 |
| 6. | சமூகப் பணிகள், வீட்டு வசதி, மறு வாழ்வு | 830 | 18 |
| 7. | இதர வகைகள் | — | — |
| | மொத்தம் | 4600 | 100 |

இரண்டாவது திட்டத்தில் உணவுதானிய உற்பத்தியை **65** மில்லியன் டன்களிலிருந்து **75** மில்லியன் டன்களாக உயர்த்த எண்ணினார்கள். முதல்திட்ட சாதனையுடன் ஒப்பிடும்போது இது மிகக் குறைந்த மதிப்பீடாக இருப்பதை அறியலாம். எனவே, இரண்டாவது திட்டத்தை மறு பரிசீலனை செய்தார்கள். அப்போது உணவுதானியக் குறியளவு **80** மில்லியன் டன்களாக உயர்த்தப்பட்டது. இதற்காக விவசாயத்துறைக்கு அதிகப் படியாகச் செலவுத் தொகை ஏதும் ஒதுக்கவில்லை.

இரண்டாவது திட்ட இறுதியில் விவசாய உற்பத்தி சிறப்பாக இருந்தது. புதிய தானியக் குறியளவை எட்டிப் பிடிக்கும் அளவிற்கு உற்பத்தி உயர்ந்து விட்டது. உற்பத்தியளவு 79 மில்லியன் டன்களாக இருந்தது. இருந்தபோதிலும் இரண் டாவது திட்ட ஆரம்பத்தில் உணவு தானியக் கிடைப்பருமை அதிகமாக இருந்தது.

[9] V.T. Krishnamachari, i bed, p.12

மூன்ருவது திட்டத்தில் விவசாயத் துறைக்குச் சிறப்பிடம் வழங்கப்பட்டது. முதல் இரு திட்டங்களைப் போல அல்லாமல் மூன்ருவது திட்டத்தில் உணவு தானியத்தில் (உற்பத்தியில்) தன்னிறைவு அடைதல் முக்கிய குறிக்கோளக ஏற்றுக் கொள்ளப்பட்டது. தொழில்துறை மற்றும் ஏற்றுமதி ஆகிய வற்றின் தேவைகளை நிறைவேற்றக் கூடிய அளவிற்கு விவசாய உற்பத்தி அதிகரிக்க வேண்டும். பொதுவான பொருளாதார வளர்ச்சியைத் தடைப்படுத்தும் அளவிற்கு உணவு தானியக் கிடைப்பருமை செயல்படுகிறது. எனவே, விவசாயத்திற்கும், உணவுப்பொருள்களுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுக்கப் பட்டன. மூன்ருவது திட்டத்தில் விவசாயத்திற்கும், சமுதாய வளர்ச்சிக்கும் 14% தொகை ஒதுக்கப்பட்டது. (பார்க்கவும் அட்டவணை. 9 4)

அட்டவணை 9·4

## மூன்ருவது திட்டத்தில் பொதுத்துறை செலவுகள்

| வரிசை எண் | விவரம் | ரூ. கோடி | % |
|---|---|---|---|
| 1. | விவசாயம், சமுதாய வளர்ச்சி | 1068 | 14 |
| 2. | பாசனத் திட்டங்கள் | 650 | 9 |
| 3. | மின்சக்தி | 1012 | 13 |
| 4. | சிறு தொழில்கள், கிராமத் தொழில்கள் | 264 | 4 |
| 5. | பேரளவுத் தொழில்கள், தாதுப் பொருள்கள் | 1520 | 20 |
| 6. | போக்குவரத்தும், செய்தித் தொடர்பும் | 1486 | 20 |
| 7. | சரக்கு இருப்பு | 200 | 3 |
| 8. | சமூகப் பணிகள் | 1300 | 17 |
| | மொத்தம் | 7500 | 100 |

மூன்ருவது திட்டத்தின் உணவு தானிய உற்பத்திக் குறியளவு 100 மில்லியன் டன்களாக இருந்தது. திட்ட இறுதியில் உற்பத்தியளவு 72 மில்லியன் டன்களாக இருந்தது. உணவு தானிய உற்பத்தி திட்ட ஆரம்பத்தில் இருந்ததை விட திட்ட இறுதியில் குறைந்திருப்பதைக் காணலாம். எதிர்பாராத வகையில் தோன்றிய வறட்சி காரணமாக அடுத்தடுத்து இரு ஆண்டுகளில் தானிய உற்பத்தி மிகக் குறைந்த அளவாக இருந்தது. விவசாய உற்பத்தி குறைந்ததால் வளர்ச்சி குன்றியது. 4-வது திட்டம் (ஆரம்பிக்கும் காலம்) மூன்ருண்டுகள் தள்ளிப் போடப்பட்டன. இக் காலத்தில் உணவு நிலைமை ஓரளவு சீர்பட்டது.

நான்காவது திட்டம் முற்றிலும் புதியதொரு அடிப்படையில் தோன்றியது. உணவு தானிய நெருக்கடிகளைப் பாரதம் கடக்கும் தருவாயில், பசுமைப் புரட்சியின் எல்லையில் இருந்தது. பசுமைப் புரட்சியை நாடெங்கிலும் பரவலாக்கும் முயற்சியில் பாரதம் தீவிரமாக ஈடுபட்டுள்ளது. அதைத் தவிர வெளிநாட்டு மூலதனம், உதவி ஆகியவற்றைக்கூடிய விரைவில் தவிர்க்கவேண்டும் என்று பாரதம் உறுதி பூண்டிருக்கிறது. இதைச் செயல்படுத்தும் நோக்கத்தோடு 4-வது திட்ட இறுதிக்குள் பாரதம் வெளிநாட்டு நிகர உதவியை 50% ஆகக் குறைத்துக் கொள்ள வேண்டும். அந்நிய உதவியைக் குறைக்க வேண்டியதால் ஏற்றுமதியைப் படிப்படியாக, ஆண்டு ஒன்றுக்கு 7%-தில் உயர்த்த வேண்டும். அடுத்து, அந்நிய மூலதனம் குறைக்கப்படுவதால் முதலீட்டிற்கு உள்நாட்டு மூலதனம் அதிகமாகப் பயன்படுத்தப்படும், சேமிப்பை அதிகரிக்கவும் மூலதனத்தைத் திரட்டவும் முக்கியத்துவம் கொடுக்கப்படும்.

நான்காவது திட்ட இலக்குகளை நிறைவேற்ற வேண்டுமானல் ஆண்டுதோறும் நாட்டு உற்பத்தி 5%-தில் உயர வேண்டும். இதற்கு விவசாய உற்பத்தியும், வளர்ச்சியும் பெரிதும் துணையாக இருக்கும்.

விடுதலைக்குப் பின்னர் மொத்த சாகுபடி நிலப்பரப்பு ஆண்டுதோறும் 1.2%-தில் தொடர்ந்து உயருவதாகக் கருதலாம். முதல் திட்டத்தில் இவ்விதம் 2.2% (ஆண்டுதோறும்) அதிகரித்தது. அதன் பின்னர் இவ்விதம் சிறிது குறைந்தது. சுற்று முறையில் பயிர்களைச் சாகுபடி செய்வதாலும், வீரியப்பயிர்கள் குறுகிய காலத்தில் பலன் தருவதாலும் நான்காவது திட்டத்தில் மொத்த சாகுபடிப் பரப்பளவை அதிகரிக்க முடியும். சாகுபடிப் பரப்பு அளவு அதிகரிப்பதால் உற்பத்தித்

திறனைத் தொடர்ந்து உயர்த்த முடியும். நான்காவது திட்டத்தில் விவசாய உற்பத்தித் திறன் 3.7%-தில் உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இது கடந்த இருபது ஆண்டுகால வளர்ச்சி விதத்தைப் போல $2\frac{1}{2}$ மடங்கு அதிகமாக இருக்கும்.[10]

நான்காவது திட்டத்தில் உணவு தானிய உற்பத்தி 31 மில்லியன் டன் மேலும் உயர்த்தப்படும். இதில் சுமார் மூன்றில் இரு பங்கு உற்பத்தி வீரியப் பயிர் திட்டத்தால் அதிகரிக்கும் என்று நம்புகின்றனர்.

[10] Reserve Bank of India. Bulletin, July, 1970, p. 1097.

# 10. வேளாண் உற்பத்தியும் சமுதாய நலத்திட்டமும்

விவசாய உற்பத்தி நீண்ட கால ரீதியில் எங்ஙனம் மாறி உள்ளது என்பதைச் சுரேந்திர பட்டேல்[1] எடுத்துக் கூறியுள்ளார். 1896–1906 ஆண்டுகளின் உற்பத்தியைச் சராசரி அடிப்படையாக (100 ஆக) எடுத்துக்கொண்டால் உணவு தானியங்களின் உற்பத்தி 21%-மும், இதர வர்த்தகப் பயிர்களின் உற்பத்தி 170%-மும் (1960இல்) அதிகரித்துள்ளன என்று அறியலாம். பெரும்பாலான நிலங்களில் உணவு தானியங்கள் பயிரிடப்பட்டதால் மொத்த விவசாய உற்பத்திக் குறியீட்டு எண் 1960இல் 149 ஆக உயர்ந்துள்ளது. ஒவ்வொரு பத்து ஆண்டுகளிலும் உணவு உற்பத்தியும், வர்த்தகப் பயிர்ப் பொருள்களின் உற்பத்தியும் எந்த விகிதத்தில் அதிகரித்துள்ளன என்பதைக் கருதுவோமானால், உணவுப் பயிர்களின் உற்பத்தி நிலையாக இல்லை என்பதுடன், அது தொடர்ந்து 1915-லிருந்து 1945வரை கிட்டத்தட்ட அதே அளவில் இருந்து வந்துள்ளது என்று தெரியவரும். ஆனால், இதற்கு நேர்மாறாக இதர வர்த்தகப் பயிர்களின் விளைச்சல் உள்ளது. (பார்க்கவும் அட்டவணை 10·1)

1896-லிருந்து 1955 வரை உள்ள அறுபது ஆண்டுகளில் ஏற்பட்ட உற்பத்தி மாற்றங்களைச் சுரேந்திர பட்டேல் பின்வருமாறு கூறியுள்ளார். மொத்தத்தில் விவசாய உற்பத்தி மிகவும் தாமதத்துடன் உயர்ந்து செல்கிறது. 60 ஆண்டுகளில் இது 18% மட்டுமே உயர்ந்துள்ளது. இதே காலத்தில் மக்கள்தொகை

[1] Surendra J. Patel, ibid. Ch. 2. Loug-term Changes in outont and income in India, 1896-1960. and also Table-2. on p.44.

அட்டவணை 10·1

## நீண்டகால உற்பத்தி மாற்றங்கள் (1896—1900)

(1952—53 சராசரி விலைகளில்)

| இனங்கள் | 1896-1906 | 1905-1915 | 1916-1925 | 1926-1935 | 1936-1946 | 1946-1955 | 1960 திட்டம் |
|---|---|---|---|---|---|---|---|
| | (மில்லியன் ரூபாய்கள்) | | | | | | |
| உணவு தானியங்கள் | 28·1 | 28·8 | 28·6 | 27·3 | 27·2 | 27·5 | 34·0 |
| வர்த்தகப் பயிர்கள் | 6·7 | 8·0 | 9·1 | 11·1 | 11·9 | 13·7 | 18·0 |
| விவசாய விளை பொருள்கள் | 34·8 | 36·8 | 37·7 | 38·4 | 39·1 | 41·2 | 52·0 |
| ஆலைத் தொழில் | 1·3 | 2·0 | 2·6 | 3·5 | 5·6 | 6·5 | 13·8 |
| தாதுப்பொருள்கள் | 0·2 | 0·3 | 0·4 | 0·5 | 0·7 | 0·8 | 1·5 |
| தொழில்களும் தாதுப் பொருள்களும் | 1·5 | 2·3 | 3·0 | 4·0 | 6·3 | 7·3 | 15·3 |
| மொத்தம் | 36·3 | 39·1 | 40·8 | 42·4 | 45·4 | 48·5 | 67·3 |
| | (ரூபாய்கள்) | | | | | | |
| தலா உற்பத்தி | 158 | 159 | 164 | 155 | 144 | 136 | 164 |
| | குறியீட்டு எண்கள்: 1896—1905 = 100. | | | | | | |
| உணவு தானியங்கள் | 100 | 103 | 102 | 97 | 97 | 98 | 121 |
| வர்த்தகப்பயிர்கள் | 100 | 120 | 136 | 166 | 177 | 204 | 270 |
| விவசாயப் பொருள்கள் | 100 | 106 | 108 | 110 | 112 | 118 | 149 |
| ஆலைத் தொழில்கள் | 100 | 154 | 200 | 270 | 430 | 500 | 1060 |
| தாதுப்பொருள்கள் | 100 | 133 | 176 | 220 | 280 | 346 | 650 |
| தொழில்கள், தாதுப் பொருள்கள் | 100 | 153 | 200 | 267 | 420 | 487 | 1020 |
| மொத்த நிகர உற்பத்தி | 100 | 107 | 112 | 116 | 124 | 133 | 185 |
| தலா உற்பத்தி | 100 | 101 | 104 | 98 | 91 | 86 | 104 |
| மக்கள்தொகை | 100 | 107 | 108 | 119 | 134 | 154 | 178 |
| | பத்து ஆண்டுகளில் % வளர்ச்சி | | | | | | |
| உணவு தானியங்கள் | | +3 | −1 | −5 | — | 1 | 23 |
| வர்த்தகப் பயிர்கள் | | 20 | 14 | 22 | 7 | 15 | 32 |
| தொழில், தாதுப் பொருள்கள் | | 53 | 30 | 33 | 58 | 11 | 110 |
| நிகர உற்பத்தி | | 7 | 5 | 4 | 7 | 7 | 39 |
| தலா உற்பத்தி | | 1 | 3 | −6 | −7 | −5 | 21 |
| மக்கள்தொகை | | 7 | 1 | 10 | 18 | 15 | 14 |

54% உயர்ந்துள்ளது. இக்காலத்தில் தலாவிவசாய உற்பத்தி குறைந்துள்ளது; சுமார் மூன்றில் ஒரு பகுதி குறைந்திருக்கக் கூடும் என்று பட்டேல் கூறியுள்ளார். இக்காலத்தில் ஒரு ஏக்கர் நிலத்தின் உற்பத்தித்திறன் அதிகரிக்கவில்லை. சாகுபடி நிலப் பரப்பு சுமார் 10% மட்டுமே அதிகரித்துள்ளது. ஆகையால், தலாவிவசாய உற்பத்தி குறைந்து சென்று இருக்கவேண்டும் என்று உறுதிப்படுத்துகிறர்.

விவசாய உற்பத்தியில் மிகவும் குறிப்பிடத்தக்க மாற்றம் உணவு தானியங்களில் ஏற்பட்டுள்ளது. சென்ற நூற்றுண்டின் இறுதியில் இருந்ததைவிட 1955இல் உற்பத்தி குறைந்துள்ளது. இந்தத் தேக்கம் சுமார் 1925-லிருந்து 1955 வரை நீடித்துள்ளது. (உணவு தானியக் குறியீட்டு எண்கள் 1947-க்கு முன்னர் வரை பாரதம், பாகிஸ்தான் ஆகிய இரண்டிற்கும் பொதுவானவை. 1947-க்குப் பின்னர் பாரதத்திற்கு மட்டுமே இங்குக் கொடுக்கப் பட்டுள்ளது. ஆகையால் 1951-55 ஆண்டுகளில் விவசாய உற்பத்தி பொதுவாகவும், உணவு தானிய உற்பத்தி சிறப்பாக வும், அதிகரித்துள்ளபோதிலும் குறியீட்டு எண்கள் உயர்வைக் காட்டவில்லை. முதல் திட்டத்திற்குப் பின்னர் உள்ள குறியீட்டு எண்கள் தனியாக விவரிக்கப்பட்டுள்ளன. (இக்காலத்தில் (பாரதம்) உணவு தானியங்கள் நிகர அளவில் இறக்குமதி செய்யப்பட்டன. இருபதாம் நூற்றுண்டின் முன்பு வரை இந்தியா உணவு தானியங்களை ஏற்றுமதி செய்யும் நாடாக இருந்தது. மக்கள்தொகை அதிகரித்ததாலும், உணவு தானிய உற்பத்தி இறுதிநிலையில் குறைந்ததாலும், தலா உணவு தானியங் கள் உற்பத்தி மூன்றில் ஒரு பகுதியிலிருந்து நான்கில் ஒரு பகுதி வரை குறைந்து இருக்கும் என்கிறர். வர்த்தகப்பயிர்களின் உற்பத்திப் போக்கு இதற்கு நேர்மாறுபட்டதாக உள்ளது. இதன் உற்பத்தி இக்காலத்தில்) 1895-1955 ஆகிய ஆண்டு களில் இரண்டு மடங்கிற்கும் அதிகமாக உயர்ந்துள்ளன. வணிகப்பயிர்கள் தனிப்பட்ட முறையிலும், ஒப்புமையாகவும் அதிகரித்துள்ளன. வணிகப்பயிர்களின் மதிப்பு ஆரம்பத்தில் மொத்த விவசாய உற்பத்தியில் சுமார் ஐந்தில் ஒரு பகுதியாக இருந்தது (இதை விடக் குறைவாக இருந்தது). 1955இல் இது மூன்றில் ஒரு பகுதியாக உயர்ந்துவிட்டது.

இருபதாம் நூற்றுண்டில் விடுதலைக்கு முன்புவரை காணப் பட்ட உற்பத்தி, உற்பத்தி நிலப்பரப்பு ஆகியவற்றின் விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. (அட்டவணை 9·2) 1900-லிருந்து 1945 வரை மக்கள்தொகை 37·9% உயர்ந்துள்ளது. இக்காலத்

தில் சாகுபடி நிலப்பரப்பு 18·4%-மும், மொத்த விவசாய உற்பத்தி 12·6%-மும் அதிகரித்துள்ளன. மக்கள்தொகையுடன் ஒப்பிட்டுப்பார்ப்போமானல் விவசாய உற்பத்தி குறைந்துள்ளதைக் காணலாம். சுமார் **17·9%** விவசாய உற்பத்தி குறைந்துள்ளது. இதற்கு உணவு தானியங்கள்தான் முக்கிய காரணமாகவுள்ளது. இக்குறியீட்டு எண் *26·5%* குறைந்துள்ளது. *1900*இல் இருந்ததைப் போலவே *1945*-லும் உணவு தானிய உற்பத்தி மாறாத அளவில் தேக்கமுற்று இருந்தது என்பதைக் காணலாம். (பார்க்கவும்: அட்டவணை *10·2*). சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளில் விளைநிலத்தின் பரப்பு விரிவடைந்துள்ளதே யல்லாமல் உற்பத்தி அதிகரிக்கவில்லை. **ஆகையால் இக்காலத்தில் விவசாயம் விரிவடைந்ததே தவிர, வளர்ச்சி அடையவில்லை என்று கூறலாம்.**

### விடுதலைக்கு முன்னர் உணவுப் பிரச்சினை

இந்தியாவின் உணவுப்பிரச்சினை பர்மாவைத்தனிநாடாக *1937*இல் பிரித்தது முதல் ஆரம்பமாகியது எனலாம். அதன் பின்னர் ஆண்டுதோறும் *15* முதல் *20* இலட்சம் டன்கள் வரை பர்மாவிலிருந்து இந்தியா இறக்குமதி செய்தது. பர்மா *1942*இல் ஜப்பானியர் வசம் வீழ்ந்தது. அதைத் தொடர்ந்து *1943*இல் வங்காளப் பஞ்சம் ஏற்பட்டது. இலட்சக்கணக்கான மக்கள் இதனால் மடிந்தார்கள். *1947*இல் இந்தியாவை பாரதம், பாக்கிஸ்தான் என்று பிரிவினை செய்தார்கள். பாரதத்திற்குப் பாதகமான நிலை ஏற்பட்டது. இந்தியாவில் உள்ள மக்கள்தொகையில் (1947இல்) 82% பாரதத்தில் இருந்தனர். ஆனால், நெல் சாகுபடி நிலப்பரப்பில் *68%*-மும், கோதுமை சாகுபடி நிலப்பரப்பில் 65%-மும், தானியங்கள் சாகுபடிசெய்யும் நிலப்பரப்பில் 75%-மும், பாசனவசதியுடைய நிலத்தில் *69%*-மும் பாரதத்திற்குக் கிடைத்தன. மக்கள்தொகை அதிகமாகவும், உணவு உற்பத்தி குறைவாகவும் உள்ள மாநிலங்கள் பாரதத்துடன் சேர்க்கப்பட்டன. மேற்கு பஞ்சாப், சிந்து ஆகிய பாகிஸ்தானிய பகுதிகள் சாதாரணமாக ஆண்டுதோறும் *10* முதல் *12* இலட்சம் டன்கள் வரை உபரியாக மற்ற மாநிலங்களுக்கு விற்கக்கூடிய பகுதிகளாக இருந்தன. இவ்வாறு *1937*இல் பர்மாவைப் பிரித்த பின்னர் அரிசி இறக்குமதி செய்யவேண்டிய அவசியமும், அதன் பின்னர் 10 ஆண்டுகளில் பாக்கிஸ்தான் பிரிந்து சென்றதும் கோதுமையை இறக்குமதி செய்ய வேண்டிய அவசியமும் ஏற்பட்டன. பாரதத்தின் உணவு உற்பத்தி, இங்கு வாழும் மக்களின் தேவைக்குப் போதுமானதாக இல்லை.

அட்டவணை 10·2

## 20–வது நூற்றாண்டில் விவசாய உற்பத்திக் குறியீடுகள் (1900–1945)

| காலம் | மக்கள் தொகை | சாகுபடி நிலப் பரப்பு | நிலப்பரப்பு குறியீடு | | சராசரி ஆண்டு உற்பத்திக் குறியீடு | | | மக்கள் தொகைக்காகச் சரி செய்யப்பட்ட உற்பத்தி | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | உணவுப் பயிர் | இதர பயிர் | உணவுப் பயிர் | இதர பயிர் | மொத்தம் | உணவுப் பயிர் | இதர பயிர் | மொத்தம் |
| 1900-01 முதல் 1904-05 | 100 | 100 | 100 | 100 | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |
| 1905-06 முதல் 1909-10 | 103.1 | 105.8 | 104.5 | 111.5 | 97.5 | 106.8 | 99.6 | 94.6 | 103.6 | 96.6 |
| 1910-11 முதல் 1914-15 | 105.1 | 109.8 | 107·8 | 120.0 | 105.6 | 121.7 | 109.1 | 100.5 | 105.8 | 103.8 |
| 1915-16 முதல் 1919-20 | 105.6 | 108.8 | 108.3 | 113.4 | 107.2 | 102.8 | 110.5 | 101.5 | 97.3 | 104.8 |
| 1920-21 முதல் 1624-25 | 108.0 | 108.9 | 107.7 | 115.7 | 101.8 | 124.7 | 106.8 | 94.3 | 45.5 | 98.9 |
| 1925-26 முதல் 1929-30 | 113.6 | 111.8 | 107.7 | 129.4 | 97.3 | 138.7 | 196.3 | 85.7 | 122.1 | 93.6 |
| 1930-31 முதல் 1934-35 | 120.5 | 114.8 | 111.7 | 127.7 | 100.3 | 137.9 | 108.5 | 83.2 | 114.4 | 90.0 |
| 1935-36 முதல் 1939-40 | 129.2 | 115.3 | 110.6 | 135.9 | 97.9 | 159.1 | 111.1 | 75.8 | 123.1 | 86.0 |
| 1940-41 முதல் 1944-45 | 137.9 | 118.4 | 117.3 | 132.7 | 100.9 | 155.3 | 112.6 | 73.5 | 113.2 | 82.1 |

Source: Readings in Indian Economic History, P. 161-162. Edited by B. N. Ganguli, Asia, 1964.

வங்காளப் பஞ்சத்தைத் தொடர்ந்து 1943 உணவுதானியக் கொள்கைக் கமிட்டி, திரு. வி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களின் தலைமையில் நியமிக்கப்பட்டது. குறுகிய கால அளவில் உணவுக் கிடைப்பருமையைச் சமாளிக்கக்கட்டுப்பாடும்,பங்கீடும்அவசியம் என்றும், நீண்டகால ரீதியில் 'அதிக உணவு உற்பத்தியியக்கம்' ஒன்று அவசியம் என்றும் இக்கமிட்டி கூறியது. அதிக உணவு உற்பத்தி இயக்கத்தில்(1) புதிய நிலத்தையும், தரிசு நிலத்தையும் சாகுபடிக்குக் கொண்டுவருதல்; (2) சிறந்த உரம், தேர்ந்து எடுத்த விதை ஆகியவற்றைப் பயன்படுத்துதல், (3) பாசன வசதிகளை அதிகரித்தல் முதலியன வற்புறுத்தப்பட்டன. விவசாய உற்பத்தியை அதிகரிக்க வேண்டிய முயற்சிகள் தீவிரமாக மேற்கொள்ளப்படவில்லை. பிரச்சினையின் சில கூறுகள் மட்டுமே கவனிக்கப்பட்டன. விவசாய உற்பத்தி என்ற பிரச்சினையை முழுமையாக, முழுமூச்சுடன் அரசாங்கம் அணுகவில்லை. ஆகையால் அதிக உணவு உற்பத்தி இயக்கத்தால் எதிர்பார்த்த அளவிற்கு பலன் ஏற்படவில்லை.

விடுதலைக்குப் பின்னர் உணவு தன்னிறைவு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. செறிந்த சாகுபடி முறையைக் கொண்டும், கூடுதலான பாசன வசதிகளைக் கொண்டும் சுமார் 74 இலட்சம் டன்கள் கூடுதலாக உற்பத்தி செய்ய முடியும் என்று உணவு தன்னிறைவு இயக்கத்தினர் திட்டமிட்டனர். ஆனால், 1949–51 ஆண்டுகளில் மேற்படி குறிக்கோளில் 25% மட்டுமே அடைய முடிந்தது. 1951-க்குப்பின்னர் உணவு தன்னிறைவு இயக்கம் ஐந்தாண்டுத்திட்டத்தின் ஒரு கூறாக மாறியது.

முதல் ஐந்தாண்டுத்திட்டத்தின் துவக்கத்தில் உணவு தானியத்தை இறக்குமதி செய்து வந்தார்கள். மேற்படி திட்டக் கால இறுதியில் பாரதம் கிட்டத்தட்டத் தன்னிறைவு நிலையை அடைந்தது எனலாம். இரண்டாவது திட்டக்காலத்தில் உணவு தானிய உற்பத்தி போதுமானதாக இல்லை. 1957இல் தானியக் கிடைப்பருமை அதிகமாகி விலைமட்டம் உயர்ந்து சென்றது. இதை ஆராய்வதற்கு திரு. அசோக் மேத்தா தலைமையில் உணவு தானிய விசாரணைக்குழு ஒன்று நியமிக்கப்பட்டது. ஐந்தாண்டுத் திட்டத்தில் முதலீட்டுச் செலவினம் உயர்ந்துள்ளதால் பணப் புழக்கமும், மக்களிடம் வாங்கும் சக்தியும் அதிகரித்துள்ளன. அதேசமயம் பருவமழை இல்லாமையால் முதலில் 1955இல் புன்செய்ப் பயிர்களின் உற்பத்தியும் பின்னர் இதர தானியங்களின் உற்பத்தியும் (1956–57) குறைந்தன. இதன் விளைவாக விலை உயர்ந்தது. உணவு தானியங்களின் உற்பத்தியைப் பெருக்குவது

அவசியம் என்றும், இது நீண்டகாலக் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்றும், குறுகிய கால அளவில் தானியங்களின் விலை மட்டம் உயராமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றும் கூறியது. தானிய இறக்குமதியும், தானியத்தை உபரியாகக் களஞ்சியங்களில் சேமித்துவைத்துக்கொள்வதும் அவசியம் என்று கமிட்டி வற்புறுத்தியது. மேற்படி காப்பாக உள்ள தானிய இருப்புகளிலிருந்து, விலை உயரும்போது தானியத்தை விற்கவும், அங்காடிகளில் விலை சரியும்போது தானியத்தை வாங்கவும் வேண்டும் என்று கூறியது. தானியத்தின் வர்த்தகம் அரசுத்துறையில் நடைபெறவேண்டும் என்றும், இது நீண்டகால ரீதியில் தானிய விலையை நிலைபெறச் செய்யவும், விவசாயப் பொருள்களின் விலைக் கொள்கையைச் செயல்படுத்தவும் உதவியாக இருக்கும் என்றும் கூறியது.

1949-50-ஐ அடிப்படை ஆண்டாகக் (100) கொண்ட விவசாய உற்பத்திக் குறியீட்டு எண் 1964-65இல் ஓர் உச்ச நிலையை அடைந்தது. மேற்படி ஆண்டில் உற்பத்திக் குறியீட்டு எண் 159·4 என்ற நிலையை எட்டிப்பிடித்தது. அதன் பின்னர் இரு ஆண்டுகளிலும் (1965-66, 1966-67) நாடெங்கிலும் நிலவிய வறட்சி காரணமாக 133·1 ஆகவும், 133·6 ஆகவும் முறையே குறைந்தன. 1964-65இல் உணவு தானிய உற்பத்தி **89** மில்லியன் டன்களாக இருந்தது. 1965-66இல் உணவு தானிய உற்பத்தி (17 மில்லியன் டன்கள் குறைவாக) **72** மில்லியன் டன்களாகக் குறைந்து சென்றது. அடுத்துள்ள 1966-67-இல் 74 மில்லியன் டன்களாக இறுதி நிலையில் உயர்ந்து சென்றது. இரண்டு ஆண்டுகள் வறட்சிக்குப் பின்னர் விவசாய உற்பத்தி மீண்டும் உயர்ந்து சென்றது. அதற்கு முன் (1964-65இல்) இருந்ததை விட விவசாய உற்பத்தி அதிகமான அளவுக்கு உயர்ந்தது. 1967-68இல் விவசாய உற்பத்திக் குறியீட்டு எண் 161·1 ஆக இருந்தது. தொடர்ந்து 1968-69இல் விவசாய உற்பத்தி அதிகரிக்கவில்லை என்றாலும், கிட்டத்தட்ட முன்பு இருந்த மட்டத்திற்கு இறுதிநிலை அளவில் உற்பத்தி குறைந்து சென்றது. அப்போது குறியீட்டு எண் 159·5 ஆக இருந்தது. இறுதியாக 1969-70 ஆண்டு உற்பத்தி மீண்டும் ஒரு சாதனையாக இருந்தது. இந்த ஆண்டில் குறியீட்டு எண் 169·9 ஆக உயர்ந்தது. இவ்வாறு சுமார் 20 ஆண்டுகளில் (1949-50 லிருந்து 1969-70 வரை) விவசாய உற்பத்தி சுமார் 70% உயர்ந்து சென்றது. இதேகாலத்தில் உணவு தானியங்கள் 68.6%-மும் வர்த்தகப்பயிர்கள் 72.5%-மும் அதிகரித்துள்ளன. இந்த இருபது ஆண்டுகளில் (1951-71) மக்கள்

தொகை 361 மில்லியனிலிருந்து 547 மில்லியனுக உயர்ந்தது. சுமார் 51.5% உயர்ந்து சென்றது. மக்கள்தொகை உயர்ந்துள்ள வேகத்தை விடக் கூடுதலான விகிதத்தில் உணவு தானியங்களின் உற்பத்தியும், வர்த்தகப் பயிர்களின் உற்பத்தியும் அதிகரித்துள்ளன.

1967_68_லிருந்து 1969_70 வரை உற்பத்தி உயர்ந்த மட்டத்தில் இருந்து வருகிறது. 1969_70 ஆண்டிற்கான விவசாய உற்பத்திக் குறியீட்டு எண் அதற்கு முந்தைய ஆண்டை விட 6.5 புள்ளிகள் அதிகமாக உள்ளன. உற்பத்திப் பெருக்கத்திற்கு இரண்டு முக்கிய காரணிகள் உள்ளன. சாகுபடி நிலப் பரப்பு முன்புள்ள ஆண்டை விட 2·7% அதிகரித்துள்ளது. அதைத்தவிர உற்பத்தித்திறன் சுமார் 3·7% உயர்ந்துள்ளது.

அட்டவணை **10·3**

**விவசாய உற்பத்திக் குறியீட்டு எண்** +

பாரதம் முழுவதற்கும் (1949·50=100)

| ஆண்டு | குறியீட்டு எண் | | | வருட சராசரி வேறுபாடு | | |
|---|---|---|---|---|---|---|
| | மொத்த விவசாயப் பொருள் | உணவு தானியம் | பிற விவசாயப் பொருள் | மொத்த விவசாயப் பொருள் | உணவு தானியம் | பிற விவசாயப் பொருள் |
| 1961_62 | 144·8 | 140·3 | 153·9 | +1·8 | +2·3 | +0·9 |
| 1962_63 | 139·6 | 133·6 | 151·6 | −3·6 | −4·8 | −1·5 |
| 1963_64 | 143·1 | 136·5 | 156·5 | +2·5 | +2·2 | +3·2 |
| 1964_65 | 159·4 | 150·8 | 176·7 | +11·4 | +10·5 | +12·9 |
| 1965_66 | 133·1 | 121·3 | 157·0 | −16·5 | −19·6 | −11·1 |
| 1966-67 | 133·6 | 123·8 | 147·4 | −1·1 | +2·1 | −6·1 |
| 1967_68 | 161·1 | 159·0 | 165·2 | +22·4 | +28·4 | +12·1 |
| 1968_69 | 159·5 | 157·5 | 163·6 | −1·0 | −0·9 | −1·0 |
| 1969_70 | 169·9 | 168·6 | 172·5 | +6·5 | +7·0 | +5·4 |

+Source : RBI Bulletin, Feb. 1971, P. 213.

விவசாய உற்பத்திக்கான குறியீட்டு எண்கள் (1961-62 முதல் 1969-70) அட்டவணை **10.3** கொடுக்கப்பட்டுள்ளன. 1969-70 இல் உணவு தானிய உற்பத்தி முன்புள்ள ஆண்டை விட 7% அதிகமாகவும், வர்த்தகப் பயிர் பொருள்கள் 5.4% அதிகமாகவும் இருப்பதால், மொத்த விவசாய உற்பத்தி 6.5% உயர்ந்துள்ளது.

முதல் திட்ட ஆரம்பத்திலிருந்து 1951-52-லிருந்து 1969-70 வரை மொத்த விவசாயத்திலும், உணவு தானியங்களின் உற்பத்தியிலும் தோன்றிய மாறுதல்கள் அட்டவணை **10.4** குறிப்பிடப்பட்டுள்ளன.

விவசாய உற்பத்தியிலும், உணவு தானிய உற்பத்தியிலும் நீண்ட கால ரீதியில் ஏற்பட்ட போக்குகளை இப்போது ஆராய்ந்து பார்ப்போம். முதல் திட்ட காலத்தில் மொத்த விவசாய உற்பத்தி ஆண்டுதோறும் 4.17% அதிகரித்தது. இக்காலத்தில் உணவு தானியங்களின் உற்பத்தி ஆண்டு தோறும் 5,25%-தில்

அட்டவணை **10·4**

**சராசரி ஆண்டு விவசாய உற்பத்தி மாற்றங்கள்**

(சதவீதத்தில்)

| காலம் | சராசரி ஆண்டு சதவீத மாற்றங்கள் | |
|---|---|---|
| | விவசாயப் பொருள்கள் அனைத்திற்கும் | உணவு தானியங்கள் |
| 1951-52 முதல் 1955-56 | +4·17 | +5·25 |
| 1956-57 முதல் 1960-61 | +4·32 | +3·98 |
| 1961-62 முதல் 1965-66 | −0·87 | −1·87 |
| 1951-52 முதல் 1669-70 | +3·42 | +3·86 |

ஆதாரம் முன்கூறியபடி.

1951-52 முதல் 1969-70 வரை தொடர் வட்டி விகித அடிப்படையில் விவசாய உற்பத்தி ஆண்டுதோறும் 2·52% அதிகரித்தது; உணவு தானிய உற்பத்தி 2·40% அதிகரித்தது.

உயர்ந்தன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் சராசரி விவசாய உற்பத்தி 4·32%-திலும், உணவு உற்பத்தி 3.98%-திலும் உயர்ந்தன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாய உற்பத்தி 0.87% குறைந்தும், உணவு தானிய உற்பத்தி 1.87% குறைந்தும் காணப்பட்டன. இக்காலத்தில் இயற்கையின் ஒத்துழைப்பு இல்லை. அதனால் விவசாய உற்பத்தி பொதுவாகவும், உணவு தானிய உற்பத்தி சிறப்பாகவும் பாதிக்கப்பட்டன. பாரத விவசாயம் தொடர்ந்து பருவ மழையின் நிலையற்ற தன்மையால் பாதிக்கப்படுகிறது. 1962-63-லிருந்து 1965-66 வரை வறட்சி நிலைமை அதிகம் காணப்பட்டது.

1951-52-லிருந்து 1969-70 வரையில் ஆண்டுதோறும் விவசாய உற்பத்தி 3·42%-திலும், உணவு தானிய உற்பத்தி 3.86%-திலும் உயர்ந்துள்ளன. இதைத் தொடர் வட்டி விகிதத்தில் கூறுவோமானால் விவசாய உற்பத்தி ஆண்டு தோறும் **2.52**%-லும், உணவு தானிய உற்பத்தி **2.40**-லும் அதிகரித்துள்ளன.

1964-65இல் **89** மில்லியன் டன்களாக உள்ள உணவு தானிய உற்பத்தி, 1967-68இல் 95.1 மில்லியன் டன்களாக உயர்ந்தது. அதன் பின்னர் 1968-69இல் உணவு உற்பத்தி இறுதி நிலையில் வீழ்ச்சி அடைந்தது.—**94** மில்லியன் டன்களாகக் குறைந்தது. 1969-70இல் மீண்டும் 99.5 மில்லியன் டன்களாக உயர்ந்தது. 1970-71இல் இந்தப்போக்கு மேலும் நீடித்தது. இந்த ஆண்டில் உணவு தானிய உற்பத்தி **107.8** மில்லியன் டன்கள்[6] என்று கணித்துள்ளார்கள். முந்தைய ஆண்டு உற்பத்தியை விட இது 8.3 மில்லியன் டன்கள் கூடுதலாகும். இவ்வாறு கடந்த நான்கு ஆண்டுகளாக உயர் விளைச்சல் பயிர் ரகங்களை (High yielding varieties) சாகுபடி செய்வதால் பொதுவாக விவசாய உற்பத்தியும், சிறப்பாக உணவு தானிய உற்பத்தியும் தொடர்ச்சியாக மேல்நோக்கி உயர்ந்து செல்கின்றன. இந்த உற்பத்திப் போக்கு மேலும் தொடர்ந்து நீடிக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

**சமுதாயநலத் திட்டங்கள்**

கிராமங்களின் ஒருமித்த வளர்ச்சியில்தான் விவசாயத் துறையின் முன்னேற்றம் அடங்கியுள்ளது என்று திட்டவட்டமாக 1928 விவசாய அரச ஆணைக்குழு கருத்துத் தெரிவித்தது.

[6] RBI- Annual Report, 1971, p. 2.

விவசாயத்தையும், விவசாயத்துடன் தொடர்பு கொண்டுள்ள பிரச்சினைகள் அனைத்தையும் ஒருங்கே கருத வேண்டும். கிராமியப் பிரச்சினைகள் அனைத்திற்கும் ஒரே சமயத்தில் தீர்வு காண முயற்சி செய்யவேண்டும். இவற்றைத் தனித்தனியாகப் பிரிக்க முடியாது. அவ்வாறு அரசாங்க இலாகாக்கள் பிரச்சினையைத் தனித்தனியாக அணுகியதால்தான் தோல்வி அடைந்தன. ஆகையால் பல இலாகாக்கள் ஒரு முகப்படுத்தப்பட்ட நிலையில் விவசாயிகளின் பிரச்சினைகளை அணுகவும், தீர்வுகாண முயலவும் வேண்டும் என்று மேற்படி அரச ஆணைக்குழு கூறியது. அடுத்தப்படியாக (1943) அதிக உணவு உற்பத்தி இயக்கமும் இக்கருத்தை வலியுறுத்தியது. உணவு உற்பத்தியை விரிவாக்குவதற்கு ஒருங்கு இணைக்கப்பட்ட கிராமிய வளர்ச்சி அவசியம் என்று வற்புறுத்தப்பட்டது.

கிராமியப் பிரச்சினைகள் விவசாயிகளை மையமாகக் கொண்டுள்ளன. ஆகையால் தனித்தனியாக எந்தப் பிரச்சினைக்கும் தீர்வு காணமுடியாது. இவை அனைத்தையும் தொடர்பு படுத்திக் காணவேண்டும்; இவை அனைத்திற்கும் ஒருசேரத் தீர்வு காண வேண்டும். இதுதான் சமுதாய நலத்திட்டம் உருவாவதற்கு அடிப்படையாக இருந்தது.

விடுதலைக்கு முன்னர் முக்கியமாக கர்ஸன்பிரபு **1902-03** இல் அறிக்கை வெளியிட்ட பின்னர் பிரிட்டிஷ் இந்தியாவின் அரசாங்கம் வளர்ச்சித்திட்டங்களை நிறைவேற்ற வேண்டும் என்று விரும்பியது. ஆனால், மேற்படி முயற்சிகள் ஒருங்கு இணைக்கப்படாமலும் ஒருமுகப்படுத்தப்படாமலும் இருந்தன. எனவே, பிரச்சினைகளைத் தீர்க்க முடியவில்லை. அதைத்தவிர மேற்படி முயற்சிகள் அரசாங்க இலாகாக்களினால் தயாரிக்கப்பட்டவை. இவை மேற்படி இலாகாக்களினால் நிறைவேற்றப்படுகின்றன. இவ்வாறு வளர்ச்சித்திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன என்று பெருமிதத்தோடு கூறிக்கொள்வதற்காக அவை செயல்படுத்தப்பட்டன. எனவே வளர்ச்சிக்கான திட்டங்கள் அரசாங்கத்தால், அரசாங்கத்திற்காக, அரசாங்கமே மேற்கொண்ட திட்டங்களாக இருந்தன. மக்கள் ஈடுபாடு இல்லாமையால் பெரும்பாலான திட்டங்கள் வெற்றியடையவில்லை.

வரலாற்று அனுபவங்களைக் கொண்டு கிராமியப் பிரச்சினைகளைப் புதிய நோக்கத்துடன் அணுகவேண்டியது அவசியமாக இருந்தது. வளர்ச்சித்திட்டங்களில் மக்கள் பங்கு பெறவேண்டும். கிராமவாசிகள் தங்களுடைய எதிர்காலத்தை மேம்படுத்திக் கொள்வதற்காகப் பாடுபடவேண்டும். இதையெல்லாம் விட,

மக்களிடையே விழிப்பு உணர்ச்சியையும், தன்னம்பிக்கையையும் ஏற்படுத்தவேண்டும் என்பது முக்கியமான குறிக்கோளாக உள்ளது. அரசாங்க இலாகாக்கள் ஒருங்கு இணைந்து வளர்ச்சிப்பணிகளை ஒருமுகப்படுத்தியவாறு மேற்கொள்வதுடன் மக்களிடையே தன்னம்பிக்கையையும், ஆர்வத்தையும் தோற்றுவிப்பது அவசியம். கிராமத்தில் சூழ்ந்துள்ள ஏழ்மை, பிணி, அறியாமை ஆகிய மூன்றையும் ஒருங்கே அகற்றுதல் இத்திட்டத்தின் முக்கிய நோக்கமாகும்.

### அடிப்படையான தத்துவங்கள்

சமுதாயநலத் திட்டம் கிராமிய வளர்ச்சியில் ஒரு திருப்பு மையமாக உள்ளது. இதைத் தோன்றும் புரட்சியாகவும் கூறுவர். வெளிப்படையாகத் தெரியாது போனாலும் கிராமிய அமைப்புகளிலும், மக்களின் ஈடுபாட்டிலும், இவை அடிப்படையான மாற்றங்களை ஏற்படுத்துகின்றன.

ஆரம்பத்தில் 'சமுதாயநலத் திட்டம்' என்றும், 'தேசிய விரிவாக்கத் திட்டம்' என்றும் இருவகைத் திட்டங்கள் இருந்தன. பின்னர் இந்த வேறுபாடு அகற்றப்பட்டது. அதற்குப் பதிலாகப் பல நிலைகள் வேறுபடுத்தப்பட்டன.

கிராமிய வாழ்க்கையைப் பாதிக்கக்கூடிய பலவேறு நடவடிக்கைகளையும் ஒருங்கு இணைத்தல் வேண்டும். அரசு இலாகாக்கள் பலவாக இருந்தாலும் அவை ஒரு 'குழு'வாகச் செயல்படவேண்டும். கிராமிய ஊழியர் (கிராம சேவக்) ஒருவரின் மூலமாக எல்லா ஆக்க முயற்சிகளும் ஒருமுகப்படுத்தப்படுகின்றன. அரசாங்க இலாகாக்கள் வளர்ச்சிப்பணிகளுக்கு உதவி செய்யத் தயாராக இருந்தாலும், மக்கள் இத்திட்டங்களை உருவாக்கவும், அவற்றைச் செயல்படுத்தவும் அக்கறையோடு முயலவேண்டும். கிராமவாசிகளிடம் உள்ள சாதனங்கள், உபயோகிக்கப்படாத மனித சக்தி ஆகியவற்றைக் கிராமத்தின் முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்த வேண்டும்.

வளர்ச்சித்திட்டங்களுக்காகக் குறிப்பிட்ட பகுதிகள் தேர்ந்து எடுக்கப்படவேண்டும். அங்கு தீவிரமாக வளர்ச்சிக்கான ஆக்க வேலைகளைச் செயல்படுத்த வேண்டும். ஒவ்வொரு குடும்பமும் வளர்ச்சிக்கான முயற்சிகளில் ஈடுபடவேண்டும். இவர்கள் உழைப்பு, மூலதனம், சாதனங்கள் முதலியவற்றைத் தங்கள் தங்கள் தகுதிக்கு ஏற்ப அளிக்க வேண்டும். கூடியவரை விவசாயிகள் புரிந்து கொள்ளும் வகையில் பிரச்சினைகளை எளிய

முறையில் தீர்க்க வேண்டும். கிராமவாசிகள் தங்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்வதற்காகப் பாடுபட வேண்டும். இவ்வாறு பொருளாதார நலன்களைக் கருதிப் பாடுபடும் கிராமவாசிகளின் ஆர்வம் குன்றாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இவர்களிடம் தன்னம்பிக்கையையும், சுயமுயற்சியையும் தோற்றுவிக்க வேண்டும். கூடுமானவரை வளர்ச்சிக்கான முயற்சிகள் கூட்டுறவு அடிப்படையில் இருக்க வேண்டும்.

கிராமவாசிகளிடம் முன்னேற்றத்திற்கான ஆர்வத்தை ஏற்படுத்தியும், முற்போக்கான கொள்கைகளை வலியுறுத்தியும் தன்னம்பிக்கைக்கு இடமளித்துக் கிராமவாசிகள் தங்களுடைய உழைப்பால் தங்களுடைய வாழ்க்கை வசதிகளை அதிகரித்துக் கொள்ள உதவி செய்வது முதன்மையான நோக்கமாகும். விஞ்ஞானத் தொழில் நுட்ப ஆராய்ச்சியின் உதவியால் விவசாயிகள், கால்நடை, சிறுதொழில்கள் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்கு அடிகோலுதல் அடுத்தாற்போல வலியுறுத்தப்படுகிறது. மூன்றாவதாகச் சமுதாயத்தின் நல்வாழ்க்கைக்கு அவசியமான பள்ளிக்கூடம், மருத்துவமனை, சாலைகள், கிணறுகள் முதலியன வலியுறுத்தப்படுகின்றன.

## முக்கிய பணிகள்

சமுதாயநலத் திட்டங்களில் பின்வரும் பணிகள் வலியுறுத்தப்படுகின்றன.

**விவசாயம்:** காடுகளைத்திருத்தி விளைநிலமாக்குதல், உரம், விதைகளைத் தேர்ந்து எடுத்தல், தயாரித்தல், சிறந்த விவசாய நுட்பங்களை உபயோகித்தல், விவசாய நுட்பங்களை விவசாயிகளுக்கு விளக்கிக் கூறுதல், புதிய விவசாய சாதனங்களை அளித்தல், விற்பனை வசதிகள், நாணயவசதிகள், மண் அரிப்பைத் தடுத்தல், இயற்கை உரம்—கலப்பு உரம் தயாரித்தல், கால்நடை அபிவிருத்தி முதலியனவற்றை இயன்றவரை கூட்டுறவு அடிப்படையில் அளித்தல்.

**பாசனம்:** சிறு பாசனத்திட்டங்களை நிறைவேற்றுதல், குளம், கால்வாய், கிணறுகள், குழாய்க்கிணறுகள் முதலியன ஏற்படுத்துதல்.

**செய்தித் தொடர்பும் போக்குவரத்தும்:** புதிய சாலைகள் அமைத்தல், கிராமத்தைப் பெருஞ்சாலைகளுடன் இணைத்தல் - முக்கியமாக இணைப்புச்சாலைகள் அமைத்தல்.

**கல்வி :** எழுத்தறிவித்தல், முதியோர் கல்வி, சிறுவர் கல்வி, கல்விக்கூடங்கள் அமைத்தல் முதலியன. பயிற்சி அளித்தல் (சிறு தொழில்களுக்குப் பயிற்சி அளித்தல்), புதிய நுட்ப முறைகளை உபயோகிக்கும்படி ஊக்குவித்தல், பயிற்சி அளித்தல்.

**சுகாதாரம் :** மருத்துவ சாலைகள்—மருந்தகங்கள் ஏற்படுத்துதல், கால்நடைகளின் ஆரோக்கியத்தைப் பராமரித்தல், தொத்து நோய்கள் கட்டுப்பாடு, மலேரியாத் தடுப்பு, பொதுவான துப்புரவு, சுகாதாரம் முதலியன.

**துணை வேலை வாய்ப்பு :** சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஏற்படுத்துவதாலும், இதர ஆக்கப் பணிகள் மூலமாகவும் கிராமங்களில் வேலை வாய்ப்பு ஏற்படுத்துதல்.

**அமைப்பு :** ஒவ்வொரு ஐந்து கிராமங்களுக்கும் கிராம நல ஊழியர் ஒருவர் இருப்பார். சுமார் 100 கிராமங்கள்—அதாவது 60,000 முதல் 70,000 வரை மக்கள்தொகை உடையவை- ஒரு வளர்ச்சி வட்டாரம் ஆக இருக்கும். இதைப் போன்று மூன்று வளர்ச்சி வட்டாரங்கள் கொண்டது வளர்ச்சிப் பகுதியாகும்.

கிராம சேவகர் என்று அழைக்கப்படும் கிராம நல ஊழியர் மக்களுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு இருப்பார். இவருக்கு 4 முதல் 5 கிராமங்கள் ஒதுக்கப்பட்டிருக்கும். இங்குள்ள மக்களுடன் தொடர்புகொண்டு அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறுதல், வளர்ச்சித் திட்டங்களை உருவாக்கவும், அதைச் செயல்படுத்தவும் உதவி செய்தல், மக்களுக்கும், அரசு இலாகாக்களுக்கும் இடையே இணைப்பாளர் ஆகச் செயல்படுதல்.

சமுதாயநலத் திட்டங்கள் எவ்வாறு செயல்படுகின்றன என்பதைப் பல ஆய்வுக்கமிட்டிகள் ஆராய்ந்துள்ளன. கிராம நலத் திட்டங்களினால் ஏற்படும் பலன்கள் மேல்மட்டத்தில் உள்ளவர்களின் ஏகபோக உரிமையாக உள்ளன என்று பல அறிக்கைகள் கூறுகின்றன. உ. பி.-தில் மட்டும் சுமார் 70% வளர்ச்சித் திட்டங்கள் செல்வாக்கான விவசாயிகளின் நலன்களைப் பாதுகாத்து, மேம்படுத்தின என்று கூறப்படுகிறது. இதைப் போன்று ஒவ்வொரு மாநிலத்திலும் இருக்கக்கூடும். கிராமங்களில் குறைந்த வருமானம் ஈட்டுபவர்கள் ஒன்றுபடவோ, அவர்கள் தங்கள் நலன்களை மேம்படுத்தும் திட்டங்களைத் தயாரிக்கவோ முடியவில்லை. அவர்களுடைய அறியாமையும், இயலாமையும் முக்கிய தடைகளாக இருக்கின்றன.

இரண்டாவதாக வளர்ச்சிப் பணிகளை விட சமூக நலப் பணிகள் அதிகம் வற்புறுத்தப்பட்டன. ஒரு ஏக்கர் நிலத்தின் உற்பத்தித்திறனை அதிகரிப்பது சிரமம். அதை வெளிப்படையாகக் காண்பிக்க முடியாது. ஆனால், ஒரு மருத்துவமனை, ஒரு பள்ளிக் கூடம், சாலை, கிணறுகள் ஆகியவற்றைச் சாதனைகளாக எல்லோருக்கும் காண்பிக்கலாம்.

நாடெங்கிலும் கிராம வளர்ச்சிக்கான சமுதாய நலத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்று பெரிதும் விரும்பிய தால் சக்திக்கும், சாதனங்களுக்கும் மீறிய அளவில் திட்டங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. சமுதாய நலத் திட்டத்திற்காக ஏற்றுக்கொண்ட பகுதிகளைச் சிறந்த முறையில் மேம்படுத்து வதற்குப் போதிய வசதிகள், சாதனங்கள் இல்லை. இதனால் சில அத்தியாவசியமான பணிகளைப் பூர்த்தி செய்ய முடியாமல், திட்டங்கள் நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. இதற்குப் பதிலாகச் சில வட்டங்களை எடுத்துக்கொண்டாலும் அவற்றைச் செம்மையாக வளர்ச்சியுறச் செய்ய முடியுமானால் அதனால் சிறந்த பலன் கிடைக்கும்.

விவசாயத் துறையில் விரிவாக்கப் பணிகள் (Extension Service) போதுமான அளவிற்குச் செயல்படவில்லை. கிராம வளர்ச்சிக்கான விவசாயத் திட்டங்கள் தகுந்த அளவிற்கு நிறைவேற்றப்படவில்லை. இந்த நிலைமை நாடெங்கிலும் இருப் பதாகக் கூற முடியாது. முக்கியமாக 'வீரியப்பயிர்' (Hybrid crops) சாகுபடி திட்டத்தையடுத்து விவசாயிகள் அதிகம் விரிவாக்கப் பணியாளர்கள் விவசாயிகளைத் தேடிச் சென்ற நிலை மாறி, விவசாயிகள் விரிவாக்கப் பணியாளர்களின் உதவியையும், வட்டார விவசாய அலுவலகர்களையும் சூழ்ந்து கொண்டுள்ளனர். மக்களின் ஆர்வத்தைத் தூண்டவும், நடைமுறையில் அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளவும் வானொலி நிலையங்கள் சிறந்த பணியாற்றுகின்றன.

## பஞ்சாயத்து இராஜ்யம்

சமுதாயநலத் திட்டங்கள் எவ்வாறு செயல்படுகின்றன என்று அறிய விரும்பிய திட்டக்குழு 1956 டிசம்பரில் திரு பல் வந்தராய் மேத்தா என்பவர் (நாடாளுமன்ற உறுப்பினர்) தலைமை யில் ஆய்வுக்குழு ஒன்றை நியமித்தார்கள். சமுதாய நலத் திட்டங்களில் மக்களின் ஈடுபாடு திருப்தி அளிக்கும் வகையில் இல்லை என்று அக்கமிட்டி கூறியது. பெரும்பாலும் திட்டங்கள்— வளர்ச்சிக்கானவை — கிராமவாசிகளின் ஆலோசனைகளைக்

கேட்காமல் தயாரிக்கப்பட்டன; வளர்ச்சித் திட்டங்கள் தயாரிப்பதில் கிராமமக்கள் நேரிடையாகப் பங்கு கொள்ளு வதற்காகப் புதிய முறை ஒன்று பரிந்துரைக்கப்பட்டது. இதைத்தான் 'பஞ்சாயத்து ஆட்சிமுறை' என்று கூறுகிறோம்.

வளர்ச்சிப்பணிகளைத்திறம்படச் செயல்படுத்தப் படியமைப்பு உடைய அதிகாரவர்க்க அமைப்புகள் சரிவரவில்லை என்று பல்வந்தராய் மேத்தா கமிட்டி கூறியது. ஆகையால் அதிகாரங்கள் பரவலாக்கப்பட்ட அமைப்பு முறையை அளிப்பதன் மூலம் மக்கள் நேரிடையாகப் பங்கு கொள்ளவும், வளர்ச்சித் திட்டங்கள் சிறந்த முறையில் செயல்படவும் முடியும். கிராமங்கள் ஒவ்வொன்றிலும் பஞ்சாயத்து ஆட்சி இருக்க வேண்டும். கிராமம் என்பது அரசியல்—தலசுய ஆட்சியின்—அலகாகமட்டும் இல்லாமல், பொருளாதார முன்னேற்றத்திற்கான அடிப்படையான அலகாகவும் செயல்படவேண்டும். கிராம வளர்ச்சிக்கான திட்டங்கள் கிராமப்பஞ்சாயத்துகளில் விவாதிக்கப்படும். வயதும், அனுபவமும் நிரம்பிய பிரதிநிதிகள் தங்கள் கிராமத்தில் உற்பத்தியை அதிகரிக்க என்ன என்ன முயற்சிகள் செய்யவேண்டும் என்று கலந்து ஆலோசிப்பார்கள். பாசன வசதியிலிருந்து, விதை, உரம், கடன்தொகை, கால்நடை முதலியவை எந்த அளவுக்குத் தேவைப்படுகின்றன என்பதை முன்கூட்டியே திட்டமிடுவார்கள். கிராமத் திட்டங்கள் தயாரிக்கப்படும் நிலையில் பல்வேறு அரசு ஊழியர்களும் — முக்கியமாக விரிவாக்கப்பணியாளர்கள், சமுதாய வளர்ச்சி அலுவலர், கூட்டுறவு அலுவலர், விவசாய அதிகாரி முதலியோர்—உடன் இருப்பார்கள். கிராமத்திட்டங்கள் தயாரிக்கப்படுவதால் ஒவ்வொரு முறைகளிலும், ஒவ்வொரு இலாகாவினரும் எந்த எந்த அளவுக்குப் பொருள்கள், சாதனங்கள், உரம், விதை முதலிய வற்றைத் தயார் செய்துகொள்ளவேண்டும் என்று அறிவார்கள். இது சமுதாய வளர்ச்சியின் முதல் கட்டமாகும்.

இவ்வாறு தயாரிக்கப்பட்ட கிராம உற்பத்தித்திட்டங்கள் 'பஞ்சாயத்து சமிதி' என்று அழைக்கப்படும் பஞ்சாயத்து ஒன்றியம் அல்லது (வளர்ச்சி) வட்டார அளவில் ஒருங்கு இணைக்கப்படும். ஒரு கிராமத்திட்டம் பிற கிராமங்களின் உற்பத்தி வாய்ப்புகளைப் பாதிக்காமல் இருக்க வேண்டும். பாசனவசதியை உயர்த்தக் கால்வாய் ஆழப்படுத்தும் முயற்சிகள் அநேகமாக வட்டார அளவில் செயல்படும். கிராம அளவில் முடியாத, ஆனல் வட்டார அளவில் — பல கிராமங்களின் கூட்டுறவால் —செயல்படுத்தக்கூடிய திட்டங்கள் தயாரிக்கப்படும். பஞ்சாயத்து ஆட்சி மாநிலங்களில் ஏற்பட்ட பின்னர் வளர்ச்சி

வட்டாரம் (Developement Block) என்பது பஞ்சாயத்து ஒன்றியத்தைக் (Panchayat Union) குறிக்கும். மேற்படி பஞ்சாயத்து ஒன்றியத்தலைவர் நேரிடையாகத் தேர்ந்து எடுக்கப்படுவார். கிராமசபை (பஞ்சாயத்துகளின்) பிரதிநிதிகளும் பஞ்சாயத்து ஒன்றியங்களில் இருப்பார்கள். கிராமத்திட்டங்கள் பஞ்சாயத்து ஒன்றியங்களில் பரிசீலனை செய்யப்பட்டுப் பஞ்சாயத்து ஒன்றியத் திட்டம் உருவாக்கப்படும். இது சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் இரண்டாவது கட்டமாகும். மூன்றாவது மாவட்ட அளவில் இருக்கும். இங்குப் பஞ்சாயத்து ஒன்றியங்களின் திட்டங்கள் பரிசீலனை செய்யப்பட்டு முடிவு செய்யப்படும். இவ்வாறாக ஒவ்வொரு மாவட்டத்தின் வளர்ச்சித் திட்டங்களும் அங்குள்ள மக்களால் உருவாக்கப்பட்டு, அவர்களால் நிறைவேற்றப்படும். இதற்கு ஏற்பத் தலசுய ஆட்சி அமைப்புகள், கிராம பஞ்சாயத்துகள், பஞ்சாயத்து ஒன்றியங்கள் ஆகிய இரு மட்டங்களில் இருக்கும்.

தல சுய ஆட்சி என்றும், பரவலாக்கப்பட்ட மக்கள் ஆட்சி என்றும் பஞ்சாயத்து ஆட்சி முறையை அழைக்கிறார்கள். பஞ்சாயத்து ஆட்சி முறை என்பது முற்காலத்தில் நிலவிய கிராம சமுதாயங்களையும், கிராமப் பஞ்சாயத்துகளையும் நினைவு படுத்துகின்றன. ஆனால், அக்காலத்தில் கிராமப் பஞ்சாயத்துகள் முழுமையான உரிமைகள், அதிகாரங்கள் பெற்று விளங்கின. மக்களின் ஆட்சி அலகுகளாகக் கிராமசபைகள் விளங்கின. அதே பெயரை வைத்துக் கொள்வதன் மூலம் மக்களிடம் ஆர்வத்தையும், உற்சாகத்தையும் பஞ்சாயத்துகள் ஏற்படுத்தக் கூடும். ஆனால், தற்கால கிராமப் பஞ்சாயத்துகளின் நிதிவசதிகள், வரி விதிக்கும் அதிகாரங்கள் மிகவும் குறைவாக இருக்கின்றன. வசதியும், சாதனங்களும் இல்லாத நிலையில் கிராமப் பஞ்சாயத்துகள் ஊராட்சி அமைப்பாகச் செயல்படலாமே தவிர வளர்ச்சித் திட்டங்களுக்கான அடிப்படையாகச் செயல்படுவது கடினம். திட்டங்களைத் தயாரிக்கலாம். ஆனால், அதை நிறைவேற்றுவதற்கு மாநில அரசின் நிதி உதவியை—நிதி ஒதுக்கலை—நம்பியிருக்கவேண்டும். ஆகையால் கிராமத்திட்டங்கள், பஞ்சாயத்து ஒன்றியத் திட்டங்கள், மாவட்டத் திட்டங்கள் ஆகியவற்றை முழுமையாகச் செயல்படுத்த முடியவில்லை. இதில் மாவட்ட சபைகள் சட்டரீதியான அதிகாரங்கள் ஏதும் இல்லாத ஒரு ஆலோசனைக் குழுவாக உள்ளது. பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து ஒன்றியங்களும் வரிவிதிப்பின் மூலம் கூடுதலான தொகையைத் திரட்ட வேண்டும் என்ற நோக்கத்தோடு வரிவிதிப்பு அதிகாரங்கள் கொடுத்துள்ளார்கள். இவை போதுமானதாக இல்லை.

பஞ்சாயத்து ஆட்சி வெகு அண்மையில் நாடெங்கிலும் ஏற்பட்டுள்ளது. அவை சிறந்த நோக்கங்களுக்காக உருவாக்கப்பட்டன. புதிய, புரட்சிகரமான அமைப்புகளை ஆரம்பத்தில் மக்கள் புரிந்து கொள்ள வேண்டும். வளர்ச்சிப் பணிகளில் தீவிரமாக ஈடுபடும் அளவிற்குப் பயிற்சியும் அனுபவமும் இல்லை. இதை (அடிப்படையாக)க் கொண்டு பஞ்சாயத்து ஆட்சி அமைப்பைக் குறைகூற முடியாது. இக் குறைபாடுகள் நாளடைவில் அனுபவங்கள் ஏற்படும்போது அகற்றப்படும்.

## தீவிர சாகுபடித் திட்டம்

சமுதாய நலத்திட்டத்தின் முக்கிய நோக்கம் விவசாய உற்பத்தியை அதிகரிப்பது என்று தெளிவாகக் கூறப்பட்டது. விவசாய உற்பத்தியை அதிகரிக்க அரசாங்கம் தீவிரமாக முயன்றது. முக்கியமாக இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டக்கால அனுபவத்தின் காரணமாக விவசாயம், விவசாயத்துறைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. அதைத்தவிர விஸ்தரிப்புத் திட்டங்கள் யாவும் உணவு தானிய உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்று கூறப்பட்டது. மூன்றாவது திட்டகாலத்தில் விவசாய உற்பத்தியை அதிகரிக்க மேலும் சிலமுயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. அதில் தீவிர சாகுபடித் திட்டம் முக்கியமானது. தீவிர சாகுபடி முறை ஏற்படுவதற்கு ஃபோர்ட் நிறுவனத்தார் ஒரு வகையில் காரணமாக இருந்தார்கள். கிடைப்பருமையான சாதனங்களை நாடெங்கிலும் சிதற அடிப்பதைவிட, மண்வளம், பாசனவசதிகள் உள்ள பகுதிகளில் கிடைக்கும் சாதனங்களை உபயோகப்படுத்துவதன் மூலம் உற்பத்தி அளவையும், உற்பத்தித் திறனையும் அதிகரிக்க முடியும் என்று கூறினர். இந்தப் பரிந்துரையை ஏற்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தீவிர சாகுபடித் திட்டம் உருவாக்கப்பட்டது.

பாரதத்தில் காணப்படும் மண்வளம், காலநிலை முதலியன சாதகமாக இருக்கின்றன. பாசன வசதிகள், உரம், உழவு சாதனங்கள், சிறப்பு விதை, பயிர்ப்பாதுகாப்பு நடவடிக்கைகள், பண்ணை நிருவாகம், கடன் வசதிகள் முதலியன போதுமானதாக இல்லை. ஆகையால் மேற்படி வசதிகளை அதிகரிக்க வேண்டும். ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு பயிரைச் சாகுபடி செய்வதற்கு ஒரு மாவட்டம் அல்லது பகுதி தேர்ந்து எடுக்கப்படும். காட்டாக, இத்திட்டத்தின்கீழ் தஞ்சை மாவட்டம் தீவிர நெல் சாகுபடித் திட்டத்திற்காகத் தேர்ந்து எடுக்கப்பட்டது. மண்வளம், இயற்கைக்காரணிகள் சாதகமாக உள்ள

மாவட்டம் அல்லது பகுதிகள் ஒவ்வொரு பயிருக்கும் தேர்ந்து எடுக்கப்படும். மேற்படி பகுதிகளில் தீவிர சாகுபடித் திட்டம் அமுலாக்கப்படும். சிறந்த விதைகள், உரம், பயிர்காப்பு மருந்துகள், புதிய சாதனங்கள், விஞ்ஞான சோதனைக் களங்கள் முதலியன ஏற்படுத்தப்படும். போதிய அளவிற்கு விவசாயிகளுக்குக் கடன்தொகை கொடுக்கப்படும். விரிவாக்கப் பணிகளில் தேர்ச்சியுடைய பணியாளர்கள் அமர்த்தப் படுவார்கள். தீவிர சாகுபடிக்காகத் தேர்ந்து எடுக்கப்பட்ட பகுதிகளில் எல்லா முயற்சிகளும் ஒருங்கு இணைந்து செய்யப் படும். விவசாயிகளுக்குத் தேவையான சாதனங்களைத் தனித் தனியாக அவர் பெறுவதற்கு முயற்சி செய்ய வேண்டியதில்லை. கால்நடைகள், விதை, உரம் முதலியவை கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்படும். இவ்வாறு வளர்ச்சிப்பணிகள் அனைத்தையும் ஒருங்கு இணைத்து, விவசாயிகளுக்குக் கிடைக்கும்படி செய்தல் வலியுறுத்தப்படுகிறது. இதை 'இணைப்புத்திட்டம்' (Package deal) என்று கூறுகிறார்கள்.

**பசுமைப் புரட்சி**

பாரத விவசாயத்தில் 1967—68இல் ஒரு புரட்சி ஏற் பட்டுள்ளது. இதைப் புரட்சியின் ஆரம்பக் கட்டமாகக் கருத வேண்டும். பாரதத்தைப் போல இதர நாடுகளிலும் இதைப் போன்ற புரட்சி ஏற்பட்டுள்ளது. 'வீரியப்பயிர்'கள் (Hybrid Varieties) கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றின் சிறப்புக் கூறு விந்தை விதைகள் ஆகும். சாதாரணப் பயிர்களைவிட இவை கட்டையானவை. குறுகிய காலத்தில் பலன் தரு கின்றன. அதிக விளைச்சல் தருகின்றன.

நெடுங்காலமாக நிலத்தை இடைவிடாது சாகுபடி செய்த தால் நிலத்தில் ஊட்டச்சத்துகள் குறைந்து போயின. போதிய அளவு சரிவிகிதத்தில் உரம் இடாமையும் இதற்கு ஒரு காரணமாகும். பொதுவாக நைட்ரஜன் சத்து குறைந்து காணப்படுகிறது. இதனால் சாதாரணப் பயிர்களின் இலைகள் வெளிறின பசுமை அல்லது மஞ்சள் கலந்த பசுமையுடன் விளங்கின. நிலத்திற்கு ஊட்டம் அளிக்கும் இரசாயன உரங் களைத் தாங்கிக் கொள்ளும் சக்தி பழைய பயிர் வகைகளுக்கு இல்லை. இவ்வாறு மண்ணிற்கு ஊட்டம் அளிப்பதும், அதைப் பயன் படுத்திக்கொண்டு வளரக்கூடிய புதிய பயிர் வகை களைத் தோற்றுவிப்பதும் பெரும் பிரச்சினையாக இருந்தது. இதற்கு உயிர் நுண் இயல் (Genetices) கண்டுபிடிப்புகள் உதவியாக இருந்தன. இதன் அடிப்படையில் புதிய ஒட்டு

ரகப் பயிர்கள் உருவாக்கப்பட்டன. இவை இரசாயன உரத்தில் உள்ள ஊட்டச்சத்துகளைக் கிரகித்துக் கொள்ளும் தன்மை உடையவை. ஊட்டச்சத்துகளைப் பிரதிபலிக்கும் வகையில் செடிகளின் சோலையில் பச்சையம் அதிகமாக இருக்கும். எனவே, புதிய ரகப் பயிர்களின் சோலைகள் நல்ல கரும் பச்சை நிறத்தில் இருக்கின்றன. இலைகளின் பசுமை விவசாயத்துறையின் பூர்ச்சிகரமான வளர்ச்சியைக் குறிப்பிடுகிறது என்பதால் இதைப் பசுமைப் புரட்சி என்பர்.

இந்தப் பயிர்கள் தங்கள் வளர்ச்சிக்கு முற்றிலும் சூரிய வெளிச்சத்தை நம்பியிருக்கவில்லை. காற்று வெளியில் கலந்து உள்ள சத்துப்பொருள்களையும் கிரகித்துக் கொள்ளுகின்றன. அதனுல் சூரிய வெளிச்சத்தைக் காண முடியாத குளிர்காலத்திலும், மழைகாலத்திலும் இப்பயிர்கள் வளருகின்றன. இதே காரணத்திற்காகவே இவை துரிதமாக வளர்ந்து பலன் தருகின்றன. பயிர்கள் ஊட்டத்துடன் வளருவதால் அதிகப் பலனைத் தருகின்றன. பூமியில் உள்ள சத்துகளுடன், காற்று வெளியில் உள்ள சத்துகளையும் ஈர்த்துக்கொண்டு வளருவதால் பூமியின் சாரம் அதிகம் பாதிக்கப்படவில்லை. இப்பயிர்கள் விரைவாகப் பலன் தருவதால்—முதிர்ச்சி அடைவதால்—இருபோகம் விளைவித்த பகுதிகளில் மூன்று முதல் நான்கு போகங்கள் வரை சாகுபடி செய்யலாம். இப்பயிர்களின் தாள்(வைக்கோல்)களில் புரத சத்து அதிகம் இருப்பதால் இவை கால்நடைகளுக்கு ஊட்டம் கொடுக்கும் தீவனங்களாக இருக்கின்றன.

உயர்ந்த விளைச்சல் தரக்கூடிய பயிர்களை வீரியப் பயிர்கள் என்று சொல்லுகிறோம். இத்தகைய வீரியப்பயிர்கள் நெல், கோதுமை, கேழ்வரகு, கம்பு, சோளம், மக்காச் சோளம், நிலக்கடலை, ஆளிவிதை, கடுகு, காட்டுக்கடுகு முதலியவற்றில் உருவாக்கப்பட்டுள்ளன. இவ்வாறு உருவாக்கப்பட்ட பயிர்களை நாடெங்கிலும் சாகுபடி செய்ய இயலாது. ஏனெனில், ஒரு பயிர் அதிக பலன்தர வேண்டுமானுல் அதற்குத் தகுந்த ஊட்டம் கொடுக்க வேண்டும். அப்போது அதிக நீர் பாய்ச்ச வேண்டும். எனவேதான் போதிய பாசனவசதிகளை உடைய பகுதிகளை வீரியப்பயிர் சாகுபடிக்குத் தேர்ந்து எடுத்துள்ளார்கள். நீர்ப்பாசனத்தைப் போலவே இதர 'உள்ளீடு பொருள்களும்' (inputs) இப்பயிர்களைச் சாகுபடி செய்வதற்கு அவசியமாக இருக்கின்றன. மேற்படி உள்ளீடு பொருள்கள் கிடைப்பருமையாக இருப்பதால் பாசனவசதி உடைய எல்லா நிலப்பரப்புகளிலும் இதைச் சாகுபடி செய்ய முடிய

வில்லை. முக்கியமாக உரம், பூச்சி மருந்துகள், பயிர்ப்பாது காப்பு சாதனங்கள், மருந்துகள் கிடைப்பருமையாக இருக் கின்றன.

பாரத விவசாயிகள் தங்கள் வருமான வாய்ப்புகளை உயர்த்திக்கொள்ள விழைகிறார்கள். இதை நிறைவேற்றிக் கொள்வதற்கு வீரியப்பயிர்கள் உதவியாக இருப்பதால் விந்தையான வித்துகளைப் பெறுவதற்கும், உள்ளிடுபொருள் களை வாங்கவும் ஒருவரை ஒருவர் முந்திக்கொள்ளுகிறார்கள். வீரியப்பயிர் (high yielding) சாகுபடித் திட்டத்தில் தங்கள் வட்டத்தையும், மாவட்டத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று போட்டியிடுகின்றனர். தங்களுடைய சக்தி யால் திரட்டக்கூடிய அரசியல் செல்வாக்கை இதற்காகப் பயன் படுத்துகிறார்கள்.

'வீரியப்பயிர்கள்' எல்லாவித உணவுத் தானியங்களின் உற்பத்தியிலும் ஒரேமாதிரியான அளவிற்குப் புரட்சியை ஏற் படுத்தவில்லை. கோதுமையின் விளைச்சல் அதிகரித்துள்ள அளவிற்கு நெல் உற்பத்தி அதிகரிக்கவில்லை. இதற்கு இட வேறுபாடும், மண் வேறுபாடும், காலநிலை மாறுபாடும் முக்கிய மான தடைகளாக உள்ளன. ஆனால், பசுமைப் புரட்சிக்குக் கருவாக அமைந்த கருத்து ஒன்றுதான். அதைச் சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றிப் பயன்படுத்த வேண்டும்.

வீரியப்பயிர்கள் பழைய பிரச்சினைகளுக்கு ஒரு தீர்வாக இருந்தபோதிலும் இதனால் பல புதிய பிரச்சினைகள் தோன்று கின்றன. இவ்வாறு தோன்றும் பிரச்சினைகளை முழுமையாக விளக்குவது கடினம் என்றாலும், அவற்றைச் சுட்டிக்காட்ட முடியும். அதிக விளைச்சல் தரக்கூடிய புதிய பயிர் வகைகளை 'உயர்வகைத் தாவரங்கள்' (high yielding populations) என்று கூறுவார்கள். இந்த உயர் இனப் பயிர்களின் நுண் உயிரியல் அமைப்புகள் காரணமாக இவற்றைத் தாவர நோய்கள் எளிதில் பீடிக்கின்றன. உயர்விளைச்சலுக்காக அதிக 'நைட் ரஜன்' உரம் இடவேண்டியிருக்கிறது. 'நைட்ரஜன்' உரங்கள் நோய் பரவும் வாய்ப்புகளை மேலும் அதிகரிக்கின்றன. இவ் வாறு தோன்றும் நோய்களைக் கட்டுப்படுத்த வேண்டும்; மேலும் நுட்ப ரீதியாகத் தோன்றும் புதிய புதிய பிரச்சினை களுக்குத் தீர்வுகாண வேண்டும். இதற்கெல்லாம் விவசாய ஆராய்ச்சியை மேலும் அதிக அளவில் மேற்கொள்ள வேண்டும்.

சில வீரியப்பயிர்வகைகள் அதிக விளைச்சலைத் தருவதாலும், இவை குறிப்பிட்ட நிலப்பகுதிகளில் மட்டும் சாகுபடி செய்வதாலும் புதியதொரு பொருளாதாரப் பிரச்சினை ஏற்படுகிறது. வீரியப்பயிர்த் திட்டங்கள் செயல்படும் பகுதிகளின் வருமானம் உயர்ந்தும், ஏனைய பயிர்களின் சாகுபடியின் கீழ்உள்ள பகுதிகளில் வருமானம் அந்த அளவுக்கு உயராமையால் விவசாய வருமானப் பகிர்வில் புதியதொரு அடிப்படையில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படுகின்றன. தீவிரமாக வீரியப்பயிர் சாகுபடி செய்யும் பகுதிகளிலும் வசதியுடைய நிலக்கிழார்கள் தற்சமயம் விவசாயத்தில் அதிக அக்கறை காட்டுகின்றனர். தங்கள் நிலத்தை இதுவரை சாகுபடியாளர்களிடம் விட்டு வந்தவர்கள் புதிய சூழ்நிலையில் வீரியப்பயிர்களால் ஆதாயம் அடைவதற்குத் தாங்களே சொந்தச் சாகுபடி செய்ய விரும்புகிறார்கள். இதனால் சாகுபடியாளர்களின் வெளியேற்றம் மீண்டும் அதிகரிக்கும். கிராமங்களில் செல்வ வருமான ஏற்ற இறக்கங்கள் மேலும் அதிகரிக்கும். விவசாயத் தொழிலாளர்களும், சாகுபடியாளர்களும் மேலும் வறியவராக்கப்படுவார்கள். நிலஉரிமை அல்லது சாகுபடி உரிமை உடைய சிறிய விவசாயிகள் தங்கள் நிலத்திற்கு இட வேண்டிய 'உள்ளிடு பொருள்களை'—அவை கிடைப்பருமையாக இருப்பதால்—பெரிய மிராசுதாரர்களுடன் போட்டியிட்டுக் கொண்டு வாங்க இயலாதவர்களாக இருக்கிறார்கள். இதனால் விவசாயத்தில் ஒருபகுதியில் சிறந்த முறையில் வீரியப்பயிர்கள் சாகுபடி செய்யப்படுகிறது. மற்றப்பகுதிகளில் மேற்படி உள்ளிடு பொருள்களின் கிடைப்பருமை காரணமாகவும், விவசாயிகளின் ஏழ்மை காரணமாகவும், அங்ஙனம் சாகுபடி செய்ய இயலவில்லை. இதனால் 'இரட்டைத்தன்மை' (Dualism) நிலவக் காணலாம்.

உயர் விளைச்சல் ரகங்களைப் பயிரிடுவதால் மேலும் பல பிரச்சினைகள் தோன்றக்கூடும். அங்காடிக்கு அதிக தானியங்கள் விற்கப்படும். இதனால் விவசாயப் பொருள்களின் விலை மட்டம் வீழ்ச்சி அடையும். இது விவசாயிகளின் வருமானத்தைப் பாதிக்கக் கூடுமாகையால் அரசாங்கம் தகுந்த முன் எச்சரிக்கையுடன் விலைக்கொள்கை ஒன்றை உருவாக்கி அதை அமுலாக்க வேண்டும். உபரியான தானியங்களைச் சேமிக்கவும், அவற்றை நாட்டின் பல பகுதிகளுக்கு எடுத்துச் செல்லவும் போக்குவரத்து வசதிகளை அதிகரிக்க வேண்டும். விவசாய உள்ளிடு பொருள்களை அதிக அளவுக்கு உற்பத்தி செய்யவேண்டும். பாசன வசதிகளை மேலும் விரிவாக்க

வேண்டும். விவசாய ஆராய்ச்சியாளர்களும், விவசாயிகளும் விரிவாக்கப் பணியாளர்களின் மூலம் தொடர்பு கொள்ள வேண்டும். விவசாயிகளின் பிரச்சினைகளை ஆராய்ச்சியாளர் களுக்கும், ஆராய்ச்சியின் சாதனைகளை விவசாயிகளுக்கும் எடுத்துச்சொல்வதே 'விரிவாக்கப் பணியாளர்'களின் முக்கிய பணியாகும். ஆராய்ச்சியில் முக்கியமாக மண்வளம், மண்ணூட்டம், பயிர்ப்பாதுகாப்பு, பயிர் இரசாயனம், நுண் உயிரியல், ஈரம் உலராமல் காக்கும் நுண்முறை முதலியன இடம் பெற வேண்டும்.

### பசுமைப்புரட்சியும் நிலச்சீர்திருத்தங்களும்

விவசாயத்துறையின் உற்பத்தியையும், உற்பத்தித்திறனை யும் அதிகரிப்பதற்குக் கட்டமைப்பு மாற்றங்கள் அவசியம் என்று கூறினோம். சொத்துரிமைகளை மையமாகக் கொண்ட கட்டமைப்பு மாற்றங்களைத் தோற்றுவிப்பதன் மூலம் விவசாய வளர்ச்சிக்கு அடிகோலமுடியும். உண்மையில் பாரதம் விடுதலை அடையும் முன்னமும், அதன் பின்னர் சுமார் 20 ஆண்டுகள் வரையிலும் நிலச்சீர்திருத்தங்கள் முதன்மையான முயற்சி களாகக் கருதப்பட்டன. நிலச்சீர்திருத்தங்கள் பெரும்பாலான மாநிலங்களில் நிறைவேற்றப்பட்டன. இருந்தபோதிலும் மூன்றாவது திட்ட காலத்தில் விவசாய உற்பத்தி இயற்கைக் காரணிகளால் மிகவும் குறைந்த அளவுக்கு இருந்தது. உணவு தானிய அளிப்பு குறைந்து காணப்படுவதற்கு நிலச் சீர்திருத்தங்கள்—சுரண்டல் தன்மையுடைய நிலஉரிமைகள்— மட்டும் காரணமாக இல்லை என்று ஏற்றுக்கொண்டாலும், உணவு தானிய உற்பத்தியை அதிகரிக்க மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கூற முடியா தவர்களாக இருந்தனர். இப்படிப்பட்ட சூழலில்தான் 1967-68 பசுமைப் புரட்சியின் தோற்றம் ஏற்பட்டது. நுட்ப ரீதியான முறைகளைக் கடைப்பிடிப்பதால் உற்பத்தித்திறனைக் கணிசமாக அதிகரிக்க முடியும் என்று இந்நிகழ்ச்சி—வீரியப் பயிர் சாகுபடித் திட்டம்—நிரூபித்தது. அமைப்புக்காரணிகளின் சீர்திருத்தங்களால் (நிலச்சீர்திருத்தங்களால்) அதிகரிக்க முடியாத உற்பத்தித் திறனை உயர் விளைச்சல் பயிர் ரகங்கள் சாதித்துள்ளன. இருந்தபோதிலும் புதிய சூழ்நிலையில் நிலச் சீர்திருத்தங்கள் அவசியமில்லை என்று நினைப்பது தவறு. உற்பத்தித்திறன் நுட்பரீதியான காரணிகளையும், அமைப்புக் காரணிகளையும் சார்ந்துள்ளன. ஆகையால் அமைப்பில் ஏற்பட்ட மாறுதல்களுக்கு ஈடாக நுட்ப மாறுதல்கள் நீண்டகாலமாக ஏற் படாமையால் இதுவரை விவசாய உற்பத்தியை அதிகரிக்க முடிய

வில்லை. தவிரவும், 'தீவிரசாகுபடித்திட்டம்', சமுதாய நலத் திட்டம், விரிவாக்கப் பணியாளர்கள் ஆகியோர் நெடுங்கால மாக முயன்றுள்ள காரணத்தால்—ஆராய்ச்சியின் பயனைத் தோன்றிய முன்னேற்றத்தை விவசாயிகளுக்கு எடுத்துச் சொல்ல முடிந்தது. விவசாயிகள் புதிய முறைகளைப் பின்பற்ற விருப்பம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். இவர்களுக்கு ஏற் படும் பிரச்சினைகள் மீண்டும் விரிவாக்கப் பணியாளர்கள் வாயிலாக ஆராய்ச்சிக்கூடங்களுக்கு எடுத்துச் செல்லப் படுகின்றன. இத்தகைய அமைப்பு முறை தோற்றுவிக்கப்பட வில்லையானால் வீரியப் பயிர்த்திட்டம் வெற்றி அடைய முடியாது. நிலச்சீர்திருத்தங்களின் காரணமாகத்தான் (விவசாயிகள்) நிலம் உடையவர்கள் சொந்தச் சாகுபடிசெய்ய முன்வந்தனர். இதன் பிரதிபலிப்பாகத் தோன்றிய சாகுபடியாளர் வெளி யேற்றம் கசப்பான ஓர் அனுபவமாக இருந்தாலும், இதன் மற்றொரு விளைவு, முதலாளித்துவப் பண்ணை முறைச் சாகுபடி வரவேற்கக் கூடியதாக இருந்தது. முதலீடுகள் அதிகரித்தன. விவசாயத்தில் ஆர்வம் உடையவர்கள் சாகுபடியை மேற் கொண்டார்கள். இவை யாவும் அமைப்பு முறை மாற்றங்களைத் தான் சித்திரிக்கின்றன. ஆகையால் கட்டமைப்பு மாற்றங்கள் ஏற்படவில்லையானால்—அதாவது சுரண்டல் தன்மையுடைய நில உரிமைகள் தொடர்ந்து நீடிக்கக் கூடுமானால்—விவசாயத் துறையில் என்றென்றும் முன்னேற்றம் ஏற்படமுடியாது. அமைப்புமுறை மாற்றங்கள் விவசாய முன்னேற்றத்திற்கு ஒரு முன் நிபந்தனையாக மட்டுமே உள்ளன. அதன் விளைவாக உற்பத்தித்திறன் அதிகரிக்க வேண்டுமென்பது அவசியமில்லை. நுட்பரீதியான முன்னேற்றம் உற்பத்தித்திறனைக் கட்டாயமாக அதிகரிக்கும் என்றாலும், நுட்பரீதியாகத் தோன்றிய முன்னேற்றத்தை நிலைபெறச் செய்யவும், வளர்ச்சி வேகத்தை ஊக்குவிக்கவும் அமைப்பு முறை மாற்றங்கள் அவசியமாக இருக்கின்றன.

பசுமைப்புரட்சி என்பது இதுவரை 'கோதுமைப்புரட்சி'யாகவே உள்ளது என்று கூறுகிறார்கள். இது ஓரளவிற்கு உண்மை: இன்னும் பலவகைப் பயிர்களில் 'உயர் விளைச்சல் ரகங்கள்' உருவாக்கப்பட்டுள்ளன என்றாலும், அவை யாவும் 'சோதனைச் சாலை'யில் உள்ளன. நாடெங்கிலும் பரவலாகப் பயிரிடும்போது எதிர்பார்த்த அளவிற்கு உயர் விளைச்சலைத் தரவில்லை. இதற் கான காரணங்களை மேலும் ஆராய வேண்டும்.

பாரதம் உணவுத் துறையில் இந்த ஆண்டு தன்னிறைவு பெற்றுள்ளது. இதற்கு உயர்ரகப் பயிர் ரகங்கள் மட்டுமல்லாமல்

சாதகமான காலநிலையும் முக்கியமானதாகும். 1965-66, 1966—67 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்டதைப் போன்ற வறட்சி மீண்டும் ஏற்படுமானுல் உணவு உற்பத்தி 20 முதல் 25 மில்லியன் டன்கள் வரை துண்டு விழும். பசுமைப் புரட்சி ஏற்பட்டது உண்மையாக இருந்தாலும் இயற்கைக் காரணிகள் பாதகமாக இருக்குமேயானுல் பாரதத்தின் தானிய உற்பத்தி உள்நாட்டுத் தேவையைப் பூர்த்தி செய்யப் போதுமானதாக இருக்குமா என்று யோசிக்க வேண்டும். எனவே, முன்னெச்சரிக்கையுடன் தகுந்த நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். முன்பு பல தலைமுறைகளாக உள்ள நிலைமையுடன் 1971இல் உள்ள நிலைமையை ஒப்பிட்டுப் பார்ப்போமானுல் பாரதம் கட்டாயம் தன்னிறைவு நிலையை அடையும் என்பதுடன், உபரியான நாடாகவும் மாறக்கூடும் என்று நம்பிக்கை தெரிவிக்கலாம்.

# 11. விவசாயத் தொழிலாளர்கள்

கிராம சமுதாயத்தின் மறைவினால் விவசாயத் தொழிலாளர்கள் என்ற இனத்தினர் தோற்றுவிக்கப்பட்டனர். சாகுபடியாளர்கள், கைவினைஞர்கள் முதலியோர் கிராம சமுதாய அமைப்பால் பாதுகாக்கப்பட்டனர். பதினெட்டாவது நூற்றாண்டுவரை நிலம் அபரிமிதமாகவும், உழைப்பு கிடைப்பருமையாகவும் இருந்தது. ஆகையால் நிலமில்லா விவசாயத் தொழிலாளர்களைக் காணமுடியவில்லை. பிரிட்டிஷாரின் கொள்கை காரணமாகக் கிராம சமுதாயம் சிதைவுற்றது. இக்காலத்தில் நிலம்-ஆள்விகிதம் குறைந்து சென்றது. விவசாயம் நீங்கலாக உள்ள தொழில்கள் நசுக்கப்பட்டன. நிலத்தின் தேவை பன்மடங்கு உயர்ந்து சென்றது. நில உரிமையில் அடிப்படையான மாற்றங்கள் புகுத்தப்பட்டன. இவற்றின் விளைவாக நிலம் ஒரு சொத்தாக மாறியது. விவசாயிகள் தங்கள் நிலத்தை அடைமானம் வைத்துக் கடன் வாங்கினார்கள். விவசாயத்தில் நாட்டம் இல்லாதவர்கள் நிலக்கிழார்களாக மாறினார்கள். சொந்தச் சாகுபடி படிப்படியாகக் குறைந்து குத்தகை அல்லது வாரச் சாகுபடி அதிகரித்தது. சுரண்டல் வாரமும், தலத்தில் இல்லாத நிலக்கிழார்களும் தோன்றினார்கள். இதைப் போன்ற அடிப்படையான மாற்றங்கள் அடுக்கடுக்கான விளைவுகளைத் தோற்றுவித்தன. அதன் ஒருகூறாக இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய பிரச்சினையைத்தான் விவசாயத் தொழிலாளர்கள் என்ற தலைப்பில் ஆராய்ந்து பார்க்கிறோம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கம் வரை இந்தியாவில் விவசாயத் தொழிலாளர்கள் என்ற தனிப்பிரிவினர் ஏற்படவில்லை. மரபு அடிப்படையில் இயங்கிய கிராம சமுதாயத்தில் விவசாயமும், கைவினைத் தொழிலும் ஒன்றுக்கொன்று

துணையாக இருந்தன. அப்பொழுது கூலிக்கு வேலை செய்பவர் களைப் பார்ப்பது அரிதாக இருந்தது. விவசாயிகள் தங்கள் சொந்த நிலத்தைச் சாகுபடி செய்தார்கள். பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் இங்கிலாந்தில் இருந்ததைப் போல நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களை இந்தியாவில் காணமுடியவில்லை என்று அப்போது பணியாற்றிய ஆங்கிலேய அலுவலர்கள் பலர் கூறியுள்ளனர். சென்ற நூற்றுண்டின் பிற்பகுதியில்தான் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள் ஏற் பட்டிருக்கவேண்டும்.

1871இல் சென்னை மாநிலத்தில் மட்டும் 13% ஆண்கள் தொழிலாளர்களாக இருந்தனர். இவர்களில் முக்கால் பகுதி யினர் விவசாயத் தொழிலாளர்களாக இருந்தனர். பிரிட்டிஷ் ஆட்சியின் பொருளாதாரக் கொள்கை காரணமாக இவர்களின் தொகை தனியாகவும், ஒப்புமையாகவும் அதிகரித்துள்ளன. நிலம் இல்லாமையாலும், இதர தொழில்கள் அல்லது வேலை வாய்ப்புகள் இல்லாமையாலும் வேலைவாய்ப்பை நாடி இடம் பெயரக்கூடிய மக்கள்தொகை அதிகரித்தது. இவ்வாறு இடம் பெயரும் மக்கள்தொகை 1891இல் 187 இலட்சம் ஆக இருந்தது. 1931இல் 330 இலட்சமாக உயர்ந்தது. 1911இல் சராசரியாக ஒவ்வொரு ஆயிரம் சாகுபடியாளர்களுக்கும் 247 விவசாயத் தொழிலாளர்கள் இருந்தனர். 1931இல் இந்த விகிதம் ஆயிரத்திற்கு 519 ஆக உயர்ந்தது.[1]

இருபதாம் நூற்றுண்டில் மக்கள்தொகைப் பெருக்கம் ஏற் பட்ட அளவிற்கு வேலைவாய்ப்புகள், தொழில் வளர்ச்சி ஏதும் ஏற்படவில்லை. 1901இல் **11·7** கோடியாக இருந்த தொழிலாளர் தொகை 1951இல் **14·2** கோடியாக உயர்ந்தது. அதாவது ஐம்பது ஆண்டுகளில் **2·5** கோடித் தொழிலாளர்கள் நிகர அளவில் அதிகரித்துள்ளனர். இதே ஆண்டுகளில் விவசாயத் தொழிலாளர்கள் **7·3** கோடி (1901இல்) யிலிருந்து **9·8** கோடி(1951)யாக அதிகரித்து உள்ளனர். அதாவது விவசாயத் தொழிலாளர்கள் **2·5** கோடி அதிகரித்துள்ளனர். இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் உழைப்பாளர்களின் தொகை எந்த அளவிற்கு அதிகரித்து உள்ளதோ, அந்த அளவிற்கு விவசாயத் தொழிலாளர்களின் தொகையும் உயர்ந்து உள்ளது. இக்காலத்தில் விவசாயம் இல்லாத தொழில்துறை களில் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கவில்லை. எனவே,

[1] M. B. Nanavathi and J. J. Anjaria. ibid, p. 463-65.

கூடுதல் அடைந்த தொழிலாளர்கள் அனைவரும் விவசாயத் துறையில் காணப்படுகின்றனர். இவர்கள் விவசாயத்தை விரும்பித் தங்கள் வாழ்க்கைத் தொழிலாக ஏற்றுக் கொள்ள வில்லை. வேறு துறைகளில் வருமானம் ஈட்ட முடியாத காரணத்தால் விவசாயத் துறைக்கு இவர்கள் ஈர்க்கப்பட்டனர்.

இந்த நூற்றுண்டின் துவக்கத்தில் விவசாயத் தொழிலாளர்கள் கிராம மக்கள்தொகையில் 10% ஆக இருந்தனர். 1951இல் கிராம மக்கள்தொகையில் 30%-தினர் விவசாயத் தொழிலாளர்களாக இருந்தனர். இவ்வாறு விவசாயத் தொழிலாளர்களின் தொகை தனியாகவும், ஒப்புமையாகவும் அதிகரித்து உள்ளது. கிராமப் பொருளாதார அமைப்பில் தோன்றிய அடிப்படையான மாற்றங்களைச் சித்திரிக்கும் குறியீட்டு எண்ணுக இதைக் கருதவேண்டும்.

விவசாயத் தொழிலாளர்களின் வளர்ச்சி ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சியாகத் தோன்றவில்லை. சங்கிலித் தொடர் போன்ற நிகழ்ச்சிகளின் ஒருகூருக இதைக் கருதவேண்டும். ஒரு காலத்தில் பரந்த நிலத்தைச் சொந்தமாகச் சாகுபடி செய்தவர்கள் சிறுநிலக்கிழாராக மாறினுர்கள். முன்பு சிறுநிலக் கிழாராக இருந்தவர்கள் நிலத்தின் உடைமையை முற்றிலும் இழந்து குத்தகைச் சாகுபடியாளராகவும், வாரச் சாகுபடியாளராகவும் மாறினர். முன்பு சாகுபடியாளராகவும், கைவினைஞர்களாகவும் இருந்தவர்கள், சிறுதொழில்களில் ஈடுபட்டவர்கள், விவசாயத் தொழிலாளர்களாக மாறினர். இவ்வாறு நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள் பெருமளவுக்குத் தோன்றினுர்கள்.

விவசாயத் தொழிலாளர்களைப் பற்றி சுரேந்திர பட்டேல்[2] கூறிய கருத்துகள் கருதற்பாலவை. மொத்தக் கிராம மக்கள் தொகையில் இவர்களை விகிதப்படுத்திக் கூறியுள்ளார்.

1871-லும் 1881-லும் விவசாயத் தொழிலாளர்களின் விழுக்காடு 13% விட அதிகமாக உள்ளது. இதற்கு மிகையான மதிப்பீடு ஒரு காரணமாக இருக்கலாம் என்று சுரேந்தர பட்டேல் கூறுகிருர். 1891இல் 13% ஆக இருந்த விவசாயத் தொழிலாளர்கள், 1931இல் 38% ஆக ஒப்புமையாக உயர்ந்துள்ளனர். சுமார் நாற்பது ஆண்டுகளில் மூன்று மடங்கு

[2] Surendra J. Patel, Essays on Economic Transition, Asia. 1965, P. 4.

அட்டவணை 11·1

## கிராம மக்கள்தொகையில் விவசாயத் தொழிலாளர்களின் விகிதம்

| ஆண்டு | விகிதம் | விவரம் |
|---|---|---|
| 1871–72 | 18·0% | (வயதுவந்த ஆண் தொழிலாளர்கள்) |
| 1881 | 15·0% | (ஆண் தொழிலாளர்கள்) |
| 1891 | 13·0% | (ஆதரிக்கப்பட்ட மக்கள்தொகை) |
| 1901 | 25·1% | ( ,, ,, ) |
| 1911 | 22·0% | ( ,, ,, ) |
| 1921 | 26·2% | (உழைக்கும் மக்கள்தொகை) |
| 1931 | 38·0% | ( ,, ,, ) |

ஒப்புமையாக அதிகரித்துள்ளனர். விவசாயத்தில் ஈடுபட்டவர்களில் இவர்களின் விகிதம் மிகப் பெரும்பான்மையான விகிதமாக உள்ளது. இந்தியக் கிராம சமுதாயத்தில் ஏற்பட்ட புரட்சிகரமான சமூக மாற்றங்களை இது சுட்டிக் காட்டுகிறது. பிழைப்பு மட்ட வருமானத்தைவிடக் குறைந்த வருமானத்தை விவசாயத் தொழிலாளர்கள் ஈட்டுவதால் வறுமையின் விளக்கமாக (இவர்கள்) திகழ்ந்தனர். எனவே, விவசாயத் தொழிலாளர்களின் விரிவாக்கம் வறுமையின் செறிவைப் பிரதிபலிக்கிறது.

விவசாயத் தொழிலாளர்களின் தோற்றுவாய்க்குக் கூறப்படும் விளக்கம் பொருளாதாரக் காரணிகளை அடிப்படையாகக் கொண்டிருக்கவேண்டும். அவ்வாறு இல்லாமல் சமூக அமைப்பைக்கொண்டு இதை விளக்கிக் கூற முடியாது. காட்டாக, தாழ்த்தப்பட்ட மக்கள் அதிகம் காணப்படும் பகுதிகளில் விவசாயத் தொழிலாளர்கள் அதிகம் உள்ளனர் என்று கூறுகின்றனர். (அவர்களில் முக்கியமானவர்கள்—இராதகமல் முகர்ஜி, மணிலால் நாணுவதியும் அஞ்சாரியாவும், வாடியாவும் மெர்ச்செண்ட்டும்.) இவர்களின் வாதத்தை சுரேந்திர பட்டேல் மறுத்துள்ளார். மலைசாதியினர், ஆதிக்குடியினர்

முதலியோர் அதிகம் உள்ள மாநிலங்களில் விவசாயத் தொழிலாளர்களும் அதிகமாக இருப்பார்களேயானுல் இவர்கள் வாதத்தை ஏற்றுக்கொள்ளலாம். ஆனுல், நமக்குக் கிடைத்துள்ள ஆதாரபூர்வமான புள்ளிவிவரங்கள் இதற்கு நேர் மாருக உள்ளன. தாழ்த்தப்பட்டவர்கள், மலைவாசிகள், ஆதிவாசிகள் முதலியோர் குறைவாக உள்ள மாநிலங்களில் விவசாயத் தொழிலாளர்கள் குறைவாகவும் உள்ளனர். (பார்க்கவும் : அட்டவணை **11·2**).

**அட்டவணை 11·2**

**தாழ்த்தபட்டவர்களும் விவசாயத் தொழிலாளர்களும்**[3]

| மாநிலம் | தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | | விவசாயத் தொழிலாளர்கள் |
|---|---|---|---|
| | இலட்சம் | மொத்த மக்கள் தொகையின் விகிதமாக | விவசாய மக்கள் தொகையின் விகிதமாக |
| உத்தரப்பிரதேசம் | 120 | 26 | 22 |
| வங்காளம் | 115 | 24 | 33 |
| மத்திய மாநிலம் | 33 | 24 | **52** |
| சென்னை | 65 | 15 | **53** |
| பீகார், ஒரிஸ்ஸா | 50 | 14 | 35 |
| பஞ்சாப் | 28 | 13 | 14 |
| அஸ்ஸாம் | 10 | 13 | 25 |
| பம்பாய் | 15 | 8 | **57** |

பம்பாய் மாநிலத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் குறைவாக இருந்தபோதிலும், விவசாயத் தொழிலாளர்கள் மிக அதிகமாக உள்ளனர். உத்தரப்பிரதேசத்தில் தாழ்த்தப்பட்ட

[3] சுரேந்திர பட்டேல்—முன் கூறியபடி. - பக்.16, 1930ஆம் ஆண்டிற்கான புள்ளி விவரங்கள்.

வர்கள் மிக அதிகமாக இருந்தபோதிலும் விவசாயத் தொழிலாளர்களின் விழுக்காடு (அங்கு) குறைவாக உள்ளது. ஆதிலிருந்து விவசாயத் தொழிலாளர்கள் சாதி, சமூகப்பிரிவு ஆகிய காரணிகள் அடிப்படையில் தோன்றவில்லை என்று அறியலாம்.

விவசாயத் தொழிலாளர்களின் எழுச்சியைப் பொருளாதாரக் காரணிகளின் அடிப்படையில்தான் விளக்கிக் கூற முடியும். அவ்வாறு கூறப்படுகின்ற விளக்கம் விவசாயத் தொழிலாளர்களின் விழுக்காடு மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுவதையும் விளக்கிக் கூறவேண்டும்.

1931ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணிப்பின் அடிப்படையில் இந்தியாவை மூன்று பெரிய மண்டலங்களாகப்பிரித்துக் கொள்ளலாம். (பார்க்கவும், அட்டவணை 11.3). தென்மண்டலத்தில் சென்னை, பம்பாய், மத்திய மாநிலங்கள் உள்ளன. இங்குள்ள விவசாயிகளில் 50%-திற்கும் அதிகமானவர்கள் விவசாயத் தொழிலாளர்களாக உள்ளனர். ஒப்புமையாகக் கருதுவோமானால் தென்மண்டலத்தில்தான் விவசாயத் தொழிலாளர்களின் விழுக்காடு மிகவும் அதிகமாக உள்ளது.

வடமண்டலத்தில் உ.பி., பஞ்சாப், வடமேற்கு எல்லை மாநிலங்கள் உள்ளன. இந்த மண்டலத்தில் விவசாயத் தொழிலாளர்களின் விழுக்காடு மிகவும் குறைவு. விவசாயிகளில் ஐந்தில் ஒரு பகுதியினர் மட்டுமே இங்கு விவசாயத் தொழிலாளர்களாக இருக்கின்றனர்.

கிழக்கு மண்டலத்தில் பீகார், ஒரிஸ்ஸா, வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்கள் உள்ளன. இங்கு வாழும் விவசாயிகளில் சுமார் மூன்றில் ஒரு பகுதியினர் விவசாயத் தொழிலாளர்களாக உள்ளனர்.

விவசாயத் தொழிலாளர்களின் தொகை தனியாகவும், ஒப்புமையாகவும் அதிகரித்துள்ள இதே காலத்தில் பொதுவாக இந்தியர்கள் (சிறப்பாக விவசாயிகள்) வறியராக்கப் பட்டுள்ளனர். இதற்கு நிலவரியும், நிலவரித்திட்டமும் முக்கிய காரணங்களாகக் கூறப்படுகின்றன. மகல்வாரி, ஜமீன்தாரி பகுதிகளைவிட இரயத்துவாரி பகுதிகளில் நிலவரி விகிதங்கள் அதிகமாக இருந்தன. விவசாயத் தொழிலாளர்கள் அதிகமாக உள்ள தென்மண்டலத்தில் இரயத்துவாரி முறை நிலவி வந்துள்ளதைக் கூறவேண்டும். இப்பகுதிகளில் வாழும்

அட்டவணை 11·3

**1901–31 ஆண்டுகளில் விவசாயத் தொழிலாளர்களும் விவசாய மக்கள்தொகையில் இவர்களின் விழுக்காடும் (மண்டலவாரியாக)** [4]

| | (சார்ந்துள்ள மக்கள்தொகை) 1901 | | 1911 | | (உழைக்கும் மக்கள்தொகை) 1921 | | 1931 | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | இலட்சம் | % | இலட்சம் | % | இலட்சம் | % | இலட்சம் | % |
| தென் மண்டலம் (பம்பாய், சென்னை, மத்திய மாநிலங்கள் முதலியன) | 116 | 34·4 | 172 | 31·3 | 102 | 36·5 | 157 | 53·8 |
| கிழக்கு மண்டலம் (பீகார், ஒரிஸ்ஸா, வங்காளம், அஸ்ஸாம்) | 58 | 9·6 | 113 | 16·3 | 65 | 22·1 | 91 | 32·9 |
| வடக்கு மண்டலம் (உத்தரப்பிரதேசம், பஞ்சாப், வடமேற்கு எல்லை மாநிலம்) | 88 | 17·4 | 77 | 14·9 | 37 | 14·8 | 51 | 19·9 |

[4] ஆதாரம்: சுரேந்திர பட்டேல், முன்கூறியபடி. பக். 7.

விவசாயிகள் தங்கள் நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளும் அமைப்பு ஏதும் இன்றி இருந்தார்கள். அரசாங்க அதிகாரிகள் இவர்களை அச்சுறுத்தி ஆண்டுதோறும் நிலவரிகளை உயர்த்தினர். ஆகையால் இரயத்துவாரி பகுதிகளில் வரிச்சுமை அதிமாக இருந்தது.

பிரிட்டிஷ் இந்தியாவில் விவசாயிகள் வறியவர்களாக இருந்ததற்கு நிலவரி விகிதங்கள் அதிகமாக இருந்ததும், நிலையற்றதாக (இரயத்துவாரி பகுதிகளில்) இருந்ததும் முக்கியமான இரு காரணங்கள் ஆகும். ஜமீன்தாரி, மகல்வாரி பகுதிகளில் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களுக்குப் பதிலாகக் குத்தகை அல்லது வாரச்சாகுபடியாளர்கள் இருந்தனர். ஆகையால் வடமண்டலத்திலும், கீழ்மண்டலத்திலும் விவசாயத் தொழிலாளர்களின் தொகை ஒப்புமையாகக் குறைந்து காணப்படுகின்றது. விவசாயத் தொழிலாளர்கள் குறைவாக இருப்பதால் விவசாயச் சுரண்டல்கள் இம்மண்டலங்களிலிருந்து அகற்றப்பட்டதாகக் கருதுவது தவறு.

வரித்தொகை அதிகமாக இருப்பதால் விவசாயிகளிடம் இருக்கவேண்டிய உபரியான வருமானம் அரசாங்கத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. எனவே, இரயத்துவாரி பகுதிகளில் நிலத்தைப் பண்படுத்தவும், செப்பனிடவும், இதரவழிகளில் நிலத்தின் உற்பத்தித்திறனை உயர்த்தும் முதலீடுகளை மேற்கொள்ளவும் இயலாதவர்களாக இருந்தனர். விவசாயிகளிடம் சேமிப்பு இல்லை என்பதுடன், அது தோன்றுவதற்கான வாய்ப்புகளும் இல்லை. இதனால் எதிர்பாராதவிதமாக விளைச்சல் பாதிக்கப்படும் காலங்களில் தங்களைப் பராமரித்துக் கொள்ளும் வலிமையற்றவர்களாக இருக்கின்றனர். 1770-லிருந்து 1900 வரை, 22 பெரிய பஞ்சங்கள் ஏற்பட்டுள்ளன. சுமார் 130 ஆண்டுகளில் சராசரியாக ஒவ்வொரு ஆறு ஆண்டுகளுக்கும் ஒரு முறை பெரிய பஞ்சம் ஏற்பட்டது. அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்ட பெரிய பஞ்சங்களைத்தவிர வட்டார அளவில் இங்கும் அங்குமாகத் தோன்றிய கிடைப்பருமைகள், பட்டினிகள், சாக்காடுகள் முதலியன இதில் இடம் பெறவில்லை.

பணப்புழக்கம் ஏற்படாத சமுதாயத்தில் நிலவரியைப் பணமாகச் செலுத்துமாறு வற்புறுத்தினர்கள் விவசாயிகள் தங்களிடம் உள்ள தானியத்தை ரொக்கமாக்கிக் கொள்ள முடியவில்லை. ஆகையால் வரி செலுத்துவதற்காகக் கடன் வாங்கினார்கள். இதைத்தவிர இயற்கைக் காரணிகளால் உற்பத்தி

குறைந்துள்ள காலத்திலும், குடும்பத்தில் விழாக்கள், பண்டிகைகள் கொண்டாடுவதற்கும் கடன் வாங்கினர்கள். பிரிட்டிஷ் காலத்தில் நிலம் ஒரு சொத்தாகவும், விற்பனைக்குரிய பொருளாகவும் மாறியது. இக்காலத்தில் நிலத்தின் தேவையும், அதன் மதிப்பும் உயர்ந்து சென்றன. நிலத்தை ஈட்டுப் பொருளாக ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்கத் தயாராக இருந்தனர். இவ்வாறு விவசாயிகள் கடன் வாங்குவதற்கான புதிய அவசியங்கள் ஏற்பட்டதைப்போலவே, கடன் வாங்குவதற்குப் புதிய வாய்ப்புகளும் தோன்றின.

1901 இந்தியப் பஞ்ச ஆணைக்குழுவின் தலைவர் மெக்டொன்னல் (A. P. McDonell) பின்வருமாறு கூறியுள்ளார்:[5]

"சாகுபடியாளர்கள் கடனில் மூழ்கியதால் உடைமைகளை இழந்தனர். விவசாயிகள் சொந்த நிலத்தைத் தங்கள் உடைமையாக வைத்துக்கொள்வதற்கு நிலவரியைத் தவருமல் செலுத்துதல் வேண்டும். நெகிழ்வு அற்ற நிலவரி அமைப்பு அவர்களைக் கடனில் தள்ளியது. அவர்களிடம் உள்ள மதிப்பு மிக்க சொத்து (நிலம்) கடன் வாங்குவதை எளிதாக்கியது."

விவசாயிகள் அதிக அளவிற்குக் கடன்பட்டுள்ளனர் என்பதை மேற்படி ஆணைக்குழு கூறியுள்ளது. காட்டாக, பம்பாய் மாநிலத்தில் 1876இல் மூன்றில் ஒருபகுதியினர் மட்டுமே கடன்பட்டிருந்தனர். 1900இல் மேற்படி மாநிலத்தில் ஐந்தில் நான்கு பகுதிச் சாகுபடியாளர்கள் கடனில் மூழ்கியிருந்தனர். (ஆதாரம்: 1901 பஞ்ச ஆணைக்குழு). 1911இல் ரூ. 300 கோடியாக இருந்த கிராமியக்கடன், 1938இல் ரூ. 1800 கோடியாக உயர்ந்து சென்றது.

விவசாயிகள் தாங்கள் கடனாக வாங்கிய தொகையைத் திருப்பித்தர இயலாதவர்களாக இருந்தனர். உற்பத்தித்திறனை அதிகரிப்பதற்காக, அல்லது புதிய தொழில் முயற்சிக்காகக் கடன் வாங்கியிருப்பார்களேயானுல், கடன் தொகையைத் திருப்பித்தருவது எளிதாக இருக்கும். விவசாயிகளுக்கு ரொக்கம் கிடைக்கக்கூடிய புதிய வாய்ப்புகள் ஏற்படாமையால் வாங்கிய கடன் தொகையைத் திருப்பித்தர முடியவில்லை. பெரும்பாலும் கடன் வாங்குவதற்காக நிலத்தை அடைமானமாக வைப்பார்கள். அவ்வாறு அடகு வைத்த நிலத்தை இவர்களால் மீட்க முடியவில்லை. இதனுல் பெரும்பான்மையான

[5] Surendra J. Patel - ibid - p. 13

விவசாயிகள் தங்கள் நிலத்தை இழந்தனர் (அல்லது நிலத்தில் பெரும்பகுதியை இழந்தனர்). பம்பாய் மாநிலத்தில் பரோச் மாவட்டத்தில் மட்டும் 29% நிலம் வணிகர்களுக்கு உடைமை மாற்றம் செய்யப்பட்டது.[6] இதைப் போன்ற சாட்சியங்களைக்கொண்டு பம்பாய் மாநிலத்தில் மட்டும் நான்கில் ஒருபகுதி சாகுபடியாளர்கள் தங்கள் நிலத்தை இழந்துள்ளனர் என்று 1901 பஞ்ச ஆணைக்குழு கூறியுள்ளது.

பம்பாய் மாநிலத்தில் நிகழ்ந்ததைப்போலவே இந்தியா முழுவதிலும் உள்ள சாகுபடியாளர்கள் —முக்கியமாக இரயத்துவாரி பகுதிகளில் உள்ளவர்கள்—தங்கள் நிலத்தை இழந்தனர். பெரிய மிராசுதாரர்கள் சிறுநிலச்சுவான்தாரராக மாறினர். சிறுநிலச்சுவான்தாரர்கள் நிலத்தை இழந்து சாகுபடியாளராக மாறினர். ஏனையோர் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களாக மாறினர். நிலையான உரிமைகள் ஏதுமில்லாத சாகுபடியாளர்களும், நிலம் இல்லாத விவசாயத் தொழிலாளர்களும் தோன்றினர்.

விவசாயத் தொழிலாளர்கள் அனைவரும் ஓரினத்தன்மை உடையவர்களாக இல்லை. ஆகையால் இவர்களை நால்வகைப் படுத்தி ஆராயவேண்டும். முதலாவதாக, நிலத்தோடு பிணைக்கப்பட்ட தொழிலாளர்கள். இவர்களைப் பண்ணையாட்கள் என்று தமிழ்நாட்டில் அழைப்பார்கள். இரண்டாவதாக, சிறு நிலக்கிழார்கள். இவர்களின் சொந்தநிலம் மிகச் சிறு அளவாக இருப்பதால் பிழைப்பு மட்ட வருமானத்தை அதனின்று பெறமுடியவில்லை. எனவே, இவர்கள் சாகுபடியாளர்களாக உள்ளனர். மூன்றாவதாக, நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள். இவர்கள் குறைவேலை செய்கிறார்கள். நான்காவதாக, முழுநேரம் வேலைபார்க்கும் தொழிலாளர்கள். இவர்கள் பெரும்பாலும் வர்த்தகப்பயிர்கள், பழத்தோட்டங்கள், மலைத்தோட்டங்களில் வேலைபார்ப்பவர்கள்.

### நில அடிமைகள் அல்லது பண்ணையாட்கள்

நிலத்தோடு பிணைக்கப்பட்ட ஒருவகை விவசாயத் தொழிலாளர்களை நில அடிமைகள் அல்லது பண்ணையாட்கள் என்று அழைக்கின்றோம். நில அடிமை என்ற சொல் விவசாயத்தில் ஈடுபட்டுள்ள கடைநிலைத் தொழிலாளர்களில் ஒரு பிரிவினரைக் குறிப்பிடுகிறது. இவர்கள் குறிப்பிட்ட நிலம் அல்லது பண்ணையுடன் நெருங்கிய தொடர்பு உடையவர்கள்.

[6] பம்பாய் அரசின் முக்கிய செயலர் 1901-பஞ்ச ஆணைக்குழுவின் முன்னிலையில் கூறிய சாட்சியம்—பார்க்கவும்: Surendra J. Patel, ibid-p. 14.

நில அடிமைகள் என்று அழைக்கின்ற காரணத்தால் மேலைநாடுகளில் காணக்கூடிய அடிமைகளைப் போன்றவர்கள் என்று நினைப்பது தவறு. மேலைநாடுகளில் அரசியல், சமூக அமைப்பின் காரணமாக அடிமைகள் ஏற்பட்டனர். போரில் தோல்வி அடைந்தவர்கள் அடிமைகளாக்கப்பட்டனர். அரசியல் காரணங்களுக்காகச் சிறைப்படுத்தப்பட்டவர்களும் உரிமைகள் ஏதுமின்றி அடிமைகளாக இருந்தனர். அமெரிக்காவின் வரலாற்றில் சமூக அமைப்பின் காரணமாக, நிற அடிப்படையில் உரிமைகள் மறுக்கப்பட்டன. இந்தியாவில் அடிமைகள் ஏற்படுத்துவதற்கு அரசியல், சமூக அமைப்புகள் காரணமாக இல்லை. நில அடிமைகளின் தோற்றத்தைப் பொருளாதார காரணிகளின் அடிப்படையில்தான் விவரித்துக் கூறமுடியும். விவசாயத் தொழிலாளர்கள் அடிப்படையான தன்னுரிமைகளை வைத்துக்கொண்டு நிலையான ஊதியத்தை ஈட்டமுடிய வில்லை. ஆகையால் மேற்படி தன்னுரிமைகளை விட்டுக் கொடுத்துத் தாங்கள் உயிருடன் இருப்பதற்கு அவசியமான பொருள்களை ஈட்ட விழைந்தனர். பண்ணையாள் முறை என்ற நில அடிமை முறையில் விவசாயத் தொழிலாளர் தன் குடும்பத்தினரைப் பராமரிப்பதற்கான குறைந்த அளவு ஊதியத்தை ஈட்டமுடியும். இவர்களுக்கு உணவு, உடை, உறைவிடம் முதலியன நிலக்கிழாரால் கொடுக்கப்படுகின்றன. நிலஅடிமைகள் ஆண்டுதோறும் தங்கள் உழைப்பை அதற்குப் பதிலாகக் கொடுக்கின்றனர்.

நில அடிமை முறை தோன்றியதற்குப் பலர் பல காரணங்களைக் கூறுகின்றனர். பணமுடை காரணமாகக் கடன் வாங்கியவர்கள் அடிமைகளாக மாறினுர்கள் என்று 1931 இந்தியத் தொழிலாளர்கள் அரச ஆணைக்குழு கூறியுள்ளது. இந்தியாவில் பணத்தின் முக்கியத்துவம் உயர்ந்துள்ள அளவிற்கு பண பேரங்கள் ஓங்கவில்லை. ரொக்கக் கிடைப்பருமை ஒரு புறமும், அதன் முக்கியத்துவம் மற்ருெரு புறமும் அதிகரித்தன. ஆகையால் ரொக்கமாகக் கடன் கொடுத்தவர்களை சாதாரணமாகத் தானியக் கடன் கொடுத்தவர்களைப் போலக் கருத முடியவில்லை. இதனுல் ரொக்கமாகக் கடன் கொடுத்தவர்களுக்கு நாளடைவில் கூடுதலான சலுகைகளும், உரிமைகளும் கொடுக்கப்பட்டன. கடன் வாங்கியவர்களால் ரொக்கமாகத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை; ஆகையால் இவர்கள் தங்கள் உரிமைகளை விட்டுக் கொடுக்கத் தயாராக இருந்தார்கள். சட்டரீதியாகக் கடன் வாங்கியவருக்குச் சம உரிமை இருந்தபோதிலும் ரொக்கத்தின் கிடைப்பருமை

காரணமாக மேற்படி சமத்துவம் மறுக்கப்பட்டது. பணப் புழக்கமும், பணச் செலுத்தல்களும் பிரிட்டிஷ் ஆட்சியில் தான் வற்புறுத்தப்பட்டன. ஆகையால் இவர்கள் ஆட்சிக் காலத்தில்தான் நில அடிமை முறையும் தோன்றியிருக்க வேண்டும் என்று சுரேந்திரபட்டேல் கூறுகிறார்.

நிலத்தைக் குத்தகைக்கு விடாமல் சொந்தமாகச் சாகுபடி செய்வதை **'பண்ணையம்'** செய்தல் என்பர். பண்ணைகளில் வேலை செய்பவர்கள் பண்ணையாட்கள். 18-வது, 19-வது நூற்றாண்டுகளிலும், கிராம சமுதாயம் செம்மையாகச் செயல் பட்ட காலங்களிலும் பண்ணையாள் முறை நிலவி வந்ததற்குத் தகுந்த ஆதாரங்கள் இருக்கின்றன. அப்போது பண்ணையாட் களை நிலஅடிமைகளாக யாரும் கருதவில்லை. உழைப்பு கிடைப்பருமையாக இருந்தது இதற்கு முக்கிய காரணம். நிலம் சமுதாயத்தின் உடைமையாக இருந்தது. ஆகையால் பண்ணையாட்களின் உரிமைகளும், சலுகைகளும் பாதுகாக்கப் பட்டன. இவர்களுக்கு வேண்டிய உணவு, உறைவிடம், உடை முதலியன மிராசுதாரரால் கொடுக்கப்பட்டன. பெரும்பாலும் சமுதாய அமைப்பில் கடைநிலையில் உள்ளவர்கள் பண்ணை யாட்களாக இருந்தனர். கிராம விழாக்களிலும், மிராசுதார் களின் குடும்பவைபவங்களிலும் இவர்களுக்குப் புதிய ஆடை, ரொக்கம், வெகுமதி முதலியன கொடுக்கப்பட்டன.

பண்ணையாட்கள் அக்காலத்தில் நிலஅடிமைகளாக நடத்தப்படவில்லை. இவர்களுக்கு மேலான சலுகைகள் கொடுக்கப்பட்டன. மிராசுதார்களைப் போலவே பண்ணையாட் களுக்கும் பாரம்பரியமான நிலஉரிமை உண்டு என்று கூறுகின் றனர். நிலத்தைச் சாகுபடி செய்வதற்கு நிரந்தரமாக உழைப்பை நல்கக்கூடியவர்கள் தேவைப்பட்டார்கள். எனவே, பண்ணையாள் முறை என்பது வரையறுக்கப்பட்ட நில உரிமை யைக் குறிப்பிடுகிறது.[7]

கிராம சமுதாயத்தின் அழிவும், நிலம்-ஆள் விகிதத்தில் ஏற்பட்ட மாறுதல்களும் அடிப்படையானவை. ஒரு காலத்தில் மிராசுதாரர்களுக்கு நிரந்தரமான உழைப்பு கிடைப்பதற்கு உதவியாக இருந்த பண்ணையாள் முறை பிற்காலத்தில் பண்ணையாட்களுக்குநிரந்தரமான வருமான வாய்ப்பை அளிக்கும் அமைப்பு முறையாக மாறியது. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை

[7] Trevelyan in his evidence before the selct Committee, 1840, Quoted by Sarada Raju, ibid, P. 39

பண்ணையாள் முறை நில்லாது இருக்குமேயானால் நிலையான வருமானம் இல்லாத காரணத்தால் விவசாயத் தொழிலாளர் களின் இன்னல்கள் உச்சநிலையை அடைந்து இருக்கும். பிறவழிகளில் வருமானத்தை ஈட்டுவதற்கான வாய்ப்புகள் இல்லாத மாநிலங்களில் நிலஅடிமை முறையை வரவேற்கக் கூடிய ஒன்றாகவே கருதவேண்டும்.

கிராம சமுதாய அமைப்பில் செயல்படும் கைவினைஞர்கள், வீட்டுவேலை செய்பவர்கள் ஆகியோருக்கு நிலம் மானியமாக ஒதுக்கப்பட்டது. கிராம ஊழியர்களுக்கு ஒவ்வொரு நிலக் கிழாரும் உற்பத்தியில் ஒரு பகுதியைச் செலுத்தி வந்தார்கள். நாளடைவில் கிராம சமுதாய அமைப்பின் அழிவுடன் இவர் களின் நிலையான வருமான வாய்ப்புகளும் மறைந்து போயின. கிராமத் தொழில்கள் நலிவுற்றன. வேலை வாய்ப்புகள் இல்லாத காரணத்தால் இவர்கள் விவசாயத்திற்குத் தள்ளப் பட்டனர். இவ்வாறு பெருகிய விவசாயத் தொழிலாளர்கள் நிலஅடிமை முறையைவிட வேலையின்மைக்காகப் பெரிதும் அஞ்சினர். உரிமையைவிட உயிர் வாழ்தல் இவர்களின் முக்கிய பிரச்சினையாக இருந்தது.

நில அடிமைகள் இந்தியா முழுவதிலும் காணப்பட்டனர். ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு பெயரில் இவர்களை அழைத் தார்கள். தமிழ்நாட்டில் **பண்ணையாள், படியாள்** என்று அழைக்கப்பட்டனர். (படி தானியம் கூலியாகக் கொடுக்கப் படுவதை இது குறிப்பிடுகிறது). குஜராத்தில் **ஹாலி** (Hali) என்றும், தென்பீகாரில் **கைமுதி** (Kaimuti) என்றும், வட பீகாரில் **ஜனோரி** (Janouri) என்றும், ஒரிஸ்ஸாவில் **கோதி** (Gotei) என்றும், ஆந்திராவில் **காஸிகுலு** (Gassigullu) என்றும், ஹைதராபாத்தில் **பாகியா** (Bhagia) என்றும், **பகேலா** (Bhagela) என்றும், அயோத்தியில் **சான்வாக்** (Sanwak) என்றும், **ஹரியா** (Haria) என்றும், மத்திய இந்தியாவில் **ஹார்வா** (Harwah) என்றும், கர்நாடகத்தில் **பீதன்** (Feethan) என்றும், **ஜீதா** (Jeetha) என்றும், மத்தியப் பிரதேசத்தில் **பர்ஸாலியா** (Barsalia) என்றும், சால்காரி (Shalkaris) என்றும், குமாயுன் பகுதிகளில் **ஹாலியா, சோய்ரா** என்ற பெயர்களிலும் அழைக்கப்பட்டனர்.[8]

ஒரிஸ்ஸாவில் மூவகை விவசாயத் தொழிலாளர்களைக் காணலாம். **சக்கர்** (Chakor) அல்லது **பர்ஸாலியா** என்பவர்

[8] C. B. Memoria - Agricultural Problems of India, 5th edition, 1966, P. 373.

கள் ஒருவகையினர். இவர்கள் ஆண்டு முழுவதும் பணிபுரிவார்கள். உணவு, இருப்பிடம் ஆகியவற்றுடன் ரொக்கமாக ரூ. 24-ம், (ஆண்டுதோறும்) கொடுக்க வேண்டும். இவர்களின் மூதாதையர்கள் பண்ணையாரிடம் கடன்பட்டிருப்பார்கள் என்று கூறப்படுகிறது.

ஒரிஸ்ஸாவில் நாகமுலியா (Naga Muliya) என்ற இரண்டாவது வகை விவசாயத்தொழிலாளர்கள் உள்ளனர். இவர்கள் ஆண்டு முழுவதும் பணியாற்றுவார்கள். இவர்கள் உணவு, உறைவிடம் ஆகியவற்றைக் கூலியாகப் பெறுவதில்லை. அதற்குப் பதிலாக வாரம் இல்லாமல் சாகுபடி செய்வதற்கு ஒரு பகுதி நிலமும், 4 சேர் விதை நெல்லும் கொடுக்கப்படும். மூன்றுவது வகை விவசாயத் தொழிலாளர்கள் தண்டமுலியா (Danda Muliya) என்று அழைக்கப்படுவார்கள். இவர்கள் ஆண்டு முழுவதும் பணிபுரிவதில்லை. இவர்களின் கூலி விகிதங்கள் அவ்வப்போது நிர்ணயிக்கப்படும்.

பீகாரில் காமியா (Kamia) என்ற நிலஅடிமைகள் உள்ளனர். இவர்களுக்கு நிலஉரிமை அல்லது சாகுபடி உரிமை ஏதும் கிடையாது. இவர்கள் ரொக்கமாகக் கடன் வாங்கினதற்காகக் குற்றேவல்கள் புரிந்து வந்துள்ளனர். கடன் கொடுத்தவர்களுக்குத் தங்கள் உழைப்பை மட்டும் அன்றித் தங்கள் குடும்ப உழைப்பையும் தருகின்றனர். பொதுவாகக் காமியா தம்பதிகளின் கூலி வருமானம் அக்குடும்பத்திற்குப் போதுமானதாக இல்லை.

தென் குஜராத்தில் ஹாலி என்பவர்கள் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க இயலாமல் தொடர்ந்து பல ஆண்டுகள் அடிமையாக வேலை செய்கின்றனர்.

நிலஅடிமை முறையின் ஒரு கூறான கட்டாய உழைப்பு இந்நூற்றுண்டிலும் தொடர்ந்து காணப்படுகிறது என்று விவசாயத் தொழிலாளர் ஆணைக்குழு கூறியுள்ளது. பெகார் (Begar) அல்லது வெத் (Veth) என்று அழைக்கப்படும் கட்டாய உழைப்பு முக்கியமானது. இதைத்தவிர வங்காளம், பீகார் ஆகிய மாநிலங்களில் சட்டத்திற்குப் புறம்பான வரிகள்—குறிப்பாக அப்வாப் (abwab)—வசூலிக்கப்படுகின்றன. குறிப்பிட்ட தொழிலைச் செய்வதற்கான தீர்வையாகவும், திருமணக் கட்டணமாகவும் இவை வசூலிக்கப்படுகின்றன. விவசாயத் தொழிலாளர்களிடம் சேமிப்பு ஏதும் ஏற்படாதவாறு இவை தடுக்கின்றன. விவசாயத் தொழிலாளர்கள் தொடர்ந்து நில அடிமைகளாக இருக்க இவை உதவி செய்கின்றன.

1921 மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி பண்ணையில் நீண்டகால ஒப்பந்த அடிப்படையில் வேலைபார்க்கும் தொழிலாளர்கள் மொத்த விவசாயத் தொழிலாளர்களில் ஏழில் ஒரு பகுதியினராக இருந்தனர்.

பண்ணையாட்கள் என்று அழைக்கப்படும் நிலஅடிமைகள் மத்திய இந்தியாவிலும், தென் இந்தியாவிலும் அதிகம் காணப் படுகின்றனர். நீண்டகால ஒப்பந்தத்தின்கீழ் வேலை செய்யும் தொழிலாளர்களில் 50% சதவிகிதத்தினர், அதாவது விவசாயத் தொழிலாளர்களில் பதினொன்கில் ஒரு பகுதியினர் பண்ணையாட்கள் என்று அழைக்கப்படும் நில அடிமைகளாக உள்ளனர். இதே அடிப்படையில் **1933**இல் சுமார் **30** இலட்சம் பண்ணையாட்கள் இருந்தனர் என்று கூறலாம்.

### சிறுநிலக்கிழார்கள்

நிலத்துடன் இணைக்கப்பட்ட விவசாயத் தொழிலாளர்களை ஆராயும்போது சிறுநிலக்கிழார்களையும் (நாம்) கருத வேண்டும். இவர்களிடம் நிலம் பெயரளவுக்கு மட்டுமே உள்ளது. இவர்களையும், இவர்கள் குடும்பத்தினரையும் பரா மரிப்பதற்கு இது போதுமான வருமானத்தைத் தருவதில்லை. சுமார் 5 ஏக்கரை விடக் குறைவான நிலத்தை உடையவர்களை இம்மாதிரி கருதலாம். இவர்கள் தங்கள் குடும்ப வருமானத்தை நிறைவு செய்வதற்காக விவசாயத் தொழிலாளர்களாகவும், குத்தகை அல்லது வார சாகுபடியாளர்களாகவும் பணியாற்று கின்றனர்.

1901 மக்கள்தொகைக் கணிப்பில் சிறுநிலக்கிழார்கள் பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் ஒருபுறம் பண்ணையில் வேலைசெய்யும் தொழிலாளர்களாகவும், மற்றொரு புறம் சாதாரணத் தொழிலாளர்களாகவும் உள்ளனர். பெரும் பாலான பகுதிகளில் சிறுநிலக்கிழார்களைச் சாதாரண விவசாயத் தொழிலாளர்களிடமிருந்து வேறுபடுத்த முடியவில்லை என்று விவசாய அரச ஆணைக்குழு கூறியுள்ளது. 1928இல் நிறை வேற்றப்பட்ட வங்காளச் சாகுபடித் திருத்தச் சட்டத்தில் 50%-திற்கும் அதிகமாக வாரம் அல்லது குத்தகை செலுத்தும் சாகுபடியாளர்கள் விவசாயக்கூலிகள் என்று அழைக்கப்பட் டுள்ளனர். இவ்வாறு சாகுபடியாளார்களாகப் பணியாற்று பவர்களும், விவசாயத் தொழிலாளர்களாக உள்ளவர்களும் கிட்டத்தட்ட வேறுபடுத்த இயலாத அளவில் ஒரேமாதிரியான வாழ்க்கை நிலையை உடையவர்கள் என்று கூறலாம்.

சிறு நிலக்கிழார்களின் தொகையைக் கணிப்பது கடினமாக உள்ளது. நிலத்தின் வளம் இடத்திற்கு இடம் வேறுபடுவதால் சிறுநிலக்கிழார்கள் என்ற சொல்லிற்குக் கூறப்படும் விளக்கம் திருப்தியாக இல்லை. பாசன வசதிகள் வேறுபடுவதால் இது மேலும் கடினமாகி விடுகிறது. விவசாய அரச ஆணைக் குழுவின் அறிக்கையில் பஞ்சாப் மாநிலத்தில் சுமார் 50%-திற்கும் அதிகமான விவசாயிகள் 5 ஏக்கரைவிடக் குறைவான நிலத்தை வைத்திருக்கிறார்கள் என்று கூறப்பட்டுள்ளது. 1944-45 வங்காளப் பஞ்ச விசாரணைக்குழுவின் அறிக்கையில் 64% விவசாயிகள், அதாவது சராசரியாக மூன்றில் இரு பகுதி விவசாயிகள் 5 ஏக்கரைவிடக் குறைவான நிலத்தை உடைய சிறுநிலக்கிழார்கள் என்று கூறியுள்ளார்கள். மாநிலவாரியாகக் கிடைக்கும் விவரங்களை அடிப்படையாகக் கொண்டு பார்ப்போமானால் 5 ஏக்கரைவிடக் குறைவான நிலத்தைச் சொந்தமாகச் சாகுபடி செய்பவர்கள் மொத்த விவசாயிகளில் 50%-திற்கும் அதிகமானவர்கள் என்று அறியலாம்.

இந்தியாவில் மாநிலத்திற்கு மாநிலம் விவசாய அமைப்பு, நிலவரி முறை முதலியன வேறுபடுகின்றன. நிலவரியும், நில உரிமையும் வேறுபட்டாலும் இந்தியா முழுவதும் உள்ள விவசாயிகள் சுரண்டப்பட்டனர். நில உரிமைகள் வேறுபடுவதற்கு ஏற்பச் சுரண்டப்படும் விதங்களும், முறைகளும் வேறுபடுகின்றன. ஜமீன்தாரி, மகல்வாரி நில உரிமைகள் அதிகம் உள்ள பீகார், வங்காளம், உத்தரப்பிரதேசம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்கள் குறைவாகவும், சாகுபடியாளர்களாகச் செயல்படும் சிறு நிலக்கிழார்கள் அதிகமாகவும் உள்ளனர். இவர்களுக்கு நிரந்தரமான சாகுபடி உரிமைகள் கொடுக்கப்படவில்லை. இவர்கள் வாரச்சாகுபடியாளர்களாக இருந்தனர்.

வருமானம் ஈட்டுவதற்கான வாய்ப்புகள் தேக்கமடைந்துள்ள சூழ்நிலையில் நில உரிமையும், சாகுபடி உரிமையும் மற்றவர்களின் உழைப்பைச் சுரண்டுவதற்குச் சாதனங்களாக இருந்தன. இயற்கைக் காரணியான நிலத்தைச் செம்மையாகப் பயன்படுத்தி ஆதாயம் அடைவதற்குப் பதிலாக நிலத்தைச் சாகுபடி செய்யும் சாகுபடியாளர்களைச் சுரண்டி இலாபம் அடைந்தார்கள்.

ஜமீன்தாரி பகுதிகளில் சாகுபடிக்கு நிலத்தை ஒப்படைத்து, அதன் பின்னர் சாகுபடியாளர்கள் சுரண்டப்பட்டனர். ஆனால்,

இரயத்துவாரி பகுதிகளில் விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்படுவதன் மூலம் சுரண்டப்பட்டனர். நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்களைப்போலவே, சாகுபடியாளர்களாக உள்ள சிறுநிலக்கிழாரும் சுரண்டப்படுகின்றனர். நில உரிமையில் உள்ள வேறுபாடு காரணமாக இவர்கள் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றனர்.

இந்தியா தன்னுரிமை அடைந்த சமயத்தில் வாரச்சாகுபடி, குத்தகைச் சாகுபடி பற்றிப் பலரும் கணித்துள்ளனர். விவசாயத் தொழிலாளர்களாகவும், சாகுபடியாளர்களாகவும் உள்ள சிறுநிலக்கிழார்கள் மொத்தச் சாகுபடியாளர்களில் குறைந்தது மூன்றில் ஒருபகுதியாகவும், அதிக அளவு இரண்டில் ஒருபகுதியாகவும் உள்ளனர்.[9]

### குறைவேலை செய்யும் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள்

இதுவரை நிலத்துடன் இருவேறுவகைகளில் இணைக்கப்பட்ட தொழிலாளர்களைப் பற்றிக் கூறியுள்ளோம். நில அடிமைகள் நிலக்கிழாருடன் இணைக்கப்பட்டிருந்தனர். இரண்டாவதாக உள்ளவர்கள் சாகுபடியாளர்கள். சிறுநிலக்கிழாராக உள்ளவர்கள் சாகுபடியாளர்கள் நிலத்துடன் இணைக்கப்பட்டிருந்தனர். மூன்றுவதாகவும், நான்காவதாகவும் வகைப்படுத்திய விவசாயத் தொழிலாளர்களுக்கு நிலத்தில் எவ்வித உரிமைகளும் கிடையாது. இவர்களில் மூன்றுவதாக உள்ள நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். இந்தியாவில் கரந்துறை வேலையின்மை (disguised unemployment) இருப்பதாகக் கூறுபவர்கள் இவர்களைத்தான் உபரியான மக்கள்தொகையாகக் கருதுகின்றனர். இவர்கள் ஆண்டுமுழுவதும் வேலை செய்வதில்லை. ஆகையால் நிரந்தரமான கூலி வாய்ப்புகள் ஏதுமில்லை. இவர்களது இறுதிநிலை உற்பத்தித்திறன் பூஜ்யமாகவோ, மிகக் குறைந்த அளவாகவோ இருக்கும். இவர்களுக்குத் தனி உரிமைகள் (freedom) கொடுக்கப்பட்டிருந்த போதிலும் அதனால் எவ்விதப் பயனும் இல்லை.

நிலையான வேலைவாய்ப்பு இல்லாத காரணத்தால் வேலை தேடி இடம் பெயரும் மக்களாக (இவர்கள்) உள்ளனர். சாலைபோடுதல், கட்டட வேலைகள் போன்ற திறன் குறைந்த வேலைகளில் இவர்கள் அமர்த்தப்படுகின்றனர். விவசாய நடவடிக்கைகளில், முக்கியமாக நாற்று நடுதல், களை எடுத்தல்,

[9] Surendra J. Patel, ibid-p. 25.

உழுதல், அறுவடை செய்தல் முதலிய பணிகளிலும், கால்வாய் வெட்டுதல், ஆழப்படுத்துதல், ஓடு அல்லது கல் அறுத்தல், குளம் அல்லது ஏரிகளில் தூறு எடுத்தல் முதலிய பணிகளிலும் இவர்கள் ஈடுபடுகின்றனர். 1931இல் சுமார் 3½ கோடி விவசாயத் தொழிலாளர்கள் இம்மாதிரி குறை வேலை செய்பவர்களாக இருந்தனர். இவர்களில் பெரும்பான்மையினர் தென் தீபகற்பத்தில் காணப்படுகின்றனர்.

முழுநேர வேலைசெய்யும் உரிமையுடைய விவசாயத் தொழிலாளர்கள்

இவர்கள் விவசாயத் தொழிலாளர்களில் நான்காவது பிரிவினராக உள்ளனர். இவர்கள் பெரும்பாலும் முதலாளித்துவப் பண்ணைகளில் ரொக்கக் கூலிக்கு வேலை பார்க்கின்றனர். வர்த்தகப்பயிர்கள், பழத்தோட்டங்கள், மலைகளில் உள்ள தோட்டப்பயிர்ப் பண்ணைகள் முதலியவற்றில் இவர்கள் முழு நேரத் தொழிலாளர்களாகப் பணியாற்றுகின்றனர். இவர்களின் உரிமைகள் நெடுங்காலமாகப் பெயரளவில் மட்டுமே இருந்தன. முக்கியமாகப் பத்தொன்பதாவது நூற்றாண்டில் இவர்கள் தனி உரிமை ஏதும் இல்லாத அடிமைகளைப் போலவே இருந்தனர். 1861_62இல் அஸ்ஸாம், கச்சார் ஆகிய பகுதிகளில் உள்ள விவசாயத் தொழிலாளர்கள் அடிமைகளைவிட மோசமாக இருந்தனர் என்று கூறப்படுகிறது. இருபதாம் நூற்றாண்டிலும் இந்தச் சூழ்நிலை எவ்வித மாறுபாடும் இல்லாமல் தொடர்ந்து நீடிக்கலாயிற்று. பிரிட்டிஷ் தொழிற்சங்கத்தால் 1928இல் நியமிக்கப்பட்ட ஆணைக்குழு அஸ்ஸாம் தேயிலையைப் பின்வருமாறு வருணித்துள்ளது: 'பட்டினியிலும், வறுமையிலும் உழலும் இலட்சக்கணக்கான இந்தியர்களின் கடின உழைப்பால் அஸ்ஸாம் தேயிலை மணக்கிறது' என்று கூறியுள்ளது. இதைப்போன்ற நிலை இந்தியா தன்னுரிமை எய்தும் வரை தொடர்ந்து நீடித்தது. கிட்டத்தட்ட ஒன்றரை நூற்றாண்டுகளில் தோட்டப்பயிர்த் தொழிலாளர்களின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏதும் ஏற்படவில்லை. இவர்கள் தொழிற்சங்கம் ஒன்றை அமைத்துக்கொண்டு இருப்பார்களேயானல் ஓரளவிற்குத் தங்கள் நலன்களைப் பாதுகாத்துக் கொண்டிருக்க முடியும். தோட்டப்பயிர்த் தொழிலாளர்கள் தொழிற்சங்கம் அமைப்பதைப் பிரிட்டிஷார் ஆதரிக்கவில்லை. முழுக்க முழுக்க பிரிட்டிஷ் மூலதனத்தையும், தொழில் முயற்சியையும் அடிப்படையாகக்கொண்டு தோட்டப் பயிர்கள் இந்தியாவில் சாகுபடி செய்யப்பட்டன. தொழிலாளர்களின் நலன்களை மேம்படுத்துவதற்குப் பிரிட்டிஷ் ஆட்சியில் குறிப்பிடத்தக்க

முயற்சிகள் எடுக்கவில்லை. இவர்கள் வெளிஉலகத்துடன் தொடர்பு இன்றி இருந்தார்கள். இவர்களது வாழ்க்கை நிலையை வெளிஉலகத்தினர் அறிவதும், வெளிஉலகில் ஏற்படும் முக்கிய நிகழ்ச்சிகளை இவர்கள் தெரிந்து கொள் வதும் அரிது. இருந்தபோதிலும் முதலாளித்துவப் பண்ணை முறையின் அடிப்படையில் தோட்டப்பயிர்கள் சாகுபடி செய் யப்பட்டன. இவர்களுக்குக் கூலி பணமாகக் கொடுக்கப் பட்டது. 1946இல் சுமார் 11 இலட்சம் மக்கள் தோட்டப் பயிர்த் தொழிலாளர்களாக இருந்தனர்.

மலைத்தோட்டங்களைத் தவிர முதலாளித்துவ முறையில் நிருவாகம் செய்யப்படும் பண்ணைகளிலும் பணக்கூலிக்கு முழு நேர விவசாயத் தொழிலாளர்கள் அமர்த்தப்பட்டனர். பண்ணை யாட்கள், வாரச்சாகுபடியாளர்கள், குறைவேலை செய்யும் தொழிலாளர்கள் ஆகியவர்களின் உற்பத்தித்திறனைவிடப் பணக் கூலிக்கு முழு நேரம் வேலைபார்க்கும் தொழிலாளர்களின் உற்பத்தித் திறன் அதிகமாக உள்ளது. ஆகையால் முத லாளித்துவப் பண்ணைகளில் இவர்கள் பெரிதும் விரும்பப்படு கின்றனர். இந்தியா முழுவதிலும் சுமார் 5% நிலப்பரப்பு முற்றிலும் விவசாயத் தொழிலாளர்களைக் கொண்டு சாகுபடி செய்யப்படுகிறது. வர்த்தகப்பயிர்கள், பழத்தோட்டங்கள், மாதிரிப்பண்ணைகள், காய்கறித் தோட்டங்கள், பால்பண்ணை கள், கோழிப்பண்ணைகள் முதலியவற்றில் இவர்கள் வேலை செய்கின்றனர். 1931இல் இவர்கள் தொகை சுமார் 30 இலட்சத்திலிருந்து 40 இலட்சம் வரை இருக்கும் என்று கூறப் படுகிறது.

1931இல் சுமார் **11** கோடி மக்கள் விவசாயத்துறையில் வேலை செய்து வந்தனர். இவர்களில் சுமார் 7.9 கோடி மக்கள் நிலஉரிமை ஏதும் இல்லாதவர்கள். இவர்கள் வாரச்சாகுபடி யாளராகவும், குத்தகைச் சாகுபடியாளராகவும், நிலமில்லாத விவசாயத் தொழிலாளராகவும் இருந்துள்ளனர். நிலஉரிமை இல்லாதவர்கள் விவசாயத்தில் ஈடுபட்ட மக்கள்தொகையில் **71·1%** ஆக உள்ளனர்.

**விடுதலைக்குப்பின்னர்**

விவசாயத் தொழிலாளர்களின் வருமானம் மற்ற துறைகளில் உள்ளவர்களின் வருமானத்தைவிடக் குறைவாக உள்ளது. பாரதத்தின் தலாவருமானம் 1950-51இல் ரூ. 265-2 ஆகவும், 1956-57இல் ரூ. 291·50 ஆகவும் இருந்தன. இந்த ஆண்டு

அட்டவணை 11·4

## இந்திய விவசாய சமூகம்—1931 [10]

| வரிசை எண் | விவரம் | இலட்சம் | சதவீதம் |
|---|---|---|---|
| 1. | மொத்த விவசாய மக்கள்தொகை | **1110** | **100** |
| 2. | 'வார' (Rent) வருமானம் ஈட்டுபவர்கள் | **40** | **3·6** |
| 3. | 5 ஏக்கருக்கும் அதிகமாகச் சாகுபடி செய்பவர்கள் | **280** | **25·3** |
| | இவர்களில்: | | |
| | (a) சொந்தச் சாகுபடியாளர்கள் ; | *180* | *16·3* |
| | (b) குத்தகைச் சாகுபடியாளர்கள்; | *100* | *9·0* |
| 4. | தொழிலாளர்களாகச் செயல்படும் சிறு நிலக்கிழார்கள் | **370** | **33·3** |
| | இவர்களில் : | | |
| | (a) சிறு உடைமையாளர்கள் ; | *100* | *9·0* |
| | (b) நிரந்தரமில்லாத சாகுபடியாளர்களும் வாரச் சாகுபடியாளர்களும் ; | *270* | *24·3* |
| 5. | நிலமில்லாத தொழிலாளர்கள் | **420** | **37·8** |
| | இவர்களில் : | | |
| | (a) நில அடிமைகள் ; | *30* | *2·7* |
| | (b) குறைவேலை செய்யும் தொழிலாளர்கள் ; | *350* | *31·5* |
| | (c) முழுநேர வேலை செய்யும் (உரிமை உடைய) பணக்கூலி பெறும் தொழிலாளர்கள் ; | *40* | *3·6* |

[10] S. J. Patel, ibid, P. 31.

களில் விவசாயத் தொழிலாளர்களின் சராசரி வருமானம் முறையே ரூ. 104-00 ஆகவும், ரூ. **99.40** ஆகவும் உள்ளன. பன்னாட்டு அளவில் கருதும்போது பாரதத்தின் தலாவரு மானம் ஏழ்மையைப் பிரதிபலிக்கும் பிழைப்பு மட்ட வருமான மாகக் கருதப்படுகின்றது. விவசாயத் தொழிலாளர்களின் வருமானம் ஏழ்மையுள் ஏழ்மையை எடுத்துக் காட்டுகிறது எனலாம்.

1950-51 இல் விவசாயத் தொழிலாளர் ஆய்வுக்குழுவின் அறிக்கையில் சுமார் 176 இலட்சம் குடும்பத்தினர் விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் என்று கூறப்பட்டுள்ளது. கிராமங் களில் மொத்தம் **580** இலட்சம் குடும்பங்கள் உள்ளன. இதில் 30% குடும்பங்கள் விவசாயத் தொழிலாளர் குடும்பங்களாக உள்ளன. விவசாயத் தொழிலாளர்களில் 50%-தினருக்குச் சொந்த நிலம் ஏதுமில்லை. நிலமற்ற தொழிலாளர்களில் 90%-தினர் வேலைதேடி அலைபவர்கள். எஞ்சியுள்ள 10% -தினர் நிலத்தோடு பிணைக்கப்பட்டவர்கள்.

விவசாயத் தொழிலாளர்களின் பிரச்சினை மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. விவசாயத் தொழிலாளர் குடும்பங்களைக் கிராமக் குடும்பங்களின் விகிதமாக்கிக் கூறுவோமானால், தென் பாரதத்தில் சுமார் 50% கிராமிய குடும்பத்தினர் விவசாயத் தொழிலாளர் குடும்பங்களாக உள்ளனர். பாரதத்தின் வட மேற்கு மண்டலத்தில் 10% கிராம குடும்பங்கள் மட்டுமே விவசாயத் தொழிலாளர் குடும்பங்களாக உள்ளனர். வட மண்டலத்தில் இந்த விழுக்காடு 14% ஆகவும், கிழக்கு மண்டலத்தில் 33% ஆகவும், மத்திய மண்டலத்தில் 37% ஆகவும் உள்ளன. பாரதம் முழுவதிலும் உள்ள 176 இலட் சம் விவசாயத் தொழிலாளர் குடும்பங்களில் **62** இலட்சம் குடும்பத்தினர் தென் தீபகற்பத்தில் உள்ளனர். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 50 இலட்சம் குடும்பங்கள் உள்ளன. கிழக்கு மண்டலத்தில் இதற்கு அடுத்தபடியாக அதிக விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் காணப்படுகின்றன. இங்குச் சுமார் 50 இலட்சம் விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் உள்ளன. இதில் சுமார் 50%-அதாவது 25 இலட்சம் விவசாயத் தொழி லாளர் குடும்பங்கள் பீகாரில் மட்டும் காணப்படுகின்றன. மத்திய மண்டலத்தில் சுமார் 30 இலட்சம் குடும்பங்களும், வடக்கு, மேற்கு மண்டலங்களில் முறையே 10 இலட்சம், 20 இலட்சம் குடும்பங்களும் உள்ளன. விவசாயத் தொழிலாளர் களின் தெளிவு ஏழ்மையின் குறியீட்டு எண்ணைக் கருதப்படுமே

யானல் பிற மாநிலங்களைவிடத் தமிழ்நாட்டில் ஏழ்மை செறிந்து காணப்பட்டது எனலாம்.

**அட்டவணை 11·5**

### விவசாயத் தொழிலாளர்களின் வேலையின்மை[11]

| பாரதத்தில் உள்ள மண்டலங்கள் | ஓராண்டில் எந்த மாதத்திலும் கூலிவேலை செய்யாத தொழிலாளர்களின் விழுக்காடு. (%) | கூலிவேலை செய்யும் தொழிலாளர்கள் ஓராண்டில் சராசரியாக வேலை செய்யாத நாட்கள். |
|---|---|---|
| வட மண்டலம் | 4 | 44 |
| கிழக்கு ,, | 17 | 73 |
| தென் ,, | 20 | 115 |
| மேற்கு ,, | 14 | 113 |
| மத்திய ,, | 16 | 54 |
| வடமேற்கு ,, | 17 | 82 |
| பாரதம் முழுவதும் | 16 | 82 |

முதலாவது விவசாயத் தொழிலாளர் ஆய்வுக்குழுவின் அறிக்கையிலிருந்து 1951இல் பாரதம் முழுவதிலும் உள்ள விவசாயத் தொழிலாளர்களின் வேலையின்மை குறித்து ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். பாரதத்தில் சுமார் 16% விவசாயத் தொழிலாளர்கள் ஆண்டு முழுவதும் கூலிவேலை செய்யாமல் இருந்தார்கள். தென்மண்டலத்தில் இது 20% ஆக உள்ளது. பாரத சராசரி வேலையின்மையைவிடத் தென் மண்டலத்தில் காணப்படும் வேலையின்மை விகிதம் கூடுதலாக உள்ளது. இதே அட்டவணையில் (**11·5**) கூலிவேலை செய்யும் ஆட்கள் ஓராண்டில் சராசரியாக வேலை செய்யாத நாட்கள் குறிக்கப்பட்டுள்ளன. பாரதம் முழுவதற்குமான சராசரி வேலையில்லாத நாட்கள் 82 ஆக உள்ளன. இதைவிடத் தென்

[11] *Source* All India Agricultural labour enquiry 1950-51, Quoted by D. Bhattacharyya Understanding India Economy, Part one, Progressive Publishers, Calcutta, (1961) P·94.

அட்டவணை 11·6

### விவசாயத் தொழிலாளர்களின் வேலைநாட்களும் வேலையில்லாத நாட்களும்.[12]

(ஓராண்டில் சராசரி நாட்கள்)

| | நிலப்பிணைப்பு இல்லாத ஆண் தொழிலாளர்கள் | | | நிலத்துடன் பிணைக்கப் பட்ட ஆண் தொழிலாளர்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| மண்டலங்கள் | கூலி வேலை | தன் வேலை | வேலை யின் மை | கூலி வேலை | தன் வேலை | வேலை யின் மை |
| வட மண்டலம் | 280 | 37 | 48 | 345 | 9 | 11 |
| கிழக்கு ,, | 215 | 73 | 77 | 323 | 28 | 14 |
| தென் ,, | 173 | 76 | 116 | 301 | 44 | 20 |
| மேற்கு ,, | 171 | 66 | 128 | 340 | 9 | 16 |
| மத்திய ,, | 193 | 99 | 73 | 325 | 24 | 16 |
| வடமேற்கு ,, | 141 | 104 | 120 | 288 | 39 | 38 |
| பாரதம் முழுவதிலும் | 200 | 75 | 90 | 326 | 20 | 19 |

மண்டலத்திலும், மேற்கு மண்டலத்திலும் அதிகமான நாட்கள் வேலையில்லாது இருக்கின்றனர். (மேற்படி நாட்கள் முறையே 115 ஆகவும், 113 ஆகவும் உள்ளன.) இவ்வாறு வேலை யில்லாத நாட்களும் தென்மண்டலத்தில் மிக அதிகமாக இருக்கின்றன.

இரண்டாவதாக உள்ள அட்டவணையில் (11·6) நிலத் துடன் நிரந்தரமாகப் பிணைக்கப்பட்ட விவசாயத் தொழிலாளர் கள், அவ்வாறு இணைக்கப்படாத தொழிலாளர்கள் ஆகியோர் முறையே வேலைசெய்யும் நாட்களும், வேலைசெய்யாத நாட் களும் மண்டலவாரியாகக் கூறப்பட்டுள்ளன. பாரதம் முழுவதும் உள்ள நில இணைப்பு இல்லாத தொழிலாளர்கள் ஆண்டு தோறும் சராசரியாக 200 நாட்கள் கூலிவேலை செய்கின்றனர். வடமேற்கு மண்டலத்தில்தான் மிகவும் குறைவான நாட்கள்

12 முன் கூறியபடி: பக். 94.

(141) கூலி வேலை செய்கின்றனர். தென்மண்டலத்தில் உள்ளவர்கள் 173 நாட்களும், மேற்கு மண்டலத்தில் உள்ளவர்கள் 171 நாட்களும் முறையே கூலிவேலை செய்கின்றனர். விவசாயத் தொழிலாளர்கள் தங்கள் சொந்த அலுவல்களைச் செய்யும் நாட்களும் கொடுக்கப்பட்டன. தன் வேலைக்காக அதிக நாட்கள் செலவிடுவதாகக் கூறுவதை ஆராய வேண்டும். வேலையின்மையை வெளிப்படையாகக் கூறுவதற்கு இயலாமல் இங்ஙனம் தன் வேலை என்று வகைப்படுத்தி இருக்கலாம். நிலத்துடன் இணைக்கப்பட்ட தொழிலாளர்கள் அதிக நாட்கள் வேலை செய்கிறார்கள். நிலத்துடன் இணைக்கப்படாத தொழிலாளர்களின் வேலையின்மையைவிட இவர்களின் வேலையின்மை மிகக் குறைவாக இருப்பதுடன், இவர்கள் தங்கள் வேலையைச் செய்துகொள்ளும் நாட்களும் குறைவாக (ஒப்புமையாக) இருக்கின்றன.

முதல் ஐந்தாண்டுத்திட்டம் முடிந்ததும் இரண்டாவது விவசாயத் தொழிலாளர் ஆய்வுக்குழு 1956-57இல் நியமிக்கப்பட்டது. முதல் திட்டத்தால் ஏற்பட்ட பலனை அறிய வேண்டுமானால் இவ்விரு ஆய்வுக்குழுக்களின் அறிக்கைகளும் ஒப்பிடக்கூடியதாக இருக்கவேண்டும். ஆனால், பல முக்கிய காரணங்களினால் இவற்றை ஒப்பிட்டுக் கூறமுடியவில்லை. இரு விவசாயத் தொழிலாளர் ஆய்வுக்குழுக்களும் எடுத்துக்கொண்ட சொல் விளக்கம், இலக்கண அடிப்படை, அளந்து அறியும் முறைமை முதலியன வேறுபடுகின்றன. இரு ஆய்வுக்குழுக்களின் அறிக்கைகளும் தனித்தனியாகக் கருதவேண்டுமே யல்லாமல் ஒப்பிடக் கூடாது. இந்த முன்னெச்சரிக்கைகளுடன் இரண்டாவது விவசாயத் தொழிலாளர் ஆய்வுக்குழுவின் அறிக்கையைக் காண்போம்.

1956-57இல் சுமார் **660** இலட்சம் கிராமியக் குடும்பங்கள் இருந்தன. இவற்றில் **163** இலட்சம் குடும்பங்கள் விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் ஆகும். அதாவது மொத்தக் கிராமியக் குடும்பங்களில் சுமார் **25%** மட்டுமே விவசாயத் தொழிலாளர் குடும்பங்களாக உள்ளன. இவர்களில் 58% குடும்பத்தினருக்கு நிலஉடைமை ஏதுமில்லை. நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களில் **73%**-தினர் வேலைதேடி அலைந்தனர். சுமார் 27% மட்டுமே நிலத்தோடு நிரந்தரமாக இணைக்கப்பட்டு இருந்தனர். இந்த இரண்டாவது ஆய்வுக் குழுவின் அறிக்கையிலும் தென்தீபகற்பத்தில் விவசாயத் தொழிலாளர்கள் மிகுதியாக உள்ளனர் என்று அறியலாம். இங்குள்ள கிராமியக் குடும்பங்

களில் 34% குடும்பங்கள் விவசாயத் தொழிலாளர் குடும்பங்கள் ஆகும். வடமண்டலத்தில் இந்த விழுக்காடு 7·5% ஆக உள்ளது.

1956-57இல் விவசாயத்துறையில் சராசரியாக ஆண் தொழிலாளர்கள் வேலை செய்த நாட்கள் 197. நிலத்துடன் பிணைக்கப்பட்ட (பண்ணையாட்கள் போன்றவர்கள்) தொழிலாளர்கள் சராசரி ஓராண்டில் **281** நாட்கள் வேலை செய்தனர். இவ்விருவகைத் தொழிலாளர்களும் பிற துறைகளில் சராசரியாக 40 நாட்களும், 16 நாட்களும் முறையே வேலை செய்கின்றனர். விவசாயத் துறையில் ஆண்டு ஒன்றுக்குச் சராசரியாக 141 நாட்கள் பெண் தொழிலாளர்கள் வேலை செய்தனர். இவர்கள் நிரந்தரமாக வேலை செய்கிறார்கள் என்று கூறமுடியாது. பெண்களைத் தவிரப் பாரதம் முழுவதிலும் சிறுவர்களும் வேலைக்கு அமர்த்தப்படுகின்றனர். முக்கிய விவசாயப் பருவங்களில் உழைப்பு கிடைப்பருமையாக இருப்பதும், சிறுவர்களின் கூலி விகிதங்கள் குறைவாக இருப்பதும் முக்கிய காரணங்கள் ஆகும். ஓராண்டில் சிறுவர்கள் சராசரியாக **187** நாட்கள் வேலை செய்தனர்.

விவசாயத்துறையில் உள்ள தொழிலாளர்களின் வருமானம் மிகவும் குறைவாக உள்ளது. இது அவர்களின் அத்தியாவசியமான செலவுகளுக்குக்கூடப் போதுமானதாக இல்லை. விவசாயத் தொழிலாளர் குடும்பங்களின் வருமானம் ஆண்டு ஒன்றுக்கு ரூ. **437** ஆக உள்ளது (1956-57இல்). இதில் கிட்டத்தட்ட முக்கால் பகுதி, அதாவது 73% வருமானம் கூலியாகப் பெறப்படுகிறது. நிலத்தைச் சாகுபடி செய்வதால் அவர்களுக்கு **69%** வருமானமும், இதரதுறைகளில் வேலை செய்வதால் **8%** வருமானமும், இன்னும் பிறவழிகளில் 12·1% வருமானமும் கிடைக்கின்றன. ஒவ்வொரு விவசாயத் தொழிலாளர் குடும்பமும் சராசரியாக ரூ. 617-ஐ ஆண்டுதோறும் செலவிடுகின்றனர். ஒரு குடும்பத்தினர் சராசரியாக ஆண்டுதோறும் தங்கள் வருமானத்தைவிடக் கூடுதலாக ரூ. **180** செலவிடுகின்றனர். துண்டுவிழும் தொகையை அவர்கள் வருமானத்தின் விகிதமாக்கிக் கூறுவோமானால் அது சுமார் **41·2%** ஆக இருக்கும். விவசாயத் தொழிலாளர்கள் ஒவ்வொரு மாநிலத்திலும் தங்கள் வருமானத்தைக்கொண்டு காலம் தள்ள முடியாமல் கடன் வாங்குகின்றனர் என்று அறியலாம். ஒவ்வொரு குடும்பமும் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 88 வீதம் கடன் வாங்குவதாகக் கூறுகிறார்கள். இதே விகிதத்தில் மொத்த விவசாயத் தொழிலாளர் குடும்பங்களின் கடன் தொகை சுமார் ரூ. **143**

கோடியாகக் கணித்துள்ளார்கள். விவசாயத் தொழிலாளர்கள் தங்கள் உடைமைகளை விற்றும், முந்தைய சேமிப்புகளைச் செலவு செய்தும் துண்டுவிழும் தொகையில் 90%-த்தை ஈடு செய்கின்றனர்.

பாரதத்தின் தலா வருமானத்தை விடக் கிராம மக்களின் தலா வருமானம் மிகக் குறைவாக உள்ளது. அதிலும் முக்கிய மாக விவசாயத் தொழிலாளர்களின் சராசரி ஆண்டு வரு மானம் மிகமிகக் குறைவு. (பார்க்கவும்: அட்டவணை **11.7**)

*1950-51*இல் விவசாயத் தொழிலாளர்கள் பாரதமக்கள் தொகையில் 23% ஆக இருந்தனர். நகர்வாழ் மக்களின் தலா வருமானம் நாட்டின் சராசரி வருமானத்தைப் போல இருமடங்கிற்கும் அதிகமாக உள்ளது. கிராமவாசிகளில் விவசாயத்தில் ஈடுபடாதவர்கள், சாகுபடியாளர்கள் ஆகியோரின் சராசரி வருமானம் நாட்டின் சராசரி வருமானத்தில் 93% ஆக உள்ளது. ஆனால், விவசாயத் தொழிலாளர்களின் வருமானம் நாட்டின் தலா வருமானத்தில் **38%** ஆக உள்ளது. இப்பிரிவு மக்கள்தான் பாரதத்திலேயே மிகக் குறைந்த வருமானத்தை ஈட்டுகின்றனர். விவசாயத் தொழிலாளர்கள் பாரத சமூக அமைப்பில் மிகவும் தாழ்த்தப்பட்ட நிலையில் உள்ளனர் என் பதை டாக்டர் சீதாராமையா[14] பின்வருமாறு விளக்கி யுள்ளார்:

''அரசாங்கத்திற்கும் நிலத்தை உண்மையாகச் சாகுபடி செய்பவர்களுக்கும் நடுவே பல இடைநிலையாளர்கள் தோன்றிவிட்டனர். உண்மையில் விவசாயத் தொழி லாளர்கள்தான் முக்கிய சாகுபடி வேலைகளைச் செய் கின்றனர். இவர்கள் நாள் முழுவதும் நிலத்தில்-அதாவது சேற்றிலும், சகதியிலும் பாடுபடுகின்றனர். புயல் அடித் தாலும், வெய்யில் காய்ந்தாலும், பசியாறினாலும், பட்டினி கிடந்தாலும் இவர்கள் ஓய்வின்றிப் பணியாற்றுகின்றனர். இவர்கள் வசிப்பதற்கென்று சொந்த இடம் ஏதுமில்லை. இவர்கள் நமக்காக உணவு உற்பத்தி செய்கிறார்கள். ஆனால், இவர்களுக்குப் போதிய உணவு கிடைப்பதில்லை. நமக்குப் பால் கொடுக்கும் கறவைப் பசுக்களை இவர்கள் வளர்த்தபோதிலும், இவர்கள் கஞ்சியையும் நீரையும்தான் அருந்துகின்றனர். இவர்களது உழைப்பால் நமது தானியக்

[14] இவர் 1940இல் இரண்டாவது விவசாயத் தொழிலாளர் மாநாட்டில் தலைமை உரை வழங்கினார். Quoted by C. B. Memoria, ibid, p. 367.

அட்டவணை 11·7

### 1950–51இல் நகரங்களிலும் கிராமங்களிலும் வாழ்ந்த பல பிரிவு மக்களும், அவர்களின் வருமான விகிதங்களும்[13]

| | வகைபாடு | பாரத மக்கள்தொகையின் விகிதம் | இவர்களின் சராசரி வருமானத்தைப் பாரததலாவருமானத்தின் சதவீதமாக |
|---|---|---|---|
| 1. | நகர மக்கள் | 17 | 209 |
| 2. | கிராம மக்கள் | 83 | 77 |
| | இவர்களில்— | | |
| | (a) விவசாயத்தில் ஈடுபடாதவர்கள் | 16 | 93 |
| | (b) விவசாயிகள் | 67 | 74 |
| | இவர்களில்— | | |
| | (க) சாகுபடியாளர்கள் | 44 | 93 |
| | (ங) தொழிலாளர்கள் | 23 | 38 |
| 3. | விவசாயத்தில் ஈடுபடாதவர்கள் — நகரங்களிலும் கிராமங்களிலும் | 33 | 153 |

களஞ்சியங்கள் நிரம்பிய போதிலும், இவர்கள் ஆண்டு முழுவதும் மற்றவர்களிடம் யாசித்து உணவு தானியத்தைப் பெறுகின்றனர். கிணறுகளையும், குளங்களையும் வெட்டு

[13] Source: A. J. Coale and E. M. Hoover: Population Growth and Economic Development In Low-Income Countries, Princeton, 1958, p. 133.

வதற்கு உழைக்கின்றனர். ஆனால், அவை நீர் நிரம்பிய காலங்களில் அவற்றிலிருந்து நீர் எடுப்பதற்கு இவர்களை யாரும் அனுமதிப்பதில்லை. இவ்வாறு மற்றவர்களுக்குத் தொண்டு ஆற்றுவதிலேயே இவர்கள் காலத்தைக் கழிக்கின்றனர். உழைப்பவர்கள் எலும்பும் தோலுமாக உள்ள அதே நேரத்தில், இவர்களது உழைப்பை உறிஞ்சி வாழ்பவர்கள் செல்வத்திலும், செழுமையிலும் கொழிக்கின்றனர்.''

விவசாயத் தொழிலாளர்கள் சுரண்டப்படுகின்றனர் என்ற கருத்தைச் சீதாராமையா தெளிவுபடுத்தியிருக்கிறார். ஆனால், அதன் பின்னர் (முப்பது ஆண்டுகளுக்குப் பின்னர்) தீண்டாமையும், சுரண்டலும் ஓரளவுக்கு அகற்றப்பட்டன என்றாலும், அவர்களின் வருமான மட்டம் மிகக்குறைந்த அளவிலேயே இருந்து வருகிறது. இவர்களின் வாழ்க்கைத்தரம் வருந்தத்தக்க நிலையில் உள்ளது. இலட்சக்கணக்கான மக்கள் இவ்வாறு குறைந்த வருமான மட்டத்தில் இருக்கின்றனர். இவர்களை மேம்படுத்துதல், உயர் வருமானம் ஈட்டுமாறு செய்தல் மிகப் பெரும் பொருளாதாரப் பிரச்சினையாக இருக்கும்.

கிராம முன்னேற்றத்தை ஏற்படுத்தும் திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட போதிலும் சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட நிலையில் உள்ள விவசாயத் தொழிலாளர்கள் தொடர்ந்து பிற்போக்கான நிலைமையிலேயே இருந்து வருகின்றனர். கிராம அமைப்பில் உள்ள பொருளாதார, சமூக ஏற்றத் தாழ்வுகள் இதற்கு முக்கியத் தடையாக உள்ளன, ஆகையால் விவசாயத் தொழிலாளர்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்குச் சிறப்பான முயற்சிகள் அவசியமாக இருக்கின்றன.

விவசாயத் தொழிலாளர்களின் வருமானத்தைச் சீர்ப்படுத்தும் நோக்கத்துடன் சில மாநிலங்களில், 1948இல் குறைந்த அளவு கூலி விகிதங்கள் நிர்ணயிக்கப்பட்டன. ஆனால், இதை நிறைவேற்றுவது எளிதாக இல்லை. விவசாயத் தொழிலாளர்களின் தேவையைவிட அளிப்பு அதிகமாக இருப்பதால் குறைந்த அளவு கூலி விகிதங்களை அமுலாக்குவது கடினமாக உள்ளது. தவிரவும் இவர்களின் கூலி விகிதங்களை இறுதிநிலை உற்பத்தித்திறனுடன் ஒப்பிட்டுக் கூறமுடியவில்லை. இவர்களின் உற்பத்தித்திறன் மிகவும் குறைவாக இருக்கின்றது.

விவசாயத் தொழிலாளர்களின் முக்கியப் பிரச்சினை இவர்களுக்கு நிலம் கிடைக்கும்படி செய்வதோ, கூலி விகிதங்களை

நிர்ணயிப்பதோ அல்ல. இவர்கள் ஒவ்வொரு ஆண்டிலும் குறிப்பிடத்தக்க அளவுக்குக் கணிசமான நாட்கள் வேலையற்று, வருமான வாய்ப்பு இல்லாமல் இருக்கின்றனர் என்பதுதான் முக்கியப் பிரச்சினையாகும். ஆகையால் கிராம வளர்ச்சியில் முக்கியமாகக் கிராம மக்களின் வேலை வாய்ப்பு வசதிகளை மேலும் அதிகரிக்க வேண்டும். வேலையின்மை கிராமங்களிலிருந்து என்றைக்கு முற்றிலும் அகற்றப்படுகிறதோ அன்றைக்குத்தான் விவசாயத் தொழிலாளர் பிரச்சினைகளுக்கும் தீர்வு ஏற்பட்டதாக நினைக்கமுடியும்.

### கிராமங்களில் வேலை அளிப்புத் திட்டங்கள்

ஐந்தாண்டுத் திட்டங்களின் முக்கிய நோக்கம் பொருளாதார வளர்ச்சியைத் துரிதமாகவும், சேதம் அல்லது விரயம் இல்லாமலும் ஏற்படுத்துவது ஆகும். மேற்படி திட்டங்கள் நாட்டில் உள்ள இயற்கை வளங்கள், மனிதசக்தி ஆகியவற்றை முழுமையாகப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு நாட்டிலும் கிடைக்கக்கூடிய உற்பத்திக் காரணிகளைச் சிறந்த முறையில் பயன்படுத்துவதன் மூலம் பொருளாதார வளர்ச்சியை நல இழப்புக்கள் அதிகமில்லாமல் ஏற்படுத்தலாம். இதே அடிப்படையில்தான் பாரதத்தில் மலிந்து கிடைக்கும் மனித சக்தியை ஆக்க வேலைக்குப் பயன்படுத்த வேண்டும் என்று சொல்லுகிறார்கள். மிகையாக உள்ள உற்பத்திக் காரணிகளை உற்பத்தி நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்துவதால் சமூக ஆக்கச் செலவு குறைக்கப்படுகிறது. அதைத்தவிர படிப்படியாகத் தொழிலாளர்களின் உற்பத்தித்திறனை உயர்த்துவதற்கு வேலைவாய்ப்பும், வருமான வாய்ப்புகளும் ஆரம்பநிலையில் காரணமாக இருக்கின்றன. ஏழ்மை மிகவும் தீவிரமாக உள்ள சூழ்நிலையில் வருமானத்தின் சார்பாகவே உற்பத்தித்திறன் அமைந்திருக்கும். ஓரளவு மக்களின் அத்தியாவசிய விருப்பங்களை நிறைவேற்றக் கூடிய வருமான மட்டத்தை அடைந்த பின்னர், உற்பத்தித்திறனின் சார்பாக வருமானம் செயல்படக்கூடும். பாரதத்தைப் பொறுத்தவரை—சிறப்பாக விவசாயத் தொழிலாளர்களைப் பொறுத்தவரை—வருமான வாய்ப்புகளை முதலில் தோற்றுவித்தாலன்றி உற்பத்தித்திறனை நீண்ட கால ரீதியில் உயர்த்துவது இயலாத காரியம்.

வாளாவிருக்கும் தொழிலாளர்களைப் பயன்படுத்துவதும், தொழிலாளர்களின் உற்பத்தித்திறனை உயர்த்துவதும் தனித்தனியான பிரச்சினைகள் அல்ல. இவை இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ள பிரச்சினைகள் ஆகும். உற்பத்திச்

சாதனங்களை அதிகரிப்பதற்கும், சமூகத்தின் மூலதனத்தைப் பெருக்குவதற்கும் வேலையற்றிருக்கும் மக்களின் சக்தியைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று சிலர் கூறுகின்றனர். இவ்வாறு புதிய வேலை வாய்ப்பின் மூலம் மூலதன ஆக்கத்தை ஏற்படுத்த வேண்டுமானால் தொழிலாளர்களின் உற்பத்தித் திறனை உயர்த்துவதும், அவர்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களில் உற்பத்தியை அதிகரிப்பதும் முக்கியமானவையாகும். பொருளாதார நிலை பேருக்கம் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டுமானால், உணவுதானிய உற்பத்தி போதுமான அளவுக்கு அதிகரிக்க வேண்டியது அவசியம். இந்த அடிப்படையில்தான் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் வேலைவாய்ப்பை அதிகரிக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

வேலை வாய்ப்பை உயர்த்துவதற்குப் பின்வரும் நெறிமுறைகள் வற்புறுத்தப்பட்டன. கூடியவரை வேலையற்று இருப்போரைப் பயன்படுத்தவேண்டும். அதே சமயம் தொகு அளவில் பணவருமானம் உயர்ந்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். உற்பத்தித்திறனை அதிகரிக்க வேண்டும். இந்த நோக்கத்திற்காகத் தொழில் நுட்பமட்டத்தையும், முதலீட்டையும் அதிகரிக்கலாம். அவ்வாறு தொழில் நுட்பத்தில் ஏற்படும் முன்னேற்றங்கள் காரணமாக நுட்பரீதியான வேலையின்மை ஏற்படாமல் இருக்கவேண்டும்.

விவசாயத் துறையில் மிகவும் அதிகமான மக்கள் முன்னதாகவே ஈடுபட்டிருந்தார்கள். இந்நிலை ஒருநாட்டின் பொருளாதார பிற்போக்கான நிலையைச் சுட்டிக்காட்டும் குறியீட்டு எண்ணாகக் கருதப்படுகிறது. விவசாயத்தை முற்றிலும் நம்பியிருக்கும் மக்களை நாட்டின் மொத்த மக்கள்தொகையின் விழுக்காடாகக் கருதுவோமானால், மேற்படி விகிதம் குறைந்து செல்வதைப் பொருளாதார வளர்ச்சியின் அறிகுறியாக எடுத்துக் கொள்ளலாம். ஆகையால்தான் விவசாயத்துறையில் மேலும் அதிகமான மக்கள் ஈடுபடுவதைத் தடுக்கவேண்டும் என்று முதல் திட்டத்தில் கூறியுள்ளது. திட்ட காலத்தில் பெருகும் தொழிலாளர் அளிப்பை இதர துறைகளில் பயன்படுத்தவேண்டும். கிட்டத்தட்ட இதே கொள்கை இரண்டாவது திட்டத்திலும் வற்புறுத்தப்பட்டது. விவசாயத்தில் ஈடுபடும் மக்கள் தொகையைக் குறிப்பிட்ட அளவில் நிலைபெறச் செய்ய முடியவில்லை என்றால், மேற்கொண்டு விவசாயத்துறையில் ஈடுபடும் மக்கள்தொகை மிகக்குறைந்த அளவிற்கே அதிகரிக்க வேண்டும். நிலத்துடன் நேரிடையாகத் தொடர்பு கொண்

டிருப்பவர்களின் விகிதத்தைக் குறைக்கவேண்டும் என்பது நீண்டகால நோக்கமாகும். 1975–76இல் சுமார் **60%** மக்கள் மட்டுமே விவசாயத்தை நம்பியிருப்பார்கள் என்று எதிர்பார்க்கின்றனர்.

முதல் இரு ஐந்தாண்டுத் திட்டங்களில் விவசாயத் துறையில் கணிசமான முதலீடுகள் செய்யப்பட்டுள்ளன. பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இதனால் புதிய வேலை வாய்ப்புகள் அதிகரித்துள்ளன என்றாலும் கிராமங்களில் வேலை நிலை எந்த அளவுக்கு அதிகரித்துள்ளது என்று திட்டவட்டமாகக் கூற முடியவில்லை. கரந்துறை (தோன்றாத) வேலையின்மை எந்த அளவுக்கு அகற்றப்பட்டது என்று கூற முடியவில்லை. இருந்தபோதிலும் தோராயமான மதிப்பீடுகளின் அடிப்படையில், இரண்டாவது திட்டத் துவக்கத்தில் சுமார் **25** இலட்சம் மக்கள் நகரங்களிலும், **28** இலட்சம் மக்கள் கிராமங்களிலும் வேலையின்றி இருந்தனர். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் வளரும் மக்கள்தொகை காரணமாகச் சுமார் **100** இலட்சம் (ஒரு கோடி) மக்கள் புதிதாக வேலை தேடி வந்தனர். இவர்களில் 38 இலட்சம் பேர் நகரங்களுக்கும், 62 இலட்சம் பேர் கிராமங்களுக்கும் வேலை நாடிச் செல்வார்கள் என்றும், இரண்டாவது திட்டத்தில் விவசாயம் நீங்கலாக உள்ள துறைகளில் சுமார் **80** இலட்சம் மக்களுக்கு வேலைவாய்ப்பை ஏற்படுத்த முடியும் என்றும் நம்பினார்கள். ஆனால், நடைமுறையில் **65** இலட்சம் மக்களுக்கு மட்டுமே விவசாயம் தவிர உள்ள துறைகளில் வேலை தேடித்தர முடிந்தது.

இரண்டாவது திட்டம் துவங்கும் முன்னர் உள்ளவர்களை விட அத்திட்டம் முடியும் தறுவாயில் அதிகமானவர்கள் வேலையற்று இருந்தார்கள். ஆனால், எந்தப் பகுதியில் எவ்வளவு பேர் வேலையின்றி இருந்தார்கள் என்ற கூற முடியவில்லை. வேலையற்றோர் தொகை கிராமங்களிலும், நகரங்களிலும் எந்த அளவுக்கு அதிகரித்துள்ளது என்பதை அளந்து பார்ப்பதும் கடினமாக உள்ளது. கிராமங்களில் வேலையின்மை வெளிப்படையாகத் தோன்றுவதில்லை. வேலையற்றவர்களைத் தனித்துப் பிரித்துக் கூற இயலாத அளவிற்குக் கரந்துறை வேலையின்மை வளர்ந்து விட்டது. இதனால் விவசாயத் துறையில் ஏற்பட்ட முன்னேற்றத்தைத் தெளிவாக அளந்து காட்ட முடியவில்லை. முக்கியமாக உற்பத்தித்திறனில் ஏற்பட்ட வளர்ச்சியை வெளிப்படையாக அறிய முடியாத அளவிற்கு விவசாயத்தில் உள்ள உபரியான மக்கள்தொகை தடுத்துவிடுகிறது.

முதல் இருதிட்டங்களிலும் புதிய வேலை வாய்ப்புகளை அதிகரிக்கும் நடவடிக்கைகள் அதிகமாக இருந்தன. முதலீடும், உற்பத்தியும் உயர்ந்துள்ளன. இருந்தபோதிலும் வேலையின்மை என்ற பிரச்சினையின் கடுமை சிறிதும் குறையவில்லை. மூன்றுவது திட்டகாலத்தில் கூடுதலாகச் சுமார் 170 இலட்சம் மக்கள் வேலைதேடி வரக்கூடும் என்று எதிர்பார்த்தார்கள். மூன்றுவது திட்டம் துவங்கும் முன்னதாகச் சுமார் **90** இலட்சம் மக்கள் வேலையின்றி இருந்தார்கள். (இதன் விவரம் பின் வருமாறு: முதல் திட்ட இறுதியில் சுமார் **53** இலட்சம் மக்கள் வேலையின்றி இருந்தார்கள். திட்ட காலத்தில் எதிர்பார்த்ததை விட அதிகமாக மக்கள்தொகை வளர்ச்சி அடைந்தது. இதனுல் கூடுதலாக வேலைதேடி வந்தவர்கள் சுமார் 17 இலட்சம் மக்கள். இரண்டாவது திட்டத்தில் உண்மையில் அதிகரித்த வேலை வாய்ப்பு திட்ட இலக்கைவிட சுமார் **20** இலட்சம் குறைவாக உள்ளது. எனவே, மூன்றுவது திட்ட ஆரம்பத்தில் [53+17+20] சுமார் **90** இலட்சம் மக்கள் வேலையற்று இருந்தனர்.) மூன்றுவது திட்டகாலத்தில் 35 இலட்சம் மக்களுக்கு விவசாயத்திலும், **105** இலட்சம் மக்களுக்கு இதர துறைகளிலும் வேலை வாய்ப்பு ஏற்படும் என்று எதிர்பார்த்தனர். இவை யாவும் செவ்வனே நிறைவேற்றப்பட்டாலும் மூன்றுவது திட்ட இறுதியில் **120** இலட்சம் மக்கள் வேலையற்று இருப்பார்கள் *(1966)*.

### கிராமங்களில் வேலைவாய்ப்புகள்

மூன்றுவது திட்டத்தின் ஒரு கூருகத் தீவிர சாகுபடித்திட்டம் உள்ளது. ஒவ்வொரு பயிருக்கும் ஒரு குறிப்பிட்ட மாவட்டம் அல்லது பகுதிகள் தீவிர சாகுபடிக்காகத் தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளன. இத்திட்டத்தில் கிராமங்களில் வேலைவாய்ப்பை அதிகரிக்கக்கூடிய வாய்ப்புகள் அதிகம். புதிய விவசாய நுட்பங்கள், தேர்ந்த விதைகள், அதிக அளவு உரம், பயிர் பாதுகாப்பு, மண்வளப் பாதுகாப்பு, புதிய பாசன வசதிகள் முதலியன கிராமிய வேலைவாய்ப்பை அதிகரிக்கும். கரை எழுப்புதல், புதிய கால்வாய் தோண்டுதல், கட்டட வேலைகள், சாலைபோடுதல் முதலியன முக்கியமானவை. ஜப்பானிய சாகுபடி முறையும், தீவிரசாகுபடி முறையும் உழைப்பு செறிந்த சாகுபடி முறைகளாக உள்ளன. இதனுல் வேலைவாய்ப்பு கட்டாயமாக உயரும். இதற்கு முன்னர் குறைவேலைசெய்தவர்கள் இத்திட்டங்களினுல் முழுநேரம் வேலைசெய்பவர்களாகவும், இதற்கு முன்னர் வேலையின்றியிருந்தவர்கள் குறைவேலை செய்பவர்களாகவும் மாறக்கூடும்.

### கிராமத்தொழில்களும் சிறுதொழில்களும்

மிக அதிகமக்கள் விவசாயத்தைச் சார்ந்து இருப்பதால் புதிய வேலைவாய்ப்புகள் தோன்றுவதில்லை. வேலை வாய்ப்பைப் பெருக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு சிறு கிராமத் தொழில்களின் வளர்ச்சி வலியுறுத்தப்படுகின்றது. 1956 தொழிற் கொள்கை தீர்மானம் இக்கருத்தைத் தெளிவுபடுத்தியது. சிறு தொழில்களும், கிராமத்தொழில்களும் அதிக வேலை வாய்ப்புகளைத் தோற்றுவிக்ககூடியவை. இதை உடனடியாக ஏற்படுத்துவதுடன், மேற்படி வேலை வாய்ப்புகள் நிரந்தரமாக இருக்கவும் கூடும். நுகர்வுப் பொருள்களின் தேவையை இத்துறைகள் பூர்த்தி செய்ய வேண்டும். ஆங்காங்கே வட்டார அடிப்படையில் கிடைக்கக் கூடிய திறன், உழைப்பு, மூலதனம், நிலம் முதலியவுற்றை இவை அதிகமாகப் பயன்படுத்த வேண்டும். சிறு கிராமத் தொழில்கள் நகரங்களில் உள்ள பேரளவுத் தொழில்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. பாரதத்தின் நீண்டகாலப் பொருளாதார வளர்ச்சியைக் கருதுவோமானல் சிறுதொழில்களும், பேரளவுத் தொழில்களும் போட்டியாகச் செயல்படவில்லை என்று தெரிந்து கொள்ளலாம். அவ்வாறு போட்டியிடுவதாகக் கூறுபவர்கள் பொருளாதாரத் தேக்கநிலை எதிர்காலத்திலும் நீடிக்கும் என்று நம்புகின்றனர். பேரளவுத் தொழில்களும், சிறு தொழில்களும் தொழில்நுட்ப அடிப்படையைக்கொண்டு தனித்தனியாக இயங்குகின்றன. சிக்கலான நுண்முறைகள், பகுத்தல் இல்லாத உற்பத்தி நுட்பங்கள், புறச்சிக்கன நலன்கள், அளவைச் சிக்கன நலன்கள், குறைந்து செல் ஆக்கச் செலவு முதலியன பேரளவுத் தொழில்களுக்கு அடிப்படையாக உள்ளன. சிறுதொழில்கள் எளிய நுண்முறைகளைக் கையாளுகின்றன. உழைப்புச் செறிந்த முறையில் தயாரிக்கப்படும் பொருள்கள் மூலதனம் செறிந்த முறையில் தயாரிக்கப்படும் பொருள்களைவிட நேர்த்தியான தரமுடையவையாக இருக்குமேயானல் அவை சிறுதொழில் துறைகளில் உற்பத்தி செய்யப்படும். பேரளவுத்தொழில்களுக்குத் தேவையான சாதனங்கள், சிறுபகுதிகள் தயாரிக்கும் பணியில் சிறுதொழில்கள் இலாபகரமாக ஈடுபடமுடியும்.

### கிராமப் பணித்திட்டம்

கிராமமக்களிடம் உள்ள சாதனங்கள், வசதிகள் அனைத்தையும் பயன்படுத்திக்கொண்டு கிராம வளர்ச்சிக்கு அவசியமான மூலதன ஆக்கத்தை ஏற்படுத்துவது சமுதாய நலத் திட்டங்களின் முக்கிய நோக்கமாகும். வெளிப்படையாக

உருவாக்கப்படும் மூலதன ஆக்கத்தைவிட உள்ளூருக மக்களின் மனத்தில் தோன்றும் ஆர்வமும், நம்பிக்கையும் முக்கியமானவை. தகுந்தமுறையில் அமைப்புகளை ஏற்படுத்தி முயலுவதன் வாயிலாகப் பொருளாதார முன்னேற்றத்தை ஏற் படுத்த முடியும் என்ற தன்னம்பிக்கை வளர்ச்சிக்கு ஆணி வேராக உள்ளது. நம்பிக்கை மனப்பான்மையைத் தோற்று விக்கும் சாதனங்களாகச் சமுதாய நலத்திட்டங்களைக் கருத வேண்டும்.

கிராமங்களில் ஏற்படுத்தக்கூடிய மூலதன ஆக்க நடவடிக் கைகள் யாவை என்பதைக் காண்போம். வெள்ளத் தடுப்பு நடவடிக்கைகள், பாசன—வடிகால் வசதிகளை ஏற்படுத்துதல், காடுகளை அமைத்தல், மண்வளம் காத்தல், சாலை அமைத்தல், கரை எழுப்புதல், கரைகளைப் பராமரித்தல், வாய்க்கால் வெட்டுதல், புதுப்பித்தல், நிலத்தைச் சமன்செய்தல், கிணறு கள் வெட்டுதல், குளம்-ஏரி முதலியன தோண்டுதல், அவற்றைச் செப்பனிடுதல், புன்செய்ச் சாகுபடி வேலைகள், நிலத்தை ஒருங்கு இணைத்தல் முதலியன மூலதன ஆக்க நடவடிக்கைகள் ஆகும். இயன்றவரை இத்திட்டங்களுக்குக் கிராமமக்களையும், அவர்களிடம் உள்ள சாதனங்களையும் பயன் படுத்தவேண்டும். ஆகையால் மேற்படி திட்டங்களுக்கான முழுப்பொறுப்பையும் அரசாங்கம் ஏற்பதில்லை. இதில் குறைந்தது 50% செலவுத்தொகையை உழைப்பாகவோ, பணமாகவோ, இதர சாதனங்களாகவோ கொடுக்கவேண்டும். புதிய திட்டங்களைக் கிராமமக்களே தயாரித்து அதை நிறை வேற்றுவதில் அவர்கள் பெருமை கொள்ள வேண்டும் என்பதற் காக மேற்படி நிபந்தனைகள் விதிக்கப்பட்டன.

கிராமிய வளர்ச்சிக்கான சமுதாய நலத்திட்டங்கள் கிராம மக்களின் சிரமதானத்தை (உழைப்புதானத்தை) முக்கியமாகக் கொண்டிருந்தன. சமுதாய நலத்திட்டங்களை மதிப்பீடு செய்த அமைப்பு **399** கிராமங்களைச் சர்வே செய்தது. இதில் சுமார் 73% கிராமங்கள் உழைப்பைத் தானமாகக் கொடுத்துள்ளன. மக்களின் உழைப்பைத் தனியாக அளவிட்டுக் கூறவில்லை என்றாலும், மக்கள் ரொக்கமாகவும், சாதனங்களாகவும், உழைப்பாகவும் கொடுத்த தொகை முதல் இரு ஐந்தாண்டுத் திட்டங்களுக்கும் கிடைத்துள்ளன. முதல் திட்டத்தில் ரூ. 25 கோடியும், இரண்டாவது திட்டத்தில் ரூ. 77 கோடியும் மக்கள் கொடுத்துள்ளனர்.

சமுதாய நலத்திட்டங்களை அவ்வப்போது ஆராய்ந்த கமிட்டிகளும் குழுக்களும் திறனாய்வு செய்த கருத்துகளும் பரிந்துரைகளும் புதிய திட்டங்கள் உருவாவதற்கு அடிப்படையாக இருந்தன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கிராமப் பணித்திட்டம் இந்த அடிப்படையில்தான் உருவாக்கப்பட்டது. 1960-62இல் 32 சோதனைத் திட்டங்களுடன் கிராமப்பணித் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது. அநேகமாக ஒவ்வொரு மாநிலத்திலும் 2 அல்லது 3 சோதனைத்திட்டங்கள் வீதம் இவை ஏற்படுத்தப்பட்டன. இதில் பாசன வேலைகள், காடுவளர்த்தல், மண்வளம் காத்தல், வடிகால் அமைத்தல், நிலத்தைச் சாகுபடிக்கு ஏற்றதாகச் செய்தல், போக்குவரத்து, செய்தித் தொடர்பு முதலியன இடம் பெற்றன. இச் சோதனைத் திட்டங்களையும் அவற்றின் வெற்றி தோல்வியையும் ஆராய்ந்து புதிய பகுதிகளில் மேலும் விரிவுபடுத்தப்படும். இதற்காக மூன்றாவது திட்டத்தில் ரூ. 150 கோடி ஒதுக்கப்பட்டது.

1971–72 வரவு செலவுத் திட்டத்தில் கிராமிய வேலை வாய்ப்பை அதிகரிப்பதற்காக ரூ. **150** கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

# 12. கூட்டுறவு

பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கும் சக்திகளில் தனி நபர்களின் ஆற்றலும், திறனும் எந்த அளவிற்கு முக்கியமாக இருக்கின்றனவோ அந்த அளவிற்கு அமைப்புக் காரணிகளும் முக்கியமாக இருக்கின்றன. கூட்டுறவு சங்கங்கள் முக்கியமான பொருளாதார அமைப்புகளாக இருக்கின்றன. இவை எந்த அளவிற்கு நாட்டின் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவித்து உள்ளன அல்லது ஊக்குவிக்கக் கூடும் என்பதை ஆராய வேண்டும். கூட்டுறவுத் துறைத் தத்துவத்தை முதற்கண் தெரிந்து கொண்டாலன்றி கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி, அதன் முக்கியத்துவம் ஆகியவற்றை முழுமையாகத் தெரிந்து கொள்ளுதல் இயலாது.

### கூட்டுறவுத் தத்துவம்

மக்கள் தங்களுடைய பொதுவான விருப்பங்களைத் தனித் தனியாக (பாடுபடுவதால்) நிறைவேற்றிக் கொள்ள இயலவில்லை என்பதை உணர்ந்து தன் விருப்ப அடிப்படையில் கூட்டாகச் சேர்ந்து தங்களுடைய பொதுவான நலன்களை ஜனநாயக முறையில் மேம்படுத்திக்கொள்ளும் முறையையே கூட்டுறவு என்று கூறுகிறோம்.

பொதுவான நலன்களைப் பாதுகாக்கவும், மேம்படுத்தவும் பல அமைப்புகள் உள்ளன. காட்டாக, மேலைநாடுகளில் காணப்படும் நண்பர்கள் சங்கம், தொழிலாளர் சங்கம் முதலியன குறிப்பிட்ட நலன்களைப் பாதுகாக்கவும், வளர்க்கவும் செய்கின்றன. ஆனால், இவற்றைக் கூட்டுறவு சங்கங்கள் என்று அழைக்க முடியாது. மேற்படி சங்கங்கள் நேரிடையாகக் குறிப்பிடத்தக்க தொழில்களைச் செய்யவில்லை. நண்பர்களின் சங்கம் சேமிப்பை வளர்க்க உதவுகின்றது. எதிர்

பாராத விதமாக ஏற்படும் பணத்தேவையைப் பூர்த்தி செய்வதை இவை முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளன. காட்டாக, மரணம், நோய், விபத்து முதலியவற்றால் பாதிக்கப்பட்டவர்களுக்கு இவை உதவி செய்கின்றன.

தொழிலாளர்களின் அரசியல், சமூக, பொருளாதார நலன்களைப் பாதுகாக்கும் முக்கிய நோக்கத்தோடு தொழிலாளர்கள் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவற்றின் குறுகியகால நோக்கங்கள் ஓரளவிற்குத் தொழிலதிபர்களின் நோக்கங்களுக்குப் போட்டியாக இருக்கின்றன. ஆகையால் சில சமயங்களில் காழ்ப்பு உணர்ச்சியும், பகைமையும் தோன்றக் காரணமாக இருக்கின்றன.

மேலே கூறிய நண்பர்கள் சங்கங்களும், தொழிலாளர் சங்கங்களும் குறிப்பிட்ட தொழில்களை நேரிடையாகச் செய்யாத காரணத்தால் கூட்டுறவு அமைப்பிலிருந்து வேறுபடுகின்றன. குறிப்பிட்ட தொழிலில் ஈடுபட்டுள்ள அமைப்புகளில் **கூட்டுப் பங்கு நிறுவனம்** முக்கியமானது. இது கூட்டுறவுச் சங்கத்தினின்றும் வேறுபட்டது. கூட்டுப்பங்கு நிறுவனம் மூலதனத்தின் இணைப்பாக்கமாக உள்ளது. இது தனிநபர்களின் கூட்டு ஆக்கமாக இல்லை. இவ்விரு அமைப்புகளிலும் வாக்குரிமை எந்த அடிப்படையில் வழங்கப்படுகின்றது என்பதைக் கொண்டு இதைப் புரிந்து கொள்ளலாம். கூட்டுப்பங்கு நிறுவனத்தில் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தின் அடிப்படையில் வாக்கு உரிமை நிர்ணயிக்கப்படுகிறது. ஆனால், கூட்டுறவு அமைப்பில் ஒவ்வொரு உறுப்பினருக்கும் ஒரு வாக்கு வீதம் கொடுக்கப்படுகிறது. உறுப்பினர்கள்—செல்வந்தர்களாக இருந்தாலும், ஏழைகளாக இருந்தாலும்—அனைவருக்கும் சம அளவு முக்கியத்துவம் (கூட்டுறவு அமைப்பில்) கொடுக்கப்படுகிறது. கூட்டுப்பங்கு நிறுவனத்தில் மூலதனம் முக்கியமாக இருப்பதால் இலாப விழுக்காட்டிற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஆனால், கூட்டுறவு அமைப்பில் உறுப்பினர்களின் நலன்கள் அதிக அளவுக்கு வலியுறுத்தப்படுகின்றன. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஆற்றலுக்கு ஏற்ற பணிகளைச் செய்து அதன் பலன்களை எல்லோரும் பங்கிட்டுக் கொள்ளுகின்றனர்.

கூட்டுறவு அமைப்பில் தனிநபர்களின் உரிமைகள் மறுக்கப்படுவதில்லை. முக்கியமாக எளிய மக்களின் உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன. ஒரு அமைப்பின் கூட்டு ஆற்றல் அல்லது வலிமை அதன் உறுப்பினர்கள் ஒவ்வொருவரின்

ஆற்றல் அல்லது வலிமையின் கூட்டுத்தொகையைவிட அதிக மாக இருக்கும். ஆகையால்தான் அமைப்பை ஒரு உற்பத்திக் காரணி என்று கூறுகிறோம். கூட்டுறவு சங்கம் ஒரு அமைப் பாக இருப்பதால், மிக எளிய மக்கள் கூட்டாக இணைந்து செயல்படுவதால் கூடுதலான வலிமையைப் பெறுகிறார்கள்.

முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் போட்டி வற்புறுத்தப்படுகிறது. இந்தப் பொருளாதாரப் போட்டியில் அமைப்புடையவர்கள் ஆதாயம் அடைகிறார்கள்; அமைப்பு ஏதுமில்லாதவர்கள் பலவித இன்னல்களுக்கும், இழப்பு களுக்கும் உள்ளாக்கப்படுகிறார்கள். அமைப்பு உடைய மக்கள் தங்கள் நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளமுடியாது; அமைப்பு இல்லாதவர்கள் சுரண்டப்படுகிறார்கள். இதனால் செல்வ வரு மான ஏற்றத்தாழ்வுகள் மேலும் அதிகரிக்கின்றன.

ஏழை, எளியவர்கள் கூட்டுறவு அடிப்படையில் இணைந்து செயல்படுவார்களேயானால் மற்றவர்களின் சுரண்டல்களினின்று தங்களைக் காப்பாற்றிக் கொள்ளமுடியும். எனவே, ஏழைகளின் மேம்பாட்டிற்கான அமைப்பாகக் கூட்டுறவு செயல்படுகிறது. செல்வ, வருமான ஏற்றத்தாழ்வுகள் மலிந்துள்ள நாட்டில், முக்கியமாக வறியவர்கள் ஏழைமையின் அடித்தளத்தில் —பிழைப்பு மட்ட வருமானத்தைக் கூட ஈட்டமுடியாத நிலையில்—அவதிப்பட்டுக்கொண்டிருக்கும் சூழ்நிலையில், பெரும் பாலான மக்களின் பொருளாதார, சமூக நலன்களை மேம் படுத்தும் சஞ்சீவியாகக் கூட்டுறவு விளங்குகிறது.

முதலாளித்துவ அமைப்பின் பொருளாதார நோய்க்கு மருந்தாகக் கூட்டுறவு அமைப்பு விளங்குகிறதேயல்லாமல், சோஷலிஸக் கொள்கையின் விளக்கமாக இல்லை. கம்யூனிஸ நாடுகளில் செயல்படுத்தப்படும் சோஷலிஸக் கொள்கைகள் தனி யார் உடைமையை மறுத்தும், அரசு உடைமையை ஆதரித்தும் வருகின்றன. ஆனால், கூட்டுறவுத் தத்துவத்தில் தனிநபர் உடைமையும், உரிமையும் மறுக்கப்படவில்லை. இங்கு அரசு உடைமை வற்புறுத்தப்படவில்லை.

முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் குறைபாடுகள் உள்ளன என்பதை சோஷலிஸவாதிகளும், கூட்டுறவுவாதி களும் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். இக்குறைபாடுகளுக்குத் தனி நபர் சொத்து உரிமைதான் காரணம் என்றும், ஆகையால் தனியார் சொத்து உடைமையை முற்றிலும் பறிப்பதன் மூலம் மேற்படி குறைபாடுகளை அகற்ற முடியும் என்றும் சோஷலிஸ

வாதிகள் நினைக்கிறார்கள். ஆனால், கூட்டுறவுவாதிகள் அவ்வாறு நினைக்கவில்லை. முதலாளித்துவ முறையில் உள்ள குறை பாடுகளை அமைப்பு முறை மாற்றங்களினால் போக்கி விடலாம் என்றும், அதற்குக் கூட்டுறவு அமைப்பு போதுமானது என்றும் நினைக்கிறார்கள்.

## கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி

ஒவ்வொரு சமுதாயத்தையும் எதிர்நோக்குகின்ற பிரச்சினை கள், அவற்றின் தன்மை, தீவிரம் ஆகியவை வேறுபடு கின்றன. ஒரே சமுதாயத்திலும் காலத்திற்குக் காலம் பிரச்சினை கள் வேறுபடுகின்றன. இவ்வாறு தங்கள் தங்கள் பிரச்சினை களைத் தீர்த்துக்கொள்வதற்காக அமைப்புமுறைகள் தோற்று விக்கப்படுகின்றன. ஒவ்வொரு சமுதாயத்திலும் தோன்றக் கூடிய நிறுவனங்கள் அல்லது அமைப்பு முறைகள் அவை எதிர்நோக்கும் பிரச்சினைகளை மையமாகக் கொண்டுள்ளன. இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் இந்தியாவில் நிலவிய பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் நோக்கத்தோடு கூட்டுறவு அமைப்புகள் தோற்றுவிக்கப்பட்டன. கூட்டுறவு அமைப்பு களின் வளர்ச்சியை ஆராயும் முன்னர், அதன் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்த சூழ்நிலையை விளக்க வேண்டியது அவசியம்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் இந்தியர்களின் தலா வருமானம் குறைந்து சென்றது. அப்போது நில உரிமை களிலும், சாகுபடி உரிமைகளிலும் சுரண்டல் தன்மை உடைய வருமான வாய்ப்புகள் ஏற்பட்டன. சொத்துரிமையின் கட்டமைப்பில் விரும்பத்தகாத விளைவுகள் ஏற்பட்டதன் காரணமாக விவசாயத்தின் பொதுவான வளர்ச்சி தடை பட்டது. விவசாயிகள் கடன்பட்டனர். இவர்களின் கடன் சுமை நாளுக்குநாள் அதிகரித்துச் சென்றது. பணப்புழக்கம் அதிகம் இல்லாத ஒரு சமுதாயத்தில் நிலத்தீர்வையைப் பண மாகச் செலுத்துவது கடினமாக இருந்தது. ஆகையால் ரொக்கத் தொகையைக் கடனாக வாங்கினார்கள். காலநிலையின் ஏற்ற இறக்கங்களுடன் விவசாயிகளின் வருமானமும் மாறின. வருமானம் குறைந்துள்ள காலங்களில் பராமரிப்புச் செலவிற் காகவும் கடன் வாங்கினார்கள். சமூக விழாக்கள், பண்டிகை கள் கொண்டாடுவதற்கும் கடன் வாங்கினார்கள். மூதாதையர் விட்டுச் சென்ற கடன்களுக்காகவும், பழைய கடன் தொகைக்கு வட்டி செலுத்துவதற்காகவும் கடன் வாங்கினார் கள். முக்கியமாகத் தங்களிடம் உள்ள தானியத்தைப் பணமாக

மாற்றுவதில் உள்ள இன்னல்கள் காரணமாகப் பெரும்பாலான விவசாயிகள் கடன் வாங்கினர்கள். இவ்வாறு தோன்றிய கடன்களில் பெரும்பாலானவை உற்பத்தியை அதிகரிக்கவோ, நிலத்தின் உற்பத்தித்திறனை மேம்படுத்தவோ இல்லை. உற்பத்தி வாய்ப்புகள் உயர்ந்து செல்லாத காரணத்தால் கடன் தொகையைவிடக் கடன் சுமை அதிக வேகமாக உயர்ந்து சென்றது.

பிரிட்டிஷ் ஆட்சியில் முதல் முதலாக நிலம் பரிவர்த்தனைக்குரிய சொத்தாக மாறியது. அதைப் பயன்படுத்திக்கொண்டு விவசாயிகள் தங்கள் நிலத்தை அடைமானமாக வைத்துப் பண வணிகர்களிடம் கடன் வாங்கினர்கள். நிலம் சிறந்த ஈட்டுப் பொருளாக இருப்பதால் பண வணிகர்களும் கடன் கொடுக்க முன் வந்தனர். விவசாயிகளின் வருமான வாய்ப்புகள், முக்கியமாகப் பணத்தொகையை ஈட்டும் வாய்ப்புகள் குறைவாக இருந்ததால் அடைமானமாக வைக்கப்பட்ட நிலத்தை மீட்க முடியவில்லை. இதனுல் அடைமானமாக வைக்கப்பட்ட நிலம் யாவும் உடைமை மாற்றம் செய்யப்பட்டன. கடன் சுமை, நில உடைமை மாற்றம் ஆகியவற்ருல் பாதிக்கப்பட்ட விவசாயிகள் (சென்ற நூற்ருண்டில்) பல மாநிலங்களில் கிளர்ச்சி செய்துள்ளனர்.

ஏழ்மையின் காரணமாகக் கடன் வாங்கினர்கள் என்று கூறப்படும் வாதத்தைத் திருமதி வீரா அன்ஸ்டே மறுத்துள்ளார்.[1] கடன் தொகை என்பது மக்களின் 'வளமான வாழ்க்கை'யைப் பிரதிபலிக்கிறதே தவிர, வறுமையைப் பிரதிபலிக்கவில்லை என்று கூறுகிருர். உற்பத்தி வாய்ப்புகளை அதிகரிக்கவும், முதலீட்டிற்காகவும் கடன் வாங்கியிருப்பார்களேயானுல், வளமான வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் குறியீட்டு எண்ணுகக் கடன்தொகையைக் கருதலாம். மக்களின் வாழ்க்கைத் தரத்தை அளந்து அறிவதற்குத் தலா வருமானத்தை எடுத்துக் கொள்ளாமல், கடன்தொகையை ஏன் வீரா அன்ஸ்டே எடுத்துக்கொண்டார் என்று தெரியவில்லை. பதிவாகிய ஆதாரங்களிலிருந்து தலா வருமானம் சென்ற நூற்ருண்டின் இறுதியில் குறைந்து சென்றது என்று அறியலாம்.[2]

ஏழ்மையின் பிடிப்பில் இந்தியர்கள் அவதிப்பட்டனர் என்பதை வீரா அன்ஸ்டே உணர்ந்துள்ளார் என்ருலும்,

[1] பார்க்கவும் Vera Anstey - The Economic Development of India (1957) p. 187.

பிரிட்டிஷ் ஆட்சியின் காரணமாக இந்தியர்கள் வறியராக்கப் பட்டனர் என்பதை ஏற்க மறுக்கிருர். ஆகையால் ஏழ்மையின் காரணமாகக் கடன்தொகை உயரவில்லை என்றும், விவசாயிகள் கடன் வாங்கிய காரணத்தால் வறியராக்கப்பட்டனர் என்றும் கூறுகிருர்.[3]

பெரும்பாலான பேரங்கள் பண்டமாற்றுப் பேரங்களாக இருந்தன. பணப்புழக்கம் மிகவும் குறைவாக இருந்த காரணத் தால் கடன் வாங்குதல் எளிதாக இல்லே. அதிகவட்டியும், சுரண்டல் தன்மையுடைய நிபந்தனைகளும் விவசாயிகளைப் பெரிதும் பாதித்தன என்பது உண்மைதான். இருந்தபோதிலும் விவசாயிகளின் ஏழ்மைக்குப் பணவணிகர்கள் மட்டுமே பொறுப்பு ஏற்க வேண்டும் என்று கூறுவது உண்மையைத் திரித்துக் கூறுவதாகும். இதையும் வீரா அன்ஸ்டே உணராமல் இல்லே. மற்ற நாடுகளுடன் ஒப்பிடும்போது இந்திய விவசாயிகள் அதிக அளவிற்குக் கடன்பட்டிருக்கிருர்கள் என்று கூறமுடியாது. ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா ஆகிய நாடுகளில் விவசாயிகள்

[2] 1857 முதல் 1900 வரை தலா வருமானம் 1948-49 விலேயில் கணிக்கப் பட்டுள்ளது. ஆதாரம்: Economic History of India, 1857 - 1956. Edited By V. B. Singh, P. 689 - 90. Table XXI. (Allied) first edition.

| ஆண்டுகள் | தலா வருமானம் ரூ. |
|---|---|
| 1857 | 169 |
| 1867 — 68 | 169 |
| 1873 முதல் 79 வரை ஏழு ஆண்டு சராசரி | 179·14 |
| 1880 முதல் 1889 வரை 10 ஆண்டு சராசரி | 214·8 |
| 1890 முதல் 1899 வரை 10 ஆண்டு சராசரி | 201·6 |
| 1900 | 188 |

1857 முதல் 1870 வரை தலா வருமானம் மாருமல் உள்ளது. அதன்பின் 1873 முதல் 1889 வரை சராசரி தலா வருமானம் உயர்ந்து சென்றது. 1890 முதல் 1900 வரை இது வெகுவாகக் குறைந்து சென்றது.

[3] முன்கூறியபடி பக். 187.

வாங்கிய கடன்தொகை அதிகமாக இல்லை. அதைப் போலவே சாகுபடி நிலப்பரப்பில் அடைமானமாக வைத்த நிலப்பரப்பு விழுக்காடு இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய நாடுகளில் உள்ளதைவிடக் குறைவாக உள்ளது.[4]

அமெரிக்க விவசாயிகள் அடைமானமாகவைத்து வாங்கிய தலா கடன்தொகையில் ஒரு சிறுபின்னமாகவே இந்தியர்களின் தலா அடைமானத்தொகை உள்ளது. மற்ற நாடுகளைவிட இந்தியாவில் விவசாயக் கடன் உயர்ந்துள்ளதற்காக அனைவரும் கவலை கொள்ளுகின்றனர். கடன்தொகை அதிகரித்துள்ளது என்பதாலோ, கடன் வாங்குவதற்கான காரணங்களின் அடிப்படையிலோ இப்பிரச்சினைக்கு இந்தியாவில் அதிகமுக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. கடன் வாங்கியதால் ஏற்படும் பின் விளைவுகள் முற்றிலும் கேடு விளைவிப்பதாக இருப்பதால் தான் கடன்தொகையின் வளர்ச்சியைக் குறித்து ஒவ்வொருவரும் அதிக கவலை தெரிவிக்கின்றனர். அதிகவட்டி காரணமாகக் கடன்தொகையை முற்றிலும் திருப்பிக்கொடுக்க முடியவில்லை. விவசாயிகள் வேறு தொழில்களில் ஈடுபடமுடியவில்லை. இவர்கள் அறிந்த பிறதொழில்கள் ஏதுமில்லை என்பதுடன், விவசாயிகளை ஈர்க்கக்கூடிய வேறு தொழில்கள் வளர்ச்சியுறுமை முக்கியமானதாகும்.

விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கும் பணவணிகர், தானியத்தைக் கொள்முதல் செய்யும் வியாபாரியாகவும், நுகர் பொருள்கள் விற்கும் கடைக்காரர் ஆகவும் இருப்பதால் ஒரு வகையில் இல்லாது போனாலும் மற்றொரு வகையில் விவசாயிகளின் வருமானம் முழுவதையும் சுரண்டி விடுகிறார். இதனால் விவசாயிகளிடம் சேமிப்பு ஏற்படமுடிவதில்லை. கடன்தொகை அடைக்கப்படுவதில்லை. இது அமெரிக்க விவசாயிகளின் நிலைமைக்கு முற்றிலும் மாறுபட்டது. அவர்கள் இந்திய விவசாயிகளைவிட அதிக அளவுக்குக் கடன் வாங்கினாலும் அவற்றை உடனுக்குடன் திருப்பிக்கொடுப்பதால் கடன் சுமையை அதிகம் உணரவில்லை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் கடன் பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் பல முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. முக்கியமாகக் கடும் வட்டியைக் குறைக்கவும், மூலதனக் கிடைப் பருமையை நீக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இவை சட்டரீதியான நடவடிக்கைகளாக இருந்தன. சாகுபடியாளர்

[4] மூன் கூறியபடி பக். 187.

களின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டன. நிலத்தைப் பராதீனம் செய்வதைக் கட்டுப்படுத்தவும், கடன்தொகையைத் தவணை முறையில் திருப்பிக் கொடுக்கவும், கடும்வட்டியைக் குறைக்கவும் சட்டங்கள் இயற்றப்பட்டன. விவசாயிகளுக்கு அரசாங்கம் நேரிடையாகக் கடன் கொடுத்தது. தபால் அலுவலகங்கள் சேமிப்புப்பாங்குகளாகப் பணியாற்றின.

### அரசுக்கடன்

'தக்காவி'க் கடன் என்ற அரசுக்கடன் வழங்கும் முறை முதன் முதலில் மொகலாய மன்னர்களால் ஆரம்பிக்கப்பட்டது. பின்னர் கிழக்கு இந்தியக் கம்பெனி இம்முறையை ஏற்றுக்கொண்டது. இதனுல் சில விவசாயிகள் மட்டுமே பலன் அடைந்தார்கள். ஆகையால் 'தக்காவி'க்கடன் விவசாயிகளின் கடன் தேவையைப் பூர்த்தி செய்வதற்குப் போதுமானதாக இல்லை. இதனுல் விவசாயக்கடன் பிரச்சினைக்கு இதர வழிகளில் தீர்வு காண வேண்டியது அவசியமாக இருந்தது.

இந்தியாவில் விவசாயிகளின் ஏழ்மை வேளாண்துறையின் முன்னேற்றத்திற்கு மிகப்பெரிய தடையாக இருந்தது. இவர் களின் ஏழ்மைக்கு மீளமுடியாத கடன் சுமை ஒரு முக்கிய காரணமாக இருந்தது. விவசாயத்திற்கு நீர்ப்பாசனம் எந்த அளவிற்கு முக்கியமாக உள்ளதோ அந்த அளவிற்குக் கடன் தொகையும் முக்கியமாகும். இருந்தபோதிலும், விவசாயிகளுக்குக் குறைந்த வட்டியில், எளிய முறையில் கடன் கொடுத்து உதவக் கூடிய அமைப்பு முறைகள் தோற்றுவிக்கப்படவில்லை. நீதிபதி ரானடே இக்குறைபாட்டை முதலில் உணர்ந்தார். கடன் வழங்குவதற்கான அமைப்பு முறைகளை ஏற்படுத்தினுலன்றி விவசாயிகளும், கிராமியத் தொழில்களும் முன்னேற்றம் அடைய முடியாது எனக் கருதினர்.

இந்திய விவசாயிகளுக்குப் பணஉதவி அளிக்க வேண்டிய தன் அவசியத்தை உணர்ந்து விவசாய பாங்கு ஒன்றை ஏற் படுத்தும் முயற்சியில் ஸர் வில்லியம் வெட்டர்பன் என்பவரும், நீதிபதி N. G. ரானடே அவர்களும் (1882) ஈடுபட்டனர். இந்திய அரசாங்கமும் இவர்களது திட்டத்தை ஏற்றுக்கொண்டது. ஆனுல், இலண்டனில் உள்ள இந்தியா மந்திரி இதை ஆமோதிக்காத காரணத்தால் விவசாய பாங்கை ஏற்படுத்த முடியவில்லை. இருந்தபோதிலும் இந்த நோக்கம் இதர வழி களில் நிறைவேற்றப்பட்டது. விவசாய முன்னேற்றத்திற்குக் கடன் வழங்கும் சட்டங்கள் 1883-லும், 1884-லும் இயற்றப் பட்டன.

விவசாயிகளுக்குக் கடன் வழங்குவதற்குத் தனியான பாங்கு அமைக்க முடியவில்லை என்ற காரணத்தால், விவசாயிகளுக்கு அரசு கொடுக்கும் கடன்கள் சீர்படுத்தப்பட்டன. இவற்றுள் 1883இல் நில முன்னேற்ற சட்டமும், 1884இல் விவசாயிகள் கடன் சட்டமும் முக்கியமானவை. 1883 சட்டப்படி நிலத்தில் நிரந்தர முன்னேற்றத்தை ஏற்படுத்துவதற்காக மூலதனச் செலவை அரசு கடனாகக் கொடுக்கும். 1884 சட்டப்படி விதை, கால்நடை, விவசாயக்கருவிகள் முதலியன வாங்குவதற்கு அரசு கடன் கொடுக்கும். இந்தச் சட்டங்கள் சிறந்த நோக்கத்துடன் தயாரிக்கப்பட்டன என்றாலும் அவை செயல்பட்டவிதம் பிரச்சினை களுக்குத் தீர்வு காண உதவவில்லை. இச்சட்டங்களின் முழு விவரங்களை மக்கள் அனைவரும் தெரிந்து கொள்ளமுடியவில்லை. கடன்தொகை யாருக்கு மிகவும் அவசியமோ அவர்களுக்குக் கடன் கிடைக்கவில்லை. ஏனெனில், நிலத்தை ஈட்டுப் பொருளாக ஏற்றுக்கொண்டுதான் அரசு 'தக்காவி'க் கடன் கொடுத்தது. பெரும்பாலான விவசாயிகள் நிலமற்ற சாகுபடியாளர்களாக இருந்தார்கள். ஒவ்வொரு சாகுபடியாளரிடமும் தனித்தனியாக நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ள முடியவில்லை.

கடன் சுமையால் பாதிக்கப்பட்ட தக்காண விவசாயிகள் கிளர்ச்சி செய்தார்கள். இதை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்குமாறு 1875இல் ஓர் ஆணைக்குழு நியமிக்கப்பட்டது. பணவணிகர்களுக்கும், விவசாயிகளுக்கும் ஏற்பட்ட சச்சரவுகளை விசாரித்துத் தீர்வுகாண ஓர் அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று அந்த ஆணைக்குழு பரிந்துரைத்தது. இதற்கிணங்க 1879இல் தக்காண விவசாயிகள் நிவாரணச் சட்டம் இயற்றப் பட்டது. 1879 சட்டப்படி நீதிமன்றங்களுக்குச் சிறப்பு அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. வழக்கில் சம்பந்தப் பட்டவர்கள் செய்துகொண்ட ஒப்பந்தத்தை மட்டும் கருதாமல், வட்டி விகிதம் கடுமையாக இருக்கிறது என்று தெரிந்தால் அதைக் குறைக்கவும், மூலதனத்தைப் பல தவணைகளில் திருப்பிச் செலுத்த ஏற்பாடு செய்யவும் நீதிமன்றங்களுக்குச் சிறப்பான அதிகாரங்கள் வழங்கப்பட்டன. இதனால் எதிர்பார்த்த பலன்கள் ஏற்படவில்லை. முன்பு இருந்ததைவிடப் பூசல்கள் அதிகரித்தன. கடும்வட்டியைக் குறைக்கும் நோக்கத்தோடு 1918-லும், 1926-லும் சட்டங்கள் இயற்றப்பட்டன. அடைமான மாக வைத்த பொருளைத் திரும்பவும் மீட்கும் உரிமை ஒருவருக்கு உண்டு என்று வலியுறுத்தப்பட்டது. சட்டங்கள் இயற்றப் படுவதால் மட்டும் மக்களின் குறைகள் நீக்கப்படுவதில்லை. அவை எந்த அளவிற்கு நிறைவேற்றப்படுகின்றன என்பதுதான் முக்கியம்.

1901இல் பஞ்சாப் மாநிலத்தில் நில பராதீன சட்டம் கொண்டுவரப்பட்டது. அதன் பின்னர் பண்டில்கண்ட், பம்பாய், அயோத்தி ஆகியவற்றிலும் இதைப்போன்ற சட்டங்கள் இயற்றப் பட்டன. கடன் வாங்கிய விவசாயிகளின் நிலத்தைப் பண வணிகர்கள் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்ளுவதைத் தடுப்பதே இவற்றின் முக்கிய நோக்கமாகும். விவசாயத்தைத் தங்கள் முழுநேர வாழ்க்கைத் தொழிலாக ஏற்காதவர்கள் நிலம் வாங்குவதைச் சட்டரீதியாகத் தடுத்தார்கள். இதனால் விவசாயி களுக்குக் கடன் கிடைப்பது அரிதாகிவிட்டது.

### நிதிகள்

விவசாயிகளுக்குக் கடன் வழங்குவதற்குப் பல சட்டங்கள் இயற்றப்பட்ட இதே காலத்தில், பல தனிநபர்களின் முயற்சி யால் புதிய அமைப்புகள் தோற்றுவிக்கப்பட்டன. காட்டாக, 1869-லிருந்து 1900 வரை வங்காளத்தில் மட்டும் **45** கடன் வழங்கும் பாங்குகள் (அல்லது நிறுவனங்கள்) ஏற்பட்டன. தமிழ்நாட்டில் நிதிகள் தோன்றின. இவற்றின் முக்கிய நோக்கம் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் குறைந்த வட்டி விகிதத்தில் கடன் கொடுப்பது ஆகும். இங்கிலாந்தில் உள்ள நண்பர்கள் சங்கத்துடன் இதை ஒப்பிடலாம். இவை யாவும் வெற்றிகரமாக நடைபெறவில்லை. பல காரணங்களினால் இவை இழப்பை அடைந்தன. இருந்தபோதிலும் உத்தரப்பிரதேசம், பஞ்சாப், வங்காளம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் 1901இல் சுமார் **36,000** உறுப்பினர்களைக் கொண்ட 200 நிதிகள் இருந்தன. இவற்றின் ஒப்பிய மூலதனம் ரூ. 2 கோடிக்கும் அதிகம். பெரும்பாலான உறுப்பினர்கள் படித்தவர்களாக இருந்தனர். இந்த 'நிதிகள்' கூட்டுறவு அமைப்பு தோன்றிய பின்னரும் நீடித்துள்ளன. இதன் உறுப்பினர்கள் உரிய காலத்தில் கடன்தொகையைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய தன் அவசியம் வற்புறுத்தப்பட்டது. பங்கு மூலதனம் மாதத் தவணையில் செலுத்தப்படும். இந்த 'நிதி'கள் குறிப்பிட்ட காலத்திற்குப் பின்னர் கலைக்கப்பட்டன. அதுசமயம் பங்கு மூல தனமும், சேர்ந்துள்ள இலாபமும் உறுப்பினர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படும்.

### கூட்டுறவு இயக்கம்

இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் தோன்றுவதற்கு நிக்கல்ஸன் முக்கிய காரணமாக இருந்தார். இவர் இந்திய நிருவாகத்துறையில் பணியாற்றினர். தமிழ்நாட்டில் (சென்னை மாநிலத்தில்) விவசாய பாங்கை ஏற்படுத்த மாநில அரசு

அக்கறை கொண்டது. அதற்கான அமைப்பை ஆராய்ந்து கூறும் பொறுப்பு (1892) நிக்கல்ஸனிடம் விடப்பட்டது. ஐரோப்பிய நாடுகளில் கூட்டுறவு அமைப்புகள் சிறப்பாகச் செயல்பட்டதை நேரில் கண்டறிந்த பின்னர் அத்தகைய அமைப்புகள் இந்தியக் கிராம முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவும் என்று கருதினர். இந்திய விவசாயிகளின் ஏழ்மைக்கு அவர்களின் கடன் சுமையும், கடன் வட்டியுமே முக்கிய காரணம் என்று கூறினர். குறைந்த வட்டியில், எளியமுறையில் கடன் வழங்கும் அமைப்புகளைத் தோற்றுவிக்காத வரை பணவணிகர்களைக் குறைகூறுவதில் பயன் ஒன்றுமில்லை. இங்ஙனம் கடன்வழங்கும் அமைப்புகளைத் தோற்றுவிப்பதை நாகரிகத்தின் வளர்ச்சியாகக் கருதவேண்டும்.[5] கடன் வழங்குவதால் மட்டும் விவசாயிகளின் பிரச்சினைகள் தீர்க்கப் படுவதில்லை. விவசாயிகள் தங்களை எதிர்நோக்கிய பிரச்சினைகள் அனைத்திற்கும் தாங்களே தீர்வு காணவேண்டும். இதற்கு ஒற்றுமையும், சிக்கனமும் அவசியம். இவ்விரு பண்புகளையும் கூட்டுறவு அமைப்புகள் வலியுறுத்துகின்றன. எனவே, கூட்டுறவு அமைப்புகளை நாடெங்கிலும் ஏற்படுத்துவதன் மூலம் நீண்டகால ரீதியில், விவசாயப்பிரச்சினைக்குத் தீர்வுகாண முடியும். இந்தியக் கிராமியச் சூழலுக்கு ஏற்றதாக ரெய்ஃபீஸன் அமைப்புகள்[6] உள்ளன. ஆகையால் நாடெங்கிலும் **ரெய்ஃபீஸன் கூட்டுறவு அமைப்புகளை நிறுவுங்கள்** என்று தனது அறிக்கையில் (1897) கூறினர்.

சென்னை மாநில அரசு நிக்கல்ஸனைக் கேட்டுக் கொண்டதைப்போலவே உத்தரப்பிரதேச (அக்காலத்தில் ஐக்கிய மாநிலம்) அரசாங்கமும் டியூபர்னெக்ஸ் என்ற அதிகாரியை விவசாயக் கடன் பற்றி ஆராயுமாறு கேட்டுக்கொண்டது. அவரது அறிக்கையை மாநிலஅரசு 1900இல் **'வடஇந்தியாவில் மக்கள் பாங்குகள்'** என்ற தலைப்பில் வெளியிட்டது. அரசு

[5] D. R. Gadgil—Industrial Evolution. P. 104.

[6] ரெய்ஃபீஸன் சங்கத்தில் உறுப்பினர்கள் யாவரும் மிகக்குறைந்த வருமானம் உடைய விவசாயிகள். இச்சங்கத்தின் பொறுப்புகள் வரையறுக்கப்படவில்லை. உறுப்பினர்கள் யாவரும் மிகவும் நெருக்கமாகப் பழகுகின்றனர். ஒருவரை ஒருவர் நன்கு அறிந்துள்ளனர். இவர்கள் தனித்தனியாக ஏழைகளாக இருந்த போதிலும், கூட்டுறவு அடிப்படையில் ஒன்றாக இணைவதால் செல்வந்தர்களுக்கு ஒப்பான வலிமையையும், செல்வாக்கையும் பெறுகின்றனர். இவ்வமைப்பில் மனச்சாட்சிக்கும், நெறிமுறைகளுக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்படும். இது உறுப்பினர்களுக்கு உதவி செய்வதற்காக நடைபெறுகிறதே தவிர, இலாப நோக்கத்திற்காக அல்ல. இவ்வாறு கூட்டுறவு அமைப்பு ஒவ்வொரு உறுப்பினர்களின் நலன்களுக்காகவும், உறுப்பினர்கள் அமைப்பின் மேம்பாட்டிற்காகவும் பாடுபடுகின்றது. இதில் பணியாற்றுபவர்கள் கௌரவ ஊழியர்களாக இருப்பார்கள். கணக்கர் மட்டுமே முழுநேரப் பணியாளராக இருப்பார்.

உதவியுடன் கூட்டுறவு நாணய சங்கங்களை ஏற்படுத்தவேண்டும் என்று பரிந்துரைத்தார். இவ்விரு அரசாங்க அறிக்கைகளுக்குப் பின்னர் மாவட்ட அதிகாரிகள் தங்கள் சொந்த முயற்சியாலும், ஆர்வத்தாலும் தூண்டப்பட்டு கூட்டுறவு நாணய சங்கங்களைப் பஞ்சாப், உத்தரப்பிரதேசம், வங்காளம் ஆகிய மாநிலங்களில் ஏற்படுத்தினர்கள்.

பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியில் இந்திய தேசியக் கருத்தினர் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியையும், அதன் சுரண்டல் கொள்கைகளையும் குறை கூறினர்கள். இந்தியப் பொருளாதார அமைப்பு திட்டமிட்ட கொள்கைகளின் விளைவாகத் தேக்கமுற்றுள்ளது என்று கூறினர். தேசியவாதிகளின் கூக்குரல்களை இந்திய அரசாங்கம் பொருட்படுத்தவில்லை. ஆனல், 1900இல் இந்திய நிருவாகத்துறையில் பணியாற்றி ஓய்வுபெற்ற ஊழியர்கள் பலரும்—அதில் முக்கியமாக ரமேஷ்டட்—இலண்டனில் இந்தியா மந்திரியிடம் ஒரு மகஜர் சமர்ப்பித்தனர். அதில் நிலவரி விகிதங்களைக் குறைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். பஞ்சங்கள் அடிக்கடி ஏற்படுவதைத் தடுக்க வேண்டுமானல் விவசாயிகளின் வருமானத்தை உயர்த்த வேண்டியது அவசியம். விவசாயிகளின் வாழ்க்கையை வளப் படுத்தும் வகையில் (பிரிட்டிஷ்) இந்திய அரசாங்கம் எவ்வித நடவடிக்கையும் செய்யவில்லை என்று குற்றம் கூறினர். இக் கோரிக்கைகளையும், அத்துடன் கூறப்பட்ட குற்றச்சாட்டுகளையும் இந்திய அரசாங்கம் உடனடியாக மறுத்தபோதிலும், பிரிட்டிஷ்-இந்திய அரசாங்கத்தின் பேரிலும், அதன் பொருளாதாரக் கொள்கையின் பேரிலும் மக்களுக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு 1901-க்குப் பின்னர் பல முற்போக்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. 1901இல் நீர்ப்பாசன ஆணைக்குழு நியமிக்கப்பட்டது. 1902இல் கொள்கை அறிக்கையின் மூலம் கர்ஸன் பிரபு—அரசப்பிரதிநிதி—நிலவரிக் கொள்கையை வெளியிட்டார். இந்தச் சமயத்தில்தான் 1901 பஞ்ச ஆணைக்குழுவின் அறிக்கை வெளியிடப்பட்டது. அதில் கூட்டுறவு அமைப்புகளின் முக்கியத்துவம் எடுத்துரைக்கப் பட்டது. கூட்டுறவு அமைப்புகளை ஏற்படுத்துவதில் இந்திய அரசாங்கம் அக்கறை காட்டியது. இதுபற்றி மாநில அரசுகள் தங்கள் கருத்துகளை வெளியிடவேண்டும் என்று கேட்டுக் கொண்டதுடன் இவ்வறிக்கைகளை ஆராய்வதற்கு ஸர் எட்வர்டு லா என்பவரைத் தலைவராகக்கொண்ட கமிட்டி ஒன்றும் நியமிக்கப்பட்டது. எட்வர்டு லா ஆராய்ந்து கூறின கருத்துகள் 1903இல் வெளியிடப்பட்டன. இதன் அடிப்படையில் 1940இல் கூட்டுறவு நாணய சங்கங்கள் சட்டம், இயற்றப்பட்டது.

## இந்தியக் கூட்டுறவு நாணய சங்கங்கள் சட்டம் (1904)

கிராமியமக்கள் ஒன்ருகச் சேர்ந்து கூட்டுறவு சங்கங்களை அமைப்பதன்மூலம் எளியமுறையில் நாணய வசதிகள் கிடைக்கும்படி செய்தல் இச்சட்டத்தின் முக்கிய நோக்கம் ஆகும். இவ்வாறு அமைக்கும் நாணய சங்கங்களைச் சட்டரீதியாகப் பதிவு செய்து கொள்ளலாம். இதற்குக் குறைந்தது 10 நபர்கள் ஒன்று சேர வேண்டும். இவர்கள் ஒரு கிராமம், அல்லது ஒரு நகரம், அல்லது ஒருசாதி, அல்லது ஒரு பழங்குடியைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம்.

கூட்டுறவு சங்கங்கள் நகரக் கூட்டுறவு சங்கம் என்றும், கிராமியக் கூட்டுறவு சங்கம் என்றும் இருவகைப்படும். உறுப்பினர்களில் ஐந்தில் நான்கு பேர் விவசாயிகளாக இருந்தால் அது கிராமியக் கூட்டிறவு சங்கம் என்று அழைக்கப்படும். இச்சங்கங்கள் ரெய்ஃபீஸன் கூட்டுறவு அமைப்புகளைப் போல இருக்கும்.[7] ரெய்ஃபீஸன் சங்கத்தில் உறுப்பினர்களின் பொறுப்புகள் வரையறுக்கப்படாமல் இருக்கும். இதன் இலாபம் முழுவதும் காப்பு நிதிக்காக ஒதுக்கப்படும்.

நகரக் கூட்டுறவு சங்கம் கிராமிய சங்க அமைப்பிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. நகர சங்கங்கள் 'ஷுல்ஸ்' அமைப்பை உடையன.[8] ஷுல்ஸ் சங்கங்களின் மூல அமைப்பில் காப்பு நிதி வற்புறுத்தப்படவில்லை. ஆனல், இந்தியாவில் சட்டரீதியாகக் காப்பு நிதி ஏற்படுத்த வேண்டும் என்று கட்டாயப்படுத்துகிருர்கள். இலாபத்தில் நான்கில் ஒரு பகுதி காப்பு நிதிக்காக ஒதுக்கப்படும். ஒருநபர் அதிக அளவு ரூ. 1000 வரை பங்கு மூலதனம் செலுத்தலாம். ஒரு உறுப்பினர் செலுத்திய மூலதனம் எந்த அளவாக இருந்தாலும் ஒரு உறுப்பினருக்கு ஒரு வாக்குச்சீட்டு மட்டுமே கொடுக்கப்படும்.

கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியை ஊக்குவிப்பதற்குச் சில சலுகைகள் கொடுக்கப்பட்டுள்ளன. வருமான வரி,

[7] பார்க்கவும். பி. கு. எண் : 6

[8] இதில் கைவினைஞர்கள், தேர்ச்சிபெற்ற தொழிலாளர்கள் உறுப்பினர்களாக இருப்பார்கள். இவ்வுறுப்பினர்களின் பொறுப்புகள் வரையறுக்கப்பட்டிருக்கும். ஆகையால் நெருக்கமாகப் பழக வாய்ப்பில்லாதவர்கள், பல பகுதிகளில் வாழும் மக்கள் இதன் உறுப்பினர்களாக இருக்கலாம். இவை முக்கியமாக இலாப நோக்கத்திற்காகச் செயல்படுகின்றன. ஆகையால் தொழில் முறைமை வற்புறுத்தப்படும். இதில் பணியாற்றும் ஒவ்வொருவரும் முழுநேரப்பணியாளர்கள். அவர்களுக்கு ஊதியம் கொடுக்கப்படும். உறுப்பினர்கள் கட்டாயமாகப் பங்கு மூலதனத்தைச் செலுத்த வேண்டும்.

பத்திரக் கட்டணம், பதிவுக்கட்டணம் ஆகியவற்றிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளன. கூட்டுறவு சங்கத்தின் பங்கு மூலதனத்தை நீதிமன்றத்தால்கூட ஜப்தி செய்யமுடியாது.

கூட்டுறவு சங்கங்களை மேற்பார்வையிடவும், கட்டுப் படுத்தவும் மாநில அரசுகள் கூட்டுறவுப்பதிவாளர்களை நியமித்தன. சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு வட்டி ஏதுமில்லாமல் ரூ. 2000 வரை கூட்டுறவு சங்கங்களுக்கு அரசு கடன் கொடுக்கும்.

கூட்டுறவு சங்கங்கள் எளிய கிராமவாசிகளுக்காக ஏற்பட்டவை. இவை சிறப்பாகச் செயல்படவேண்டுமானால் கூட்டுறவு அமைப்பு முறைகளும், அதன் சட்ட திட்டங்களும் எளிதாக இருக்க வேண்டும். ஆகையால் 1904இல் இந்திய அரசாங்கத்தால் இயற்றப்பட்ட சட்டம், கூட்டுறவு சங்கங்களை ஏற்படுத்தவும், நிருவகிக்கவும் பொதுவான சில கருத்துகளை மட்டுமே எடுத்துக்கூறின. அவசியமானால் மாநில அரசுகள் விரிவான சட்டங்களை இயற்றிக் கொள்ளலாம்.

1904ஆம் ஆண்டு சட்டத்தின் முக்கிய குறிக்கோள் வேளாண் நாணய சங்கங்களை ஏற்படுத்துவது ஆகும். பெரும் பாலான மாநிலங்களில் கூட்டுறவு முதல் நிலை சங்கங்களின் வளர்ச்சி திருப்தியாக இருந்தன. 1905இல் 41 ஆக இருந்த கூட்டுறவு நாணய சங்கங்கள், 1911இல் 8177 ஆக உயர்ந்தன.[9] 1911இல் நான்கு இலட்சத்திற்கும் அதிகமான உறுப்பினர் களையும், ரூ. 50% இலட்சத்திற்கும் அதிகமான பங்கு மூல தனத்தையும் கொண்டு விளங்கின.

ஆரம்பத்திலிருந்து கூட்டுறவு சங்கங்களின் வளர்ச்சியில் அரசாங்கம் அக்கறை காட்டி வந்துள்ளது. இதன் வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக இருந்ததுடன், அரசாங்கம் அவ்வப்போது கடன் கொடுத்து உதவியுள்ளது. 1909இல் அரசாங்கம் கடனைக் கொடுத்த தொகை கூட்டுறவு சங்கங்களின் நடப்பு மூலதனத்தில் 22% ஆக இருந்தது.

அரசாங்கம் எதிர்பார்த்ததைவிட கூட்டுறவு சங்கங்களின் வளர்ச்சி அதிகமாக இருந்தது. பெருவாரியான கூட்டுறவு சங்கங்களின் வளர்ச்சிக்கு ஏற்றதாக 1904ஆம் ஆண்டு சட்டம் போதுமானதாக இல்லை. காட்டாக, கூட்டுறவு மத்திய

[9] Vera Anstey.

அமைப்புகள் ஏற்படவும், நாணயம் அளிக்காத சங்கங்கள் ஏற்படவும் இது உதவியாக இல்லை.

1904ஆம் ஆண்டு சட்டம் கூட்டுறவு கடன் வழங்கும் சங்கங்களுக்கு மட்டுமே பாதுகாப்பு அளித்தது. கடன் வழங்கு வதைத் தவிர இதர முக்கிய நோக்கங்களுக்காகத் தோன்றிய கூட்டுறவு சங்கங்களுக்குச் சட்டரீதியாகப் பாதுகாப்பு அளிக்க வில்லை.

கூட்டுறவு முதல்நிலை சங்க அமைப்பின் காரணமாக அவை உள்ளூரிலேயே மூலதனம் திரட்ட வேண்டியிருந்தது. ஆனல், அவ்வாறு திரட்டப்படும் மூலதனம் போதுமானதாக இல்லை. இவை வெளியூர்களில் மூலதனம் திரட்ட வேண்டுமானல், அதற்கு மத்திய கூட்டுறவு அமைப்புகள் அவசியம். முதல் நிலைக் கூட்டுறவு அமைப்புகளை மேற்பார்வையிடவும், கட்டுப் படுத்தவும், மூலதனம் கொடுத்து உதவவும் மத்திய கூட்டுறவு அமைப்பு அவசியமாக உள்ளது. ஆனல், 1904ஆம் ஆண்டு சட்டப்படி இவற்றை ஏற்படுத்த முடியவில்லை.

கூட்டுறவு சங்கங்கள் இலாபத்தைப் பகிர்ந்து அளிக்கக் கூடாது என்று தடை விதித்தார்கள். இதனல் பொதுமக்கள் தங்கள் மூலதனத்தைச் செலுத்தத் தயங்கினர். தவிரவும் கூட்டுறவு சங்கங்களைக் கிராமிய சங்கங்கள், நகர சங்கங்கள் என்று பேதப்படுத்துவது கூட்டுறவின் வளர்ச்சிக்கு இடையூருக இருந்தது.

இக்குறைபாடுகளை அகற்றும் நோக்கத்தோடு 1912இல் கூட்டுறவு சங்கங்கள் சட்டம் இயற்றப்பட்டது. நாணயம் வழங்குவதைத்தவிர, உற்பத்தி, நுகர்வு, விற்பனை செய்தல் முதலிய பல்வேறு நோக்கங்களுக்காகக் கூட்டுறவு சங்கங்களை அமைத்துக்கொள்ள இச்சட்டம் உதவுகிறது. கூட்டுறவு சங்கங் கள் புதியதொரு அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டன. நகர சங்கங்கள், கிராமிய சங்கங்கள் என்பதற்குப் பதிலாக, பொறுப்பு களின் அடிப்படையில்—பொறுப்புகள் வரையறுக்கப்பட்ட சங்கம் என்றும், பொறுப்புகள் வரையறுக்கப்படாத சங்கம் என்றும்—வேறுபடுத்தினர்கள். உறுப்பினர்களுக்கு இலாபத்தில் ஒருபகுதி பகிர்ந்து அளிக்கப்படும். 1912 சட்டப்படி மத்திய கூட்டுறவு அமைப்புகளை ஏற்படுத்தலாம். இவை மூவகைப் படும். (அ) முதல்நிலைக் கூட்டுறவு சங்கங்களின் ஒன்றியங்கள், (ஆ) மத்திய கூட்டுறவு பாங்குகள், (இ) மாநிலக் கூட்டுறவு பாங்குகள் முதலியன. மத்திய கூட்டுறவு அமைப்புகளின் பொறுப்புகள் வரையறுக்கப்பட்டு இருக்கும்.

முதல்நிலைக் கூட்டுறவு சங்க உறுப்பினர்களில் பெரும் பான்மையானவர்கள் விவசாயிகளாக இருப்பார்களேயானல் மேற்படி சங்கத்தின் பொறுப்புகள் வரையற்றதாக இருக்கும். ஏனைய முதல்நிலைக் கூட்டுறவு சங்கங்களின் பொறுப்புகள், உறுப்பினர்களின் விருப்பத்திற்கு ஏற்ப வரையிட்ட பொறுப்பு களுடனே வரையிடாப் பொறுப்புகளுடனே இருக்கலாம். வரையிடாப் பொறுப்புகளையுடைய கூட்டுறவு சங்கம், இலாபத் தில் 25% தொகையைக் காப்பு நிதிக்காக ஒதுக்கிய பின்னர் அதன் உறுப்பினர்களுக்கு இலாபத்தைப் பகிர்ந்து அளிக்க அனுமதிக்கப்படும். கூட்டுறவு சங்கம் தனது இலாபத்தில் அதிக அளவு 10% தொகையைக் கல்வி, அறச்செயல் ஆகியவற்றிற் காகச் செலவிடலாம்.

1912 சட்டத்தால் மத்திய கூட்டுறவு அமைப்புகளும், நாணயம் வழங்கா முதல்நிலைக் கூட்டுறவு சங்கங்களும் கணிச மான அளவிற்கு வளர்ச்சி அடைந்தன. மற்ற மாநிலங்களை விட, பஞ்சாப், பம்பாய் (மகாராஷ்டிரம், குஜராத்), சென்னை (தமிழ்நாடு) ஆகிய மாநிலங்களில் கூட்டுறவு அமைப்பின் வளர்ச்சி அதிகமாக இருந்தது. அனைத்து மாநிலங்களிலும் ஏற்பட்ட கூட்டுறவு வளர்ச்சியை ஆராயவும், நாடெங்கிலும் பொதுவான அடிப்படையில் கூட்டுறவு இயக்கம் வளர வழி வகுக்கவும், 1914இல் ஸர் எட்வர்ட் மக்லகன் என்பவர் தலைமை யில் ஒரு குழு நியமிக்கப்பட்டது. கூட்டுறவு அமைப்பின் வளர்ச்சியைப் பரிசீலனை செய்வதன் மூலம் அவை மேலும் சிறப் பாக முன்னேற்றம் அடைவதற்கான சாத்தியக் கூறுகளை ஆராய்ந்து கூறவேண்டியது இதன் பொறுப்பாகும். இக்கமிட்டி தனது அறிக்கையை 1915இல் சமர்ப்பித்தது.

கூட்டுறவு அமைப்பின் வளர்ச்சியில் 1919 ஒரு முக்கிய கட்டம் ஆகும். மாண்டெகு—செம்ஸ்ஃபோர்டு சீர்திருத்தங்களைப் பிரதிபலிக்கும் வகையில் 1919ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் இருந்தது. அப்போது கூட்டுறவு இலாகா மாநில அரசுகளின் பொறுப்பாக மாற்றப்பட்டது. மாநில அரசுகளின் கவனிப்பில் கூட்டுறவு இயக்கம் மேலும் வளர்ச்சி அடைந்தது.

கூட்டுறவு சங்கங்களின் பொதுவான வளர்ச்சி திருப்தியாக இருந்தபோதிலும், வளர்ச்சி வேகம் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபட்டது. ஒவ்வொரு மாநிலமும் அங்குள்ள சிறப்பான சூழ்நிலைக்கு ஏற்பக் கூட்டுறவு சட்டங்களை இயற்றின. கூட்டுறவு இலாகாவின் வளர்ச்சியை ஊக்குவிக்க மாநில அமைச்சர் ஒருவர் இவ்விலாகாவின் பொறுப்பு ஏற்று இருப்பார்.

அட்டவணை [10]

| ஆண்டுகள் | சங்கம் [000] | உறுப்பினர் [00,000] | நடப்பு மூலதனம் [00,00,000] ரூ. |
|---|---|---|---|
| 1920 | 28·4 | 11·3 | 15 |
| 1929 | 94·0 | 37·0 | 75 |

## 1929—38

கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி உலகப் பொருளாதார மந்தத்தால் அதிகம் பாதிக்கப்பட்டது. இந்தியாவில் பெரும் பாலான கூட்டுறவு முதல்நிலைச் சங்கங்கள் கடன் வழங்கும் சங்கங்களாக இருந்தன. இவை விவசாயிகளுக்கு மிகுதியாகக் கடன் வழங்கியிருந்தன. உலகப் பெருமந்தத்தின் ஒருகூறாக அனைத்துப் பொருள்களின் விலையும் சரிந்தன. இவற்றுள் விவசாயப் பொருள்களின் விலை மிகவும் அதிக அளவிற்கு வீழ்ச்சி அடைந்தது. விலை வீழ்ச்சியுடன் விவசாயிகளின் வருமானமும் குறைந்து சென்றது. வருமானம் குறைந்து சென்ற தால் வாங்கிய கடனைக் திருப்பிக்கொடுக்கும் ஆற்றலும் குன்றி யது. அதாவது கூட்டுறவு சங்கங்களிடமிருந்து கடனாக வாங்கிய தொகையைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. கூட்டுறவு சங்கங்களின் மூலதனம் திரும்பிவராத காரணத்தால் அவற்றைக் கலைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பஞ்சாபின் ஒருபகுதியில்—இன்றைய தினம் ஹரியானாவாக உள்ள பகுதி யில்—கூட்டுறவு சங்கங்கள் அதிக அளவில் கலைக்கப்பட்டன. உத்தரப்பிரதேசத்தில் 50%-திற்கும் அதிகமான சங்கங்கள் கலைக்கப்பட்டன.

### நில அடைமான பாங்கு

(இவை நிலவள பாங்கு என்று தற்சமயம் அழைக்கப்படு கின்றன.) பெரும்பாலான விவசாயிகள் தங்கள் சொந்த நிலத்தை அடைமானமாக வைத்துக் கடன் வாங்கினார்கள். ஆகையால் கூட்டுறவு தத்துவ அடிப்படையில் நில அடைமான

[10] ஆதாரம்: Raghubans Dev Bedi - Theory, History and Practice of Co-operation, 1969, p. 218

பாங்கு ஒன்று முதன்முதலில் சென்னை மாநிலத்தில் (தமிழ் நாட்டில்) 1929இல் ஏற்பட்டது. அதுசமயம் **10** முதல்நிலை நிலஅடைமான பாங்குகளும், ஒரு மாநில அடைமான பாங்கும் தோற்றுவிக்கப்பட்டன. விவசாயிகளைக் கடன் சுமையிலிருந்து விடுவிப்பது இதன் முக்கிய நோக்கமாகும். பழைய கடன்களை அடைக்க (விவசாயிகளைக் கடன் சுமையில் இருந்து மீட்க) இவை உதவிசெய்கின்றன. இதைத்தவிர ஆக்க ரீதியான நீண்டகால முன்னேற்றத்திற்காகவும்—நிலத்தின் வளத்தை அதிகரிக்கவும், உற்பத்தித்திறனை உயர்த்தவும்—நிலஅடைமான பாங்குகள் கடன் கொடுக்கும்.

### ரிசர்வ் பாங்கு

இக்காலத்தில்தான் ரிசர்வ் பாங்கு தோன்றியது. ரிசர்வ் பாங்கின் தோற்றம் (1935) கூட்டுறவு இயக்கத்தின் திருப்பு மையமாகும். ஆரம்பம் முதல் வேளாண் நாணய இலாகா ஒன்று நிறுவப்பட்டது. கூட்டுறவு சங்கங்களுக்கு நிதி உதவி அளித்தல், விவசாயிகளுக்கு நாணயம் வழங்குவதில் உள்ள பிரச்சினைகளை ஆராய்தல் ஆகியவை வேளாண் நாணய இலாகாவின் முக்கிய பணிகள் ஆகும். நாடெங்கிலும் உள்ள கூட்டுறவு சங்கங்களை ஆராய்ந்தபின்னர் 1937இல் அறிக்கை ஒன்றை இவ்விலாகா சமர்ப்பித்தது.

## 1939—47

உலக மந்தத்தின் போது வீழ்ச்சி அடைந்த விலைமட்டம் இரண்டாவது உலகப்போர் ஏற்பட்டதால் உயர ஆரம்பித்தது. இத்துடன் விவசாயிகளின் வருமானமும் உயர்ந்து சென்றது. விவசாயிகள் தாங்கள் செலுத்த வேண்டிய பாக்கிகளைச் செலுத்தினர்கள். இவ்வாறு விலைஉயர்வினால் ஒருபுறம் கடன்சுமை குறைந்தது. மற்றொருபுறம் பணவருமானம் உயர்ந்தது. கூட்டுறவு சங்கத்தின் நாணய உதவியைக் கோருபவர்கள் குறைந்து சென்றனர். கூட்டுறவு நாணய சங்கங்களிடம் உபரியான தொகை இருந்தது. *1939–40*இல் முதல்நிலைக் கூட்டுறவு சங்கங்களிடம் ரூ. 25% கோடியாக இருந்த வைப்புத் தொகை, *1945–46*இல் ரூ. 54% கோடியாக உயர்ந்தது.

*1939*-க்குப் பின்னர் வீக்கத்தின் காரணமாக அனைத்துப் பொருள்களும் கிடைப்பருமையாக இருந்தன. நாடெங்கிலும் விலைக்கட்டுப்பாடும், பங்கீடும் அமுலாக்கப்பட்டன. அக்காலத்தில் கூட்டுறவு நுகர்வோர் சங்கங்கள் தோன்றிப் பிரமிக்கத் தகுந்த அளவில் வளர்ச்சியுற்றன.

அட்டவணை 11

| | ஆண்டுகள் | சங்கம் [000] | உறுப்பினர் [00,000] | நடப்புமூலதனம் [00,00,000] |
|---|---|---|---|---|
| இந்தியா | 1940 | 116·9 | 60·0 | 104·6 |
| | 1946 | 172·0 | 91·6 | 164·0 |
| பாரதம் | 1947 | 139·0 | 91·0 | 156·0 |

### விடுதலைக்குப் பின்னர்

பாரதம் தன்னுரிமை எய்திய காரணத்தால் பொருளாதார வளர்ச்சி உந்தப்பட்டது. இதன் விளைவாகக் கூட்டுறவுத் துறையும் முன்னேற்றம் எய்தியது. ஏற்றத்தாழ்வு இல்லாத சமூக அமைப்பை ஏற்படுத்துவதற்குக் கூட்டுறவு மிகவும் இன்றியமையாத துறை என்று வற்புறுத்தப்பட்டது. இந்தத் தத்துவங்கள் ஐந்தாண்டுத் திட்டங்களிலும் இடம் பெற்றன.

### கிராமிய நாணய சர்வே

1951இல் ரிசர்வ் பாங்கு திரு. கோர்வாலா (A.D. Gorwala) அவர்கள் தலைமையில் கிராமிய நாணய சர்வேக்குழு ஒன்றை நியமித்தது. இச் சர்வேக்குழு 600 கிராமங்களை ஆராய்ந்த பின்னர் 1954இல் தனது அறிக்கையை - மூன்று தொகுதிகளாக - வெளியிட்டது. இக்குழு பிரச்சினையை அணுகியவிதம் வரவேற்கத்தக்கது. கிராமிய நாணயத்தைத் தனி ஒரு பிரச்சினையாகக் கருதாமல், கிராமிய வளர்ச்சியின் ஒருகூறுகக் கருதியிருப்பது வரவேற்கத்தக்கது.

நாணயம், உற்பத்தியின் ஒரு சார்பாக உள்ளது. இந்த அடிப்படையில் கிராம மக்கள் நேரிடையாகவும், மறைமுகமாகவும் ஈடுபட்ட உற்பத்தி நடவடிக்கைகளின் சார்பாகக் கிராமிய நாணயம் இருக்கும். கிராமிய நாணயத்தில் வேளாண் நாணயம் முக்கியமானது. முதல் திட்டக்காலத்தில் உள்ள உற்பத்தி முறை, உற்பத்தி வாய்ப்புகள், உற்பத்தி அளவு ஆகியவற்றின் சார்பாக நாணயத் தேவையை ஆராய்வோமானால் அது இயங்காச் சமநிலையைப் பிரதிபலிக்கும். கிராமிய நாணய ஆய்வுக்குழு இயக்கநிலையின் அடிப்படையில் எதிர்

[11] பார்க்கவும் முன்கூறியபடி, பக்கம் 220

காலத்தில் நிலவக்கூடிய தீவிர சாகுபடி முறையை மையமாகக்கொண்டு விவசாயத்துறையின் நாணயத் தேவையை ஆராய்ந்துள்ளது. தீவிரச் சாகுபடிக்குப் பலவகைச் சாதன வசதிகள் தேவைப்படுகின்றன. இதில் அரசு ஓரளவிற்கு மட்டுமே பொறுப்பு ஏற்கக் கூடும். முக்கியமாக நீர்ப்பாசன வசதிகளுக்கான செலவுகளை ஏற்கக் கூடும். இதர செலவுகளைச் சாகுபடியாளர்களே ஏற்க வேண்டும். எனவே, முதல் திட்டத்தில் காண்பதைவிட எதிர்காலத்தில் வேளாண் நாணயத் தேவை உயர்ந்து செல்லும்.

பாரதத்தில் நில உடைமையாளர்களில் பெரும்பான்மையினர் சிறுநிலக்கிழாராக இருக்கின்றனர். இவர்களிடம் இயல்பாகவே சேமிப்பு ஏற்படுவதில்லை. இவர்களுக்குக் கிடைக்கக் கூடிய நாணய வசதிகள் மிகவும் குறைவு—முக்கியமாக அமைப்புடைய நிறுவன—நாணயவசதிகள் இல்லை என்று சொல்லும் அளவிற்குக் குறைவாக உள்ளன. அதாவது பெரும்பாலான வேளாண் கடன்கள் பணவணிகர்களால் கொடுக்கப்படுகின்றன. இவர்கள் விவசாயிகளின் இயலாமை, ஏழ்மை, அறியாமை ஆகியவற்றைப் பயன்படுத்திக்கொண்டு, இவர்களைச் சுரண்டும் வகையில் நிபந்தனைகள் விதித்து, உயர் வட்டி விகிதத்தை வசூலிக்கின்றனர். இந்நிலை தொடர்ந்து நீடிக்குமானால் விவசாயத்துறை முன்னேற்றம் அடைய முடியாது. விவசாய உற்பத்தித்திறனை அதிகரிப்பதற்கு—முன்னோடியாக—நிறுவன நாணய வசதிகள் சாதாரண விவசாயிகளுக்கும் கிடைக்கும்படி செய்யவேண்டும். கிராமிய நாணயத் தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய சிறந்த அமைப்பாகக் கூட்டுறவு அமைப்புகள் விளங்குகின்றன.

கூட்டுறவு சங்கங்களின் சாதனைகள் திருப்தி அளிக்கவில்லை. இவை அளிக்கும் கடன் தொகை விவசாயிகளின் நாணயத் தேவையைப் பூர்த்தி செய்யப் போதுமானதாக இல்லை. இவை எளிய மக்களுக்கு உதவி செய்வதற்குப் பதிலாகச் செல்வந்தர்களுக்கு உதவி செய்கின்றன. எனவே, கூட்டுறவு இயக்கத்தின் முக்கிய நோக்கத்தை நிறைவேற்றவில்லை. கூட்டுறவு இயக்கம் சமனிலை அடிப்படையில் வளரவில்லை. கூட்டுறவு நாணய சங்கங்கள் வளர்ந்துள்ள அளவிற்குக் கூட்டுறவு விற்பனை சங்கங்கள், மற்றும் பக்குவப்படுத்தும் சங்கங்கள் வளர்ச்சியுறவில்லை. வேளாண் நாணய சங்கங்கள் கடன் வழங்குவதற்கு முன் நிபந்தனையாக நில உடைமையை வற்புறுத்துகின்றன. இதற்குப் பதிலாகச் சாகுபடி உரிமை அல்லது வளரும் பயிர்களை ஈடாகக்கொண்டு நாணயம் வழங்க

வேண்டும். இதுவரை கூறிய விவரங்கள் கூட்டுறவு இயக்கம் பாரதத்தில் (1952) வெற்றியடையவில்லை என்பதை நிரூபிக்கின்றன.

**கூட்டுறவு தோல்வி அடையக் காரணம் என்ன?**

கூட்டுறவு இயக்கம் இதுவரை தோல்வி அடைந்ததற்கான காரணங்களைக் கிராமிய நாணய சர்வேக்குழு ஆராய்ந்துள்ளது.[12] கூட்டுறவு இயக்கத்தின் தோல்விக்கு மரபாகப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. இவற்றுள் கூட்டுறவு சங்கங்கள் செயல்படும் விதம், அவற்றின் கட்டமைப்பு, நிருவாகம், சிறப்புப் பயிற்சி இல்லாத மேலாளர்கள் முதலியன முக்கியமானவை. மக்களிடம் பொதுவாகக் காணப்படும் கல்லாமை, ஆர்வம் இன்மை முதலியன. மிகவும் அவசியமான போக்குவரத்து வசதிகள், கிடங்கு வசதிகள் முதலியன குறைந்த அளவிற்கே உள்ளன. இவ்வாறு கூறப்படும் விளக்கங்கள் கூட்டுறவு அமைப்பின் தோல்வியை முழுமையாக விளக்கிக் கூறவில்லை. எனவே, கிராமியப் பொருளாதாரக் கட்டமைப்பின் அடிப்படையில்தான் கூட்டுறவு சங்கங்களின் தோல்விக்கான மூல காரணத்தை விளக்கிக் கூறவேண்டும்.

பாரதத்தில் பெரும்பாலான மக்கள் வசிக்கும் கிராமங்கள், அவற்றின் பொருளாதாரக் கட்டமைப்பு நகரங்களின் பொருளாதாரக் கட்டமைப்பினின்று வேறுபடுகின்றது. இவ்விரு பொருளாதார அமைப்புகளும் ஒருங்கு இணைக்கப்படாமல் தனித்தனியே இயங்குகின்றன. இவை ஒருங்கே இணைக்கப்பட்டிருக்குமானால், ஒன்றுக்கு ஒன்று உதவியாகச் செயல்படும்; நாட்டின் பொதுவான பொருளாதார வளர்ச்சிக்கு உதவியாக இருக்கும். ஆனால், இவை பிளவு பட்டுத் தனித்தனியாக இயங்குவதால் ஒன்று மற்றொன்றுடன் போட்டியிடுகின்றன. ஒரு துறையின் வளர்ச்சி மற்றொன்றின் வளர்ச்சிக்கு வழி வகுக்காமல், ஒன்றின் வளர்ச்சி மற்றதன் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கின்றது. எனவே, சிறுபான்மையினரின் பொருளாதார எழுச்சி பெரும்பான்மையினரின் தேக்க நிலையாகப் பரிணமிக்கிறது.

கிராமிய பொருளாதார அமைப்புகள் தொன்றுதொட்டுத் தேக்கமுற்று இருந்தன என்று கூறமுடியாது. பிரிட்டிஷ் ஆட்சியில் தோன்றிய நிகழ்ச்சிகள், அவற்றின் எதிர்விளைவுகள்

[12] All India Rural Credit Survey-Report. Vol. II. Ch. 30. p. 371-377 (1956).

கிராமிய தேக்க நிலைக்குக் காரணமாக இருந்தன. மரபான கிராமத் தொழில்கள், கைத்தொழில்கள் ஆகியவற்றின் சீரழிவு, ஏகாதிபத்தியச் சுரண்டல் தன்மை உடைய வாணிபம், இதற்கு உதவி செய்யும் ஆலைத்தொழில்கள், நகரங்களின் வளர்ச்சி முதலியன.

தன்னிறைவு சமநிலையிலும், மரபு அடிப்படையிலும் இயங்கி வரும் கிராமியப் பொருளாதார அமைப்பில் பணத்திற்கு எவ்வித அவசியமும் இல்லை. ஆனால், வாணிபத்தை மையமாகக் கொண்ட பொருளாதார அமைப்பில் பணம் இன்றியமையாத ஒரு சாதனமாகும். கிராமியப் பொருளாதாரம் தன்னிறைவு அடிப்படையிலும், நகரப் பொருளாதாரம் வாணிப அடிப்படையிலும் இயங்கி வந்துள்ளன.

பணத்தைப் புகுத்தியதாலும், பணச் செலுத்தல்களைக் கட்டாயமாக்கியதாலும், கிராமியத் தன்னிறைவு அடிப்படையை அகற்றியதாலும் கிராமியக் கட்டமைப்பின் சமநிலை அழிக்கப் பட்டது. நகரப் பொருளாதார அமைப்பு வாணிப அடிப்படையில் செயல்படுவதால் அங்குப் பல பணத்துறை நிறுவனங்கள் தோன்றின. இவற்றால் மேற்படி நகரக் கட்டமைப்புகள் வலிமை அடைந்தன. கிராமியக் கட்டமைப்பிற்கு வாணிபம் அடிப்படையாக அமையாத காரணத்தால் அங்கே பாங்குகள் போன்ற நிதி நிறுவனங்கள் தோன்றவில்லை. பிரிட்டிஷ் ஆட்சியில் இவ்விரு பொருளாதார அமைப்புகளும் பண அடிப் படையில் போட்டியிட்டன. இப்போட்டியில் நிதி நிறுவனங் களை உடைய நகரக் கட்டமைப்பு வெற்றியடைந்தது. கிராமியக் கட்டமைப்பு தோல்வி அடைந்தது.

கடந்த ஒன்றரை நூற்றாண்டுக்கும் மேலாக நகரங்களின் வளர்ச்சியும், அங்கு ஏற்பட்ட தொழில்களின் வளர்ச்சியும், வாணிப வளர்ச்சியும் கிராமங்களின் வளர்ச்சிக்கு உதவி செய்யாமல் இருந்ததுடன், அவை கிராமங்களின் தேக்க நிலைமைக்கும் காரணமாக இருந்தன. இவ்வாறு கிராமங்களின் பிற்போக்கான நிலைமைக்குக் கிராமிய அமைப்பு மட்டிலும் காரண மாக இல்லை. எனவே, கிராமிய அமைப்பிற்குப் புறம்பான சக்திகள் கிராமிய தேக்க நிலையைப் போக்கக் கூடியவையாக இருக் கின்றன. அதாவது இப்போதுள்ள கிராமிய அமைப்புகளைச் சீர்படுத்துவதால் கிராமிய வளர்ச்சியை ஏற்படுத்த முடியாது. அவ்வாறு செய்யப்பட்ட முயற்சிகள் இதுவரை தோல்வி யடைந்தன.

இதுவரை கூட்டுறவு அமைப்புகளால் கிராமிய வளர்ச்சியை ஏற்படுத்த முடியவில்லை. கூட்டுறவு சங்கங்கள் கிராம அமைப்பில் இடம்பெற்ற உள்ளூரான சக்திகளைத் தூண்டி வந்தன. உள்ளூரான சக்திகள் வலியற்றவை. அவற்றால் கிராமிய வளர்ச்சியை ஏற்படுத்த முடியவில்லை. எனவே, கூட்டுறவு அமைப்புகள் இதுவரை தோல்வி அடைந்தன.

கிராமிய வளர்ச்சியில்தான் கூட்டுறவு வெற்றி அடைய முடியும். இதற்குக் கிராமிய சக்திகளை வலுப்படுத்த வேண்டும். நகர சக்திகளின் போட்டியிலிருந்து, நகர வளர்ச்சிக்காகத் தோன்றிய நிறுவனங்களின் ஊடுருவலிலிருந்து, அவற்றின் சுரண்டல்களிலிருந்து கிராமிய சக்திகளைப் பாதுகாக்கவேண்டும். இப்போது இயங்கிவரும் கிராமிய அமைப்புகளைச் சீர்படுத்தி, வலிமையுடையதாகச் செய்யவேண்டும். புதிய அமைப்புகள் கிராமிய வளர்ச்சிக்காகத் தோற்றுவிக்கப்படவேண்டும். கிராமங்களின் வளர்ச்சிக்கு ஏதுவான சூழலைத் தோற்றுவித்தாலன்றிக் கூட்டுறவு இயக்கம் வெற்றி பெறமுடியாது. இதுகாறும் கிராமிய வளர்ச்சியை முக்கிய நோக்கமாகக் கொள்ளவில்லை. எனவே, கூட்டுறவு முயற்சிகள் வெற்றி அடையவில்லை. கிராமியப் பிரச்சினைகள்யாவும் தனித்தனியாகக்கருதப்பட்டன. அவற்றைத் தனித்தனியாகத் தீர்க்க முயற்சி செய்தார்கள். கிராமிய நாணயத்தைக் கிராமிய வளர்ச்சியின் ஒருகூறாகக் கருதாமல், தனித்து இயங்கும் பிரச்சினையாகக் கருதினார்கள். ஆகையால் தான் வேளாண் நாணய சங்கங்கள் நாடெங்கிலும் கூட்டுறவு அடிப்படையில் தோற்றுவிக்கப்பட்டன. வேளாண் நாணய சங்கங்கள் வளர்ந்துள்ள அளவிற்கு உற்பத்தியை அதிகரிக்கும் சங்கங்கள், விவசாயப் பொருள்களைப் பக்குவப்படுத்தும் சங்கங்கள், விற்பனை செய்யும் சங்கங்கள் முதலியன கூட்டுறவு அடிப்படையில் வளர்ச்சியுறவில்லை. பணவணிகர்களிடமிருந்து விவசாயிகளை விடுவிக்க வேண்டும் என்று நினைத்தார்களேயல்லாமல், இவர்களின் வருமான வாய்ப்புகளை உயர்த்தவேண்டும் என்று நினைத்து முயலவில்லை.

கூட்டுறவு இயக்கத்தின் நோக்கம் கிராமிய வளர்ச்சியாக இருக்கவேண்டும் என்று நாணய சர்வேக்குழு கூறியது. கிராமிய வளர்ச்சியை ஏற்படுத்தும் ஒரு சாதனமாகக் கூட்டுறவு இயக்கத்தைக் கருதவேண்டும். இதுவரை குறைந்த நிதியும், மிகையான நிருவாகமும் அரசின் கொள்கையாக இருந்தது. அதாவது கூட்டுறவு சங்கங்களை நிருவகிப்பதற்காக அரசு ஏற்றுக் கொண்ட முயற்சிகள் அதிகமாகவும், அதை வலுப்படுத்து

வதற்காகக் கொடுத்த நிதி குறைவாகவும் இருந்தன. இந்நிலை அடியோடு மாறவேண்டும். இவ்வியக்கம் வலிமை அடைய வேண்டுமானால் அரசு முழு மூச்சுடன் பங்கு கொள்ளவேண்டும்.

சமுதாயத்தின் அடித்தளத்தில் உழலும் வலியற்ற மக்களின் அமைப்பாகக் கூட்டுறவு செயல்படுகிறது. சமுதாயத்தில் வலியற்ற மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் மேல்நிலை அமைப்பாக அரசு செயல்படுகிறது. கூட்டுறவு அமைப்பும், அரசும் வெவ்வேறு நிலைகளில் செயல்பட்டபோதிலும், அவற்றின் நோக்கம் ஒன்றாகவே உள்ளது. எனவே, கூட்டுறவு வெற்றி அடைய வேண்டுமானால் அரசு நேரிடையாகக் கூட்டுறவு இயக்கத்தில் பங்கு கொள்ளவேண்டும். கூட்டுறவு இயக்க வளர்ச்சியின் பல நிலைகளிலும் அரசு நேரிடையாகப் பங்கு கொள்ளவேண்டும் என்று கிராமிய நாணய சர்வேக் கமிட்டி பரிந்துரைத்தது.

கிராமிய வளர்ச்சிக்கு வலிமை பொருந்திய நிதி நிறு வனத்தின் அடிப்படை தேவைப்பட்டது. இதற்காக மிகப் பெரும் வணிக பாங்காக இருந்த இம்பீரியல் பாங்கை நாட்டு உடைமையாக்கி பாரத ஸ்டேட் பாங்கை ஏற்படுத்தவேண்டும் என்று கமிட்டி பரிந்துரைத்தது. இம்பீரியல் பாங்கு ஆரம்பம் முதல் அரசின் பாங்காகச் செயல்பட்டு வந்தது. இதன் தோற்று வாய்க்கும், வளர்ச்சிக்கும் அரசு மூலகாரணமாக இருந்தால் அதை நாட்டுடைமையாக்கலாம் என்றும், கிராமிய பொருளாதார வளர்ச்சிக்கு ஸ்டேட் பாங்கு உறுதுணையாக இருக்கும் என்றும் கருதினர்கள். முக்கியமாகப் பணத்தை இடம் பெயர்த்தவும், கூட்டுறவு நிறுவனங்களுக்கு உதவி செய்யவும், சிறுதொழில்களுக்கு நிதி வசதிகள் ஏற்படுத்தவும், நாடெங்கிலும் கிளை அலுவலகங்களைத் தோற்றுவிக்கவும் ஸ்டேட் பாங்கு அவசியமாக இருந்தது. தனியார் துறையில் செயல்படும் பாங்கைவிட, அரசுத்துறையில் உள்ள பாங்கினுல்தான் கிராமிய வளர்ச்சியை முதன்மையான நோக்கமாகக்கொண்டு பணியாற்றமுடியும். இதைப்போன்ற இன்னும் பல முக்கிய காரணங்களுக்காக இம்பீரியல் பாங்கை நாட்டுடைமையாக்க வேண்டும் என்று பரிந்துரைத்தனர்.

அடுத்தபடியாகப் பல சிறப்பு நிதிகளை ஏற்படுத்த வேண்டும் என்று சர்வேக்கமிட்டி கருத்து தெரிவித்தது. இதில் இரு முக்கிய நிதிகள் ரிசர்வ்பாங்கிடம் ஏற்படுத்தப்பட்டன. **தேசிய வேளாண் (நீண்ட கால) நாணய நிதி** பத்துக் கோடி ரூபாய் மூல தனத்துடன் 1956இல் ஆரம்பிக்கப்பட்டது. மாநில அரசு களுக்குப் பின்குறிப்பிட்ட நோக்கங்களுக்காக நீண்டகாலக்

கடன் உதவி அளிக்க இது பயன்படும். கூட்டுறவு நாணய சங்கங்களின் பங்குப் பத்திரங்களை மாநில அரசுகள் வாங்கிக் கொள்வதற்காக நீண்டகாலக் கடன் உதவி அளித்தல்; நில அடைமான பாங்கு (தற்சமயம் நில வள பாங்கு)களின் டிபெஞ்சர்களை மாநில அரசுகள் வாங்கிக் கொள்ளவும், இதர வழிகளில் நீண்டகாலக்கடன் கொடுக்கவும் வசதிசெய்தல்; மாநிலத் தலைமைக் கூட்டுறவு பாங்குகளுக்கு மாநில அரசுகள் இடைக் காலக்கடன் வழங்க உதவுதல் முதலியவற்றிற்காக ரிசர்வ்பாங்கு மாநில அரசுகளுக்கு நீண்டகாலக் கடன் கொடுக்க மேற்படி நிதி பயன்படுத்தப்படும். 1969 ஜூன் 30உ அன்று இந் நிதியில் ரூ. 155 கோடி மூலதனம் இருந்தது.

இரண்டாவதாக ரிசர்வ் பாங்கிடம், 1956இல் ஒரு கோடி ரூபாய் மூலதனத்துடன் **தேசிய வேளாண் (நிலைபேறுக்க) நிதி** உருவாக்கப்பட்டது. ரிசர்வ் பாங்கு இந்த நிதிக்காக மேலும் கூடுதலான தொகையை ஒதுக்கிவந்தது. 1969 ஜூன் 30உ அன்று இந்நிதியில் ரூ. 35 கோடி மூலதனம் இருந்தது. கூட்டுறவு பாங்குகள் வழங்கிய குறுகியகாலக் கடன்கள் பல காரணங்களினால் குறித்தகாலத்தில் திருப்பிக் கொடுக்கப்படுவதில்லை. அவ்வாறுள்ள பாக்கித் தொகையைத் திருப்பித் தருமாறு வற்புறுத்துவதால் பல விரும்பத்தகாத விளைவுகள் ஏற்படும் என்று அஞ்சினாலும், கடன் பாக்கியால் கூட்டுறவு பாங்குகளின் நாணயக் கட்டமைப்பு சீர்குலையும் என்று அஞ்சினாலும், இந்நிதியிலிருந்து மேற்படி கூட்டுறவு பாங்குகளுக்கு உதவி செய்யலாம். அதாவது கூட்டுறவு பாங்குகள் கொடுத்துள்ள குறுகியகாலக் கடன்களை இடைக்காலக் கடன்களாக மாற்றித்தருவதாக நாணய நிலைபேறுக்க நிதி உபயோகிக்கப்படும்.

மூன்றாவதாகப் பாரத அரசாங்கத்திடம் **தேசிய வேளாண் நாணய (நிவாரண) நிதி** ஏற்படுத்தப்பட்டது. இதற்காக ஆண்டுதோறும் ஒரு கோடி ரூபாயை அரசு ஒதுக்கும். கூட்டுறவு நாணய சங்கங்கள், கூட்டுறவு பாங்குகள் முதலியன கொடுத்துள்ள கடன்தொகையைத் திருப்பி வாங்க முடியாத போது, இதனால் ஏற்படும் பாதக விளைவுகளால் கூட்டுறவு அமைப்புகள் கட்டாயமாகப் பாதிக்கப்படும் என்று கருதுவார்களேயானால், அப்போது மானியமாக நிதி வழங்குவதற்கு வழி செய்யும் நோக்கத்துடன் இந்நிதி தோற்றுவிக்கப்பட்டது.

அடுத்து தேசியக் கூட்டுறவு வளர்ச்சி நிதி ஒன்றும், தேசியக் கிடங்கு வளர்ச்சி நிதி ஒன்றும், பாரத அரசாங்கத்

திடம் தோற்றுவிக்கப்படும். இதைப்போன்ற நிதிகள் மாநில அரசுகளிடமும் ஏற்படுத்தப்படும்.

### கூட்டுறவு இயக்கத்தின் புனரமைப்பு

கூட்டுறவு இயக்கத்தைவலிமையுடையதாகச்செய்யும்நோக்கத்துடன் சில பரிந்துரைகள் வழங்கப்பட்டன. நாடெங்கிலும் கூட்டுறவு முதல்நிலை சங்கங்களை ஏற்படுத்த வேண்டும் என்றும், அவை பன்நோக்குச் சங்கங்களாக இருக்க வேண்டும் என்றும் கூறப்பட்டது. இவை ஆக்க முயற்சிகள் அனைத்திற்கும், குறுகியகால, இடைக்காலக் கடன் உதவி அளிக்க வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டன. மத்திய கூட்டுறவு பாங்குகள், மாநிலக் கூட்டுறவு பாங்குகள் ஆகியவற்றின் நிருவாகம் சீர் படுத்தப்பட்டன. அவற்றின் நிதிக்கட்டமைப்பு வலிமையுடைய தாகக்கப்பட்டன. நாணயம் வழங்குதல், விற்பனை செய்தல், பக்குவப்படுத்தல் முதலிய ஆக்கரீதியான நடவடிக்கைகள் கூட்டுறவு அடிப்படையில் செயல்படுவதற்கு ஊக்கம் தரப் பட்டன.

கூட்டுறவு அமைப்பு நீண்டகால ரீதியில் வலிமையுடன் செயல்படவேண்டுமானால் அதை நிருவகிப்பவர்கள் சிறப்புப் பயிற்சியும், ஆற்றலும் பெற்றவர்களாக இருக்க வேண்டும். கூட்டுறவு ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்கும் அமைப்புகள் பலநிலைகளிலும் ஏற்படுத்தப்பட்டன.

கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியை முறைப்படுத்தவும், நாடெங்கிலும் ஒரே மாதிரியான சட்டதிட்டங்களை ஏற்படுத்த வும் தேசிய வளர்ச்சிக் கவுன்சில், 1958இல் ஒரு கொள்கைத் தீர்மானத்தை நிறைவேற்றியது. பெரிய பன்நோக்கு முதல் நிலைக்கூட்டுறவு சங்கங்களைக் கிராமந்தோறும் ஏற்படுத்தவேண் டும் என்ற கொள்கையை விட்டு, அதற்குப்பதிலாக விவசாய உற்பத்தியை அதிகரிக்கக்கூடிய கூட்டுறவுப் பணிச் சங்கங்களைக் கிராமந்தோறும் ஏற்படுத்த வேண்டும் என்று அறிவித்தார்கள். கூட்டுறவுச் சங்கங்கள் பொருளாதார அடிப்படையில் இலாபகர மாகச்செயல்பட வேண்டும் என்றும், கூட்டுறவு நாணயத்துடன், கூட்டுறவு விற்பனையும் இணைக்கப்பட வேண்டும் என்றும் கருதினர். 1960இல் மேத்தா கமிட்டி என்று அழைக்கப்படும் கூட்டுறவு நாணயக்கமிட்டி ஒன்று நியமிக்கப்பட்டது. நாணய சங்கங்களை மேலும் வலிமை பொருந்தியதாகச் செய்வதற்கான வழிமுறைகளை இக்கமிட்டி ஆராய்ந்தது. இவ்வாறு கிராமிய நாணய சர்வேக் கமிட்டி, கூட்டுறவு நாணயக் கமிட்டி ஆகிய

வற்றின் பரிந்துரைகளுக்கு இணங்க ரிசர்வ் பாங்கின் பணிகளும், பொறுப்புகளும் அதிகரித்தன. மரபாகச் செயல்படும் மத்திய பாங்குகள் நிதி அமைப்புகளுக்கு—முக்கியமாக வணிக பாங்குகளுக்கு — கடைநிலைக் கடன் ஈவதுடன் நின்று விடுகின்றன. ஆனால், பாரதீய ரிசர்வ் பாங்கு நாட்டின் வளர்ச்சிக்கு அவசியமான புதிய அமைப்புகளை உருவாக்கவும், அவற்றின் நிருவாகக் குறையைச் சீர்படுத்தவும், அவை பின்பற்றக்கூடிய கொள்கைகளைப் படைக்கவும் செய்து வருகின்றது. இவை யாவும் ரிசர்வ் பாங்கின் வளர்ச்சிப் பணிகள் ஆகும்.

1966இல் கிராமிய நாணய மறுஆய்வுக் கமிட்டி, திரு வெங்கடப்பையா தலைமையில் நியமிக்கப்பட்டது. தீவிர சாகுபடித் திட்டம் புகுத்தப்பட்டதால், நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எந்த அளவுக்குக் கிராமிய நாணயம் தேவைப்படும் என்று அறிவதற்காகவும், 1954-க்குப் பின்னர் கிராமிய நாணயத்தில் ஏற்பட்ட மாறுதல்களைப் பரிசீலனை செய்வதற்காகவும் இக்கமிட்டி நியமிக்கப்பட்டது. இக்கமிட்டியின் அறிக்கை 1969இல் சமர்ப்பிக்கப்பட்டது. கூட்டுறவு அமைப்புகள் கிராம நாணயத்தை வழங்குவதற்குப் போதிய வலிமையுடையனவாக இல்லை என்றும், இவற்றிற்குத் துணையாக நாட்டுடைமையாக்கப்பட்ட வணிக பாங்குகள் செயல்படவேண்டும் என்றும் இக்கமிட்டி கூறியது. வணிகபாங்குகள் மரபான கொள்கைகளை விடுத்து முற்போக்கான புதிய கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும் என்றும் வற்புறுத்தியது.

கிராமங்களின் வளர்ச்சிக்கு உதவுவதற்காக மூன்று புதிய அமைப்புகளைத் தோற்றுவிக்க வேண்டும் என்று இக்கமிட்டி பரிந்துரைத்தது: கிராமங்களின் பொதுவான வளர்ச்சிக்கும், விவசாயம், சிறுதொழில்கள் ஆகியவற்றின் சிறப்பான வளர்ச்சிக்கும் மின்சக்தி இன்றியமையாதது. நான்காவது திட்ட இறுதிக்குள் சுமார் 12.5 இலட்சம் புதிய பம்புசெட்டுகளுக்கு மின்சக்தி இணைப்பு அளிக்க வேண்டும். இதில் அதிகப்படியாக 7 மில்லியன் ஏக்கர்களுக்குப் பாசன வசதி ஏற்படுத்த முடியும். கூடுதலாக மின் வசதிகளைக் கிராமங்கள் தோறும் ஏற்படுத்துவதற்காக அதிக மூலதனம் தேவைப்படுகிறது. நாடெங்கிலும் மின்வாரியங்களினால் திரட்டக்கூடிய தொகையை விட ரூ. 300 கோடி கூடுதலாகத் தேவைப்படும் என்று இக்கமிட்டி கருதியதால் கிராமிய மின் இணைப்புக் கழகம் ஒன்றைத் தோற்றுவிக்க வேண்டும் என்று கூறியது. இக்கழகம் முன்உரிமை பெற்ற கிராமிய மின்இணைப்புத் திட்டங்களுக்கு நிதி உதவி செய்யும்.

22

கிராமிய மின்இணைப்பிற்காக மின்வாரியங்கள் வெளியிடும் சிறப்புப் பத்திரங்களை வாங்கிகொண்டு மூலதன உதவி அளிக்கும். கிராமிய மின்சாரக் கூட்டுறவு சங்கங்களுக்கு மொத்தமாக மூலதனக்கடன் கொடுத்து உதவும். இவ்வாறு நிறைவேற்றப்படும் மின்இணைப்புத்திட்டங்கள், சிறுபாசனத்திட்டங்கள், குழாய்க்கிணறுகள் முதலியன ஒருமுகப்படுத்தப்பட்ட அடிப்படையில் நிறைவேற்றப்படும்.

### சிறுவிவசாயிகள் வளர்ச்சி நிறுவனம்

கிராமங்களில் சிறு விவசாயிகளின் நாணயத் தேவைசரிவரப் பூர்த்தி செய்யப்படவில்லை என்று இக்கமிட்டி கண்டது. சிறு விவசாயிகளின் தொகை மொத்த விவசாயிகளின் எண்ணிக்கையில் கணிசமான விழுக்காடாக உள்ளது. சுமார் 2 ஹெக்டெர் நிலம் உடையவர்களைச் சிறு விவசாயிகள் என்போமானால், கிராமிய நிலஉடைமையாளர்களில் 52 விழுக்காட்டினர் சிறு விவசாயிகளாகவே உள்ளனர்.[13] தீவிர சாகுபடித் திட்டத்தின் காரணமாகச் சிறுஉடைமைகளும் ஆதாரம் உள்ள நில உடைமைகளாக மாறக்கூடும். எனவே, சிறுவிவசாயிகளின் வளர்ச்சிக்கு ஒரு சிறப்பு நிறுவனம் அவசியம் என்று கிராமிய நாணய மறு ஆய்வுக் கமிட்டி பரிந்துரைத்தது. கிராமங்களில் சிறு விவசாயிகளைக் கண்டுபிடித்து, அவர்களின் பிரச்சினைகளை ஆராய்ந்து, அதற்குத் தீர்வு காணும் வகையில் திட்டங்களை வகுப்பதும், அவற்றை நிறைவேற்றுவதும் இதன் முக்கிய நோக்கமாகும். சிறுவிவசாயிகளுக்குத் தேவையான உள்ளிடு பொருள்கள், அவர்களுக்கு அவசியமாக உள்ள பணிகள், நாணயம் ஆகியவை உரிய காலத்தில் போதிய அளவு கிடைப்பதற்கு இந்நிறுவனம் வழி வகுக்கும்.

### வேளாண் நாணய வாரியம்

ரிசர்வ் பாங்கின் வளர்ச்சிப்பணிகளும், பொறுப்புகளும் பெருகியிருப்பதால்கிராமிய நயணயத்தைஆராய்ந்துஆலோசனை கூறுவதற்கு உயர் அதிகாரமும், செல்வாக்கும் உடைய ஒரு அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று கிராமிய நாணய மறு ஆய்வுக்கமிட்டி கூறியது. இதற்கு ஏற்ப, இதுவரை நிரந்தர ஆலோசனைக் கமிட்டியாக இருந்த குழுவை 1970இல் **வேளாண் நாணய வாரியமாக** உருவாக்கினர்கள். ரிசர்வ்பாங்கின் ஆளுநர் இதன் தலைவராக இருப்பார். கிராமிய நாணயத் துறையைக் கண்காணிக்கும் உதவி ஆளுநர் இதன் துணைத் தலைவராகச் செயல்படுவார்.

13 ஆதாரம்: Reserve Bank Bulletin-January 1671, P. 72.

**கூட்டுறவு பாங்குகள்**

பல்வேறு கூட்டுறவு அமைப்புகளில் கூட்டுறவு பாங்குகள் முக்கியமானவை. இவை மத்திய கூட்டுறவு பாங்குகள் என்றும், மாநிலக் கூட்டுறவு பாங்குகள் என்றும் இருவகைப் படும். ஆரம்பத்தில் இவை கூட்டுறவு அமைப்பின் ஒரு கூறாகக் கருதப்பட்டன. எனவே, இவை விரும்பிக் கேட்குமானல் இவற்றின் கணக்கு வழக்குகளை (1952) ரிசர்வ் பாங்கு தணிக்கை செய்யும். நாளடைவில் கூட்டுறவு பாங்குகள் பெருகின. இவற்றின் மூலதனமும், நாணய உதவியும் அதிகரித்தன. எனவே, இவற்றைப் பாங்குகளின் ஒரு கூறாகக் கருதவேண்டியதாயிற்று. இந்த அடிப்படையில்தான் 1965ஆம் ஆண்டு பாங்குக் கம்பெனிச் சட்டப்படி கூட்டுறவு பாங்குகளைத் தணிக்கை செய்யும் உரிமை ரிசர்வ்பாங்கிற்கு அளிக்கப்பட்டது. இதனல் கூட்டுறவு பாங்குகள் யாவும் சாதாரண வணிக பாங்கு களைப்போல ரிசர்வ்பாங்கின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவரப் பட்டன. இவற்றில் மாநில கூட்டுறவு பாங்குகளும், மத்தியக் கூட்டுறவு பாங்குகளும் முக்கியமானவை. இதைதவிர நகரங் களில் உள்ள கூட்டுறவு பாங்குகளின் மூலதன அடிப்படை ஒரு இலட்ச ரூபாயைவிட அதிகமாக இருக்குமானல் அவையும் ரிசர்வ் பாங்கின் நேரிடையான கட்டுப்பாட்டின்கீழ்ச் செயல்படும். தவிரவும், பெரும்பாலான மாநிலக் கூட்டுறவு பாங்குகள் பட்டியல் பாங்குகளுக்கு இணையாகக் கருதப்படும். இவை தங்களிடம் உள்ள வைப்புகளில் 3% தொகையை ரிசர்வ்பாங்கிடம் ரொக்கக் காப்பிருப்பாக வைத்திருக்கவேண்டும். ஏனைய கூட்டுறவு பாங்குகள் இதைப்போன்ற தொகையை, அதாவது மொத்த வைப்புகளில் 3% தொகையை — ரிசர்வ்பாங்கிடமோ, ஏனைய மேல்நிலைக் கூட்டுறவு அமைப்புகளிடமோ ரொக்கக் காப்பிருப் பாக வைத்துக் கொள்ளலாம். தவிரவும் 1968 (ஆண்டு) முடிவடையும் முன்னர் இவை 25% நீர்மை சொத்துகளை வைத்திருக்க வேண்டும் (3% ரொக்கக் காப்பு நீங்கலாக). இறுதியாகக் கூட்டுறவு பாங்குகள், ஏனைய வணிக பாங்குகளைப் போல அனைத்துத் துறைகளிலும் செயல்படவேண்டும் என்று விரும்பினர்கள். எனவே, வணிக பாங்குகளுக்குக் கொடுக்கப் பட்ட வைப்பு ஈட்டுறுதி வசதிகள் கூட்டுறவு பாங்குகளுக்கும் நீடிக்கப்பட்டன. இதை நிறைவேற்றுவதற்கு 1968இல் வைப்புகள் ஈட்டுறுதிக் கழகச் சட்டம் திருத்தப்பட்டது. கூட்டுறவு பாங்குகளின் வைப்புகளுக்கு ஈட்டுறுதி அளிப்பதன் மூலம் மக்களின் சேமிப்புகளை ஒன்று திரட்டும் சாதனமாக அவை சிறந்த முறையில் செயல்படமுடியும்.

## மேற்கோள்நூல் பட்டியல்


1. Adelman, Irma: Theories of Economic growth and Development (Oxford).
2. Alak Ghosh—Indian Economy, 1971.
3. All India Rural Credit Survey Report—Vol. I, & II.
4. Ambedkar, BR—The Problem of the Rupee (1923).
5. Ambedkar, BR—Evolution of Provincial Finance in British India.
6. Ambedkar, BR—Who were the Sudhras? (Thacker & Co. Ltd, BBY.).
7. Andley, K. K, and Sundharam, KPM.—Public Finance and Public Economics (1970
8. Anstey, Vera—The Economic Development of India, 1957. (Longmans).
9. Baden-Powell, B. H.,—Origin and growth of Village Communities in India, (1899, London).
10. Baden-Powell, B. H.,—The Indian Village Community (1896).
11. Balakrishna, R.—Review of Economic growth in India. (1961).
12. Balakrishna, R.—Studies in Indian Economic problems. 1954.
13. Balgit Singh—The Economics of Small scale Industries–a case study. (1961, ASIA).
14. Baumol, William J.,—Economic Theory and Operations analysis 1968.
15. Bhargava, R.N.,—The Theory and working of Union Finance in India.
16. Bhatia, BM.—Famines in India since 1860, (BBY, 1962).
17. Bhatt, V.V.,—Aspects of Economic change and Policy in India, (Allied, 1963).
18. Bhattacharyya, Dhires—Understanding India's Economy, Vol. I & II, (1962).

19. Blyn, George—A statistical Study of out put and trends (1951).
20. Bright Singh, D—Economics of Development, 1966, (ASIA).
21. Chavan, BW, and Chavan, Anita,—National Income in India. (1970).
22. Coale, A. J. and Houver, EM.,—Population and Economic Development in Low Income countries. (1958).
23. 'Commerce'-Coyajee, J.C.—The Indian currency system. (1930).
24. Dadabhai Naoroji—Poverty and Un-British rule in India. (1901).
25. Davis, Kingsley—Population of India and Pakistan.
26. Deshmukh, C.D.—Economic Development of India 1946-56. (Asia, 1957).
27. Dhar, P.N.,—Small scale Industries in Delhi. (Asia, 1958).
28. Dorfman, R, Samuelson, PA, Solow, R.—Linear Programming and Economic Analysis. (1958).
29. 'Eastern Economist', 'Economic Times'
30. Gadgil, D.R.,—The Industrial Evolution of India. (Oxf. 1946).
31. Galbraith, J.K,—The New Industrial State. (1967).
32. Ganguli, BN, (Ed.)—Readings in Economic History, 1964, (Asia).
33. Ganguli, BN,—Reconstruction of India's foreign Trade. (1946).
34. Gazetteer of India, (1965) Vol. I.
35. Government of India—Report of the Indian Industrial Commission, 1918.
36. Government of India—First Five year Plan.
37. Government of India—Second Five year Plan.
38. Government of India—Third Five year Plan.
39. Government of India—Fourth Five year Plan.
40. Giri, V. V.—Labour Problems in Indian Industry, (1960).

41. Gyan chand.—Socialist Transformation of Indian Economy (1965).
42. Haavelmo, Trygve—A Study in the Theory of investment. (1960).
43. Hicks, JR,—Economic History as Theory.
44. Hough, E.M.,—The Co-operative Movement in India, (1966).
45. Indian Currency Committee Report, (1931).
46. Indian Economic Conference Report, (1968).
47. Indian Economic Conference Report, (1967).
48. Jathar. G.B. and Beri, S.G.,—Indian Economics Vol. I and II (Oxf.).
49. Jathar, G. B., and Jathar, K. G.,—Indian Economics (1957, Oxf.).
50. Kidron, Michael—Foreign Investments in India. 1965, Oxf.
51. Kindleberger, C.P.,—Economic Development, (1965).
52. Krishnamachari, V.T.—Planning in India, (1961).
53. Kuchhal, S.C.—The Industrial Economy of India, 1969.
54. Kulkarni, MR,—Industrial Development, (1971).
55. Leibenstain, Harvey—Economic Backwardness and Economic growth, (1965).
56. Lewis, John P.—Quiet Crisis in India.
57. Lewis, W.A.—Economic Development with Unlimited supply of labour.
58. Lewis, W.A.—Theory of Economic growth.
59. Madan, BK,—Aspects of Economic Development & Policy 1964.
60. Mahalanobis, P.C.—The Approach of Operational Research to Planning in India, 1963.
61. Malenbaum, Wilfred—Prospects for Indian Development.
62. Malhotra, D.K.,—History and Problems of Indian Currency and Finance.
63. Mann, H,—Land and labour in a Deccan Village.
64. Marx, Karl,—Das Capital.

65. Mathur, A.S., and Mathur, J.S.—Trade Union Movement in India, 1957.
66. Memoria, CB,—Agricultural problems of India, 1966.
67. Murangan, SK,—Modern Banking (1952).
68. Myrdel, Gunnar—Asian Drama, Vol. I, II & III (1968)
69. Namjoshi, M.V.—Monopolies in India, 1966.
70. Nanavathi, M.B. and Anjaria, J.J.—The Indian Rural Problem, 1965.
71. Nurkse, Ragnar—Problems of Capital Formation in underdeveloped countries.
72. O'Malley, L.SS.,—India's social heritage. (1934).
73. Panandikar, SG,—Banking in India, (1966).
74. Patel, S.J.,—Essays on Economic Transition.
75. Radhakamal Mukerjee—Foundation of Indian Economics (1916).
76. Radhakamal Mukerjee (Ed.)—Economic Problems of Modern India, (1939).
77. Radhakamal Mukerjee—Democracies of the East (1923).
78. Radhakamal Mukerjee—Land Problems of India (1933).
79. Radhakamal Mukerjee—Economic History of India, 1600–1800.
80. Raghubans Dev Bedi—Therory, History and Practice of Cooperation. (1969).
81. Ramakrishna Iyer, V.G.,—Public Finance.
82. Ranade, M.G.,—Essays in Indian Economics, (1916).
83. Ragnekar, DK,—Poverty and Capital Development in India, (1858, Oxf).
84. Rao, BS,—Survey of Indian Industries. Vol. I & II.
85. Reddaway WB—The Development of Indian Economy. (1962).
86. Reserve Bank of India—Bulletins.
87. Reserve Bank of India—Annual survey Reports.
88. Reserve Bank of India—Functions and Working, 1970.,
89. Robbins, Lord—The Theory of Economic Development.

## கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| அகம் சார்ந்த காரணி | — | Endogenous Factor |
| அயல் நாட்டு மூலதனம் | — | Foreign Capital |
| அரசியல் அமைப்புத்திட்டம் | — | Constitution |
| அரசுத்துறை | — | Government sector |
| ஆட்டக்கோட்பாடுகள் | — | Game Theories |
| ஆதாரத்தொழில்கள் | — | Basic Industries |
| இணைப்பரசு நிதியியல் | — | Federal Finance |
| இணைப்புத்துறை | — | Joint Sector |
| இணை உறவால் விரிந்த குடும்பம் | — | Collaterally Extended Family |
| இயக்கச் சமநிலை | — | dynamic equilibrium |
| இயங்காத பொருளாதார அமைப்பு | — | Static Economy |
| இரட்டை ஆட்சி | — | Diarchy |
| இரட்டைத் தன்மை | — | Dualism |
| இரண்டாம் நிலைத்துறை | — | Secondary Sector |
| இருப்பு விலைத்திட்டம் | — | Retention Price Scheme |
| இறப்பு விகிதம் | — | Death Rate |
| இறைமை | — | Sovereignity |
| உசிதமான அதிகாரங்கள் | — | Discretionary Powers |
| உத்தம மக்கள் தொகைக் கோட்பாடு | — | Optimum Theory of Popultion |
| உலக மந்தம் | — | World depression |
| உள்ளிடு பொருள்கள் | — | Inputs |
| உறுதி அளித்தல் | — | Under writing |
| உற்பத்தி அளவுத்திறன் | — | Production Capacity |
| உற்பத்தித்திறன் | — | Productivity |
| உற்பத்தி வாய்ப்புச் செலவு | — | Opportunity Cost |
| ஊர்ச் சுங்கவரி | — | Octroi |
| எழுநிலை | — | Take-off stage |

111. Shetty, MC,—Small scale and Houshold Industries iu a developing economy, (1963).
112. Streeten, Paul and Michael Lipton—The crisis of Indian Planning, 1968.
113. Survey of Economic Theories, Vol. I, II & III.
114. தமிழ்நாடு அரசு—மைய—மாநில உறவு ஆய்வுக்குழு அறிக்கை. 1971.
115. 'The Hindu'—Annual Survey of Industries, 1968, 1969, 1970 and 1971.
116. திருநாவுக்கரசு, ம—பணவியற் பொருளாதாரம், 1972.
117. Vakil, CN. and Brahmanand PR.—Planning for an Expanding Economy 1956.
118. Varshney, RL,—India's Foreign Trade, (1954).
119. Venkatasubbiah, H.—India's Foreign Trade upto 1940.
120. Venkatasubbiah, H.—Indian Economy since Independence.
121. Wadia, P.A., and Merchant K.T.—Our Economic Problems, (1959).
122. Wilson, H.H.—History of British India.
123. Zacharias, C.W.B.—Agricultural Planning for Madras (1953).

## கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| அகம் சார்ந்த காரணி | — | Endogenous Factor |
| அயல் நாட்டு மூலதனம் | — | Foreign Capital |
| அரசியல் அமைப்புத்திட்டம் | — | Constitution |
| அரசுத்துறை | — | Government sector |
| ஆட்டக்கோட்பாடுகள் | — | Game Theories |
| ஆதாரத்தொழில்கள் | — | Basic Industries |
| இணைப்பரசு நிதியியல் | — | Federal Finance |
| இணைப்புத்துறை | — | Joint Sector |
| இணை உறவால் விரிந்த குடும்பம் | — | Collaterally Extended Family |
| இயக்கச் சமநிலை | — | dynamic equilibrium |
| இயங்காத பொருளாதார அமைப்பு | — | Static Economy |
| இரட்டை ஆட்சி | — | Diarchy |
| இரட்டைத் தன்மை | — | Dualism |
| இரண்டாம் நிலைத்துறை | — | Secondary Sector |
| இருப்பு விலைத்திட்டம் | — | Retention Price Scheme |
| இறப்பு விகிதம் | — | Death Rate |
| இறைமை | — | Sovereignity |
| உசிதமான அதிகாரங்கள் | — | Discretionary Powers |
| உத்தம மக்கள் தொகைக் கோட்பாடு | — | Optimum Theory of Popultion |
| உலக மந்தம் | — | World depression |
| உள்ளிடு பொருள்கள் | — | Inputs |
| உறுதி அளித்தல் | — | Under writing |
| உற்பத்தி அளவுத்திறன் | — | Production Capacity |
| உற்பத்தித்திறன் | — | Productivity |
| உற்பத்தி வாய்ப்புச் செலவு | — | Opportunity Cost |
| ஊர்ச் சுங்கவரி | — | Octroi |
| எழுநிலை | — | Take-off stage |

ஏகக் குடும்பம் — Jointfamily or undivided family
ஏழ்மை நச்சுச்சுழல் — Vicious Circle of Poverty
ஐரோப்பியப் பொது அங்காடி — European common market
ஒப்புமையாக — Comparatively
கடவுச்சீட்டு — Passport
கடன்–குத்தகைத் திட்டம் — Lend-lease scheme
கடைநிலைக் கடன் ஈவோன் — Lender of last resort
கட்டமைப்பு — Structure
கரந்துறை வேலையின்மை — Disguised Unemployment
கருவள விகிதம் — Fertility Rate
கலப்புப் பொருளாதார அமைப்பு — Mixed Economy
கவுன்சில் பற்றோலை — Council Drafts
கனரக முதலீட்டுத்துறை — Heavy Investment Sector
காசுகள் — Coins
கிராம சமுதாயம் — Village Community
குடும்ப அமைப்பு — House hold
குலம் — Clan
குறிக் காசுகள் — Token Coins
குறியீட்டு எண்கள் — Index Numbers
குறியீட்டு எண்கள், எடையிட்ட — Weighted Index Numbers.
குறைந்த அளவு காப்பு முறை — Minimum Reserve System
சந்தை வரி — Toll
சரக்குப் பெட்டிகள் — Containers
சர்வாதீனக் கட்டுப்பாடு — Monopolistic Control
சர்வாதீன ஆய்வு ஆணைக்குழு — Monopolies Enquiry Commission
சிறப்புப் பயிற்சி — Specialization
சுங்க ஆணைக்குழு — Tariff Commission
சுங்க ஆணைக்குழு பரிசீலனைக் கமிட்டி — Tariff Commission Review committee
சுங்கவாரியம் — Tariff Board
சுதேச பாங்கர் — Indigenous Banker
சுத்திகரிப்பு ஆலை — Refinery

செலவிடுதல் (வரித்தொகை) — oppropriation (Tax Revenue)
செலாவணிப் பெட்டகங்கள் — Currency Chests.
செலுத்தல் நிலை — Balance of Payments
சேம நல அரசு — Welfare State
தலா வருமானம் — Par Capita income
தலைமை பாங்குத்திட்டம் — Lead Bank Scheme
தலைவரி — Capitation tax
தனியாக — Absolutely
தன் ஆற்றலில் தொடர்ந்த வளர்ச்சி — Self-Sustaining growth
தாராள இறக்குமதி — Liberalized Imports
தானியங்கு பொருளாதார வளர்ச்சி — Self generating Economic growth
தீர்ப்பு — Award
துணைத் தொழில்கள் — Ancillary Industries
தெரிவுக்காப்பு — Discriminating Protection
தேக்கச் சமநிலை — Static Equilibrium
தேசிய சிறு தொழில்கள் கழகம் — National Small Industries Corporation
தேசிய தொழில் வளர்ச்சிக் கழகம் — National Industrial Development Corporation
தொடர் மதிப்பீடு — Series Estimate
தொடர் வட்டி விகித வளர்ச்சி — Compound Interest Rate growth
தொழில் அனுமதிக் கொள்கை — Industrial Licensing Policy
தொழில் கணிப்பு — Industrial census
தொழில் கொள்கை — Industrial Policy
தொழில் சீரமைப்பு — Rationalization of Industries
தொழில் நுட்ப இடைவெளி — Technological Discontinuity
தொழில் நுட்பத் தேர்வு — Choice of Technique.
தொழிற் பேட்டை — Industrial Estate
தொழில் வரி — Professional Tax
நடப்புக் கணக்கு — Current Account
நடுத்துறை — Middle Sector
நம்பிக்கை வெளியீடு — Fiduciary Issue
நாட்டு மொத்த உற்பத்தி — Gross National Product

நாணயம் — Credit
நாணய உறுதித்திட்டம் — Credit guarantee Scheme
நிகர ஆதாய ஆட்டம் — Postive sum Games
நிகர நாட்டு உற்பத்தி — Net National Product
நிகர நீர்மை விகிதம் — Net Liquidity Ratio
நிதி ஆணைக்குழு — Finance commission
நிருவாக பதிலாளி முறை — Managing Agency System
நில அடிமை முறை — Serfdom
நிலம்-ஆள் விகிதம் — Land- Man Ratio
நிலை மதிப்பீடு — Point Estimate
நீர்மைவிகிதம், சட்டரீதியான — Statutory Liquidity Ratio
பசுமைப்புரட்சி — Green Revolution
பட்டயம் — Charter
பதிலாளி நிலையங்கள் — Agency Houses
படை மானியம் — Feudalism
பண அங்காடி — Money market
பண ஓலை — Cheque
பண வணிகர் — Money lender
பற்றுக்குறை நிதி ஆக்கம் — Deficit Financing
பாரதத் தொழில் நாணய முதலீட்டுக்கழகம் — Industrial Credit and investment Corporation of India
பாரதத் தொழில் நிதிக் கழகம் — Industrial Finance Corporation of India.
பாரதத் தொழில் வளர்ச்சி பாங்கு — Industrial Development Bank of India
பிறப்பு விகிதம் — Birth Rate.
பின் இணைப்பு (தொழில்) — Back ward linkage
புதுமைப் புகுத்தல் — Innovation
புறச்சிக்கன நலன்கள் — External Economies
புறச்சிக்கன விளைவுகள் — External economy effects
புறம் சார்ந்த காரணி — Exogenous factor
பூஜ்ய ஆதாய ஆட்டம் — Zero- sum games
பொருளாதாரத் தேக்கம் — Economic Stagnation
பொருளாதார மக்கள் தொகைக் கோட்பாடு — Economic Theory of population

பொருளாதார வளர்ச்சி நிலைகள் — Economic Theory of Population
பொற்கட்டித் திட்டம் — Gold bullion standard
பொன் இறக்குமதி எல்லை — Gold-import point
பொன் பரிவர்த்தனைத் திட்டம் — Gold exchange standard
பொன் பெயர்ச்சி விலைக் கோட்பாடு — Specie- fleow- price Theory
பொன் ஏற்றுமதி எல்லை — Gold export point
போர் முக்கியத் தொழில்கள் — Strategic industries.
மக்கள் தொகை நிலை மாற்றக் கோட்பாடு — Theory of Domographic Transition
மக்கட் செல்வம் — Man power
மதிப்பிறக்கம் — Devaluation
மறு கவுன்சில் பற்றுச்சீட்டுகள் — Reverse Council Drafts.
மறு நிதிக்கழகம் — Refinance Corporation
மாநில பாங்குகள் — Presidency banks
மாநில நிதிக்கழகங்கள் — State Finance Corporations
மாற்று உபயோகச் செலவு (உற்பத்தி வாய்ப்புச் செலவு) — Transfar cost (opportunity Cost)
மாற்றுரிமை — Convertibility
மானியம் — Grant
முக்கியத்துவ அடிப்படை — Value System
முக்கியத் தொழில்கள் — Key Industries
முடக்குதல் — Dumping
முதல்நிலைத்துறை — primary Sector
முதல்நிலைப் பொருள்கள் — Primary Products
முறிவுச் சமநிலை — Break even
முன்னுரிமை — Priority
முன்னோடியான துறை — Leading Sector
மூலதன ஆக்கம் — Capital formation
மூலதனக் கணக்கு — Capital account.
மூலதனச் சுரண்டல் — Capital Drain
மூலதன உற்பத்தி விகிதம் — Capital-out put ratio
மூலதனத் தொழிலாளர் விகிதம் — Capital Coefficient of labour

| | |
|---|---|
| மூலத் தொழில்கள் | — Core Industries |
| மூன்றாம் நிலைத்துறை | — Tertary Sectory. |
| மேல்வரி | — Surcharge |
| ரொக்கப்பயிர் | — Cash Crops |
| வகையீட்டு வட்டி விகித அமைப்பு | — Differential Rates System |
| வணிகப்பயிர் | — Commercial Crops |
| வம்சாவளி மூலம் விரிந்த குடும்பம் | — Lineally extended family |
| வரிக்கொள்கை | — Tax policy |
| வரி விதிப்பு | — Tax levy |
| வரி வசூலித்தல் | — Tax Collection |
| வரையிட்டப் பொதுக் கம்பெனிகள் | — Public Limited companies |
| வரையிட்டத் தனிக் கம்பெனிகள் | — Private limited companies. |
| வளரும் நாடுகள் | — Developing Countries |
| வளர்ச்சி உதவிநிதி | — Development. Assistance fund |
| வளர்ச்சி குறைந்த நாடுகள் | — Underdeveloped countries |
| வாங்கும் சக்தி | — Purchasing Power |
| வாணிபக் கொள்கை | — Commercial Policy |
| வாணிப வாரியம் | — Board of trade |
| வாணிபத் திசை | — Direction of trade |
| வெள்ளித் திட்டம் | — Silver standard |